# தோற்றக் கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும்

டாக்டர் க. சு. உத்தமராயன், எச்.பி.ஐ.எம்.,

இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை
அரும்பாக்கம், சென்னை - 600 106.

# தோற்றக்கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும்

டாக்டர். க. சு. உத்தமராயன், எச்.பி. ஐ. எம்.,
முந்நாள் இந்திய மருத்துவ இயக்குநர்,
முந்நாள் தலைவர், சித்தர் அறிவியல் வளர்ச்சிக் குழு.

இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை
சென்னை - 600 106

## நூலடைவு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | தோற்றக்கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும் |
| ஆசிரியர் | : | டாக்டர். க.சு. உத்தமராயன் |
| வெளியிட்டோர் | : | இந்திய மருத்துவம் ஓமியோபதித் துறை சென்னை - 600 108. |
| பதிப்பு ஆண்டு | : | முதல் பதிப்பு : 1978<br>முதல் மறு அச்சு : 1992<br>இரண்டாம் மறு அச்சு : 2003<br>மூன்றாம் மறு அச்சு : 2006<br>நான்காம் மறு அச்சு : 2008<br>ஐந்தாம் மறு அச்சு : 2010 |
| பதிப்புரிமை | : | © தமிழ்நாடு அரசு |
| நூல் வடிவம் | : | RA 1/8 |
| அச்சுத்தாள் | : | TNPL (60 GSM) கிரீம் ஓவ்-வெள்ளைதாள் |
| அட்டைக் கட்டுமானம் | : | கடின அட்டை |
| எழுத்துக்கள் | : | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | xii + 505 |
| பிரதிகள் | : | 1000 பிரதிகள் |
| நூலின் விலை | : | ரூ. 80.00 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ வெங்கடேஸ்வரா எண்டர்பிரைசஸ் சென்னை - 600 002. தொ.பே.எண். 28514748 |

எம் . எப். பாரூகி, இ. ஆ. ப.,
**ஆணையர்,**
**இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை,**
**சென்னை -106**

16-05- 2003.

# பதிப்புரை

சித்த மருத்துவம் பயிலும் முதலாமாண்டு மாணாக்கர்களுக்கான பாட நூல்களில் இதுவும் ஒன்று. இது ஒரு தொகுப்பு நூல்.எளிதில் தொகுத்து விட முடியாத அரிய செய்திகளை வகுத்தும், தொகுத்தும் ஆய்வுசெய்யும் மாணவன் நிலையிலிருந்து ஆராய்ச்சி செய்து செய்திகளைத் தொகுத்தளித்துள்ளார், ஆசிரியர் திரு க.சு.உத்தமராயன் அவர்கள்.

தான் ஆசிரியராகப் பணியாற்றிய போது தயாரித்து வைத்திருந்த குறிப்புகளும், முன்னாள் இந்திய மருத்துவத்துறை இயக்குநர் திரு. பு.மு.வேணுகோபால் அவர்கள் வழங்கிய பாடக்குறிப்புகளும், உடல் தத்துவம் நூலின் முந்நூறு பக்கங்களும் இந்நூலைத் தொகுத்தளிக்க ஆசிரியருக்குப் பெரிதும் துணை நின்றுள்ளன.

அரிதின் முயன்று தொகுத்தளித்த இந்நூல் நடை ஆசிரியரின் அறிவுச் செறிவை உணர்த்தும். சாதாரண அச்சுக்கோர்ப்பிலிருந்த இந்நூலைக் கணினியில் அச்சுக்கோர்த்து முறைப்படுத்தி வெளியிட பல வகைகளில் துணைநின்ற இணை இயக்குநர் *மரு.சு.கோபாலகிருஷ்ணன்,* தனி அலுவலர் திரு. *ஆனைவாரி இரா. ஆனந்தன்,* ஆய்வு மருத்துவ அலுவலர்(சித்தா) மரு.*ஆ.க.பாரி,* அவர்கட்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வலுவலர்களின் சொல்லுக்குச் செயலாக்கம் தரும் தமிழ்ப் புலவர்கள்,சுவடி நகலெடுப்போர், தட்டச்சர் மற்றும் இத்துறையின் அலுவலர்கள் யாவர்க்கும் என் வாழ்த்துகள்.

இவ்வகை நூல்கள் மென்மேலும் வெளிவந்து இந்தியமுறை மருத்துவ வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கவேண்டும் என விழைகிறேன். எனது காலத்தில் இவ்வகை நூல்கள் வெளிவருவது எனக்கு மகிழ்வை உண்டாக்குகிறது.

எம் . எப். பாரூகி.
ஆணையர்.

இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை , சென்னை. 106

மொழிபெயர்ப்பு - நூல்கள் வெளியீட்டுப் பிரிவு

# நூலாக்கப் பணிக்குழு

| | | |
|---|---|---|
| சிறப்பு அலுவலர் (மொழி பெயர்ப்பு) | : | மரு.ஆனைவாரி இரா. ஆனந்தன் BSc, RHMP, MA(Tam), MA(Eng), MHEd |
| ஆய்வு மருத்துவ அலுவலர் (சித்தா) | : | மரு. ஆ. க. பாரி, B.A., B.I.M., |
| தமிழ்ப் புலவர்கள் | : | திரு த. அழகப்பராசு, M.A(Tam), M.A(Eng), B.Ed. |
| | : | திருமதி செ. இரா. பிரசன்னா, M.A., M.Phil., B.Ed. |
| சுருக்கெழுத்தர்- தட்டச்சர்கள் | : | திருமதி தா.வே.லெட்சுமி<br>திருமதி வெ.சுப்புலெட்சுமி |
| நகலர் | : | திரு. க. மகேஸ்வரன் |
| சுவடி நகல் எடுப்பவர்கள் | : | திருமதி. ந.பாக்கியசுந்தரி, B.A.<br>திருமதி. த. லெட்சுமி<br>திரு. தி. சுபாஷ் சந்திரபோஸ்<br>திரு.வெ. சாரங்கபாணி |

# ஆசிரியர் முன்னுரை

தமிழக அரசினரால் ஏற்படுத்தப்பட்ட சித்த மருத்துவப் பாட புத்தகக் குழுவினரால் தீர்மானித்தபடி, முந்நாள் பாடப் புத்தகக் குழுவின் தலைமகனாகிய என்னை, இந்திய மருத்துவக் கல்லூரியில்-சித்த மருத்துவப் பிரிவில்-படிக்கும் முதலாம் ஆண்டு மாணவர்கட்குக் கற்பிக்கப்படும் பாடங்களில் ஒன்றாகிய *"தோற்றக் கிரம ஆராய்ச்சியும் தமிழ் மருத்துவ வரலாறும்"* என்னும் இந்நூல் எழுதும்படி பணித்தனர்.

நான் இந்நூலை, சென்னை இந்திய மருத்துவக் கல்லூரியில் பணிபுரிந்த காலத்திலிருந்தே, பல நூல்களிலிருந்து குறிப்புகளைத் திரட்டித் தொகுத்துப் படியெடுத்து அதைத் துணையாகக் கொண்டு பாடஞ் சொல்லிவந்தேன்.

மேற்படி பாடப் புத்தகக் குழுவின் ஆணைப்படி, *தமிழ்நாடு, தமிழர் நாகரிகம், தமிழ்மொழி, கலை, வாழ்க்கை* முதலியவைகளைப் பற்றியதான இரண்டாம் அத்தியாயத்தை என்னுடைய குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டு *திரு. இ.மு. சுப்பிரமணிய பிள்ளை* அவர்கள் எழுதினார். முந்நாள் இந்திய மருத்துவ இயக்குநர் *டாக்டர் பு.மு. வேணுகோபால்,* எச்.பி.ஐ.எம்., அவர்கள் பாளையங்கோட்டை இந்திய மருத்துவ முறைக் கல்லூரியில் முதல்வராக இருந்தபோது *"தோற்றக் கிரம ஆராய்ச்சியும் தமிழ் மருத்துவ வரலாறும்"* என்னும் பாடத்தை மாணவர்களுக்குப் போதித்து வந்த போது எடுத்த குறிப்புகளை அவர் இயற்றிய "உடல் தத்துவம்' என்னும் நூலில் சேர்த்திருக்கின்ற முதல் 104 பக்கங்களை நான் இயற்றிய இந்நூலில் சேர்த்துக்கொள்ள இசைவு தந்தார். அன்னாருக்கு என் நன்றி உரித்தாகுக.

மற்றைய அத்தியாயங்களை எழுதுங்கால் உடன் இருந்து சில படிகளைப் படியெடுத்து உதவிய *டாக்டர் எம்.ராதா, எல்.ஐ.எம்.,* அவர்களுடைய சேவையைப் பாராட்டுகின்றேன்.

இந்நூலை அச்சேற்றத் தகுதியுடைய முறையில் *டாக்டர் வி. விசுவநாதன்*, எல்.ஐ.எம். அவர்கள் *(சித்தர் அறிவியல் வளர்ச்சிக் குழுவின் முந்நாள் தனி அலுவலர்)* எழுதிக் கொடுத்தார்கள். அதனை அன்னாருடன் இருந்து மூலப் படிகளுடன் ஒப்பு நோக்கிச் சீர் செய்து அத்தியாயங்களை முறைப்படுத்திப் பிழையறச் செய்துள்ளேன். இவ்வாறு உதவி செய்த அன்னாருக்கு எனது உளமார்ந்த நன்றி உரித்தாகுக.

இந்நூலைத் தொகுத்ததற்குத் துணையாகக் கொண்ட நூல்களின் பட்டியல் குறிக்கப்பெற்றுள்ளது.

இந்நூலைச் சித்த மருத்துவப் பட்டப்படிப்பிற்குப் பாட புத்தகமாக ஏற்றுக் கொண்ட சித்தர் அறிவியல் வளர்ச்சிக் குழுவினருக்கும், புத்தக வடிவில் வெளிவரச் செய்த தமிழக அரசினருக்கும், தமிழக அரசின் மக்கள் நல்வாழ்வுத்துறை செயலாளர் உயர்திரு. *பி. முராரி* ஐ.ஏ.எஸ்., அவர்களுக்கும், இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் ஏ. *நீலாவதி*, எல்.ஐ.எம்., அவர்களுக்கும், இந்நூலை அச்சியற்றித் தந்த தமிழ்நாடு எழுதுபொருள்கள்- அச்சுத் தொழில் இயக்குநர் அவர்களுக்கும், இதன் அச்சுப்படிகளை உடன் இருந்து திருத்தம் செய்து உதவிய *டாக்டர் வி. விசுவநாதன்* எல்.ஐ.எம்., அவர்கட்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

க.சு. உத்தமராயன்.

## இந்நூலைத் தொகுக்கத் துணையாகக் கொண்ட நூல்கள்

1. உடல் தத்துவம்- டாக்டர் பி. எம். வேணுகோபால்

2. கடைப்பிள்ளைக் கலைஞானம்

3. கருவூரார் பல திரட்டு

4. கைவல்ய நவநீதம்

5. சன்மார்க்க விவேக விருத்தி

6. சித்தர் ஞானக்கோவை

7. சித்தர் நூல்களின் முன்னுரைகளில் கண்ட சித்தர் வரலாற்றுக் குறிப்புகள்

8. சிவஞான சித்தர்

9. சிவஞான போதம்

10. தமிழ் இந்தியா– ந. கந்தசாமிப் பிள்ளை

11. தாயுமானவர் பாடல்

12. திருக்குறள்

13. தேரன் காப்பியம்

14. பதார்த்த குண சிந்தாமணி

15. போகர் ஏழாயிரம்

16. யூகி சிந்தாமணி

# பொருளடக்கம்

*******

# 1. தோற்றக்கிரம ஆராய்ச்சி

## ஓர் அறிமுகம்

இந் நிலவுலகில், சிறப்பாக நம் தாய்நாட்டில் (இந்தியாவில்) எக் கலையைக் கற்க வேண்டுமென்றாலும், பரதத்துவத்தின் உணர்வு இன்றியமையாதது, சிறப்பாக, நம் தமிழ்நாட்டு மருத்துவம் (சித்த மருத்துவம்) தத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளது.

மருத்துவம் கற்கும் மாணவனுக்குத் தத்துவ ஆராய்ச்சி எந்த வகையில் வேண்டியுள்ளது என்ற வினா எழுகின்றது கேட்கவும் படுகின்றது. இவ்வாறு கேள்வி கேட்கும் எண்ணம் மேலைநாட்டு நாகரீகம் நம் மக்களைத் தொடர்ந்த பிறகே எழத் தொடங்கியது. ஆனால் இந்நாட்டிலேயே பிறந்து இந்நாட்டு முதியோருடைய பழக்க வழக்கங்களில் ஊறியவர்களுக்கு, இக் கேள்வி ஒரு பிள்ளை மதி படைத்தவனுடையதாகத் தோன்றுவது இயல்பாம். கல்வியறிவில்லாத இந்தியனும் கூட இயல்பாகத் தத்துவ உணர்வுடையவனாய் இருப்பதை யாங்கணும் இன்னும் காணலாம்.

உலகப் புகழ் பெற்ற மேல்நாட்டு விஞ்ஞானிகளாகிய கேரல் அக்ஸ்லி போன்ற பலர் இந்திய நாட்டுக் கலைகளின் அமைப்பை வியந்ததோடு நில்லாமல் மேலைநாட்டுக் கலைகளையும் தத்துவ அடிப்படையில் அமைக்கலாமென்று பரிந்துரைத்துள்ளனர்.

தத்துவ ஆராய்ச்சி, அறிவின் வளர்ச்சிக்காகவும் அனுபவ சாதனத்துக்காகவும் கூறப்பெற்றுள்ளது. இதன் உட்பிரிவாகிய (ஏகான்ம வாதம்) ஒரே ஆன்மாவைப் பற்றிய கொள்கையின் விளக்கம் அறிவை வளம் பெறச் செய்யும், மற்றொரு பிரிவாகிய சைவ சித்தாந்தம் அனுபவ சாதனத்துக்கு வழி வகுக்கும் என்க.

மருத்துவம் செய்தல் கூட ஒரு வைத்தியனுடைய சமயம் எனக் கருதப் பெறும். இம்மண்ணில் பிறந்த ஒருவன் கற்றல் எதற்கெனில் அக்கல்வியின் துணைகொண்டு ஆய்ந்து பிறப்பிறப்பாகிய இன்னல்களை நீக்கி நிலையான இன்பத்தை (நித்தியானந்தம்) அடையும் வழியைக் கண்டு அதன்படி நின்று பயன் துயக்க வேண்டும் என்பதேயாகும். இதனையே 'துறக்கம்' என்றும், 'வீடு' என்றும் கூறுவர்.

"மொழியின் முட்டறுத்து வீடு பெறுதல்" ஒருவன் இப்பிறவி வந்தபோதே முயன்று எவ்வகையானும் பாடுபட்டு ஆன்ம விடுதலையடைதலையே தன் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும். ஆன்ம விடுதலைக்குப் பலவகை வழிமுறைகள் கூறப்பெற்றுள்ளன. அவ்வழிகளுள் யாதானும் ஒன்றைக் கடைப்பிடித்து ஒழுகி வெற்றிபெற இவ்வுடலை இயைவிக்க வேண்டுவது முதற் கடமையாகும். அத்தகைய தகுதியை உடல் பெற வேண்டுவது இன்றியமையாததொன்றாகும். அத்தகைய தகுதியும். உரமும் பெறா வண்ணம் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஊறு செய்வன பல்வகைப் பிணிகளேயாம்.

உடலில் தோன்றும் பிணிகள் யாவும் வீடடையும் வழிகளாகிய இயமம், நியமம், தவம், ஜபம், உபவாசமிருத்தல், கற்றல் ஆகியவற்றைப் பின்பற்ற இடந்தராத முட்டுக்கட்டைகளாகும். அவ்வண்ணம் பயிலாத இடத்து வீடடைவது அரிதாய் விடும். பிறவிப்பயனையடையாத காரணத்தால் அவ்வான்மா மீண்டும் பிறத்தலும் இறத்தலுமாகிய இன்னற் கடலில் கிடந்து உழல நேரிடும். ஆகவே, பிறவி எண்ணிலவாகும்; பயனில் பிறவிகளாகும்.

ஆகவே ஒருவன் நோயில்லாமல் இருந்தால்தானே அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களைத் தேடிக் கொள்ளமுடியும். நோய்கள் மெய்யின்ப வாழ்வுக்குப் பகையாகவுள்ளமை கருதியே ...

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்"

என்ற பழமொழியும்,

'நோயற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும்'

என்று முற்றும் துறந்த இராமலிங்க அடிகளார் போன்ற பெரியார்களும் கடவுளிடம் வேண்டிக் கொள்வதும் காணக் கிடக்கின்றது. இத்தகைய நோய்களைத் தடுக்கும் வழி முறைகளையும் தீர்க்கும் வகைகளையும் விவரிப்பதான அறிவியல் நூலே மருத்துவம் எனப்படும். மருத்துவ நூல்கள்.....

* நோய்தோன்றக் காரணங்கள்
* நோயின் குறி குணங்கள்
* தடுப்பு முறைகள்
* நோய் தோன்றிய பின் அதன் தீர்வுக்கான வழிமுறைகள்
* மருந்துப் பொருள்கள், அவற்றின் இயல்பு பண்பு, கையாளும் வகை விவரங்கள்
* நோயினின்று விலகி வாழக் கடைப்பிடிக்க வேண்டிய பயிற்சிகள்
* உண்ணத்தக்க உணவுகள்

முதலியவைகளைப் பற்றியும் நோயுற்ற காலத்தில் உண்ணத்தக்க உணவு, பத்திய முறைகளைப் பற்றியும் விவரிப்பனவாம்.

நோய் தோன்றக் காரணங்கள் :- நோயுற்ற போதும் நோயற்ற போதும் உடலின் இலக்கணம், நோய் தீர்வுக்கும் தடுப்புக்கும் கையாளும் பொருள்களின் பண்புகள் செயல்களின் திறன் பற்றிய தரிசனம் என்னும் அடிப்படையில் வடமொழியில் ஆயுர்வேத நூல்களில் விவரித்துள்ளனர்.

அவ்வாறே சித்தர்களும் பிறவிப் பயனைப் பெறவிடாமல் தடையாய் நிற்கும் பிணிகளிலும் மாந்தர்களிடம் கழிபேரிரக்கம் கொண்டவர்களாய் அந்நோய்களைத் தவிர்க்க மனங்கொண்டு நோய்களைத் தடுக்கவும், தீர்க்கவும் வழிமுறைகளை வகுத்துள்ளனர். அத்தகைய மருத்துவ முறையே சித்த மருத்துவமாகும்.

இயல்பாக மனித உடலானது இயற்கையை (பிரகிருதியை) முதற் காரணமாகவும் துணைக்காரணமாகவும் கொண்டுள்ளது ,என்ற உண்மை யாவரும் அறிந்ததே. நம் முன்னோர்கள் இத்தகைய இயல்பை மாற்றியமைக்க வழிகண்டு வெற்றி பெற்றனர். அவர்கள் கண்ட நெறியைக் கைப்பற்றி இந்தச் சீவ சரீரம் (பிரா கிருத 'சரீரம்) இயல்பாய்க் கொண்டுள்ள பிரகிருதியின் கூட்டை (சேர்க்கையை) விலக்கி, உருவுடனும் அருவுடனும் கூடியதான சிவ சரீரத்துக்கு ஒப்பான அமைப்பையுண்டாக்கி, உடலின் தொடர்பு கொள்ளும் பிணிகள் தோன்றாமல் தடுத்தற்கு வேண்டிய திறனை ஊட்டி அவ்வண்ணமே ஆன்ம தத்துவ விசாரத்தினால் அந்தக்கரணங்களின் சக்தியைப் பெருக்கித் 'தானே சிவம்' என்ற தத்துவ விளக்கத்தைப் புலனாக்கி மனத்தைப் பொருந்தி வருகின்ற நோய்களை முதற்கண் தடுத்து, தூல சரீரத்தின் அமைப்பிலும் அதற்காதாரமான ஆன்ம தத்துவத்தின் அமைப்பிலும், சிவத்துக்குச் சற்றும் பேதமற்ற நிலையைப் பெற்று அச்சத்து சித்தோடு இரண்டற்ற நிலையில் கலந்தவராய், நித்தியானந்த அனுபவத்தில் இடையறா இன்பத்தைத் துய்த்திடச் செய்ய ஏதுவாகும் வழிகளை வகுத்தனர். அவை இருவகைப்படும். அவையாவன:

1. இரண்டறக் கலத்தலாகிய சித்தாந்தத்தை யொட்டி அகம் ப்ரஹ்மாஸ்மி என்ற நிலையைப் பெற ஞானம், யோகம் எனும் இருநெறிகளைத் திறம்பட வகுத்தனர் ஒரு சாரார்.

2. மற்றையோர் கன்ம மார்க்கத்தை யொட்டியும். உலகம் - ஆன்மா ஆகிய இவை இரண்டற்ற நிலையில் தங்கியும் (அத்துவித நிலை.) வெவ்வேறான நிலையில் (துவிதநிலை) இருந்தும். சத்து சித்து ஆனந்த உருவங்கொண்டுள்ள 'பதி' யாகிய (தலைவன்) சிவத்தின் அருளைப் பெற்றிட.....

* சபம் (மந்திரத்தை முறைப்படி பன்முறை ஓதல்)
* தியானம் (அருவனுக்கு ஓர் உருவை மனத்தால் அமைத்து அகக் கண்ணால் காண்டல்),
* சரியை (உடலால் நிகழ்த்தக்கூடிய உபசரிப்புகள்)

என்ற உபாயங்களால் பெற்று முயன்றிடல் வேண்டும்; ஐவகை மலங்களோடு (ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதான சக்தி) ஆன்மா கூடியிருப்பதால் பிறப்பு இறப்பென்னும் கட்டுப்பாட்டில் உழலும் ஆன்மா என்னும் 'பசு' விடுபட்டு 'பதி' என்னும் சிவத்துடன் இரண்டறக் கலந்து 'சிவோகம்' என்னும் நிலையைப்பெற்றுக் குறைவும் முடிவும் அற்றதான ஆனந்தத்தில் ஆழ்ந்து கிடத்தல் என்னும் சைவ சித்தாந்த சமயக் கோட்பாட்டை ஐயந் திரிபறக் கற்று, தக்க ஆசானிடம் சிவதீட்சை பெற்றுச் சித்தாந்தத்தில் விதிக்கப் பெற்ற முறைகளைக் கைக்கொண்டு வீடுபெற வேண்டுமென்று விதித்தனர்.

இவ்விருவகையில் யாதேனும் ஒன்றை ஏற்க விரும்பினாலும் ஆங்கு வகுக்கப்பெற்ற முறைகளைக் கைக்கொண்டொழுகப் பிணியற்ற உடலும் வன்மையும் வேண்டும். ஆதலால் இவ்வுடல் அமைப்பை மாற்றி முற்கூறிய 'சிவ சரீரம்' அல்லது 'சாம்பவ சரீரம்' பெறற்கு, உற்ற வழியாய் 'இரசேச்சுர தரிசனம்' என்னும் மற்றொருவகை வழியை வகுத்துள்ளார்கள். வைத்திய நூல் வல்லவர்களான சித்தர்கள், இரசேச்சுர தரிசனம் கூறுவதாவது:-

இரசம் என்னும் பாரதம் சிவத்தின் வீரியம் என்றும், அப்பிரகம் சிவசக்தி என்றும், பாசமாகிய மருளைப் போக்கும் சிவத்தின் அருளென்றும் வழங்கப்படும். பார்வதியின் வீரிய மென்றும் விளக்கி இவ்விரண்டையும் பொருந்தக் கூறப்பெறும்.

இவ்விரண்டையும், தக்க கைமுறை செய்முறைகளால் ஒன்றாய்ச் சேர்த்து ஒத்த மருந்தாகச் செய்து (பாகப்படுத்தி) உண்பதால் சிவ சக்திகளின் வீரியம் இவ்வுடலில் ஏற்பட்டு இப்பிராகிருத உடல் ('சிவமெய்- சாம்பவ') சிவ சரீரமாக மாறி ஒரு காலமும் அழிவற்றதாயும் நிலையுற்றதாயும் நிற்பதற்குக் காய கற்பம் என்ற முறையை வகுத்தனா.

இவ்வண்ணம் இரசத்தையும் அப்பிரகத்தையும் இணைத்து ஒரு கற்பமருந்து செய்ய கைமுறை, செய்முறை மற்றுமுள்ள முயற்சிகளில் சித்தர்கள் முனைந்தபோது இடையிடையே பற்பல வேறு பொருள்கள் கையாளப் பெற்றும், உண்டாக்கப் பெற்றும் வந்தன. அவ்வாறு கிடைக்கப் பெற்ற பொருள்களையும் மருந்துகளையும் மக்களின்

பிணிகளைப் போக்க மருந்துகளாகப் பயன்படுத்தி நற்பயன் கண்டனர். அவைகளின் உபயோகங் களையும் பக்குவங்களையும் மிக விரிவாகக் கூறியும் ஏடுகளில் பதிப்பித்தும் வைத்துள்ளார்கள்.

இவ்வாறு தாதுப்பொருள்களால் கிடைக்கப்பெற்ற பற்பம், செந்தூரம், சுண்ணம் முதலான மருந்துகள், மூலிகைகளால் செய்யப்பட்ட மருந்துகளைக் காட்டிலும் மேம்பட்டவையாகும்.

இவ்வுண்மை வடமொழியில் வல்ல ஆயுர்வேதியர்களும் ஒப்புக்கொண்ட செய்தியாகும். அவர்கள் புகழ்ந்து கூறிய மேம்பாடுகளாவன:

1. குறைந்த அளவில் பெருநோய்களைத் தீர்க்கும் தன்மை உடைமை.

2. உண்பதற்கு விருப்பமற்ற கைப்பு, துவர்ப்பு போன்ற சுவையின்மை

3. மருந்துண்டவுடன் விரைவில் பயனைத் தோற்றுவிக்கும் காரணங்களால் பற்ப, செந்தூரம் முதலானவை மூலிகைகளால் ஆக்கப் பெற்ற மருந்துகளினும் சிறந்தவை.

4. நாட்பட்ட நோய்களைக் குறுகிய காலத்தில் போக்கி நலனுறச் செய்யும் தன்மை

5. மூலிகை மருந்துகளைப் போலல்லாமல் இம் மருந்துகள் எத்தனைக் காலம் வைத்திருந்தாலும் செயல் திறம் (வீரியம்) கெடாமல் அதற்கு மாறாக வீரியம் மிகைப்படுந்தன்மை ஆகியவைகளாம்.

இனி, 'சித்தர்களின் முதற்கோட்பாடு' என்ற இயலில் அத்துவித சித்துக்குரிய வழிகளாகிய யோகம், ஞானம் என்ற துறைகளை விளக்கியும், 'சித்தர்களின் மற்றொரு கோட்பாடு'

என்ற இயலில் சைவ சித்தாந்தத்தை விளக்கியும், 'சித்தர்களின் கண்மணி' என்ற இயலில் இரசேச்சுர தரிசனத்தின் விவரங்களை விளக்கியும் 'சித்தர்களின் மணிமகுடம்' என்ற இயலில் முப்பைப் பற்றி விளக்கியும் பின்பு தாவரப் பொருள்களின் தோற்றக் கிரமம், இரசவாதம், காயசித்தி போன்றவற்றையும் வரைந்தளிப்போமாக.

இவ்வியலைத் தொடங்கி விளக்குவதற்கு முன்பு சித்தர்களின் உண்மையான கோட்பாடு யாதென ஆராய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. அதனையறிய வேண்டின் சித்தர் மரபில் வந்தவர்களின் கூற்றைக் கொண்டேதான் அறிய இயலும். அவ்வண்ணம் வந்தவர் தாயுமான அடிகளாவார் என்பதை அவர் தம் பாடல்களே சான்றாக நின்று வலியுறுத்தும். அவர் தமது குருவணக்கம் கூறுமிடத்துத் தம் 'குரு மூலன் மரபில் வந்த மௌன குரு என்று கூறுவர். இதனை..........

'வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகச மெனவளர்த்தாய்!
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே!'

என்ற அடிகளால் அறியலாம். 'திருமூலர் ஒரு சித்தர்' என்பது உலகறிந்த உண்மை. அவருடைய சீடராகிய ஒரு மௌனியே தாயுமானவரின் குருவாக மேற்கண்ட அடிகளில் கூறப்பெறுகின்றார். ஆகவே அவரும் சித்தர் மரபில் வந்தவரெனத் தெரிகிறது. (இங்குக் குறிப்பிட்ட மரபு சீடர் மரபு என்பதை நினைவில் கொள்ளவேண்டும்).

இத்தகைய சித்தர் மரபின் தோன்றலாகிய தாயுமானவர் தாம் சிறப்பித்துச் சித்தர் கூட்டத்தைத் தொழும் கருத்துடன் இயற்றிய பாடல்களில் சித்தர்கள் வேதாந்தத்தையும், சித்தாந்தத்தையும் ஏற்றத் தாழ்வின்றி மதித்து, ஒத்த நலன் பயப்பனவாகக் கண்டுகொண்டு, சிறந்த ஆன்மிக நிலையையும் மெய்யுணர்வையும் அடைந்தார்கள் என்று கூறியுள்ளார். அவ்வடிகள் வருமாறு:

"வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற
வித்தகச் சித்தர் கணமே"

இவை தாயுமான அடிகளார் சித்தர்களுக்கு வணக்கம் செலுத்தும் முறையில் 'சித்தர் கணம்' என்னும் பகுதியில் வந்துள்ள பாடலின் ஈற்றடிகளாம். இவ்வாறு கூறியிருப்பதால் சித்த மருத்துவ மாணவர்கள் தத்துவ அறிவு பெறவேண்டு மென்பது வெளிப்படை. மேலும் வேதாந்தம், சித்தாந்தம் என்னும் இரு தத்துவங்களையும் கசடறக் கற்றல் வேண்டுமென்பதும் விளங்கும்.

அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்னும் முப்பெரும் பிரிவுகளைக் கொண்ட வேதாந்தமும், சைவ சித்தாந்தமும் தென்னாட்டில் பெருவழக்குடையவை. கொள்கை பற்றியும் மொழி பற்றியும் உள்ள வேறுபாட்டினை இவண் புகுத்திடின் நாம் சொல்ல எடுத்துக்கொண்ட பொருள் பயனற்றுப் போகும்.

தேரன் குணவாகடமென்ற நூலில் தாவரப் பொருள்களின் தோற்றத்தைக் கூறும் கீழ்வரும் பாடல் வேதாந்த அடிப்படையைக் கொண்டே விவரிக்கப் பெற்றுள்ளது. அப்பாடல்...

தேடரு மகண்டவொளிப் பிழம்பாய் ஞானா
தீதப் பூரணமாய்த் தற்செயல்கொண் டெல்லா
மூடவிட வல்லதுமாய்த் தனித்த வொன்றுள்
மூழ்கிநின்ற முக்குண சிற்சத்தி தன்னில்
நாடனந்தம் பிறந்ததிற் காலுதித்த திற்றீ
நீர்மண்ணுண்டாய் மண்டா னல்கவந்த
ஓடதியி லனமுமதி லுலகுநிற்கு முயர் வாய்ந்தவ்
வோடதியி னுரிமை சொல்வாம்.

இதன்பொருள் காணவேண்டில் ஞானானந்த ஒளிப் பிழம்பின் மூடவல்ல சத்தியைப் பற்றியும் தோற்ற வல்ல (விட வல்ல) சக்தியைப் பற்றியும் அறிய வேண்டும். இவ்விரு சக்திகளை விவரிப்பது வேதாந்தக் கொள்கையாம். இவ்விரு சக்திகளையும் ....

'ஏம மாயா வினோத வீசனா ரருளினாலே'

என்றும்,

'தோற்றமாஞ் சக்தி தன்னில் சொல்லிய விண்ணாம்'

என்றும் வரும் கைவல்லிய நவநீதச் செய்யுள்களின் விளக்கத்தை இந்நூலின் 33 ஆம் 34 ஆம் பக்கங்களில் கண்டுகொள்க.

இவற்றை ஆவரண சக்தி, விட்சேப சக்தி என்பர் வடமொழி நூலோர். ஆதலின், வேதாந்த சித்தாந்த கொள்கைகளைச் சித்த மருத்துவ மாணவர்கள் கற்க வேண்டுமென்பதேயாம்.

**********

# 2. சித்தர்களின் முதற் கோட்பாடு

## உயிர்களின் தோற்றம்

பிறவிக் கடலில் மூழ்கிப் பல்வேறு துன்பங்களை நுகர்ந்து அக்கடலினின்றும் கரையேறும் வழி (உபாயம்) ஒன்றை அறிய வேண்டுமென அவாவியவன் (சீடன்), ஒரு நல்லாசானைச் (சற்குரு) சார்ந்து, பணிந்து, தன் பழங்கண் (துன்பம்) அறப் போக்கும் ஆற்றை அல்லது ஆற்றலை உணர்த்துமாறு வேண்டினான்.

இவனதி காரி யானோன்
இந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும்
பூதபௌ திகங்க ளாலும்
தவனமுன் றடைந்து வெய்யிற்
சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பவமறு ஞான தீர்த்தம்
படிந்திடப் பதறி னானே. (கை.ந. 12)

மாணவனுக்குரிய சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என்னும் ஆறு குணங்களையும் தகுதியாகப் பெற்ற சீடன், இந்திரியங்கள், தெய்வங்கள் பூதாதிகள் ஆகிய காரணங்களால் நேரும் உபாதைகளை நீக்கிக்கொள்ளும் பொருட்டுக் குருவருளால் ஏற்படும் ஞானமாகிய புனித நீரால் கழுவி நீக்கப் பெறும் என்ற தேற்றத்தால் விரைந்து வந்து குருவினைப் பணிந்து நின்றான்.

சமம் - அகக் கரணங்களை அடக்குதல்,
தமம் - புறக் கரணங்களை அடக்குதல்,
விடல் - உலகப் பொருள்களின் பற்றுவிடல்
சகித்தல் - அந்தக் கரணங்களில் எழும் காமம் முதலியவற்றை அடக்குதல் (தீட்சை)

| | | |
|---|---|---|
| சமாதானம் | - | குருவின் உபதேசப் பொருளையே மெய்யென்று கொண்டிருத்தல் |
| சிரத்தை | - | குருவின் உபதேச வாக்கியத்தில் பற்றுக்கொள்ளல். |

ஈசனருளால் நல்லாசானை நெருங்கும் நல்வாய்ப்பு அத்தகைய நற்சீடனுக்குக் கிடைத்து ஒரு நல்ல குருவை நெருங்கும் விதத்தைத் தத்துவ நூல்களில் விவரித்த வண்ணமாக முறைப்படி சென்றடைந்தான். அது எங்ஙனமெனில்:-

ஆனபின் மனைவி மக்கள்
அர்த்தவே டணைகள் மூன்றில்
கானவர் வலையிற் பட்டுக்
கைதப்பி யோடு மான்போல்
போனவன் வெறுங்கை யோடே
போகாத வண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக் கண்டு
நன்றாக வணங்கினானே. (கை.ந. 13)

மனைவி, மக்கள், செல்வம் என்று கூறப்படும் மூன்று விருப்பங்களின் ஈர்ப்பு (ஏடணாத்திரியம்)களில் சிக்குண்டவனான சீடன், வேடன் வலையில் சிக்குண்ட மான் அவன் கையினின்று தப்பிச் சென்றது போல, மேற்படி ஈர்ப்புகளின் திறத்திலிருந்து தப்பித்துக்கொண்டு, கையில் பூ பழம் போன்ற பூசித்தற்கு உதவும் பொருள்களைக் கொண்டு சென்று குருவின் பாதங்களை விளக்கிப் பூசித்து வலம் வந்து வணங்கினான்.

இப்பாடலில் குடும்பச் சிக்கலில் (வலையில்) கட்டுண்ட இல்லறத்தான் அதிலிருந்து விடுபடுதல் பெரும்பாலும் இல்லை. அதை உணர்த்த வேண்டியே, வலையில் சிக்கிய மான் வேடன் கையினின்றும் தப்பியதாக ஓர் அரிய கற்பனை உதாரணத்தைக் கூறி விளக்கியுள்ள நயங்காண்க. மற்றும், வலையினின்று தப்பிய மான் மீண்டும் வலையை விரும்பாதது போல் நற்சீடன் மேலே கூறப்பெற்ற மூன்று பொருள்களின் மீது நாட்டங் கொள்ளான் என்ற கருத்தையும் தெரிவித்துள்ளார்.

இதனால் கன்மத்தின் (ஊழ்) வலியால் பிறந்த ஒருவன் மாயையின் வலைக்குட் சிக்கிக் கிடப்பன். அதினின்றும் தப்பிய பிழைக்க வழி தேடும் விதி (ஊழ்) உடையவன் எவனோ ஒருவன் என்பது அறியக்கிடக்கிறது.

குருவையடுத்த சீடன் 'வெறுங்' கையோடு போகாத வண்ணம் என்ற தொடருக்கு மேலே கூறியுள்ளது போலப் பூசைக்குரிய பொருள்களையும் ஓமத் திரவியங்களையும் கொண்டு சென்றானென்று பொருள் கொள்ளார். 'வீசிய கை வெறுங்கை' என்று பழமொழியுண்டல்லவா? அதை ஆதாரமாகக் கொண்டு கையை வீசிச் செல்வது பெருமிதத்தையும் அடக்கமின்மையையும் குறிக்கும் என்பதையெண்ணிக் கையை வீசிக்கொண்டு செல்லாமல் அடக்க ஒடுக்கமாகக் கைகளைக் கட்டிக்கொண்டு சென்றான் என்று பொருள் கொள்வர்.

மற்றும் சிலர் 'வெறுங் கையோடு போகாத வண்ணம்' என்ற தொடர் சீடனுக் காமாறும் பொருள் கொள்வர். எவ்வாறெனில் சீடன் சென்ற தகைமை குருவுக்குச் சீற்றம் விளைத்து அச் சீடனை ஏற்றுக் கொள்ளாமல், உபதேசஞ் செய்யாமல் வெறுங்கையொடு திரும்பும் வண்ணம் செய்யாதவாறு என்றும் கூற இடமுண்டு. இவற்றுள் எப்பொருள் ஏற்புடைத்தோ? கொள்க.

'அலர் கரங் கொண்டேகி' என்பதனால் விளக்கப்பட்ட வகையில் துன்பங்களைச் சகிக்கமுடியாத நிலையைத் தோற்றுவிக்கும் வண்ணம் கைகளை விரித்தும் துன்பங்களைப் போக்கும் உபாயத்தை அருளவேண்டுமென்று கெஞ்சி இரக்கும் மன நிலையையும் தோற்றுவிக்கும் விதத்தில் சென்றனன் என்று பொருள் கொளலும் ஏற்புடைத்து.

இங்குக் கற்க வேண்டிய பகுதி மிக உயர்ந்ததாகிய மெய்ஞ்ஞான பாடமாதலால் அதனைக் கற்பவன் பண்டைக்காலச் சீடன் போலவும், கற்பிக்கும் ஆசானும் முற்காலச் சற்குரு போலவும் நடந்து கொள்ளவேண்டு மென்பதையும் வலியுறுத்தியது இவ்விரண்டு பாடல்களுமாம். நற்சீடனுக்குரிய தகுதிகளை முதல்

பாடலின்கீழ் விளக்கியதை ஒவ்வொருவரும் மனத்திற் கொள்ளல் மிகவும் வேண்டற்பாலதொன்று. அத்தகைய குணத்தையுடையவன் தான் தகுதியுடைய மாணவன். மாணவன் என்பது மாண்புடையவன் என்ற பொருளுடைத்து என்பது தேற்ற மன்றோ?

இவ்வாறு தன்னிடம் வந்த சீடனைக் கண்ட குரு கீழ்கண்டவாறு கூறலுற்றார்:

வாராயென் மகனே தன்னை
மறந்தவன் பிறந்திறந்து
தீராத சுழற்காற் றுற்ற
செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப்
பிரமையிற் றிரிவன் போதம்
ஆராயுந் தன்னைத் தானென்
றறியுமவ் வளவுந் தானே! (கை. ந. 19 )

யான் யாரென்று விசாரித்து அறியாதவன் குறாவளியில் சிக்குண்ட சிறு துரும்பு போல இவ்வுலகத்தும் (பிறத்தலால்) அவ்வுலகத்தும் (இறத்தலால்) மாறிமாறிப் போவதும் வருவதுமாய் நிற்பன். இந்த நிலை அவன் தன்னைப் பிரம்மம் என்று உணரும் வரை நீடிக்கும்.

தன்னையுந் தனக்கா தாரத்
தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானாய்ப்
பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிந்தா யாகில்
உனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே
ஈதுப தேசித் தேனே. (கை.ந. 20 )

தான் யார்? தன் தலைவன் யார்? தனக்குந் தன் தலைவனுக்குமுள்ள தொடர்பு யாது? என்ற விடயங்களின்

உண்மைத் தத்துவத்தைச் சீடன் அறிவானேயாமாகில் பிறவிக் கடலினின்று கரையேறுவானென்றும், அப்பிறப்பு இறப்புகளுக்குக் காரணமும் அதனை ஒழிக்கும் வழிமுறைகளையும் விளக்கினார். ஈண்டு.....

"என்னை நீ கேட்கையாலே ஈதுப தேசித்தேனே"

என்பதால் ஆர்வத்துடனும் தகுதியுடனுங் கூடிய சீடன் குருவை யடுத்துப் பணிவுடன் அறிவைக் கோரி விண்ணப்பித்துக் கொண்டாலன்றி ஏனையோர்க்கு வேதாந்த சித்தாந்த உண்மைத் தத்துவங்களை விளக்கலாகாதென்றும் சான்றோர் நெறிமுறையையும் உணர வைத்தார் எனக் கொள்க. தன்னையும் என்றதால் சரீரத்தினுள் கிடக்கும் ஆன்மாவை என்று பொருள் கொள்ள வேண்டும்.

'வாராய் என் மகனே' என்றது உபதேசக் குரு, சீடனுக்குத் தந்தையாவார் (ஞானப் பிதா என்பர் ஏனையோர்) என்பதை மேற்படி சொற்றொடர் விளக்குகிறது. மற்றும், அவர் தம் சீடனுக்குத் தீக்கை(தீட்சை) கொடுத்தாரென்பது விளங்குகிறது. 'தீக்கை' என்பது ஒரு சடங்கைத் தக்க முதியான் (குரு) விதிப்படி எல்லா ஏற்பாடுகளையும் செய்து தொடங்கி வைத்தல் என்று பொருள்படும். அது ....

* காணுந் தீக்கை (நயன தீக்கை)
* நினையுந் தீக்கை (ஞாபகத் தீக்கை)
* தீண்டுந் தீக்கை (பரிசத் தீக்கை)

என மூவகைப்படும். அவற்றின் விளக்கம் வருமாறு:

காணுந் தீக்கை:

மீன் முட்டைகளை இட்டுக்கொண்டே நீரில் நீந்திச் செல்லும். எல்லா முட்டைகளையும் இட்டான பின், தான் இட்ட முட்டைகளைக் காணும்போது அவை குஞ்சுகளாகித் தாய் மீனுக்குப் பின் நீரில் நீந்திச் செல்லும். அவ்வண்ணமே குருவின் பார்வை

சீடன் மீது விழுந்தவுடனே உண்மையறிவு பெற்றுக் குருவைப் பின்தொடர்தல் ஒரு வகையாம். இதுவே காணுந்தீக்கையாம்.

நினையுந் தீக்கை :

ஆமை தான் இட்ட முட்டைகளைப் பற்றி நினைத்த அளவிலேயே முட்டைகளெல்லாம் குஞ்சுகளாக மாறி ஆமையின் பின் செல்லும். இவ்வகை நிகழ்ச்சியில் ஆமை ஓரிடத்திலும், முட்டைகள் வெகு தூரத்துக்கப்பால் ஓரிடத்திலும் இருக்கக் கூடும், அல்லது அண்மையிலும் இருக்கக்கூடும். ஆயினும், இவ்வகை நிகழ்ச்சி, உடலுறுப்பின் இயக்கம் யாதுமின்றி மனத்தாலேயே நிகழ்கின்றது. அதேபோல் குரு தம் சீடனுக்கு நினைப்பாற்றலாலேயே தீக்கை செய்விப்பதுமுண்டு. இது நினைப்புத் தீக்கை என்ற வகையாம்.

தீண்டுந் தீக்கை:

கோழி முட்டையிட்ட பின், தானே அதன்மேல் உட்கார்ந்து சூடுகொடுத்துக் குஞ்சுபொரிக்கச் செய்கிறது. இதனை அடை காத்தல் என்பர். இவ்வாறே குரு சீடனைத் தம் கையால் தொட்டு உணர்த்துவது ஒரு வகை. இது பரிச தீக்கை என்றும், தீண்டுந் தீக்கை என்றும் கூறப் பெறும்.

இம் மூவகையில் பெரும்பாலும் கையாளப் பெறும் தீக்கை தீண்டும் (பரிச) தீக்கையாம். ஆகவே, இந்தச் சீடனுக்கும், பரிச தீக்கை முறையாலேயே அறிவுணர்த்தினார் என்று கொள்க. இதனை உபதேசம் என்றும் கூறுவர். (உப - அருகில், தேச- இடம் )

சீடனுக்கருகில் குரு இருந்து ஓதுவித்தல் என்பது பொருளாம்.

'தன்னையும்' என்றதால் தன் மெய்யில் உள்ள ஆன்மாவை என்று பொருள் கொள்ள வேண்டும்.

இன்னது தேகந் தேகி
இவனென உணர்வான் யாவன்
அன்னவன் தன்னைத் தானென்
றறிந்தவ னாகு மென்றார்
சொன்னபின் தேகி யாரித்
தூலமல் லாம லென்றான்
பின்னது கேட்ட வையர்
பீழையும் நகையும் கொண்டார்.
(கை. ந. 22.)

தேகம் இது, இத்தன்மையது, தேகி என்பவன் தேகத்தில் தங்கியுள்ளதான ஆன்மா, அது எத்தன்மையை உடையது என்று விசாரித்து மனத்தால் உணர்ந்தவனே ஞானியாவான் என்று கூறினார். உடனே சீடன் இந்தப் பருவத்திலே யல்லாமல் தேகி என்பவன் வேறு யாராக இருக்கக் கூடும்? என்று வினவினான். அதைக் கேட்ட ஆசானார் மிகுந்த மனவருத்தத்தையும் மகிழ்வையும் ஒரே நேரத்தில் கொண்டார்.

தேகம் வேறு, தேகி வேறு என்று குரு அறிவுறுத்தக் கேட்ட சீடனுக்குத் தன் கொள்கையாகிய தேகியே தேகமென்பதில் உள்ள குற்றம் புலப்படாமல் ஐயங் கொண்டான். இவன் அறியாமையைக் கண்ட குரு முதலில் மிக வருந்தினார். அதே நேரத்தில் அவனுடைய உண்மை நவிலல் என்ற தன்மை கண்டு மிக மகிழ்ந்தார். உடனே, தம் சீடன் கொண்ட ஐயத்தை நீக்க முற்பட்டார்.

தேகமல் லாமல் வேறே
தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து
முளைத்தவ னெவன்நீ சொல்வாய்
சோகமாங் கனவு தோன்றாச்
சுழுத்திகண் டவனார் சொல்வாய்
ஆகநீ நனவி லெண்ணும்
அறிவுதா னேது சொல்வாய். (கை.ந.23.)

குரு மேலும் கூறுவதாவது : "சீடனே! நான் இவ்வுடலே யல்லாமல் இவ்வுடலில் தங்கி யுள்ளவன் யாவன்? அவனைக் காண இயலவில்லை என்றனை அல்லவா? நான் விளக்குவதைச் சற்று கவனிப்பாயாக.

நீ தூங்கும் போது உன் உடல் யாதொரு இயக்கமும் கொள்வதில்லை என்றறிவாய் அல்லவா? அப்போது கனவு ஒன்று உனக்கு நிகழ்கின்றது. அக்கனவில் தோன்றுபவன் யாவன்? சொப்பனம் ஏதுமின்றித் தூங்குகிற சுழுத்தி நிலையைக் காண்பவன் யாவன்? மற்றும், விழித்திருக்கும் காலத்தில் இயற்கையின் ஒளிப் பொருள்களாகிய ஞாயிறு, திங்கள், தீ (விளக்கு வகையாவும்) இல்லாதபோதும் பஞ்சேந்திரியங்கள் ஒலி, ஊறு, நாற்றம், சுவை, முதலான விடயங்களையறியும் அறிவு என்பது எது? என்பதைக் கூறுவாய் என்று வினவினார்.

நனவுகண் டதுநான் கண்ட
நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதுஞ்சு ழுத்தி
கண்டதும் வேறொன் றேபோல்
தினமனு பவிப்ப தொக்கும்
தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னே
மறைக்கும தருளு வீரே. (கை. ந. 24.)

சீடன் கூறுவதாவது : நான் விழிப்பில், அதாவது நினைவுடன் இருந்தபோது கண்டவைகளும், நான் என் நினைவு இழந்து தூங்கும்போது கனவென்னும் காலத்தில் காண்பவைகளும், நினைவும் அற்று, கனவும் அற்ற காலத்தில் (சுழுத்தி நிலை) யான் அறிந்தனவும், இந்த உடலுக்கு அப்பாற்பட்ட ஒன்றை (தேகியை) தினந்தினம் அனுபவத்தில் ஏதோ சில காலத்தில் தெரிந்திருந்தும், அனவரதமும் (எப்போதும்) தேகம் வேறு, தேகி வேறு என்ற உணர்வு என் உள்ளத்தில் தெளிவாகத் தெரியவில்லை. சில காலம் தெரிந்தும் பலகால் அவ்வுணர்வின்றியும் இருந்துள்ளேன். அப்படி இன்றி எந்நேரமும் இவ்வுடல் வேறு, உடலில் உள்ளவன் (தேகி) வேறு

என்னும் உணர்வைப் பெறுமாறு எனக்கு அருளுவீராக என்றான்.

பின்னர், உடல் என்பது யாது? அதன் அமைப்பின் கூறு எத்தன்மையது? அஃது இங்கு தோன்றியது எங்ஙனம்? மெய்யின் பொது இலக்கணங்கள், சிறப்பிலக்கணங்கள் யாவை? என்பவற்றின் விவரங்களையும், தேகி (உடலிலுறைவோன்) யார்? அவன் எவ்வாறு உண்டானான்? அவனுடைய பொது, சிறப்பு இலக்கணங்கள் யாவை? மெய்க்கும், மெய்யுள்ளுறைவானுகும் (தேகி) எங்ஙனம் கூட்டேற்பட்டது? அவ்விதச் சேர்க்கையால் யாது பயன்? என்பன போன்ற தேகியின் விவரங்களையும் சற்குரு விவரிக்கக்காரணம் ஏற்பட்டது. இவ் விவரங்கள் யாவும் மருத்துவக் கலையைக் கற்கும் மாணாக்கர்கட்கு இன்றியமையாதது என்பது அறியத்தக்கதாகும்.

வினா விடையில் விளக்கப்பட்ட இவ் விடயங்களைச் சுருங்கக் கூறப்புகின், வேதாந்த நூற்கள் நமக்கு உபதேசிக்கும் தத்துவங்கள் இரண்டாகும். அவை ....

1. அத்தியாரோபம்
2. அபவாதம்

என்பன. *அத்தியாரோபம்* என்பது ‘மித்தை’ பொய் எனப்படும். இதனால் கட்டு (பந்தம்) அல்லது தளை ஏற்படும். அபவாதம் என்பது வீட்டைத் தரவல்லது.

அத்தியா ரோப மென்றும்
அபவாத மென்றுஞ் சொல்லும்
உத்தியால் பந்தம் வீடென்
றுரைக்கும்வே தாந்த மெல்லாம்
மித்தையாம் ஆரோ பத்தால்
பந்தமாம் அபவா தத்தால்
முத்தியாம் இவ்வி ரண்டின்
முந்தியா ரோபங் கேளாய்! (கை.ந.26)

ஆரோபம் என்பது எவ்வாறு பொய்யாம் எனின், ஒரு பொருள்

வேறொரு பொருள் போலத் தோன்றுதல். கயிறு பாம்புபோலத் தோற்றமளித்தலும், கானலில் நீரோட்டம் போலக் காணப்படுதலும், விண்ணில் நீல நிறமும் போதிய எடுத்துக் காட்டுகளாம்.

இவ்வகைத் தோற்றப் பொருள்களில் உயிருள்ளவை, உயிரற்றவை என (அசடம், சடம்) இருவகைப் பொருள்களால் இவ்வுலகு உண்டாகியுள்ளது, அது எவ்வாறெனின்,

இப்படிப் போல நாம
ரூபங்க ளிரண்டு மின்றி
ஒப்பமாய் இரண்டற் றொன்றாய்
உணர்வொளி நிறைவாய் நிற்கும்.
அப்பிர மத்திற் றோன்று
மைம்பூத விகார மெல்லாம்
செப்புகற் பனையி னாலே
செனித்தவென் றறிந்து கொள்ளே.
(கை.ந.28)

மேலே கூறியுள்ளது போலப் பெயரும் உருவமும் இன்றி இரண்டற்ற ஒரே பொருளானது அறிவாகவும், முழுமை யுடையதாகவும், உணர்வுடையதும், உணர்வு ஊட்ட வல்லதுமான பிரமத்தில் ஐம்பூதங்களின் வேறுபாடுக ளெல்லாம் தோன்றும், இவ்வகைத் தோற்றமே உலகம் எனப் பெறும். இது கற்பனைப் பொருள் என்பர், மெய்யறிவு பெற்றவர்கள்.

அதுதானெப் படியென் றக்கால்
அநாதியாம் சீவ ரெல்லாம்
பொதுவான சுழுத்தி போலப்
பொருந்துமவ் வியத்தந் தன்னில்
இதுகால தத்து வப்பேர்
ஈசனுட் பார்வை யாலே
முதுமூல சுபாவம் விட்டு
முக்குணம் வியத்த மாமே. (கை.ந.29)

அவ்வகை ஆக்கங்கள் (சிருட்டிகள்) யாவும் எவ்வண்ணம்

நிகழுமெனின், அநாதியாய் உள்ள உயிர்களெல்லாம் ஆக்கல் (சிருட்டி) தொடங்கும் முன் சுழுத்தி நிலையில் கருவி கரணங்களெல்லாம் இருக்குமாறுபோல மாயையினிடத்தே பொருந்தி இருக்கும், அச் சீவர்களின் கன்ம வாசனையும் உடனுறையும். இம் மாயையானது கால தத்துவம் என்று பெயர் பெற்றதான ஈசனது அகப்பார்வை வெள்ளத்தாலும், ஆன்மாவின் மேலான பக்குவத்தாலும் முன்னிருந்த தன்மை நீங்கி முக்குணம் வெளிப்படும்.

இப் பாடலால் ஆன்மாக்கள் பல, அவை அழிவற்றவை (நித்திய வத்து); அவை மாயையில் பொருந்தி யுள்ளவை என்பதும், அத்தகைய 'முது மூல சுபாவம்'' என்று கூறினமையின் அம் மூலப் பிரகிருதி என்னும் மாயையின் இடமாய் உலகம் தோன்றிற்று என்பதும், இப் பிரகிருதியின் மாறுதலே (பரிணாமம்) இப் பிரபஞ்ச மென்பதும் கிடைக்கப் பெறுகின்றது.

பிரளய காலத்தில் சின்மயமான எல்லாச் சீவன்களும், இலிங்க சரீரத்தில் நிற்கப் பெற்றவைகளாய், பிறப்புக்கு முன் தாம் தாம் செய்த வினையின் வித்தையும் தம்மிடம் தாங்கியும் அவ்வியக்தம் (புலனாகாத் தன்மை) என்னும் 'முதுமூல சுபாவத்' தில் (மூலப் பிரகிருதியில்) ஒடுங்கி நிற்பவைகளாகும். பிரகிருதி, விக்ருதி (பகுதி, விகுதி) யாவும் பிரம்மத்தின் உள்ளடங்கியவை யாதலின், முன் சொன்ன அவத்தை (காலம்) யில், அதாவது பிரளய காலத்தின்நிலை இப் பிரமத்தின் சுழுத்தியென்பர். இவ்வவத்தை சில காலம் நீடித்து நிற்கும். அதை அளவிட்டுக் கூற இயலாது. ஏனெனில், அக்காலத்தில் இரவுபகல் என்ற பாகுபாடுகள் கிடையா, இந்நிலைக்குக் கால தத்துவப் பேர் என்று பெயர்.

இவ்வண்ணம் 'கால தத்துவப் பேர்' வரப்பெற்றுள்ள நிலையில் 'ஈசனுட பார்வையாலே' கடவுளின் அருட் சுரப்பின் காரணமாய் அவ்வியக்தம் தன் சம நிலையை விட்டுத் தன்னுள் கிடந்த சத்துவ, இராசச, தமோ குணங்களில் ஏற்றத்தாழ்வென்னும் மாற்றங்கள் உண்டாகும் காரணத்தால் 'வியக்தம்' (வெளிப்படல்) என்னும் மாற்றத்தைப் பெற்றுக் காரிய ரூபமாகிய ஆக்கல் (சிருட்டிக்கு) தொழிலுக்கு முதற் காரணமாய் நிற்கும்.

*குறிப்பு :- 'ஈசன்' என்னும் சொல்லின் சிறப்பான பொருள் கவனிக்கத்தக்கதாகும். எவனொருவனுடைய ஏவல் மற்றெல்லோராலும் பணிந்தேற்கப் படுகிறதோ அவன் ஈசனென்றும், எவனொருவனுடைய ஆட்சிக்கு உட்பட்டுயாவுமே நிற்கின்றனவோ அவன் ஈசனென்றும், எவனொருவனின் அருட் பெருக்கினால் ஆக்கம் (அனுக்கிரகம்,) அழிவு (கிரகம்) என்ற இருவகையான செயல்களும் நிகழ்கின்றன அவனே ஈசன் என்றும் குறிக்கப்படுகிறது.*

முன் சொன்ன 'கால தத்துவப்பேர்' என்னும் நேரத்தில் அசையும்-அசையாப் பொருள்கள் யாவும் அவனுள்ளேயே (ஈசனுக்குள்ளேயே) அடங்கிக் கிடத்தலால் அவன் 'உட்பார்வையாலே' என்றதால் அவனுடைய இச்சையினால் உலகம் தோன்றலாயிற்று, ஆகவே, உலகம் தோன்றுதற்கு ஈசன் நிமித்த காரணமும், மாயை முதற் காரணமும் மற்றுமுள்ள வித்தென்ற அவ்விடத்துக் கிடக்கும் கன்மங்களும், முக்குணம் முதலானவைகளும் துணைக்காரணங்களாய் நின்று உலகம் உண்டாயிற்று என்றறிக.

இவ்வண்ணம் உண்டாகும் உலகத்தில் முக் குணங்களின் இயல்புகள் தோன்றும். எங்ஙனமெனின்,

உத்தம வெளுப்புச் செம்மை
உரைத்திடு கறுப்பு மாகும்
சத்துவ குணத்தி னோடு
ரசோகுணந் தமோகு ணந்தான்
சுத்தமோ டமுக்கி ருட்டாச்
சொல்லுமுக் குணமும் மூன்றாய்
ஒத்துள வேனுந் தம்முள்
ஒருகுண மதிக மாமே. (கை. ந. 30)

சுத்த வெண்மை, செம்மை, கருமை என்பவை முறையே சத்துவ, இராசச, தமோ குணங்களின் (சொரூபம்) உருவங்கள் (நிறங்கள்) ஆகும். சம நிலையில் உள்ளபோது இம்மூன்று குணங்களும் (ஒரே தாம்பில் உள்ளடங்கிய முப்புரிபோல்) ஒன்றுபட்டு நிற்குமேனும்

செயலாற்றும் நேரத்தில் இவை ஒன்றினும் ஒன்று ஏறியும் தாழ்ந்தும் வரும். இவை...

1. ஒன்றை மற்றொன்று அடக்கியும்
2. ஒன்றை யொன்று தழுவியும்
3. ஒன்றையொன்று விருத்தி செய்தும் (மிகுவித்தும்)
4. இரு குணங்கள் இணைந்தும்

செயல்படுதலுக்குக் காரணமாதல் கண்டறியப்பட்டுள்ளது. இது ஒரு சார்பினரின் கருத்து. மற்றொரு சார்பினரின் கருத்து பின்வருமாறு.-

ஒருவழி யிதுவா மித்தை
ஒருவழி வேறாய்ச் சொல்வர்
மருவுமவ் வியத்தந் தானே
மகதத்வ மாகு மந்த
அருண்மக தத்து வந்தான்
அகங்கார மாகு மென்றும்
கருவகங் காரம் மூன்றாக்
காட்டிய குணமா மென்றும். (கை.ந. 31)

செயற்கையில் மூலப் பிரகிருதியானது விகாரமுற்று முதலில் மகதத்துவமாகும். பிறகு, இம் மகதத்துவம் அகங்காரமாக மாறும். இவ்வகங்காரம் முக்குணங்களிலும் உள்ளதேயாயினும் அவற்றுள் ஒவ்வொரு ஞாட்பில் யாதேனும் ஒன்று அளவுக்கு மீறி நிற்கும் காரணத்தால், மூன்று வகையாய்ப் பிரிந்து மீசுர சத்துவ அகங்காரம், மீசுர இராசச, அகங்காரம், மீசுர தமோ அகங்காரம் என மாறும்.

சித்தாகிய ஆன்மா மீசுரமான சத்துவ அகங்காரத்தை யொட்டி நின்று தன்னைத் தானறிய முயற்சிக்கும் செயலை ஏற்கும். இங்கு மீசுரமுற்று நிற்கும் சத்துவ அகங்காரம், ஆன்மாவுக்குத் துணைக் காரணமாய் நின்று, அறிவைப் பெருக்கி, ஆன்மா தன்னைத்தான் காண்பதற்குத் தோற்றுவிக்கும் விளக்கு போலக் (துணைக் காரணமாய்) காண உதவுகிறது. மாயையில் சிக்குண்டு உழன்று,

அறிவற்ற நிலையுற்றதுமான ஆன்மா, முன் சொன்ன சத்துவத்தின் உதவியைப் பெறுமளவும் (அவ் வியக்கத்தையே) தொக்கிய நிலையிலேயே தழுவி நிற்கும் என்க. முன் சொன்னவாறு துணைக் காரணமாய் நின்று, ஆன்மாவிற்கு அறிவை உதவும் சத்துவத்தின் திரிபான கருவிக்கே 'மக தத்துவம்' என்றும், 'புத்தி தத்துவம்' என்றும் பெயர். அறிவே உருவெனத் தக்கதான சொரூபத்தைப் பெற்ற கருவியாகிய இம் மகதத்துவத்தில் தோன்றும் பிரமத்தின் சாயையைத் 'தான்' என்று உணர்தல் அகங்காரத்தின் செயலாகும். முன் சொன்னதுபோல இவ்வகங்காரத்திலேயே சத்துவம், மற்றிரண்டினைக் காட்டிலும் ஓங்கி நிற்குமாயின், அப் புத்தி தத்துவமானது செயலற்று, எவ்வித மாற்றங்களுமின்றி நிலைபெற்று நிற்கும்.

ஆயினும், அவ் வகங்காரத்தில் இராசதம் விஞ்சி, சத்துவம், தாமசம் என்னும் இரு குணங்களையும் செய்கையில் புகுத்துமேல், இந்திரியங்களும், தன்மாத்திரைகளும் உற்பத்தியாகும். இவ்விதச் செயற்கையில் உற்சாகமுறும் அகங்காரத்துககு இராசத அகங்காரமென்று பெயர்.

செயற்கையில் புகுவதும், ஆயினும் அறிவின் துணையின்றிச் சடத் தன்மை ஓங்கும் வகையில் மாற்றங்களைப் பெறக் காரணமாய் நிற்பது இவ் வகங்காரத்தில் மீசுரமான தமோ குணமேயாகும். இவற்றினிடமாய்ப் பஞ்ச தன்மாத்திரைகள் அல்லது சூக்கும பூதங்கள் அல்லது நொய்ய பூதங்கள் ஆகிய ஐந்தும் தோன்றும்.

இவ்வாறு அகங்காரத்திலேயே மூவகை உண்டென்பது புலனாகின்றது. இங்கும் சத்துவம், தமசு இரண்டும் தனித்தனியே மீசுரமுற்றுச் செயற்கையில் மாறுபாட்டை அடைவதற்குப் பொதுவாக இவ் விரண்டினோடும் தனித்தனியே ஓங்கிய இராசச குணம் துணைக் காரணமாய் நிற்றல் முக்கியமாம். இம்மூவகை அகங்காரங்களுக்கும் முறையே அறிவின் பெருக்கோடு கூடியது என்னும் பொருள் படுமாறு தைச சாகங்காரம் என்றும், மற்றுள்ள இருவகை அகங்காரங்களை விகாரமுறச் (மாற்றமுற) செய்யும் இயல்புடையதெனப் பொருள்படுமாறு வைக்காரிகா அகங்காரம்

என்றும், நொய்ய பூதங்களும் அவற்றின் வாயிலாக மகாபூதங்களும் உண்டாவதற்கு ஏதுவாய் நிற்குமெனப் பொருள்பட பூதாதி அகங்காரமென்றும் மாறு பெயர்கள் உண்டு. இவற்றினிடமாய்த் தைசசாகங்காரம் முதற்காரணமாயும், வைகாரிகா அகங்காரம் துணைக் காரணமாயும் நின்று, இந்திரியங்களும் அந்தக் கரணங்களும் உண்டாகின்றன. மற்றும், பூதாதி அகங்காரம் முதற் காரணமாகவும், வைகாரிகா அகங்காரம் துணைக் காரணமாகவும் நின்று நொய்ய பூதங்களைந்தும் உண்டாகின்றன என்று அறியவும். இவை யாவும் நுண்ணுடலுக்கு(சூக்குமசரீரத்துக்கு) ஒன்றியவையாகும்.

பருவுடலுக்கு இயைபு கொண்டவை பஞ்சீகரணத்தால் ஏற்படும் மாற்றங்கள்(பரிணாமங்கள்) ஆம், இவையே ஈசனின் அருளால் ஆன்மாவுக்கு ஏற்படும் போக தனுவில் (துய்க்கும் மெய்யில்) நிலை பெறும். இப் பஞ்சீகரண முறை பிறகு விவரிக்கப் பெறும்.

உலகம், சீவன், முதல்வன்:-

இக்குணங் களிலே விண்போன்
 திருக்குஞ்சிற் சாயை தோன்றும்
முக்குணங் களினுந் தூயதாம்
 முதற்குண மாயை யாகும்
அக்குணப் பிரமச் சாயை
 யந்தரி யாமி மாயை
எக்குணங் களும்பற் றாதோன்
 நிமித்தகா ரணனா மீசன். (கை.ந. 32)

இந்தச் சத்துவமாதி முக்குணங்களில் விண்போன்று பரந்தும், நுண்ணியதாயும், எத் தொடர்பு மற்றும் இருக்கும் சித்தின் பிரதி பிம்பம் (நிழல்) உண்டாகும். முக்குணங்களிலும் தூயதான சத்துவ குணமானது அவ்வாறேயுள்ள தூய சத்துவ முக்கியத்துவம் பெற்ற மாயையில் பிரதி பலிக்கும். பிரம்மத்தின் சாயையானது மறைந்தும், எங்கும் பரவியும் இருக்கும். மாயையையே உடலாகக் கொண்ட ஈசன் எக் குணங்களையும் சார்ந்திராமல் தனித்துள்ளவன் என்றறிக.

இங்கு முதல்வனாகிய ஈசனின் 'சித்' என்னும் சொரூபம்,

சத்துவம் ஓங்கியதான அகங்காரத்தைத் தழுவி நிற்கும் ஆன்மாவோடு தோற்றுமேல் ஆங்கதற்கு 'அந்தர்யாமி' என்று பெயர். இது முதல்வனின் சுழுத்தி நிலை. இந்நிலையின் சொரூபமே நமக்கு 'ஆனந்த மய கோசம்' ஆகும்.

சாத்துவிகாங்காரம் ஆன்மாவின் உறைவிடமாகும் என்று கூறப்பட்டது. இச்சாத்துவீக அகங்காரமே முதல்வனின் (ஈசனின்) சித் சொரூபத்துக்குக் (உபாதி) காரணமுமாகும். என்று கூறப்பெற்றுள்ளது. இதற்கு 'அந்தர்யாமி' என்றும் பெயர் உண்டு. இந்திரியங்களின் வாயிலாகப் பொருள்களை ஆன்மா உணர்வதற்கு இச் சத்துவத்தின் மீசுரம் (மிகைப்படலே) விளக்குப் போல் உதவுமென்று விளக்கினோம்.

இவ்வான்மாவால் அவ்விடயங்களையும், ஆன்மா வையுங்கூட அறிய வல்லவனாய் ஆங்கே கிடக்கும் அந்தர்யாமியும் ஈசனின் சித் சொரூபமேயானதால், ஈசனே உயிர்கட்கும், அவற்றின் இந்திரியங்கட்கும், உயிராம் ஆன்மாவிலுள்ள அறிவிற்கும் முதற்காரணமும், நிமித்த காரணமும் ஆகின்றாமென்பது தெளிவாகிறது. இதுவே விசிட்டாத் துவித சமயமும், சைவ சித்தாந்தமும் தெள்ளிதின் தெரிப்பதான உண்மையாகும். நிமித்த காரணனென்று ஈசனைக் குறிப்பிட்ட தன் பொருள் என்னையெனின், காரியமாகிற உலகெலாம் அவனன்றி உண்டாகா. ஆயினும், காரியங்களை ஒட்டி நிற்கும் விசேடங்களும் மலங்கள் முதலியனவும் நிமித்த காரணனான ஈசனைப் பற்றாது. அதனாலேயே மேற்படி பாடலின் ஈற்றடியில் "எக்குணங்களும் பற்றாதோன் நிமித்த காரணனாமீசன்" என்று கூறியுள்ளமை காண்க.

# உயிர்களின் தோற்றம்.

ஈசனுக் கிதுசு ழுத்தி
இதுவேகா ரணச ரீரம்
கோசமா நந்த மாகும்
குண மிரா சதம வித்தை
தேசறு மவித்தை தோறுஞ்
சிற்சாயை சீவகோடி
நாசமா முயிர்க்கப் போது
நாமமும் பிராஞ்ஞனாமே! (கை.ந. 33)

மாயையே ஈசனுக்குச் சுழுத்தி அவத்தையாம், இதுவே காரண சரீரமும், ஆனந்தமய கோசமுமாகும். இராசத குணம் அஞ்ஞானம் (அவத்தை) என்று கூறப்பெறும். அவ்வவத்தையாகிய அஞ்ஞானத்தில் சிற்சாயை (ஈசனின் நிழல்) படிந்திருப்பனவே சீவர்களாம். காரிய சரீரங்களை யடையாமல் இருக்கும் அவ்வுயிர்களுக்குப் பிராஞ்ஞர் என்ற பெயரும் அத்தறுவாயிலுண்டாம் என்க.

இராசத குணம் முதன்மை பெற்றதான சகல விகாரங்களுக்கும் அவித்தை (அஞ்ஞானம்-அறிவின்மை) என்னும் பொதுப்பெயர் உண்டெனினும், யான், எனது என்பன போன்ற உணர்ச்சிகளின் எழுச்சிக்குக் காரணமாய் நிற்பது அகங்காரத்தினுள் ஓங்கியுறும் இராசத குணமேயாகும். இதில் தோன்றும் பிரம்மத்தின் 'சித்' என்னும் தத்துவத்தையே சீவன் என்பர். இவ்விதச் சீவன்கள் பலகோடி உண்டேனும் ஒவ்வொன்றும் தோன்றுவதற்கும், தோன்றியபின் நிலைபெறுவதற்கும், செயலாற்றவும் உடனிருந்து இயக்குவிக்கும் முதல்வன் இச் சீவனுக்கு முதற் காரணமும் நிமித்த காரணமும் ஆவான். இச் சீவனைத் தனக்குக் கருவியாக ஏற்று, இச் சீவனுக்கு விளங்கும் அறிவையும், அச் சீவனை நெருங்கி நிற்கும் கன்மங்களாலுண்டான மலங்களையும் அறிய வல்லவனாகவும் ஈசன் நிற்பன். இச் செய்தியின் விளக்கத்தைப் பிறகு பாச விலக்கண விளக்கத்தின் கீழ் விரித்துரைப்பாம்.

மேலே புகன்ற விஞ்சிய இராசச குணமானது இருள்போல நின்று தத்துவத்தை மறைத்து யான், எனது என்னும் தோற்றங்களை இச் சீவனுக்கு உண்டாக்கும். இந்த ரஜோ குணத்துக்கு அவித்தை (அஞ்ஞானம்) என்றும் இவ் அவத்தையினால் சூழப் பெற்று மூழ்கி மருண்டு கிடக்கும் சீவனுக்குப் 'பிராஞ்ஞன்' என்றும் பெயர்களாம். அறிவின்மையின் உயர்வைத் தெரிவிக்கும் பொருள் தரவல்ல 'பிராஞ்ஞன்' என்னும் இச் சொல்லில் கிடக்கும் சிலேடை கவனிக்கத்தக்கது. இச் சொல்லால் அதத்வமான (நிலையற்ற) கடபடாதிகளை நன்குணர்ந்தவனாதலால் 'பிராஞ்ஞன்' என்றும், 'தன்னையும்தனக்காதாரமாம் தலைவனையும் சிறிதேனும் அறியாதவன் என்றறிவிக்கவே பிராஞ்ஞன் (அஞ்ஞானத்தோடு கூடியவன்) என்றனர். ஆயினும். நிலையற்ற பொருள்களை நன்கறியும் ஆற்றல் இவனுக்கு அமைந்துள்ளதால் இவை நிலையற்றவை (அதத்துவம்). இவற்றினின்றும் வேறுபட்டதான தத்துவம் என்றும் நிலையுற்றதாய் ஒன்றிருத்தல் வேண்டும் என்றறிவதற்கும் இவனாலேயே ஆகும். ஆகவே. இவனைப் பிராஞ்ஞன் என்பது பொருந்தும்.

இதுவரையில் நாம் கூறியவற்றைச் சுருக்கிக் கூறிடின்.......

1. மனிதன் உடல், ஆன்மா (தேகம், தேகி) என்ற இரு தத்துவங்களின் சேர்க்கையைப் பெற்றிருப்பவன்.
2. ஆன்மா என்பது ஈசனேயன்றி வேறில்லை.
3. ஈசனே நிலைபெற்ற நித்தியமான தத்துவம்.
4. மற்றுள்ளன யாவும் அவித்தையின் (அறிவின்மை-அஞ்ஞானம்) வாயிலாய் உண்டான தோற்றங்களேயாம். இவை நிலையற்றன என்பதால் அதத்துவங்களெனக் கருதப் பெற்று இவை (இல்லவே இல்லை, பொய்த்தோற்றம்) மித்தையே ஆகும் எனக் கூறப்படும்.
5. இவ்வவத்தை அல்லது அஞ்ஞானம் அல்லது இருள் இருவகையாகச் செயல்படும். அவை ...

அ. ஆரோபம்
ஆ. அபவாதம் என்பன.

ஆரோபமாவது ஒன்றை மற்றொன்றாய் அறிதல் (தெளிதல் அன்று) சுத்தியில் வெள்ளியின் தோற்றத்தைக் காணல் (கிளிஞ்சிலில் காணப்படும் வெண்மையை வெள்ளி என்று காணல்) எடுத்துக்காட்டு இம் மடமையே பிறப்பிறப்புகள் எனும் பந்தத்துக்குக் (தளை) காரணமாகும்.

அபவாதமாவது நல்லறிவு. இது தத்துவப்பொருளின் உண்மையை விளக்கி வீடு பயக்கவல்லதாம்.

6. மேலே, முதலிரண்டில் கூறப்பெற்ற உண்மைக் கிணங்க ஆன்மாவும் உடலும் முதல்வனின் அருளால் தோற்றம் பெற்றன என்பது அறிந்தாம் ஆதலின், இவையாவும் தோற்றங்களேயன்றி சத்துப் பெற்ற தத்துவப் பொருள்கள் அல்ல வென்றும் பிரமம் மாத்திரம் சத்துப் பெற்ற நித்தியப் (அழியாதப்) பொருள் என்றும் அறியக்கிடக்கின்றன.

7. இவ்வுடலும் உயிரும் ஆகிய இரண்டும் பிரமத்தினிடமாய்ப் பிறந்த தோற்றங்கள் அல்லது பிரமமே உடலுயிர் என்ற தோற்றங்களை ஏற்றதெனல் (விவர்த்தவாதம்) ஒவ்வும்.

8. அத் தோற்றங்களை மித்தை (பொய்) யானவை என்று நாமறியாமல் நிலைபெற்ற தத்துவங்களென்று அறிதற்கு ஆரோபமென்ற இருளின் திரிவான மருளே (மயக்கமே) காரணமாகும்.

9. நிலையற்றவையாயினும் இவற்றுள் ஒவ்வொன்றிலும் பிரம்மத்தின் 'சித்' என்ற பாவம் அல்லது பகுதி சேர்ந்திருக்கிறது. அதனாலேயே இவை நம் பொறிகளுக்கும் அறிவுக்கும் புலனாகின்றன.

10. நமது இவ்வுடல் சூக்கும உடல், காரண உடல், தூல உடல் என்ற மூன்று அவத்தைகளைப் பெற்றுள்ளது.

11. 'சுத்த சைதன்யம்' என்னும் பிரம்மத்தின் (சித்தின்) கூறு அவ்வியக்தத்தில் தோன்றுங்கால் ஆங்குண்டாகும் அறிவின்

பிழம்பான சேதனனுக்கு 'கூடஸ்தன்' என்று பெயர். இக் கூடஸ்தனின் சேர்க்கைக்குப் பிரமத்தின் விருப்பமே காரணம். முக்குணங்களையும் சமநிலையில் கொண்டும் ஒருவிதமான மாற்றமும், இயக்கமும் இன்றி முது மூலப் பிரகிருதியாய் உள்ள அவ்வியக்தத்தில் மேற்சொன்ன சைதன்யம் வந்தியங்குவதால் அவ்வியக்தத்தில் பொருந்திய முக்குணங்களில் அசைவு (சலனம்) உண்டாகி, அவ்வியக்தம் மாற்றமுள்ள தோற்றத்தைப் பெறக் காணமாகும். முதலில் மாற்றமுறும் இம் முது மூலப் பொருளுக்கு வியக்தம் என்று பெயர் வழங்கும்.

12. அவ்வியக்தத்தில் வந்து இயங்கும் சித்தாகிய ஆன்மாவும், அவ்வவ்வியக்தம், வியக்தம் என்ற தோற்றத்தைப் பெறுங்கால் தானும் தொடர்ந்து வியக்தத்திலும் வந்தேறும்.

13. அவ்வாறே இந்த வியக்தத்திலும் அவ்வியக் தத்திலிருந்த முக்குணங்களும் தொடர்ந்துவரும். ஆயினும், அவ்வியக்தத்தில் சமநிலையிலிருந்த இக்குணங்களுக்கு ஒரு தரம் ஏற்றக்குறைவென்ற மாறுதல் ஏற்படத் தொடங்கியதால் வியக்தமாய்த் தோன்றும் அவத்தைகளிலெல்லாம் முக்குணங்களும் சமமற்ற நிலையிலேயே இருக்கும்.

14. இவ்விதமான வியக்தத்தில் (முக்குணங்களின் சேர்க்கையும், 'சித்' என்னும் ஆன்மாவும் உள்ளது) சத்துவகுணம் மிக்குள்ள இடத்தில் ஈசனின் தோற்றம் உற்று 'அந்தர்யாமி' என்னும் பெயராலறியப்படும். இவ்வகையான வியக்தம், அதிலுள்ள சத்துவத்தின் மீசுரநிலை, அதில் தோன்றும் பிரம்மம், ஆங்குக் கிடக்கும் ஆன்மா ஆகிய வற்றின் கூட்டுக்குப் (ஒன்றிப்புக்கு) பொதுவாக ஆனந்தமய கோச மென்பது பெயராம்.

அ. இக் கோசத்தில் சத்துவம் மீசுர முற்றிருப்பினும் இராசசமும், தாமசமும் இல்லை என்று கூறக் கூடிய அளவுக்குக் குறைப்பினும், அங்குள்ள ஆன்மாவுக்கு ஏற்படும் அனுபவங்கள் அல்லது முக்குணங்களின் செயற்கை அந்தர்யாமியைச் (பிரம்மத்தை) சற்றும் தீண்டுவதில்லை. ஆயினும், இவ் அந்தர்யாமியே இவ்

ஆனந்தமய கோசம் தோன்றவும் நிலை பெற்றிருக்கவும் முதற்காரணமும் துணைக்காரணம் ஆகும்.

ஆ. இங்குத் தலைவனாகிய பிரம்மம் நிமித்த காரணமாய் மட்டுமன்றி உபாதான காரணமுமாவான் என்றும், இவையாவற்றுக்கும் அந்தப் பிரம்மத்தின் (ஈசன்) இச்சையே (அருள் அல்லது விருப்பம்) காரணமென்றும் அறியத் தக்கதாம்.

(15) இச் 'சித்' தின் தோற்றம் மீசுரமுற்ற இராசச குணத்தில் உண்டாகுமேல், தான், தனது என்றுணரும் அறிவு சீவனுக்கு உண்டாகும். இவ்வாறு அறிவு பெற்ற சீவனும் அதற்காதாரமான (துணை) இராசச குணம் விஞ்சியதா லுற்ற அகங்காரமும் (எனதென்ற உணர்வு) ஒன்றுபட்டிருக்க, நிமித்த காரணமாய் உள்ள, மேலே புகன்ற அந்தர்யாமியும் சேர்ந்து விஞ்ஞான மய கோசமென்னும் இரண்டாவது உடற்கூற்றைப் பெறும். இங்கு நிலைபெற்ற சீவனுக்கு 'பிராஞ்ஞன்' என்று பெயர். இவனுக்கு .....

* விழிப்பு (சாக்கிரதை)
* சொப்பனம்(கனவு)
* உறக்கம்(சுழுத்தி)

என்ற மூன்றுவகை அவத்தைகளும்(காலம்) உண்டு.

அவித்தை (மெய்யறிவின்மை ஒரு வகை மலம்) என்னும் இருளில் சிக்குண்டிருப்பதால் இவன் 'தன்னையே பரன்' (தனக்கு அப்பாற்பட்ட மேலோன்) என்று கருதுவதற்கு ஏதுவாகிறது. மற்றும், இராசச குணம் மிக்கு (மீசுரம்) இருப்பதால், அறிவும் பெருகி (விருத்தியாகி) இருக்குமாதலின், அதத்துவங்களான (மெய்யற்ற) 'கடம் படம்' (வெற்று உருவமும் உருவத்தின் நிழலும்) முதலியனவற்றை அறியும் ஆற்றலும் இவனுக்குண்டு. குருவின் தீட்சையும் உபதேசமும் பெற்று இறைவனதருளும் உறுமேல் அவ் அவித்ந்தை நீங்கி, அதத்துவங்களைத் தத்துவங்களாகக் கருதிய பிழையினின்றும் நீக்கம் பெற்று நித்திய (அழிவற்று நிலைபெற்ற) தத்துவப்பொருளை (செம்பொருள், மெய்ப்பொருள் என்னும்

திருவள்ளுவர் வாக்கை நினைவு கூர்க.) அறியும் ஆற்றலும் இவனுக்கு(சீவனுக்கு) உண்டாகும்.

இதனால் இப் பிராஞ்ஞன் அதத்துவங்களை அவித்தையின் காரணமாய்த் தத்துவங்களாய்க் கருதும் வரையில் பந்தத்தைத் (கட்டு, தளை) துய்ப்பான் (அனுபவிப்பான்) என்பதும், பொய்யை (அதத்துவங்களை) மெய்யல்ல (தத்துவங்களல்ல) என்று விடுத்துத் தத்துவப் பொருளை (மெய்ப்பொருளை) நாடும் ஆற்றலைப் பெறுவதற்குற்ற வன்மையும் இவனுக்கே உண்டென்பதும் அறியக் கிடக்கின்றது.

இவ்வாறு ஆனந்தமய கோசம், விஞ்ஞானமய கோசம், என்னும் கூடுகளைச் சீவன் பெற்ற வகை முறையே சத்துவ குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் வாயிலாகவும், இராசச குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் வாயிலாகவும் ஆன்மா பெற நேரிட்டது என்பது புலனாகின்றது. இவ்விரண்டு கோசங்களும், தாமச குணத்தின் விரிவால் நேர(விளைய)வல்ல மற்றைய மூன்று கோசங்களையும் பெறுதற்குக் காரணமாய் இருப்பதால் இவை ஆன்மாவுக்குக் காரண சரீரம் (உடல்) என்று வகுக்கப்பட்டன.

16. மூலப்பிரகிருதியின் தோற்றத்தின் தொழில் மேலும் தொடர்வதால் தமோகுணம் மீசுரமுற்ற (ஓங்கிய) அகங்காரத்தின் வாயிலாய் மற்றுமுள்ள மனோமய, பிராணமய, அன்னமய கோசங்கள்-போர்வை அல்லது குடிலாகச் சீவனுக்கு உடலாய் வந்தமைகின்றன. இவற்றுள் அன்னமயகோசம் பருத்த உரு (ஸ்தூல வடிவு) வில் காணக் கிடைக்கப் பெறுவதால், பருவுடல் என்றும், மற்றுமுள்ள இரண்டும் நுண்ணுடல் (சூக்கும சரீரம் அல்லது இலிங்க சரீரம்) என்றும் பெயர் பெறுகின்றன.

இனி, இத் தமோகுணம் மிகுந்த அகங்காரத்தின் வாயிலாய்த் தோற்றம் பெறும் இம் மூன்று கோசங்களும், அவற்றின் தத்துவங்களும், உறுப்புகளும், பொறிபுலன்களும், ஸ்தூல பூதங்களும், அவற்றின் காரணமாகிய நொய்ய பூதங்களும், மற்றும் ஸ்தூல பூதங்களின் கூட்டால் பருப் பொருள்கள் (ஸ்தூல திரவியங்கள்) உண்டான

விவரங்களும், அப் பருப்பொருள்களின் சுவை, வீரியம் முதலானவை உண்டானது எங்ஙனம் என்ற விவரங்களும் நோக்கக் கிடப்பனவாகும்.

தமோ குணத்தின் மாற்றத்தால் (பரிணாமத்தினால்) தோன்றும் ஏனைய மூன்று கோசங்களை விவரிக்கும் முன் ...

* ஆவரணசக்தி (மூடிவைக்கும் வன்மை)
* விட்சேப சக்தி (விடுவிக்கும் அல்லது வெளிப் படுத்தும் அல்லது தோன்றவைக்கும் வன்மை)

என்னும் இரு வகைச் சக்திகளைப் பற்றி அறிய வேண்டுவது இன்றியமையாததாகும். ஏனெனில், இவ்விரு வன்மைகளே தாமச குணத்தை மாற்றமடையச் (பரிணாமம்) செய்து இயக்குவிப்பவை யாதல் பற்றியேயாம்.

பிரம்மத்தின் நிழல் (சித் நிழல்) தாமச குணம் மிக்குற்ற அகங்காரத்தின் மேல் (தாமசாகங்காரத்தின்மேல்) விழும்போது மேற் கூறப்பட்ட இரு வன்மை (ஆவரண சக்தி, விட்சேப சக்தி) களையும் இணைக்கச் செய்தே (சம்பந்தித்தே) பரிணாமத்தை (மாற்றத்தை) உண்டாக்குகிறது.

ஏமமா யாவி னோத
வீசனா ரருளி னாலே
பூமலி உயிர்கட் கெல்லாம்
போகசா தனமுண் டாகத்
தாமத குணமி ரண்டு
சக்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமா மூட லென்றும்
விவிதமாந் தோற்ற மென்றும்! (கை. ந. 36)

ஆன்மாவுக்குத் துய்க்கும் கருவியாகிய பருவுடலை உதவ வேண்டுமென்று அருளுணர்வு ஈசனுக்குணடான போது அவ்வருள் வெள்ளத்தின் செயலால் தாமசாகங்கரமானது இரு வல்லமைகளாய்ப் (சக்திகளாய்) பிரிந்து செயல்புரியும். இவற்றுள் (வீமமாம் என்றதால் அச்சந் தரவல்ல என்று பொருள் கொள்க) மூடல் என்னும் வன்மை

அதாவது 'ஆவரண சக்தி' ஒன்று 'விவிதமாம்' உலகிலுள்ள பல்வகைப் பொருள்களாம் (பதார்த்தங்களாம்) தோற்றம் என்னும்(விட்சேப சக்தி) வெளிப்படத் தோற்றுவிக்கும் வன்மை மற்றொன்று ஆகும்.

இவற்றுள் ஆன்ம தத்துவத்தையும், பிரம்ம தத்துவத்தையும் இரண்டும் ஒன்றே என்ற உண்மையையும் அறியக் கூடாத வண்ணம் மறைக்கும் இயல்புடைய (அஞ்ஞான) சக்திக்கு மூடல் வன்மை (ஆவரண சக்தி) என்று பெயர்.

உலகிலுள்ள பல்வேறு சடப்பொருள்களும், அசடப் பொருள்களும் பிரம்மத்தினிடமாய்த் தோன்றற்குக் காரணமாய் இருப்பதால், தோற்றுவிக்கும் தொழிலைப் புரியும் இச்சக்திக்குத் தோற்றல் (வெளியாக்கல்) வன்மை அல்லது விட்சேப சக்தி என்று பெயர்.

'அருளினாலே' என்றதால் நிர்க்குணமான (உரு, பெயர், யாதுமில்லாதது) பிரம்மத்திற்கு அருளென்னும் குணமுண்டாகிப் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்க ஏதுவாம் என்று விளக்குதலால் அத்துவிதக் கோட்பாட்டைச் சார்ந்ததான (அபேத வாதம்) வேதாந்தமும் பேதாபேத வாதமான சித்தாந்தமும் இணைந்தொன்றுபட்டுக் காண்கிறதை அறிக. சித்தாந்தத்தில் பொருளுமாய் அவனுமாய், அல்லாமலுமாய், ஒளியாய் என்கின்றமையால் மேற்படி வாதம் விளங்கும்.

மூடல் என்னும் ஆவரண சக்தியால் தத்துவ விளக்க முண்டாகக் காரணமற்றுப் (வாய்ப்பற்று) போவதால் பிறவிக் கடலுள் எக்காலத்தும் சீவன் மூழ்கிக் கிடக்க நேரிடும் என்ற காரணத்தால் இச்சக்தியை வீமமாம் (அச்சந்தருவதான-பயங்கரமான) என்றழைத்தார் என்க.

தோற்றமாஞ் சக்தி தன்னில்
சொல்லிய விண்ணாம் விண்ணில்
காற்றதாங் காற்றில் தீயாம்
கனலில்நீர் நீரின் மண்ணாம்

போற்றுமிவ் வைந்து நொய்ய
பூதங்க ளென்று பேராம்
சாற்றுமற் றிவற்றில் போக
சாதன தனுவுண் டாகும். (கை.ந.36)

தோற்றமெனக் கூறப்பெற்ற விட்சேப சத்தியின் திறத்தால் விண்ணும், விண்ணிலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும் நீரிலிருந்து மண்ணும் ஆகிய நொய்ய பூதங்கள் தோற்றங் கொண்டன.

(முன்னர் 8-ஆம் பக்கத்தில் கூறப்பெற்ற தேரையர் குணவாகடப் பாடலில் வந்துள்ள... 'மூடவிட் வல்லதுமாய்த் தனித்த வொன்று' என்ற சொற்றொடர் இப்பாடலின் கருத்தோடு இயைவு காண்க.)

இந்த நொய்ய பூதங்களின் இடமாய்த் தோன்றும் மகாபூதங்களும், இம் மகாபூதங்களின் சேர்க்கையால் உண்டாகும் இப்பிரபஞ்சமும் (சடப் பொருள் மட்டுமே இவண் குறிக்கப்படுகின்றன) உண்டாகின்றன.

ஆதிமுக் குணமிப் பூத
மடங்கலும் தொடர்ந்து நிற்கும்
கோதில்வெண் குணத்தி லைந்து
கூறுணர் கருவி யாகும்
ஓதிய பின்னை யைந்து
முளம்புத்தி யிரண்டா ஞான
சாதன மாமிவ் வேழுஞ்
சற்குணப் பிரிவி னாலே.(கை.ந.37)

தமக்குக் காரணமான தாமச குணம் ஓங்கி முதன்மை பெற்ற மாயையின்கண் உள்ள...

* தமசில் சத்துவம்
* தமசில் இராசதம்
* தமசில் தமசு

என்னும் முக்குணங்கள் மூன்றும் இத் தன்மாத்திரைகள் முழுவதிலும் தொடர்ந்து நிற்கும். அதன் காரணமாக உணர்கருவிகளாகிய (ஞானேந்திரியங்கள்) ஐந்தும், பின்னும், உளம்(மனம்), புத்தி ஆகிய ஏழு தத்துவங்கள் தோன்றின.

மேற்படி ஏழு தத்துவங்களும் "ஞான சாதனம்" (உணர்தற்குதவும் துணைகள் எனக் கூறப்பெறும்) என்று பெயர் பெறும்.

இராசச குணத்தில் வேறிட்
டெடுத்தகூ றைந்து மைந்தும்
பிராணவா யுக்க ளென்றும்
பெருந்தொழிற் கருவி யென்றும்
பராவிய பெயராம் இந்தப்
பதினேழு மிலிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த்
தோன்றிய உயிர்கட் கெல்லாம். (கை.ந.38)

ஐந்தைந்தாய்க் கூறுபடாத ஐம்பூதங்களில் இராசச குணம் ஒன்றிய காரணத்தால் பெரிய கன்மேந்திரியங்கள் எனவும், பிராணாதி வாயுக்கள் எனவும் பெயர் உண்டாயின. ஆகவே, முன்பாடலில் கூறப்பெற்ற ஏழு ஞான சாதனங்களுடன் கன்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணாதி ஐந்து வாயுக்களும் சேர்ந்ததான இப் பதினேழு தத்துவங்களும....

* தேவர்
* மனிதர்
* விலங்கு
* பறவை
* ஊர்வன
* நீர்வாழ்வன
* தாவரங்கள்

என ஏழுவகைத் தோற்றங் கொண்டதான எல்லா உயிரினங்களுக்கும் சூக்கும உடலாம்.

இதற்கு முன் பாடலில் கூறியவாறு சத்துவ குணக் கூறுகள் கூடிச் சத்துவம் எனக் கூறப்பெற்ற அந்தக்கரணங்களை உண்டாக்கின. அவை நான்காயினும் இவ்வாசிரியர் சித்தத்தை மனத்திலும், அகங்காரத்தைப் புத்தியிலும் அடக்கி அந்தக்கரணங்கள் இரண்டு என்பர். எவ்வாறெனில்,

* பொருள்களின் நன்மை, தீமைகளை உறுதிப்படுத்தும் தன்மையைப் புத்தியென்றும்,

* சங்கற்பத்தையும் விகற்பத்தையும் உறுதி செய்யும் தன்மையை மனம் என்றும்,

* நினைப்பாற்றலைப் பெருக்கும் தன்மையைச் சித்தம் என்றும்,

* ஒரு பொருளின் மீது உரிமை கொண்டாடுந் தன்மையை அகங்காரம் என்றும் கூறுவர்.

ஆகையால், பொருளின் நன்மை, தீமையைக் கொண்டுதான் நம் மனம் வேண்டும், வேண்டாம் (விருப்பு- வெறுப்பு) என்னும் தன்மையை வெளிப்படுத்துமாகையால் புத்தியை மனத்தினுள் அடக்கினார். அதேபோன்று நினைப்பாற்றலின் விளைவே (சித்த்தின் விருத்தியே) அகங்காரம் விளையக் காரணமாதலால் அகங்காரத்தைச் சித்தத்தில் அடக்கினார். இவ்வகையில் அந்தக்கரணம் இரண்டென்றார் போலும்.

மேலும், மெய், வாய், கண், மூக்கு, செவி, என்ற ஐந்து கருவிகளையும் கூட்டி அவற்றுக்கு 'ஞான சாதனம்' எனப் பெயர் சூட்டினர்..

பஞ்ச பூதங்களின் சமட்டியில் இராசதக் குணக் கூற்றால் பிராணன் தோன்றியது. அது தொழில், இடம் முதலிய வேறுபாடுகளால் ஐந்து பெயர்களை உடையனவாம்,

அஃது எவ்வாறெனில்...

1. வியானன்: இது வெளியின் (ஆகாயம்) கூறான படியால் வெளி எங்கும் நிறைந்திருப்பது போல இஃது உடல் முற்றும் பரவி இருக்கும். இதற்கு இருப்பிடம் தமரகம் (இருதயம்). இதன் தொழில் நடத்தல், உடல் உறுப்புகளை அசைத்தல், கண் இமைத்தல், விழித்தல் முதலியனவாகும்.

2. பிராணன்: இது வளியின் (வாயு) கூறான படியால், வளியைப் போலத் தமரகத்தினின்று மூக்குவரை அலைந்து நிற்கும். இஃது உயிருடன் கலந்து, தலையை இடமாகப் பெற்று மார்பு, கழுத்து இவ்விடங்களில் வாழ்வதன்றி, மனம், புத்தி, உள்ளம், ஐம்பொறி இவற்றைத் தன்வயப்படுத்தி, காறியுமிழ்தல், இருமல், தும்மல், ஏப்பம் விடல், மூச்சுவிடல், வாங்கல், உண்ணும் உணவை உட்செலுத்துதல் என்னும் தொழில்களை நடத்தும்.

3. அபானன்: இது நெருப்பின் (தேயு) கூறான படியால், எரு வாயினின்று (குதம்) அடிவயிறு, இடுப்பின் பூட்டு, நீர்ப்பை, ஆண், பெண் குறிகள், தொடை ஆகிய இவ்விடங்களில் வாழ்ந்து வெண்ணீர் (விந்து), நாதம், மலம், சிறுநீர், கரு இவற்றை வெளிப்படுத்தும்.

4. சமானன்: இது நீரின் (அப்புவின்) கூறான படியால், உடலின் நடுவான பக்குவாசயமே இடமாய்ப் பெற்று, வயிறு முற்றிலும் வாழ்ந்து, உண்ட உணவு நீர்ப்பொருளைச் செரிப்பித்தற்குரிய தீயை விருத்தி செய்து சாரத்தையும் திப்பியையும் வெவ்வேறாகப் பிரித்து, சாரத்தை உடலின் எல்லா இடத்திற்கும் பகிர்ந்து கொடுத்து வளர்க்கும்.

5. உதானன்; இது மண்ணின் (பிருதிவி) கூறான படியால், மார்பையே இடமாகக் கொண்டு, கொப்பூழ் கழுத்து, மூக்கு இம்மூவிடங்களிலும் வாழ்ந்து, பேச்சுக்கு முதற்காரணமாய் இருப்பதன்றி முயற்சி, மன திடம், உடல் வன்மை, உடல் நிறம், உடல் ஒளி, நினைப்பு ஆகிய இவற்றையும் உண்டாக்கும்.

விண்ணின் சத்துவக் குணக் கூற்றால்...

* கேட்டல் என்னும் உணர்வைத் தரும் காதுகளும்

* காற்றின் சத்துவ குணக் கூற்றால் ஊறு என்னும் தொடு உணர்வைத் தரும் தோலும்

* தீயின் சத்துவ குணக் கூற்றால் பார்வை (ஒளி) என்னும் உணர்வைத் தரும் கண்களும்

* நீரின் சத்துவ குணக்கூற்றால் சுவை என்னும் உணர்வைத் தரும் நாவும்

* மண்ணின் சத்துவ குணக் கூற்றால் மணம் என்னும் உணர்வைத் தரும் மூக்கும்

ஆகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும் தோன்றின. அதே போல,

* விண்ணில் இராசச குணக் கூற்றால் வாக்கும்

* காற்றில் இராசச குணக் கூற்றால் கைகளும்

* தீயில் இராசச குணக் கூற்றால் கால்களும்

* நீரில் இராசச குணக் கூற்றால் ஆண், பெண் குறிகளும்,

* மண்ணில் இராசச குணக் கூற்றால் எருவாயும்

ஆகிய ஐந்து கன்மேந்திரியங்கள் உருப்பெற்றன.

*ஆகவே, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, பிராணங்கள் ஐந்து, அந்தக் கரணங்கள் இரண்டு ஆகப் பதினேழும் எல்லா உயிரினத்துக்கும் இலிங்க சரீரம் எனப்பட்ட சூக்கும உடல் என்க.*

* தோற்ற சக்தி (விட்சேப சக்தி) வாயிலாய் 'நொய்ய பூதங்கள்' என்னும் ஐந்து தன்மாத்திரைகளும்,

* பிறகு, பஞ்சீகரண மென்னும் முறையை யொட்டி, இந்நொய்ய பூதங்களிடமாய்த் தோன்றும் மகா பூதங்களும்,

* இம்மகாபூதங்களின் சேர்க்கையாலுண்டாகும் இப் பிரபஞ்சமும் (சடப் பொருள் மட்டுமே குறிப்பிடப் படுகின்றன) உண்டாகின்றன.

தாமசாகங்காரத்தின் மாறுபாட்டால் இவையாவும் உண்டாயின.இவற்றில் சத்துவ, இராசச, தாமச குணங்கள் மூன்றுமே தொடர்ந்து வரக் கிடக்கின்றன என்பதும், தாமச குணம் மீசுரமுற்றுள்ளதாதலால் இப்பொருள்களெல்லாம் சடப் பொருள்களாய் தோன்றியன என்பதும் அறியக் கிடக்கின்றது. அக்காரணம் பற்றியே இச்சடப் பொருள்களிலும் கூட, சிலவற்றுள் சத்துவ குணத்தின் வாயிலாய்த் தோன்றிய சில தன்மைகளும், இராசச குணத்தின் வாயிலாய்த் தோன்றிய சில தன்மைகளும், தாமச குணத்தின் வாயிலாய்த் தோன்றிய வேறு சில சிறப்புத் தன்மைகளும் உண்டாகின்றன. எவ்வாறெனின், சடப்பொருள்கள் எல்லாம் (உயிரற்ற பொருள்கள்) மீசுரமுற்ற தாமச குணத்தின் மாற்றமே ஆயிடினும், அவற்றுள் ஒரு பொருள் கரும்பாகவும், மற்றொன்று வேம்பாகவும், வேறொன்று புளியாகவும், இவ்வாறே பற்பல தன்மைத்தாகவுமிருத்தலால் தாமச குணத்தின் வாயிலாய் வந்த சடப் பொருள்களுள்ளும் சிலவற்றுள் சத்துவ குணமும், சிலவற்றுள் இராசச குணமும், வேறு சிலவற்றுள் தாமச குணமும் சிற்சில காரணங்களால், சிற்சில சந்தர்ப்பங்களில் (இடம், காலம், சூழ்நிலை மாறுபாடுகளால்) உண்டாகின்றன. இவ்விடயங்கள் பல மருத்துவ நூல்களுள் விரித்துக் கூறப்பெற்றுள்ளன.

வியக்தம் (வெளிப்பட்டுள்ள விளக்க நிலை), மகதத்துவம் (பேருண்மை) முதல் நொய்ய பூதங்களென்ற ஒளி, ஊறு, ஒலி, சுவை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஈறாகவுள்ள பிரகிருதியின்

பேதங்களுக்குச் (இயற்கையின் பாகுபாடுகளுக்கு) சமட்டி என்று பெயர். இந்த நொய்ய பூதங்களின் வாயிலாகத் தோன்றும் மகா பூதங்கள் என்னும் விண், காற்று, தீ, நீர், மண் என்பன முதல் அவற்றின் சேர்க்கையாலுண்டான இவ்வுலகிலுள்ள எல்லாமும் வியட்டி என்னும் ஆக்கத்தின் (சிருட்டியின்) உட்பிரிவின் பாற்படும்.

தனித் தனி மரங்களைக் குறித்து விவரித்தல் வியட்டி என்றும், அவற்றின் தொகுதியாலுண்டான காட்டைக் குறித்து விவரித்தல் சமட்டி என்றும் எடுத்துக்காட்டாகச் சொல்லலாம்.

இவ்வாறே இத் தமோ குணத்தின் (தாமச குணம்) நொய்ய பூதங்கள் தனித்தனியாகச் சத்துவம் மீசுரமுற்ற சாத்துவிக அகங்காரத்துடன் சேர்ந்து ஐந்து ஞானேந்திரியங்களைத் (மெய், வாய், கண், மூக்கு, செவி) தோற்றுவிக்கும். மற்றும், அந்தக் கரணங்கள் என்று கூறப்பெறும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கையும் தோற்றுவிக்கும்.

இதனால் சத்துவகுணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் (சாத்துவிகாகங்காரத்தின்) தோற்றங்களும். தாமச குணம் மிக்குற்ற அங்காரத்தின் (தாமசாகங்காரத்தின்) வாயிலாய்த் தோற்றமுற்ற சடப் பொருள்களின் பஞ்சீகரண முறையையும் (கிரமத்தையும்) விவரித்தோம். இவ்விடயத்தையே வேறு சிலர் மற்றொரு வகையாய் விவரித்துள்ளனர்.

சூக்கும சடமிம் மட்டுஞ்
சொல்லினோ மிப்பாற் றூலம்
ஆக்குமா ரோபந் தானும்
அடைவினில் மொழியக் கேளாய்
தாக்குமிவ் வுயிர்க்குத் தூல
தனுவும்போ கமுமுண் டாகக்
காக்குமவ் வீசன் பஞ்சீ
கரணங்கள் செய்தான் தானே. (கை.ந. 40)

இப்பாடலின் கருத்தாவது: நுண்ணுடல் பற்றி இதுவரை கூறினோம். இனி, பருவுடல் ஆக்கும் தகைமையை முறைப்படி கூறுவேன்,

கேட்டுக் கொள்வாயாக. நுண்ணுடலில் (இலிங்க சரீரத்தில்) உறவுகொண்டு உயிர்க்கு அதன் வினைப்பயன் போலப் பருவுடலையும் அந்தவுடலுக்குப் பொருத்தமான துய்க்கும் தன்மையையும் வாய்ப்பையும் உண்டாக்கும் பொருட்டு எல்லோரையும் காக்கும் ஈசன் ஐந்து தன் மாத்திரைகளையும் பஞ்சீகரணம் செய்தான்.

ஐந்துபூ தமும்பத் தாக்கி
யவைபாதி நந்நான் காக்கி
நந்துதம் பாதி விட்டு
நான்கொடு நான்கும் கூட்ட
வந்தன தூல பூதம்
மகாபூத மிவற்றி னின்றும்
தந்தன நான்காந் தூல
தநுவண்ட புவன போகம். (கை.ந. 41)

ஐந்து பூதங்களையும் (தனித்தனியாக ஒவ்வொன்றையும் சரிபாதியாகப் பகிர்ந்து) பத்து ஒத்த பாகங்கள் ஆக்கிக் கொண்டு ஒவ்வொரு பாதியையும் நந்நான்காகப் பகிர்ந்து ஆக ஒவ்வொரு பூதத்தின் ஒரு பெரிய பகுதியும் (1/2 பாகம்) நான்கு சிறிய பகுதியுமாக இருக்குமாறு (மொத்தத்தில் 1/8 பாகம்) செய்து அப்பாகங்களில் பெரியதாகிய அரைபாகத்தில் அப்பூதம் நிற்க, மிகுதியான நான்கு பாகங்களில் மற்றை நான்கு பூதங்களின் 1/8 கூறுகள் இணைத்ததன் விளைவாய்த் தூல பூதங்கள் வந்தன. இவற்றினின்றும் மகாபூதங்கள் தோன்றின.

மகா பூதங்கள் என்பன-அண்டம், புவனம், போகம், போக்யம் என்பனவாம். அண்டம் அதாவது பிரம்மாண்டம் என்பதனுள்ளே....

* மேலெழுந்த புவனம் உலகங்களாகிய பூலோகம், புவலோகம், சுவலோகம், சன லோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்பனவும்,

* கீழேழு புவனங்(உலகங்)களாகிய அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் என்பனவும்,

சேர்ந்த பதினான்கு உலகங்களும் அடங்கும், போக்கியம் என்னும் நுகர்தகு பொருள்களாகிய உணவு, நீர், காற்று முதலான பல பொருள்களையும் நுகர்ச்சிக் களனாகிய....

* சராயுஜம் (பையில் தோன்றுவன)
* அண்டஜம் (முட்டையில் தோன்றுவன)
* சுவேதஜம் (வியர்வையினின்றும் தோன்றுவன)
* உற்பீஜம் (வித்தினின்றும் தோன்றுவன)

என்று கூறப்பெற்ற நால்வகைப் பிறப்பினங்களையும் ஆக்கி அளிக்கப்பெற்றன.

ஆகவே, ஒவ்வொரு பூதத்திலும் ஐந்தைந்து பூதங்களைச் சேர்த்துச் சிருட்டி செய்வதற்குப் (ஆக்குவதற்கு) பஞ்சீகரணம் என்று பெயர். எந்தப் பூதங்கள் பஞ்சீகரணம் செய்யப்பட்டனவோ அவற்றைப் பஞ்சீகிருத பூதங்கள் என்பர்.

இராசச குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் ஒரு பகுதி, சத்துவ குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் துணையால், ஐவகை வாயுக்களாயும் (பஞ்ச பிராணன்கள்), மற்றொரு பகுதி தமோ குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் துணைகொண்டு ஐவகைத் தொழிற் கருவிகளாகவும் மாறும் என்பனவற்றை முன்னமே கூறியுள்ளோம்.

இவ்வாறு உணர்கருவிகளாகிய ஐந்து, தொழிற் கருவிகளாகிய ஐந்து, வாயுக்கள் ஐந்து, மனம், புத்தி ஆகிய இப் பதினேழு தத்துவங்களும் சேர்ந்து ஆன்மாவுக்கு - இலிங்க சரீரம்' என்ற நுண்ணுடலாக அமைகின்றது.

இவற்றுள் இராசச குணத்தின் மாற்றமாய் வந்து தோன்றிய பஞ்ச வாயுக்களும் அவற்றின் செயல்களும் பிராணமயகோசம் எனப்படும். சத்துவ குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் வாயிலாகத் தோன்றிய ஞானேந்திரியங்கள் (உணர் கருவிகள்), புத்தி, மனம் ஆகியவற்றின் செயல்களுக்கும் அவற்றுக்கு ஆதாரமான தத்துவங்களுக்கும் மனோமய கோசம் எனப்பெயர்.

தமோ குணம் மீசுரமுற்ற அகங்காரத்தின் வாயிலாகத் தோன்றிய மகா பூதங்களின் சேர்க்கையால் உண்டான இவ்வுடலுக்கு அன்னமயகோசம் (தூல தனு- பருவுடல்) என்று பெயர்

இவ்வாறு ஆன்மாவுக்கு உற்ற உடல், ஐந்து கோசங்களின் பிணைப்பால் உண்டானதாகும். இவற்றுள்...

* ஆனந்தமய கோசத்தைக் காரண சரீரம் என்றும்

* விஞ்ஞான மய கோசம், மனோமய கோசம் பிராணமய கோசம் ஆகிய மூன்றையும் சூக்கும சரீரம் (நுண்ணுடல் அல்லது இலிங்க சரீரம்) என்றும்

* அன்னமய கோசத்தைக் காரிய சரீரம்,

* போக தனு (தூல சரீரம் அல்லது பருவுடல்)

என்றும் கூறப்பெறும். இங்கு ஈசனுடைய 'சித்' சத்தியும் 'சத்' சத்தியும் மேற்கூறிய ஐந்து கோசங்களிலும் ஆன்மாவிலும் தொடர்பு பெற்று முதற் காரணமாகவும், துணைக்காரணமாகவும் நிற்றலால் அவனே எல்லாமுமாய்த் தோன்றினன். அவனன்றி ஆக்கப்பெற்றது ஒன்றுமில்லை, ஆகவே அவன் ஒருவனே சத்தாகியும் சித்தாகியும், நித்தியமாகியும் நிற்கும் ஆனந்த வெள்ளமாவன் என்பது வேதாந்திகளின் முடிவு.

அன்னமய கோசத்தில் மருவி நிற்கும் சிவனுக்கு 'விசுவன்' என்று பெயர். இப்பருவுடலில் இவ்வான்மா சாக்கிரதா (விழிப்பு) அவத்தையைப் பெற்றவனாகிறான். இங்கு வியாபித்திருக்கும் (பரவியிருக்கும்) ஈசனுக்கு விராட் புருடன் என்று பெயர். அதாவது இவ்வுலகம் முழுவதையும், இதற்கப்பாலுள்ள இது போன்ற மற்றைய உலகங்களையும் தனக்குச் சரீரமென்று சொல்லும் வண்ணம் ஏற்று, அவற்றினுள் உயிரே போல் நிற்கும் ஈசனுக்கு விராட் புருடன் என்று பெயர். இந்த விராட்புருடனையே ஈசுவர

தத்துவம் என்று ஒரு சிலர் கூறுவாரேனும், ஈசன் விராட்புருடனுக்கும் புறம்பானவன் என்பது வேதாந்திகளின் கொள்கை.

தூலமே மருவுஞ் சீவன்
சொல்லிய விசுவ னாகும்
தூலமே மருவு மீசன்
சொலும்விராட் புருட னாகும்
தூலமே யன்ன கோசம்
துன்னுஞ்சாக் கிரவ வத்தை
தூலகற் பனையீ தென்று
தொகுத்தது மனத்திற் கொள்வாய்! (கை.வ. 42)

பஞ்சீகிருத பூதகாரியமாக முன்னே கூறிய தூலவுடம்பில் பொருந்தும் சீவனுக்கு விசுவன் என்று பெயருண்டாம். அத் தூலவுடல் சமட்டியில் பொருந்திய ஈசன் விராட் புருடன் என்னும் பெயருடையவனாவான். உணவாதி காரணத்தால் வளர்வதாகிய இப்பருவுடல் அன்னமயகோசம் எனப்படும். இப்பருவுடல் எல்லாக் கருவிகளும் (உணர் கருவிகள், பஞ்ச வாயுக்கள், தொழிற் கருவிகள், கரணங்கள் யாவும்) முழுமையாக இயங்கித் தொழில் புரிய வேண்டிய நிலையைக் கற்பித்த காரணத்தால், இப்பருவுடலே மேற்கூறிய எல்லா இந்திரியங்களும் விழிப்புணர்ச்சியுடன் வேலை செய்ய வேண்டிய இடமாக அமைந்திருப்பதால் இதனைச் சாக்கிருதாவத்தைக் கிடமாகியது என்று கூறப்பெறும். சுருங்கக்கூறின் இதுவே பிரபஞ்சத்தின் தோற்றுவாய் என்று அறிந்து கொள்வாயாக.

இக்கூற்றால் ஓர் ஐயம் ஏற்படுவது உண்மையாம். அதாவது மேற்கூறியவாறு ஈசனுக்கும், சீவனுக்கும் 'உபாதி' (அவத்தைகள்- நிலைமைகள்-காலம்) ஒன்றேயானால் இவர் தம்முள் உள்ள வேற்றுமைகள் யாவை? என்பதாம்.

சீரிய வீச னார்க்கும் சீவர்க்கு முபாதி யொன்றேல்
ஆரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்கால்
காரிய உபாதி சீவன் காரண வுபாதி யீசன்
வீரிய மிகுச மட்டி வியட்டியாற் பேத மாமே! (கை. ந. 43)

முற்றுமுணர்தல் முதலிய சிறந்த குணங்களோடு கூடிய ஈசனுக்கு, சீவர்களுக்கும் நுண்மை, பருமை (சூக்குமம், தூலம்) என்று கூறப்பெற்றதான அவத்தைகள் ஒன்றேயாயின், நீதி நெறியில் ஒழுகிவரும் ஆசிரியரே! இவன் சீவன், இவன் சிவன் என்னும் வேறுபாடறிவது எங்ஙனமென்று கேட்பாயாகில்....

* காரிய உபாதியை யுடையவன் சீவன் (ஆன்மா) என்றும்,
* காரண உபாதியை உடையவன் சிவன் (ஈசன்) என்றும்

உணர்க. மகத்துவம் மிக்க சமட்டியினாலும் வியட்டியினாலும் பேதமுளதாம் என்றறிக. மேலே கூறப்பெற்ற இரு உபாதிகளுள்

* காரண உபாதியானது மாயை என்றும்
* காரிய உபாதி என்பது அந்தக் கரணங்கள் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) என்றும்

உணர்க.

இனி, சமட்டி, வியட்டி என்பனவற்றின் இயல்புகளை அடுத்துவரும் பாடலில் விளக்குவாம்.

மரங்கள்போல் வியட்டி பேதம்
வனமெனல் சமட்டி பேதம்
சரங்கடா வரங்கள் பேதத்
தனியுடல் வியட்டி யென்பார்
பரம்பிய வெல்லாங் கூட்டிப்
பார்ப்பதே சமட்டி யென்பார்
இரங்கிய பலசீ வர்க்கும்
ஈசர்க்கும் பேத மீதே! (கை. ந. 44)

மரங்கள் போல்வன வியட்டி பேதம் எனப்படும். இவை காடாவதற்குக் கருவியாம் வனம் என்று கூறுவது சமட்டி பேதம் எனப்டும். பல்வகை மரங்கள் குழுமியது வனம் எனப்படும்.

அதுபோலவே, அசையும் பொருள்கள். அசையாப் பொருள்களின் தனிப்பட்ட உடல் (உருவமுடைய ஒன்று) வியட்டி எனப்படும். எங்கும் பரவியுள்ள, எல்லாவற்றையும் கூட்டிக் காண்பதாகிய ஒன்று (பலவற்றின் தொகுப்பு அல்லது கூட்டம்) சமட்டி எனப்படும். பற்பல சீவர்களுக்கும், ஈசனுக்கும் உள்ள வேறுபாடு முறையே வியட்டிக்கும், சமட்டிக்கும் உள்ள வேறுபாடு போன்றதாம் என்க.

இனிக் காரணம், காரியம் என்பனவற்றை எடுத்துக்காட்டுடன் விளக்குவாம்.

அன்னமய கோசம் ஈறாகவுள்ள சீவன், ஈசன் இருவருக்கும் பொதுவாக உபாதியே யாயினும், ஈசன் சமட்டி பாவத்தில் எல்லாச் சேதனப் பொருள் (உயிருள்ளவை) களுக்கும், சடப்பொருள் (உயிரற்ற பொருள்)களுக்கும் பொதுவாகவும், அவை உண்டாவதற்கு அவனும், அவனருளும் காரணமாகவும் இருத்தலால் இவற்றுக்கு ஈசன் காரண உபாதியாகவும், சீவன் காரிய உபாதியாகவும் நிற்கின்றனர்.

எடுத்துக்காட்டு : களிமண்-காரணம், குடம், பானை, சட்டி, கலயம், சொப்பு, அகல் முதலியன காரியம் எல்லாவற்றுக்கும் உபாதி ஒன்றேயான போதிலும் கேடொன்றுமில்லை என்பது விளங்கக் கிடக்கின்றது. சீவனுக்குத் தனித்தனியாக ஏற்பட்ட அன்னமய கோசத்தைக் காட்டிலும் தூலமான (பெரிதான) உபாதி வேறொன்றுமில்லை. ஆனால் ஈசனுக்கு எல்லா உயிரினங்களின் பருவுடல்களும் மற்றும் உயிர்களுக்கு ஆதாரமல்லாத மண், கல் முதலிய சடப் பொருள்களுங் கூட உடலாய் அமையுமென்ற வகையில் சமட்டி வடிவில் (பாவம்) உபாதியாகும்.

தனிப்பட்ட ஒரு மண் குடம், தனக்குக் காரண உபாதியாயிருக்கும் களிமண்ணை முற்றுங் கவர்ந்ததென்று சொல்ல முடியாது, இக்குடத்தில் சேர்ந்துள்ளதற்கும் புறம்பாகக் காரண உபாதியான களிமண் உளது என்பது சொல்லாமலே விளங்கும். அவ்வண்ணமே தனிப்பட்ட ஒரு சீவனுக்கு உபாதியான தூல தனுவை

(காரிய உபாதி) ஈசன் தனக்கும் உபாதியாகப் பெற்றிருப்பினும் காரண உபாதியாய், அவன் ஏனைய சீவன்களின் உபாதிகளிலும் உட்புகுந்து நிற்றலால் ஒரு வகையில் வேறுபட்டவனாகிறான்.

இவ்வளவில் ஆரோபத்தை முடித்து, இனி அபவாதம் என்பதனை ஆய்வாம்:

அரவன்று கயிறென் றாற்போ
லாளன்று தறியென் றாற்போல
குரவன்சொல் லுபதே சத்தால்
கூறுநூ லொளியைக் கொண்டு
புரமன்று புவன மன்று
பூதங்க ளன்று ஞானத்
திரமென்னும் பிரம மென்று
தெளிவதே யபவா தங்காண்.

(கை.ந.46)

பாம்பன்று கயிறுதான் என்று தெளிந்தாற் போலவும், (அவ்வுரு) காவற்காரன் (புருடன்) அல்லன்; உயிரற்ற கட்டைதான் என்று தெளிந்தாற் போலவும், ஆசானின் உபதேசவலி கொண்டும், ஞானவிளக்கம் கூறும் நுல்களின் வாயிலாகப் பெறும், அறிவொளியைக் கொண்டும், இது உடலில்லை; இவை உலகங்களில்லை; இவை பூதங்களில்லை; இவையாவும் நிலைபெற்ற அறிவே உருவாயமைந்த பிரமமாம் என ஐயப்பாடின்றித் தெளிவதே அபவாதம் என்று கூறப்பெறும்.

ஆரோப மென்ற அஞ்ஞானத்தால் தத்துவங்களின் மெய்ப்பொருள் அறியப்படாது. *இருளிற் கிடந்து உழன்று, தன் ஊழ் வினைப்பயனை அனுபவிக்கும் ஆன்மா, மலையளவான தன் வினையின்கண் உற்ற கடுகளவான புண்ணியத்தின் (நல்வினை) பயனாய் ஈசன் அருளால் சற்குருவை யடைந்து அக் குருவினிடமாய் தீக்கையும் உபதேசமும் பெற்று, தான், தத்துவமென்று (உண்மையென்று) இதுகாறும் தேர்ந்தவை யாவும் மித்தை (பொய்) யானவை, அநித்திய (நிலையற்றது) மானவை, கனவிற் கண்ட பொருள்களுக்கு ஒப்பானவை என நூல்களின் விளக்கத்தாலும் திடம்*

*பெற அறிந்து நித்தியமான (நிலையான) தத்துவப் (உண்மை) பொருளாக இறைவன் உளன் எனத் தேர்தலே அபவாதம் எனப்படும்.* இதனை மேலும் விளக்கும் வகையில்......

படமுநூ லும்போற் செய்த
பணியும்பொன் னும்போற் பார்க்கில்
கடமுமண் ணும்போ லொன்றாங்
காரிய கார ணங்கள்
உடன்முதற் சுபாவ மீறா
வொன்றிலொன் றுதித்த வாறே
அடைவினி லொடுக்கிக் காண்ப
தபவாத வுபாய மாமே. (கை.ந.47)

காரியமாகிய இவ்வுலகத்தையும் அதற்கு உதவும் காரணமான பிரமத்தையும் (பெரியோர்களின் கோட்பாடுகள், நியாயவாதம், அனுபவம், என்ற) சாதனங்களைக் கொண்டு ஆயுங்கால், படமும் நூலும் போலவும் (படம்-துணி), ஆபரணமும் பொன்னும் போலவும், பானையும் களிமண்ணும் போலவும் (காரியங்களும் அதன் உதவிக் காரணங்களும் போல) பருவுடல் முதல் அஞ்ஞானம், ஈறாகவுள்ள யாவும் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியது போலவே ஒன்றில் ஒன்றை முறையாக ஒடுக்கிக் 'காண்பது அபவாதமென்பதை அறியும் உபாயமாம்.

இதனால் தெளிவது யாதெனில்:- நூலே படமாகவும், பொன்னே பணியாகவும், மண்ணே குடமாகவும் தோற்றம் பெறுங்கால் காரணமானது காரியத்தில் தொடர்ந்து நிற்கிற தென்றும், காரணமே காரியம் என்ற வேறுபட்ட தோற்றத்தில் கிடைக்கப்பெறுகிறது என்பதால், ஒரு காரியமானது தான் தோன்றுதற்கு இன்றியமையாத சில (உபாதான சாமக் கிரிகளை) உதவிப் பொருள்களை ஏற்கும் முன்னர்த் தன் காரணமாகிய பொருளில் வேறொரு படிவத்தில் (ரூபத்தில்) கிடந்தது என்பது தேற்றம். எவ்வாறெனில் குடம், குடமான தோற்றத்தை அடையுமுன் தனக்குக் காரணமான மண்ணுள் வேறொரு தோற்றத்தில் கிடந்ததென்றும் அறியக்கிடக்கின்றது.

படமும் நூலும் எனும் எடுத்துக்காட்டால் கிடைக்கும் உண்மையை ஆராய்ந்தால் பெறப்படுவது;-

காரணமாகிய நூலே காரியமாகிய படமும் ஆகும். ஆயினும், குறுக்கு நெடுக்கில் இந்நூலின் நெசவின் அமைப்பு நேராகாவிடின் படமாகாது. நூல்களின் இச்சேர்க்கை காரணமாகிற நூலை மாத்திரம் தழுவி நிற்பது என்றோ, அன்றிக் காரியமாகிய படத்தைத் தழுவி நிற்பதென்றோ சொல்ல முடியாதவாறு காரணகாரியம் இரண்டையும் தழுவி நிற்பதாகும். இதுபோல ஈசனும் உயிர் உலகும் இருக்கின்ற பான்மை அறியக் கிடக்கின்றது. உடலும் உயிரும் சேர்ந்த ஒன்றுக்குப் பிராணி என்று பெயர். இவை தனித்தனியே இருக்கக்கூடும், சேர்ந்திருத்தல் நெசவுபோல ஆகும் என்னும் விசேடப் பொருள் மறைந்து கிடக்கின்றது.

பொன்னும் பணியும் என்றதால்:- பணியானது (அணிகலன்) தன் காரணத்தினின்றும் உருவத்தில் வேறுபட்டதாய் இருப்பினும் முக்காலத்தும் காரணத்தின் தன்மை மாறாது.

'பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும்'

என்ற உண்மையைப் போல் உண்மை (தத்துவம்) அறிந்த ஞானிகள் 'தமக்காதாரமாம் தலைவன்' தன்மையையே பெற்றவராய்த் தோற்றத்தில் மட்டும் மாற்றமுள்ளவராய் நிற்பர். ஆதலின், அவர் தாமே அத்தலைவனாய்த் தீர்ந்தவரென்னும் விசேடப் பொருள் அறியத் தக்கது.

மண்ணும் குடமும் என்றதால்:- காரணமே காரியமாக உருவகமட்டும் மாறியதேனும் இதில் சில சமஸ்காரங்கள் (நற்செய்கைகள்) கூடி இருப்பதால் 'இதற்குப் பயன்படல்' என்ற சிறப்புப் பண்பு ஒன்று தோன்றலாயிற்று . காரியமாகிற குடத்தினால் தண்ணீர் கொண்டு வர முடியும்; காரணமாகிற மண்ணினால் அது முடியாது. ஆகவே.....

'என்னாம் மண்ணின் குடம் உடைந்தக்கால்'

என்பது போல காரியம் கெடின் தன் உருவத்தையும் தருமத்தையும் பெற இயலாது. பல கன்மங்களோடு கூடிய ஆன்மாக்கள் ஒரு பிறப்பின் பந்தத்தில் உலகத்துக கட்டுகளில்) கிடந்துழல்வர். சிலர் ஆன்ம தத்துவத்தின் போதம் காண்பர். ஒரு பிறவி, நீங்குங்கால் தமக்குக் காரணமாம் தலைவனின் தன்மையைப் பெறமாட்டாதவ ராவார் என்னும் சிறப்புப் பொருள் மறைந்து கிடப்பது அறியத் தக்கதாகும்.

*'இல்லாது பிறவாது'* என்றாற் போல மண்ணின் குடமானது இல்லாததாயின், அம் மண்ணினிடமாய்ப் பின்னர் தோன்றப் பெறாது. எள்ளினிடமாய் எண்ணெய் கிடைக்காது. எண்ணெய் வேண்டுமென்று விரும்புபவன் எண்ணெயாகிய காரியம் வேறோரு வடிவில் தன் காரணத்தில் (எள்ளினுற்) அடங்கிக் கிடத்தலை யறிந்தவனாய் அவ்வெள்ளையே செக்கிலிட்டு ஆட்ட ஏற்பானேயன்றி மணலையிட்டாட்ட முயலான். இவ்வாறு காரியமும் காரணத்துட் கிடப்பதாகும்.

'உள்ளதான காரணத்திலிருந்து
உள்ளதான காரியம் தோற்றம் பெறும்'

என்னும் இச்சித்தாந்தத்திற்கு 'சத் காரிய வாதம்' என்று பெயர்.

வேதாந்திகள் ஒன்றாகிய பிரம்மமே அனைத்துக்கும் காரணம் என்பர். அப்பிரம்மம் இவ்வுலக வடிவில் தோற்றத்தையேற்றது, காரியமென்றும் காரணமென்றும் சொல்வதியலாது, உண்மையில் உளது பிரம்மம் ஒன்றுதான். பொருளைவிட்டு அதன் நிழலைப் பெரிதென்று போற்றும் தன்மையில் உளதாகிய பிரம்மத்தையல்லால் காரியமென்று வழங்கப்படும் உலகம் நிழலுக்குச் சமமாகும். ஆகவே, பிரம்மம் ஒன்றே உளது. அது காரணம், உளதாகிய காரணத்தினிடமாய்க் காரியமாய்த் தோன்றிய இவ்வுலகம் இலது என்பது வேதாந்திகளின் கோட்பாடு இதற்கு 'விவர்த்த வாதம்' என்று பெயர்.

காரணம் உளதேயாயினும் அக்காரணமே காரியத்திற்கும் முதற்

காரணமாயும், துணைக்காரணமாயும் நிற்குமேல் காரியமும் சமவாயத்தால் (பிறப்பின் இயல்பால் -inherent) உளதேயாகும். மண்ணில்லாமல் குடமுண்டா? மண்ணினால் பிறந்த குடத்தில் 'உளது' என்ற தன்மை உண்டேயாமன்றோ? ஆதலின்....

'காரணம் உளது; காரியம் இலது'

என்னும் வேதாந்தக் கொள்கை சித்தாந்தப்படி ஏற்க இயலாது என்பது சித்தாந்திகளின் துணிபு. மருத்துவக் கலைக்கும் சத்காரிய வாதமேதான் அனுகூலமாய் நிற்கிறது. காரியம் என்னும் இவ்வுலகே இலது என்னும் வேதாந்த தத்துவத்தை ஏற்கின்....

'உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச் செல்வான்'

எனும் பாகுபாடுகள் அனைத்தும் பயனற்ற பிதற்றலாகும்.

இனி, இவ்வுலகத்தின் தோற்றத்தை வேறு வகையிலும் சிலர் விளக்கியுள்ளனர். அக்கொள்கைகளையும் சித்தாந்திகள் மறுத்து பொருத்தமுள்ளவை, பொருத்தமில்லாதவை என்று நீக்கியுள்ளனர். அவற்றுள்........

1. புத்தமதக் கொள்கை சகலமும் வெறுமை (சூனியம்-இல்லாமை-இன்மை) என்பதாம். அவ்வாறு ஏதேனும் உளதேனும் அது க்ஷணிகம்தான் என்பர்.

க்ஷணிகம் என்பது தோன்றித் தோன்றி ஒவ்வொரு கணமும் அழிந்து கொண்டேயிருத்தல் என்ற தன்மையாம். இதனை ஒருவருமே ஏற்க இயலாது. அன்று நான் கண்ட கண்ணனேதான் என்பது போன்ற வழக்குகள் உலகில் இருப்பதால் க்ஷணிகம் என்ற தத்துவம் உண்மையற்றதென்றும், ஏற்க தகுதியற்றதென்றும் கூறித் தள்ளி விடுவர்.

உலகில் ஒன்றுமே இல்லை என்ற முறைப்பட சூனியவாதமென்னும் பௌத்த மதக் கொள்கையை ஏற்போமாகில்

'இலது' என்பதை எவ்வாறு அறியுக்கூடும்? ஆகையால், இலது என்பதை அறிவதற்கான அறிவ் என்பது ஒன்று உண்டு என்று ஏற்றுக்கொள்ள வேண்டும்.

அறியப்படுவது என்பது ஒன்றுமே இல்லை என்று கொண்டால் 'அறிவு என்பது ஒன்று உண்டு' என்பதும் பொருந்தா வாதமாகிவிடும் அல்லவா?

இத்தகைய வாதம் என்ன பயனை விளைவிக்கும்? ஆகவே, இவ்வளவில் இப்பயனற்ற வாதத்தின் (சூனிய வாதத்தின்) விவரங்களை நிறுத்தி விடுவோமாக.

2. மற்றொரு வாதம் 'ஆரம்ப வாதம்' என்பதாம். இது நியாய வைசேடிக வல்லுநருடைய வாதமாகும். இவ்வாதிகள் பரமாணுக்களே நித்தியமான (அழிவற்ற) பொருள்கள் என்பர். அத்தகைய பரமாணுக்களின் சேர்க்கையால் இவ்வுலகு உண்டானது என்பர். அவ்வாறு உண்டான உலகம் அழியுந்தன்மை (அநித்தியம்) உடையதென்றும் அத்தகையவான அழியும் பொருள் இலது என்று கொள்ளத் தக்கதாகும் என்றும் கூறுவார்கள்.

இப் பரமாணுக்கள் எவ்வாறு உண்டாயின? இவற்றின் சேர்க்கையும் பிரிவும் எங்ஙனம் நிகழும்? அணுவுடன் அணு சேருமானால் மாற்றமுண்டாகுமா? மாற்றமில்லையா? அவ் அணுவுக்குப் பரிமாணம் உண்டா? இல்லையா? இன்றேல் அவ் வணுக்கள் ஒன்றோடொன்று எவ்வகையில் சேர முடியும்? என்பன போன்ற கேள்விகளுக்குப் பகுத்தறிவுக்குச் சரி என்று ஒப்புதலளிக்கும் வகையில் பதிலளிக்க மாட்டாமையால் இவ் ஆரம்ப வாதமும் ஏற்கத்தக்கதன்று என்று சித்தாந்தம் கூறும். ஆகவே, சத்காரிய வாதமென்ற சித்தாந்தத்தின் துணிவே முடிவான உண்மையை விளக்கும்.

இவ்வளவில் ஆரோபம், அபவாதம் என்னும் இரண்டும் விளக்கப்பெற்றன. ஆரோபத்தின் கிளையாகிய தெரிவித்தல் (விட்சேப சக்தி)என்னும் திறனால் பிரம்மம் எவ்வாறு உலகைத்

தோற்றுவித்தது என்றும், அபவாதம் என்பதால் என்றேனும் ஒரு நாள் சீவன்முத்தியைப் (இரண்டற்ற நிலை) பெறுதற்கு வழியுண்டு என்பதும் விளக்கப் பெற்றன. அடுத்து, இத்தளைகளுக்குக் (பந்தம்) காரணமாய் நிற்கும் அஞ்ஞானத்தை உண்டாக்கவல்ல (அறிவின்மையைத் தோற்றவல்ல ) ஆவரண சக்தி (மூடல் திறம்) என்பது யாதென விளக்குவாம்.

தானிகர் தனக்கா மீசன்
றனையுந்தங் களைத்தாங் கண்ட
ஞானிக டமையு மன்றி
நாத்திந பாதி யென்னும்
ஊனிடை யுயிர்க ளுள்ளத்
துணர்விழி குருடாம் வண்ணம்
வானிலந் திசைகண் மூடு
மழைநிசி யிருள்போல் மூடும். (கை. ந. 49.)

தனக்குத்தானே நிகராகும் ஈசனையும், தம்மைத் தாம் கண்ட ஞானிகள் தம்மையும் தவிர பிரம்மம் என்பது இல்லை என்பவர்களாகிய நாத்திகர்களும், நபாதிகளும், உணர இயலவில்லை என்று விவாதிக்கும் மனப் பக்குவமுள்ளவர்களும், நபாதிகளும் ஆகிய சீவர்களின் *அந்தக்கரணங்களின் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம், என்பன) உணர்வுப் பார்வை (ஞானதிருட்டி) யைக் குருடாக்கும் வண்ணம் இராக் காலத்தில் வானம், நிலம், திக்குகள் எல்லாம் மறையுமாறு மூடி நிற்கும் மழை தங்கும் கருமேகம் போல மறைத்து நிற்கும் திறத்துக்கு* ஆவரண (மூடும்) சக்தி *என்று பெயர்.*(இத்தகைய சக்தியினால் சீவர்கள் பெறும் பயன் மோகமாம்).

இப்பாடலில் 'ஊனிடை யுயிர்கள்' என்று கூறியது ஞானிகளல்லாத மற்ற மக்களைக் குறிக்கவே என்றறிக. ஊனும் உயிருங் கொண்ட எண்ணிறந்த அஃறிணைச் சீவர்களுக்கும், மேலே செய்யுளில் கூறப்பெற்ற நாத்திகர்களுக்கும், நபாதிகளுக்கும், மன நிலையில் யாதொரு வேற்றுமையும் இல்லை என்றதைச் சுட்டினதாகக் கொள்க.

கார்கால இரவில் கப்பிக்கொண்டுள்ள நீருண்ட கருமேகம் எவ்வாறு நிலத்திலும் விண்ணிலும் உள்ள பொருள்களைத் தெரிய வொட்டாமலும், திசையையறியவொட்டாமலும் மறைத்தலே போல ஆவரணம் என்னும் மூடும் திறமானது, நம் அகக்கண் ணான அறிவின் முன் திரைபோல நின்று மறைத்தலால் ....

* நாம்
* பிரம்மம்
* ஆன்மா
* அந்தக் கரணங்கள்
* சடப் பொருள்கள்

ஆகியவற்றின் உண்மைத் தத்துவங்களையும், இவற்றுக் கிடையேயுள்ள தொடர்பையும், தனித்துள்ள (சம்பந்தா சம்பந்தங்கள்) தன்மைகளையும் அறிய முடியாமல் கிடக்க நேரும். இவ்வண்ணம் தத்துவத்தை (முக்கியமாக அந்தக்கரணங்களை) நம் அறிவினின்று மூடி (மறைத்து) வைக்கும் சக்தியே மூடுந்திறன் (ஆவரண சக்தி) என்க.

பூன்றமாம் பிரமத் துக்கும்
புறந்துள விகாரங் கட்கும்
ஆன்றகூ டத்து னுக்கும்
அகத்துள விகாரங் கட்கும்
தோன்றிய பேதஞ் சற்றுந்
தோன்றாமல் மறைத்து மூடும்
ஊன்றிய பலவி யாதி
உண்டாக்கு முபாதி யீதே. (கை.ந. 50)

முழுமையையுடையதான(பூரணத்துவமுற்ற) பிரம்மத்துக்கும், புறத்ததான தோற்றம் வளர்ச்சி முதலிய தன்மைகளைக் கொண்ட விண் முதலியவற்றாலான இப் பிரபஞ்சத்துக்கும், அறிவுருவான கூடத்தனுக்கும், மனத்தினுள்ளே தோன்றுவதான அகங்காராதிகளுக்கும் விளங்குவனவான வேறுபாடுகளை ஒரு சிறிதும் உணரா வண்ணம் மறைத்து, உணர்வு விழிகளைக் குருடாக்கி, அவ்

வேறுபாடுகளை (பேதங்களை) மறைக்கும் வன்மையைப் பெற்று வேர் ஊன்றியதான பிறப்பென்னும் நோயை வளர்த்திடும் கருவி, (சாதனம்-உபாதி) இவ் வாவரணசக்தி என்ற மூடல் திறமேயாம் என்க.

இதற்கு முன் விவரிக்கப் பெற்ற உண்மைகளான பிரம்மம் முழுமை பெற்றது. அது ஒன்றே உண்மையானது. அதனுடைய திறமாகிய (சக்தியாகிய) தோற்றுவித்தல் என்னும் தன்மையால் இப்பிரபஞ்சம் தோன்றியது. இப் பிரபஞ்சத்துக்கும் பிரம்மத்துக்கும் உள்ள வேறுபாடுகள் முதலான எல்லாத் தத்துவங்களையும் உணர்வு விழிகளாகிய அந்தக்கரணங்களுக்குப் புலப்படாவகையில் மூடிவைக்கும் திறந்தான் ஆவரண சக்தியாம். இதுவே நிலைபெற்ற தான பிறப்பு என்னும் நோயை யுண்டாக்கவல்ல கருவியாகும் என்பது மேற்படி பாடலால் அறியும் உண்மையாம்.

ஈசன் உலகைப் (பிரபஞ்சத்தை) படைக்க எண்ணித் தனக்கு உதவியாய் ஏற்ற மாயையை (இது, சக்திகளின் கருவூலம் என்க. அதனிடத்தே இயல்பாக உள்ளதான...........

* விட்சேப சக்தி (தோற்றுஞ் சக்தி),
* ஆவரண சக்தி (மூடுந்திறம்)

என்னும் இருவகைத்திறனால் உயிரினங்களுக்கு எழுவகை அவத்தைகளை உண்டாக்கினார்.

இந்தமா யையினாற் சீவர்க்
கேழவத் தைகளுண் டாகும்
அந்தவே ழவத்தை தம்மை
யடைவினின் மொழியக் கேளாய்
முந்தவஞ் ஞான மூடன்
முளைத்தல் காணாத ஞ ானம்
சந்ததங் கண்ட ஞானந்
தழல்கெடல் குளிர்மை யாதல் (கை.ந. 58)

இந்த மாயையினால் சீவர்களுக்கு (இருதிணைச் சீவர்க்கும்) ஏழு

அவத்தைகள் உண்டாகும். அவற்றை முறையே கூறுவேன் கேட்பாயாக.

1. அஞ்ஞானம்
2. மூடல்
3. முளைத்தல்
4. காணாத ஞானம்
5. கண்ட ஞானம்
6. தழல் கெடல் (துன்பம் அல்லது துக்கம் நீங்குதல்)
7. குளிர்மையாதல் (சாந்தம்)

என ஏழாம்.

பிரமமாந் தனைம றந்த
பேதைமை யேயஞ் ஞானம்
பகர்தலா வரண மூடல்
பரனிலை காணோ மென்று
நரனொரு கருத்தாற் சீவன்
நானென முளைத்தல் தோற்றம்
குரவன்வாக் கியத்தாற் றன்னைக்
குறிக்கொளல் பரோட்ச ஞானம். (கை.ந.59)

இப்பாடலில் மேலே கூறப்பெற்ற ஏழவத்தைகளில் நான்கு அவத்தைகளின் விளக்கம் கூறப் பெற்றது.

1. அஞ்ஞானம்: பிரம்மத்தின் உருவமாகிய ஆன்மாவை (நான் யார் என்று) மனத்தில் சிந்தனை செய்து அறிந்திடாத் தன்மையே அஞ்ஞானம் (அறிவின்மை) எனப்படும். அதாவது, தானே தலைவன் (பிரம்மம்) 'அகம் பிரம்மாஸ்மி (ஆப்தவாக்யம்) அல்லது சிவம் நானே 'சிவோகம்' என்னும் உயர்ந்த உண்மையை (தத்துவத்தை) மனதாரச் சிந்தித்து அறியாத மடைமையே அஞ்ஞானம் எனப்படும்.

2. மூடல் அல்லது ஆவரணம்-பரன் அல்லது பிரம்மம் அல்லது இறைவன் என ஒன்று காணப்பெறவில்லை. அவ்வாறு ஒன்று

உண்டேல், கண் முதலான ஐந்து கருவிகளில் ஏதேனும் ஒன்றில் புலனாகும். அவ்வாறு புலனாகாத காரணத்தால் இறைவன் என்ற ஒன்று இல்லை என மறுத்து வாதாடும் தன்மை, மெய்யறிவை, ஆவரணம் அல்லது மூடல் என்ற சக்தியானது மூடிக் கொண்டிருப்பதால் நிகழ்வதாயிற்று. இயல்பான மெய்யறிவானது ஆவரணம் எனும் மூடும் திறத்தால் விழுங்கப்பெற்றவுடன், இறைவன் உண்டு என்னும் தத்துவத்தை ஏற்க மறுக்கும் நிலை ஏற்படுகிறது. அதாவது, உண்மைகளைத் தெரிவியாது மூடிவைத்துள்ள திறன் மூடல் என்னும் ஆவரண சக்தியாம்.

3. முளைத்தல் (தோன்றல்) அல்லது விட்சேப சக்தி,- ஆகம், ஆவி என இரண்டும் ஒன்றியவர்களே சீவர்கள் இஃது உண்மை, ஆனால், ஆகம் கண் முதலான உணர்கருவிகளுக்கு புலனாகிறது. ஆவி புலனாவதில்லை, அவ்வாறின்றிக் கன்மங்களைச் செய்வதால், இனி, எதிர்காலத்தில் அக்கன்மங்களின் பயனைத் துய்க்க எடுத்த உடலுடன் கூடிய உயிர்தான், நான் எனப்படுவது என்பதை உணர்வது முளைத்தல் அல்லது தோன்றல் என்னும் விட்சேப சக்தியால் நிகழ்வது. ஆகவே, இவ்வுடலையே உயிராகக் கருதிய மறைப்பு நீங்கி உடல் வேறு, உயிர் வேறு என்று உணர்த்தும் அறிவைத் தோற்றும் திறன் தோற்றம் அல்லது முளைத்தல் என்னும் விட்சேப சக்தியாகும்.

4. காணாத ஞானம் (பரோட்ச ஞானம்) சற்குருவின் உபதேசத்தால் தான் யார் என்று (அஃதாவது, தான் பரமான்மாவின் ஒரு திவலையின் கூறு என்று) உண்மையாக அறிந்து கொள்ளுதலே காணாதஞானம் எனப்படும். இந்த உணர்வு மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் உணர் கருவிகளின் வழி அறிதற்பாலதன்று. ஆகவே இதனை ஞானேந்திரியங்களால் 'காணாத' ஞான மென்றனர். பொறிகளால் அறியக்கிடப்பன யாவும் கண்கூடானவை (பிரத்தியட்சம்) என்றும் 'பரோட்சம்' என்றும் கூறப்பெறும் என்க. பொறிகளால் அறியக் கூடாதனவான உண்மைகளாய 'தான் யார்' என்பது போன்ற பல தத்துவங்களைக் குருவின் உபதேசத்தால் புலன்களாலறிதலே காணாத ஞானம் எனப்பெறும்.

தத்துவ விசாரஞ் செய்து
சகலசந் தேக மும்போய்
அத்துவி தந்தா னாதல்
அபரோட்ச ஞான மாகும்
கர்த்தனாம் சீவ பேதம்
கழிவதே துக்கம் போகல்
முத்தனா யெல்லாஞ் செய்து
முடித்ததா னந்த மாமே. (கை.ந.60)

இப் பாடலில் கண்ட ஞானம் முதலான மூன்றவத்தைகள் விளக்கப்படுகின்றன.

5. கண்ட ஞானம்:- இதுவே அபரோட்ச ஞானம் எனப்பெறும், குருவின் உபதேசத்தால் கிடைத்த மகா வாக்கியங்களின் பொருளைச் சிந்தனையால் தேர்ந்து, ஐயப்பாடுகளை எல்லாம் விலக்கித் தெளிந்து, தானே இரண்டற்ற நிலையை எய்துதலுக்குக் கண்டஞானம் என்பது பெயராம். 'தத்வமஸி' என்னும் சொற்றொடரில் ....

| | | |
|---|---|---|
| தத் | - | அது |
| துவம் | - | நீ |
| அசி | - | அது நீயாகின்றாய் |

என்னும் சொற்களின் பொருளையும், குருவின் போதனையால் கிடைத்த விளக்கங்கள், சாத்திர மேற்கோள்கள், எடுத்துக் காட்டுகள் ஆகியவற்றின் உதவியால் தானே சிந்தித்துச் சிந்தித்துத் தெளிதல்.

6. தழல் கெடல்- 'துக்கத் துவம்சம்' என்றும், 'துக்க நாசம்' என்றும் கூறப்படும் நிலை இஃதேயாம். உயிரின் இயல்பான தன்மை உலகப் பொருள்களில் விழைவு கொண்டு வாழ்தலாம். இது மாயையின் காரியமாக நிகழ்கின்றது. அதன் விளைவால் 'நான்' என்ற முனைப்பின் வழிப் பிறந்த ஆக்கியோன் என்ற நினைப்பும், 'எனது' என்ற உறவின் வழித் தோன்றிய 'துய்ப்போன்' என்ற எண்ணமும் தலைமை பெற்று அமையும். இதனை நூலோர்

'அகம்பாவம்' என்பர். இவ்வெண்ணமே எல்லாவகைத் துன்பங்களுக்கும் அடிப்படைக் காரணமாகும். ஆகவே நான், எனது என்ற எண்ணத்தை ஒழித்து நிற்றலே எல்லாவகைத் துன்பங் (துக்கங்)களையும் போக்கிக் கொள்ளும் வழியாம். 'நான் அதனின்றும் வேறுபட்டவனல்லன்' என்ற பெருநெறிக் கோட்பாட்டைக் கடைப்பிடித்தொழுகினால் இம்மையின் துயர் களையலாம் என்பது குறிப்பு.

தான் 'தனது' என்ற எண்ணத்தைப் போக்கியவனுக்குத் தொந்தங்கள் ஏதும் தொடராது. தொந்தங்களாவது 'இரட்டை'

| | | |
|---|---|---|
| பசி | - | தாகம் |
| விழிப்பு | - | உறக்கம் |
| இறப்பு | - | பிறப்பு |
| சூடு | - | குளிர்ச்சி |
| நட்பு | - | பகை |

என்பன போன்ற பலவாம். இவ்வாறு தொந்தங்களை நீத்தவனாயினும் இவன் நித்திய சுகத்தைப் (அழியா இன்பம்) பெற்றவனல்லன்.

7. குளிர்மையாதல்- ஆனந்தத்தைப் பெறல் என்ற தத்துவமாம் 'அகம்-பிரம்மாஸ்மி' என்ற முறையில் தான் பரனுடன் இரண்டற்ற நிலையில் கலந்து நிற்றல் என்பர் வேதாந்திகள். சிவோகம் என்ற நிலையை எய்துதலே அழியா இன்ப நிலை (நித்தியானந்த நிலை) என்பர் சித்தாந்திகள். பெயர் எதுவாயினும் நிலையின் தன்மை ஒன்றே. இத்தகைய நிலையை எய்துதலே பிறவியின் பயன் எனப்படும். இதனை வீடு என்றும் கூறுவர். 'விடப் பெற்றது வீடு' என்பது பழமொழி.

இதுகாறும் பன்முறையும் வற்புறுத்திக் கூறியதே போல பிரம்மத்துடன் இரண்டற்ற நிலையை ஆன்மா ஞானத்தினால் அறிதல் வேண்டும் என்பதும், இஞ் ஞானம் எய்தக் குருவின் உபதேசமும், அட்டாங்க யோகப் பயிற்சியும் தக்க வழிகளாகும்

என்பதும், அத்துவிதக் கொள்கையினரான வேதாந்திகள் வகுத்த நெறிமுறையாகும். மேலும் இத் தத்துவத்தை வற்புறுத்துங்கால் ஒற்றுமையை (அபேதத்தை) விளக்கவந்த வேதாந்திகள் முதலடியில் வேற்றுமையை ஏற்று, அதனை விளக்கிப் பின் வேற்றுமையில் ஒற்றுமை (பேதாபேதம்) என்ற துறையை விளக்கி, இறுதியில் அபேத தத்துவத்தைக் (இரண்டற்ற தத்துவத்தை) கூறி முடிவிற்கு எய்தினர். ஆகவே அபேதத்தைச் (இரண்டற்ற நிலையை) சொல்லப் புகுந்தவர் பேதா பேதத்தை (வேற்றுமையில் ஒற்றுமையை) வகுத்தனர் என்பதைக் காட்டினோம்.

சிந்தனைக்கு உரித்தான தத்துவ விளக்கங்கள் இவ்வாறிருக்க நடைமுறையில் (அனுட்டானத்தில்) ஏற்றது சைவசித்தாந்தமாகும். இச் சித்தாந்தம் மேற் சொன்ன வேதாந்தத்திலிருந்தும் மிக வேறுபட்டதன்று. பேதாபேத தத்துவமே சித்தாந்தத்தின் அடிப்படையாகும். இதில் 'அகம் பிரம்மாஸ்மி ' என்ற ஞானத்தைப் பெற வேண்டும் என்பதற்குப் பதிலாகச் 'சிவோகம்' என்ற ஞானமே பெறத்தக்கது என்பதே சைவ சித்தாந்தத்தின் முடிவாகும். ஆயினும், சித்தாந்திகள் ஞானத்தைப் பெறுவதற்காக வகுத்த வழியும், விளக்கத்தில் கூறப்பெற்ற சொற்றொடர்களும் வேறுபட்டனவாகும். இதை மற்றொரு பக்கம் என்னும் தலைப்பின் கீழ் விரித்துரைக்குப்படும்.

நிற்க, அஞ்ஞானம் முதல் குளிர்மையாதல் ஈறாகக் கூறப் பெற்ற ஏழு அவத்தைகளே பந்தத்துக்குக் (தளைகளுக்கு) காரணமென்பதைத் தெள்ளெனவறிந்தோம்.

'கால நேமிப் பேர்' என்ற நேரத்து அவ்வியக்தம் (தொக்கிய நிலை)என்னும் பிரகிருதியை ஆதாரமாய் ஏற்ற சீவன் இறைவனுட்பட்டுச் செயலற்றுக் கிடக்குமேல் , பின், அவ் வீசன் உட்பார்வை ஏற்படுவதற்கும் அதனால் (அவ்வியக்தம்) தொக்கிய நிலை வியக்தமாகி (தெரிநிலையாகி) அதுமுதல் ஆக்கல் (சிருட்டி) தொடங்கிச சீவன் பஞ்சகோசமயமான உடலைப் பெற்று உலகில் தோன்றி, மறுபடியும் பிறப்பு, இறப்பென்ற முடிவற்ற தளையைப் (பந்தத்தை) பெறுதற்குக் காரணம் யாது?

உறக்கத்தில் ஒருவன் கண்ட கனவின் பொருளை, உறக்கம் ஒழிந்தபின் ஓர்தலே போல், ஆக்கலினுட்பட்டுப் பிறவிப் பேற்றைப் பெற்ற சீவன் 'காலநேமிப்பேர்' என்ற நேரத்து (சுழுத்தியிற் கிடந்த நிலை) அதற்கும் முன்னிருந்த பிறப்பின் அனுபவங்களென்ற பூர்வ ஞானங்களைப் பெறமாட்டா திருத்தற்குக் காரணமென்ன?

சிருட்டியில் வந்து சேரும் சீவன்கள் மனிதன், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன பல்வேறு உடலமைப்பின் தோற்ற வேற்றுமைகளைப் பெறுவதற்குக் காரணம் என்ன? மனிதனாய்ப் பிறந்திடினும் கூன், குருடு, செவிடு போன்ற குறைகளையும், அறிவின் பெருக்கு, அறிவின்மை, விருப்பு, வெறுப்பு என்ற இயல்புகளின் பாகுபாடுகளைப் பல்வேறு வகைகளாய்ப் பெறுவதற்குக் காரணம் என்ன? என்பன போன்ற இவ்வினாக்கட்கெல்லாம் விடையாகக் 'கன்மம்' என்னும் ஒரே சொல்லினால் விடையளிக்கப்படுகிறது. இக்கன்மம் மூவகைப்படும் . அவையாவன...

1. பூர்வ கன்மம் (முன்செய்வினை).
2. சஞ்சித கன்மம். (துய்த்தது போக எஞ்சிய வினை)
3. பிராரப்த கன்மம் (குறிப்பிட்ட பிறவிக்குக் காரணமாய் நின்ற வினை )

என்பனவாம். இவை நல்ல கன்மாக்களாகவும் தீய கன்மாக்களாகவும் இருக்கக்கூடும் .

1. பூர்வ கன்மம்:- உயிரானது அதற்கென்று வரையறுக்கப் பெற்ற உடலின் ஆக்கத்துக்குக் (சிருட்டிக்கு) காரணமாய் நின்றமலத்துக்குப் பூர்வ கன்மம் என்று பெயராம். பிரளயத்துக்கு முன் (ஊழிக்காலம்) இருந்த பிறப்பிறப்பிற் செய்த வினை ஊழிக் காலத்திற்குப் பின் ஆக்கக் காலத்தில் ஆன்மாவானது உடலைப் பெறுதற்குப் பூர்வ கன்மமே காரணமாகும்.

2. சஞ்சித கன்மம்:- குறிப்பிட்ட ஒரு பிறப்பில் ஒருவன் துய்த்த இன்பதுன்பங்களால் கழிவு பெற்றதுபோக எஞ்சி நின்றதும், மற்றும் பிறப்பு, இறப்புகளின் தொடர்ச்சிக்குக் காரணமாவதும் சஞ்சித கன்மமெனப்படும்.

3. பிராரப்த கன்மம்:- குறிப்பிட்ட சிற்சில வினைகளின் பயனாகச் சிற்சில இன்ப துன்பங்களை மட்டும் துய்க்க, பிறப்பைத் தரக் காரணமான குறிப்பிட்ட கன்மங்களுக்குப் பிராரப்த கன்மமென்று பெயர். அதாவது யாதொரு குறிப்பிட்ட சில கன்மங்களின் பலனை அனுபவிப்பதற்காகவே ஒரு குறிப்பிட்ட பிறவி ஏற்படுகிறதோ அக் கன்மங்களுக்குப் பிராரப்த கன்மமென்பது பெயராகும்.

ஆயின் குருவின் உபதேசத்தினால் கிடைக்கப்பெற்ற ஞானமாகிய தீ இக் கன்மங்களை அறவே சுட்டெரிக்க வல்லதாகும். ஆயினும் அந்த ஞானத்தீயை ஓர் ஆன்மா தனது தனி முயற்சியால் வளர்த்துப் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

சிலர், இம் மூவகைக் கன்மங்களைச் சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தம் என வகைப்படுத்திக் கூறுவர். அதன் விளக்கம் வருமாறு:

1. சஞ்சிதம்:- சென்ற பல பிறவிகளில் இயற்றப் பெற்ற கன்மங்களின் பலனைத் துய்க்கத் தொடங்காமல் கன்மப் பொதியாகச் சேமித்துக் வைத்துகொண்டுள்ள கன்மம் சஞ்சிதம் எனப்படும்.

2. ஆகாமியம்:- இனி வரப் போகிற கன்மங்கள் ஆகாமியம் எனப்படும்.

3. பிராரத்தம்.- முற்பிறவிகளில் செய்த கன்மங்களின் சேர்க்கையானது, இப் பிறவிக்குக் காரணமாய் அமையுமாயின் அக் கன்மங்களைப் பிராரத்த கன்மங்களென்று கூறுவர்.

இம் மூவகைக் கன்மங்களில் சஞ்சித கன்மம் ஞானத்தீயால் அழிந்துபடும் என்பர். ஒரு ஞானிக்கு நான், எனது என்ற அகங்கார

மமகாரங்கள் இல்லையாதலால் அவனுக்கு ஆகாமியகன்மம் இல்லையாகும். எக் கன்மாவின் கூட்டால் ஒரு ஞானிக்கு யாக்கையானது தோன்றியதோ அக் கன்மங்களின் பலனைத் துய்க்காமல் அக் கன்மாவைத் தொலைக்க முடியாது. இது நூலோர் கண்ட உண்மை. இதனை....

பஞ்சினை யூழித் தீப்போல்
பலசன்ம விவித வித்தாம்
சஞ்சித மெல்லா ஞானத்
தழல்சுட்டு வெண்ணீ றாக்கும்
கிஞ்சிதா காமி யந்தான்
கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத் தத்தின்
வினையனு பவித்துத் தீரும். (கை.ந. 103).

பற்பல பிறவிகளுக்கு உத்தான சஞ்சித கன்மாவை ஊழித் தீ (பிரளய காலத் தீ) யானது, பஞ்சுப் பொதியை முழுமையாக எரித்திடுமாறுபோன ஞான மென்னும் நெருப்பு வெண்ணிறச் சாம்பலாக்கிவிடும், ஆகாமியம் என்ற கன்மம் ஞானியைச் சிறிதும் நெருங்காது விட்டுப் போய்விடும். (ஞானிக்கு இந்த நிலை, அஞ்ஞானிகளுக்கோ நிலைமை எதிரிடையானது என்று இப் பாடலில் கூறாமலே விளங்கவைக்கப் பட்டுள்ளது என்று அறிக.) எஞ்சி நின்ற தான பிராரத்த கன்மாவானது மறுபிறவியில் (அனுபவித்துக் கன்ம பலனைத் துய்த்தலால்) தீர்த்தல் வேண்டும்.

கடநீரின் மேக நீரிற்
கண்டவா னிரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானும்
கூடியொன் றாமெப் போதும்
இடமான பிரமஞ் சாட்சி
இரண்டுமெப் போது மேகம்
திடமாகச் சுவானு பூதி
சிவோகமென் றிருந்தி டாயே. (கை.ந. 82)

ஒரு குடத்தினுள் உள்ள நீரில் பிரதிபிம்பிக்கும் ஆகாசமும், மேக நீரில் பிரதி பிம்பிக்கும் ஆகாசமும் வேறு வேறாகக் காணப்படினும், இட வேறுபாட்டின் தோற்றங்களே ஒழிய உண்மையானதன்று. அதேபோல குடத்திலுள்ள வானும் பரந்த விண்ணும் கூடினால் ஒன்றாய் விடுமே யொழிய மாறுபட்டு நில்லா. பரந்து விரிவடைந்துள்ள பிரமமும் அதனுடைய சாட்சியும் எக் காலத்திலும் ஒன்றிவிடும், வேறு வேறாக நில்லா என்பது குறிப்பு, இந்த ஒன்றிப்பின் தன்மை ஐயப்பாடின்றி மனத்தில் உறுதியுறும் வண்ணம் 'நானே சிவம்' என்ற பேருண்மையை மனத்திற் கொண்டு அனுபூதி பெற்று இரண்டற்ற நிலையில் நிலைப்பாயாக.

இப்பாடலின் பொருளால் தெரியவரும் பொருளைக் குருவின் உபதேசத்தால் பெற்று ஒரு சீவன் தன் முயற்சியால் தத்துவத்தில் விளக்கிய நிலையைப் பெறக்கடவன் ஆவன். எவ்வாறெனில்...

தஞ்சமாங் குருவும் சொன்ன
தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து
பாழையுந் தள்ளி யுள்ளில்
கொஞ்சமா மிருப்பும் விட்டுக்
கூடத்தன் பிரம மென்னும்
நெஞ்சமு நழுவி யொன்றாய்
நின்றபூ ரணத்தை கண்டான். (கை. ந. 83)

தனக்குப் பெருந்துணையாகிய ஆசானார் அருளிய உண்மை நெறி தவறாமல், அன்னமய கோசம் முதல் ஆனந்தமய கோசம் ஈறாகவுள்ள ஐந்து கோசங்களும் தனதல்லவென்று தள்ளியும், அதற்கு மேலேவுள்ளதான பாழையும் நீக்கிவிட்டு, உள்ளத்தில் மேற்படி கோசங்களையும் பாழையும் காணும் சாட்சி யென்ற தன்மையையும் விடுத்துக் கூடஸ்தன், பிரம்மம் என்ற கூறுபாடுகளையும் நீக்கிப் பிரம்மத்தோடு ஒன்றிக் கூறுபாடற்ற பிரம்மத்தைத் துய்த்தான்.

அனுபவா னந்த வெள்ளத்
தழுந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதி
சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக
மானசற் குருவுங் காண
நனவினில் சுழுத்தி யாகி
நன்மகன் சுபாவ மானான். (கை. ந. 84)

அனுபூதியின் உருவமாகிய பேரானந்தக் கடலில் மூழ்கி வேறுபாடற்று (ஒன்றாகி) உடல், அந்தக்கரணங்கள் முதலான எல்லாம் பெயருருவற்று (நீரிலிட்ட உப்பைப் போலக் கரைந்து) சித்துருவமாய் உள்ளத்தில் முழுமை பெற்று அருளே திருவுருவா யமைந்த சற்குருவானவர் தம் திருக்கண்ணால் பார்த்தருள (நயன தீட்சை பெற்று) நல்ல சீடனானவன் நனவிலேயே சுழுத்தி நிலையை (அதாவது, கனவற்ற ஆழ்ந்த உறக்க நிலை) அடைந்து நல்லியல்பு (சமாதி நிலையை) பெற்றான்.

மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐந்தும் தொழில் செய்யும் விழிப்பு நிலையிலிருந்த போதிலும், அவை, இவ்வுலகச் செயல்களில் ஈடுபாடு கொள்ளாமல் இருக்கும் நிலையைச் சமாதி என்பர். இதனை விழிப்பு நிலையில் சுழுத்தி என முரண் தொடையிற் கூறி விளக்கிய நயம் காண்க.

மேலே விளக்கிய பாட்டின் பொருளில் கண்டாங்கு நல்ல சீடன் யோகத்தின் உயர்ந்த நிலையாகிய சமாதி என்ற நிலையைப் பெறுவான். இதனால் பிரம்மமும், சீடனும் ஒன்றேயாம் என்ற தத்துவத்தை அறிந்த பின்னரும் இத் தத்துவத்தைத் துய்க்கும் ஆனந்தத்திலிருந்து சற்றும் நழுவாமல் நிலைபெற்றிருத்தலை விரும்பி அதற்கான உபாயம் யாதெனக் குருவின் வாயிலாகக் கேட்டறிகிறான்.

இந் நிலையைப் பெறுதற்கு ஒருவனுடைய தன் முயற்சியே உதவியாகும். அம் முயற்சி மூவகைப்படும். அவற்றாலேயே குருவின் உபதேசத்தால் கிடைத்த ஞானத் தீயை (அறிவுத் தீயை) வளர்த்து

பெருக்கிக் கொள்ள வேண்டும். அம் முயற்சிகளாவன:- கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்பனவாம் இம் மூன்றும் முறையே அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம், (அறிவீனம், ஐயம், திரிபு என்பன) என்னும் மூவிதத் தடைகளைப் போக்கிக் குருவின் உபதேசத்தால் கிடைத்த தத்துவ ஞானத்தை வேரூன்றச் செய்யும் என்பதை....

தடையெவை எனிலஞ் ஞான
சந்தேக விபரீ தங்கள்
படர்செயு மிந்த மூன்றும்
பலசன்மப் பழக்கத் தாலே
உடனுடன் வரும்வந் தக்கால்
உயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல்
சிந்தித்தல் தெளித லாலே. (கை. ந. 89)

இப் பாடலின் விளக்கம் முன்னமே ஒருவாறு கூறியுள்ளோம். முன் கூறிய அறிவீனம். ஐயம், திரிபு என்னும் இவை மூன்றும் பற்பல பிறப்பின் பழக்கத்தால் தோன்றுவதாகும், இது ஞானம் உயர்வதைக் கெடுத்திடும் என்ற விளக்கமும் காணப்படுகிறது, இதனால் பிறவிகள்தோறும் அஞ்ஞானம், ஐயப்பாடு, திரிபு என்னும் மூன்றும் உயிரினைத் தொடரும் என்றறிக.

அக்கினி கட்டுப் பட்டா
லற்பமும் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே
வந்தபந் தமும்வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல்
சிந்தித்தல் தெளித லாலே.
விக்கின மடம் சந்தேகம்
விபரீதம் போக்கு வாயே. (கை.ந.90)

தீயானது மணி மந்திர ஔடதங்களாலே அடக்கப்படுமாயின் கொஞ்சமும் (எரியும் பொருள்களை) கொளுத்தி வேக வைக்காது. அதுபோல அறிவீனம், ஐயம் திரிபு ஆகியவற்றில் மூழ்கியுள்ளதான

தத்துவ ஞான மென்னும் நெருப்பால் அனாதி காலந்தொட்டு உயிரைப் பலபிறவிகளிலும் இடைவிடாது தொடர்ந்து வருவதான அகங்கார மமகாரங்களாகிய தளைகள் வெந்தழியா. ஆகையால் நெடுங்காலம் நிலையாக மிக்க நேயத்தோடு பயின்று குருவினுடைய உபதேசங்களைக் கருத்தூன்றிக் கேட்டல் கேட்டவற்றைச் சிந்தித்தல், தெளிதல் என்னும் மூன்று சாதனங்களின் உதவி கொண்டு வீடு பேற்றைத் தரும் அறிவு வளர்ச்சிக்குத் தடையாகயுள்ள அறிவீனம், ஐயம், திரிபு என்பனவற்றை ஒழிப்பாயாக. இனி ....

* அஞ்ஞானம் (அறிவீனம்),
* சந்தேகம் (ஐயம்),
* விபரீதம் (திரிபு)

என்பனவற்றைப் பின்வரும் பாடலால் விளக்குவோம்.

பிரமபா வனையை மூடிப்
பேதங்காட் டுவதஞ் ஞானம்
குரவன்வாக் கியம்நம் பாமற்
குழம்புவ தாஞசந் தேகம்
பிரமறு சகம்மெய் யென்றுந்
தேகநா னென்று முள்ளே
விரவிய மேகந் தானே
விபரீத மென்பர் மேலோர். (கை.ந.91)

'அகம் பிரம்மாஸ்மி அல்லது சிவோகம் என்னும் பாவனையை மறைத்துத் தான் பிரம்மம் அல்லன் என்னும் உணர்வைத் தருவது அஞ்ஞானமாம். ஆசான் உபதேச வாக்கியத்தை நம்பாமல் கலங்குவது சந்தேகம் (ஐயம்) எனப்படும். நிலையில்லா உலகை உண்மைப் பொருளென்றும். ஆன்ம தத்துவமில்லாத சடப்பொருளான இந்த மெய்யை 'நான்' என்று வழங்கப்பெறும் ஆன்மாவாகக் கருதுவதும் உள்ளத்திலே பரவிக்கிடக்கும் மோகமே விபரீதம் (திரிபு) என்று பெரியோர் கூறுவர்.

1. அஞ்ஞானமாவது (அறியாமை): சீவனே பிரம்மம் என்ற உண்மையை அறியாமை. இதனால் பேதம் (வேற்றுமை) என்ற

குற்ற உணர்வு அதாவது 'சீவன் வேறு; சிவன் வேறு' என்ற எண்ணம் உண்டாகும்.

2. சந்தேகமாவது (ஐயம்): குருவின் உபதேசத்தில் அடங்கிய உண்மையில் நம்பிக்கை உண்டாகாமை சந்தேகம் எனப்படும், இது தோன்றிடின் 'குருமொழி கொள்' என்ற கட்டளையை மீற நேரிடும் என்பது குறிப்பு.

3. விபரீதமாவது (திரிபு): இவ்வுலகம் உண்மையானது; இது நிலையானது; இப் பூதவுடல்தான் ஆன்மா, என்றெண்ணி இவ் வுலகில் கிடைக்கும் இம்மை இன்பத்தைப் (அற்ப இன்பத்தை) பேரின்பமாகத் தெரித்தல் (அதத்துவத்தைத் தத்துவமென ஏற்றல்) ஆகிய இவை விபரீதம் எனப்படும், இம்மூன்றும் வீட்டின்பத்தை அடையும் முயற்சிக்குத் தடையாகும். ஆகையால், இவற்றை ஒழித்திடல் வேண்டும். இவற்றை ஒழித்திடும் விவரத்தைக் கீழ்க்காணும் பாடலில் விளக்கப் பட்டுள்ளதைக் காண்க.

தத்துவ அனுபோ கந்தான்
சாதித்தல் கேட்டல் என்பார்
ஒத்துள பொருளு கத்தால்
உசாவல்சிந் தித்தல் என்பார்
சித்தமே காந்த மான
தெரிசனம் தெளிதல் என்பார்
நித்தமிப் படிசெய் தக்கால்
நிர்வாணம் பெறுவாய் நீயே! (கை. ந. 92).

பிரம்ம தத்துவத்தின் செயல்களை, வேதாந்தத்தின் பொருள் விளக்கங்களைக் கருவியாகக் கொண்டு, சிந்தனைகளுக்கு விளக்கந் தந்து அடிக்கடி விவரிப்பதைக் 'கேட்டல்'- சிரவணம் என்பர் பெரியோர், அவ்வாறு கேட்ட விளக்கங்களை ஒத்துள்ள பொருள்களுடன் ஒப்பிட்டு, உத்தியால் ஆய்தல் - சிந்தித்தல் என்பர். சித்தம் என்னும் அந்தக் கரணத்தில் பிரம்மமே குடிகொண்ட நிலையைப் பெற்று ஆனந்தித்த நிலையைத் 'தெளிதல்' என்பர். இவ்வாறு நாள்தோறும் செய்து வந்தால் இம்மையின் அறியாமை,

தளை முதலியன நீங்கி வீடடைவாய் (மோட்சமடைவாய்) என்றருளினார் குரு.

இப் பாடலில் கூறியாங்கு 'தத்துவ அனுபோக' த்தைச் சாற்ற வல்லவர் குருவே. அதனை விளக்க அவர் கூறும் எடுத்துக் காட்டுகள் கையாளும் உத்திகள் முக்காலும் உண்மை என்று சான்றோர்களால் ஒப்புக்கொண்ட விடயங்கள் (பிரமாணம்), சான்றோர் உரை (ஆப்த வாக்கியம்) என்னும் இவற்றின் உதவியாலும் தனது மாணவனுடைய உசாவும் (ஆராயும்) திறனால் தன் குருவின் உபதேசத்தின் உண்மைப் பொருளை ஐயமறப் பெறவே சிந்தித்தல்' பயன் தரும். இது அதத்துவத்தைத்(பொய்யை) தத்துவமென்று (உண்மை) தவறாகப் புரிந்து கொள்ளும் அறிவின் திரிபு (விபரீதம்) அறவே மாறி உண்மையை ஐயந்திரிபற அறிந்திட உதவும். இத்தகைய அறிவின் பேற்றைத் தெளிதல் என்பர்.

உபதேசம் என்பது மகா வாக்கியங்களின் பொருளை மாணவனுக்கு உணர்த்தல் எனப்படும். இது குருவால் நிகழ்த்தப் பெறும் என்பது கூறாமலே விளங்கும். அவ்வாறு உணர்த்தப் பெற்ற பொருளை ஏற்றுக் கொண்ட சீடன் அப் பொருளை அனவரதமும் மனத்தால் சிந்தித்துத் தன் முயற்சியால் பெருக்கிக் கொள்ளும் ஞானத்தின் பயனாக அம் மகாவாக்கியங்களின் பொருளை உணர்ந்து பழகி வருவதால் நிர்வாணத்தை (முக்தி வீடு) அடையக் கூடும். அம் முக்திநிலை யாது என்பதைத் 'தஞ்சமாங்' குருவுஞ் சொன்ன தத்துவ வழி தப்பாமல்' என்ற பாடலுக்குக் (பக் ; 64-ல்) கூறப் பெற்ற விளக்கத்தாலும் 'அனுபவானந்த வெள்ளத் தழுந்தியே' என்ற பாடலுக்கு (பக்கம் 65-ல்) கூறப்பெற்ற விளக்கத்தாலும் அறியலாம்.

இவ்வாறு முக்தியைப் பெற்ற பின்னரும் பிராரப்தத்தின் தொடர்பினால் சின்னாள்கள் வாழ்ந்திருக்க நேரிடும். அவ்வண்ணம் இப் பிறப்பிலேயே தத்துவத்தின் உண்மைப் பொருளை உணர்ந்து சாதனையின் பயனாய் பேரின்பத்தை (ஆனந்தத்தைத்) துய்க்கும் நிலை பெற்றவருக்குச் 'சீவன் முத்தர்' என்று பெயர். சித்தர் வழிவந்த மருத்துவ முறைகட்கு முதற்புருடராய் நின்ற பதினெண்மரும்

இத்தகைய சீவன் முத்தர்களேயாவர். உலகுக்குத் தாம் வழிகாட்டியாயும், இலட்சிய புருடராயும் இருக்கும் வண்ணம் இச் சித்தராம் சீவன் முத்தர் தமது எஞ்சிய நாள்களைத் தன்னலமற்ற வழியில் பயன்படுத்திக் கழித்தனர். காலக்கிரமத்தில் பிராரப்த கன்மம் தீருங்கால் இவ்வுடலை நீக்கும் நேரத்தில், தாம் அதற்கு முன்பே சாதித்த யோக சாதனையின் வலியால் பிரம்மத்திேனாடு இரண்டற்ற நிலையை (அத்துவித நிலை) ஆன்மா பெறுமாறு செய்து உடலைத் தவிர்ப்பவர்களை விதேக முத்தர் என்பர்.

*******

# 3. அளவை

அளவையை அறிதலால் பிரமாணங்களை அறியலாம். பிரமேயங்கள் வேதாந்த சித்தாந்த பாகங்களில் அடங்கி விடுகின்றன. அவற்றை ஐயந்திரிபற அறிய அளவை என்னும் பிரமாண சாத்திரப் பயிற்சி இன்றியமையாததாகும். இந் நூலின் பயிற்சியால் விஞ்ஞான, மருத்துவ சாத்திரங்களுக்குப் பெரிதும் பயனுண்டு. அச்சாத்திரத்தை ஒரு சிறிது இங்கு விளக்குவாம்.

அளவை காண்டல் கருதல் உரை
அபாவம் பொருள் ஒப்பாறென்பர்
அளவை மேலும் ஒழிபுண்மை
யைதிகத் தோடியல் பென நான்
களவை காண்பர் அவையிற்றின்
மேலும் அறைவர் அவையெல்லாம்
அளவை காண்பர் கருதல்வரை
என்றிம் மூன்றிலடங் கிடுமே.

(சிவ சித் அளவை எண்.6)

அளந்தறியும் பிரமாணமாவது ....

1. பிரத்தியட்சம் (காட்சி)
2. அனுமானம் (கருதல்)
3. ஆகமம் (உரை)
4. அபாவம் (இன்மை)
5. அருத்தாபத்தி (பொருள்)
6. உபமானம் (ஒப்பு)

என ஆறென்று சொல்லுவர். அவ்வாறு கூறிய பிரமாணத்தின் மேலும்....

7. பாரிசேஷம் (ஒழிபு),
8. சம்பவம் (உண்மை),
9. ஐதீகம்
10. இயல்பு

என நான்கு அளவை கூறுவர். இவ்வாறு கூறிய பத்துவகை அளவைகளுக்கு மேலும் பிரமாணமுண்டென்றும் கூறுவர். அவையெல்லாம் காட்சி, கருதல், உரை என்ற மூன்றினுள் அடங்கும்.

அபாவம் என்பது இன்மை- அது சீதம் இன்மையால் பனி இல்லை என்று அறிவது.

அருத்தாபத்தி- பகலுண்ணான் பருத்திருப்பான் என்றால் அவ்வாறு சுட்டப்பெற்ற ஒருவன் இளைத்தலின்றி இயல்பாகப் பருத்துத் தெம்புடன் இருத்தலின் இரவில் ஒளித்துண்பான் எனக் கோடல்.

உபமானம்:- ஆமா என்னும் மிருகம் பசுவைப்போல் இருக்கும் எனக் கேள்விப்பட்டிருந்த ஒருவன் காட்டகத்தே சென்று அங்கு நாட்டுப் பசுவை போலக் காணப்படும் விலங்கினைக் கண்டு இதுதான் 'ஆமா' என்று அறிதல் சமான தருமத்தால் என்க.

ஒழிபு இடும்பாசுரனும் ஐராசந்தனும் இறந்தமையாலும், சல்லியன் இங்கே இருக்கின்றமையாலும் கீசகனைக் கொன்றவன் ஒழிந்து நின்ற வீமனே என்று கோடல்.

உண்மை: ஆயிரத்தில் நூறு உளது என்க.

ஐதீகம்:- இந்த ஆலமரத்தில் பேய் உண்டு என்று யாவரும் கூறுதல்.

இயல்பு.- மா பூத்தது என்றால் மரத்தின்மேல் நிற்றல்.

அபாவமும், இயல்பும், உபமானமும் காண்டலில் அடங்கும் அருத்தாபத்தியும், உண்மையும், ஒழிபும் அனுமானத்தில் அடங்கும், ஐதீகம் உரையில் அடங்கும்.

மாசறு காட்சி யையந்
திரிவின்றி விகற்ப முன்னா
வாசற வறிவ தாகும்
அனுமான மவினா பாவம்
பேசுறு மேதுக் கொண்டு
மறைபொருள் பெறுவ தாகும்
காசறு முறையிம் மானத்
தடங்கிடாப் பொருளைக் காட்டும்!
(சிவ. சித் அளவை 7)

குற்றமற்ற காட்சியாவது- ஐயந்திரிபாகிய குற்றமின்றிச் சவிகற்பத்தை நினைந்து குற்றமற அறிவதாகும். அனுமானமாவது- தன்னைவிட்டு நீங்காத வியாப்தி பொருந்தின ஏதுவைக் கொண்டு மறைந்த பொருளை அறிவது, குற்றமற்ற ஆகமப் பிரமாணமாவது- காட்சியாயினும், அனுமானத்தாலும் அறியப்படாத சுவர்க்க நரகாதிகளை ஈதொன்று அறுதியிட்டறிவது.

சவிகற்பம், நிருவிகற்பம்- இலக்கணம்.

கண்ட பொருளை இரட்டுறவே
கருத லையந் திரியவே
கொண்ட றிரிவாம் பெயர்சாதி
குணமே கன்மம் பொருளெனவைந்
துண்டவ் விகற்ப வுணர்வினுக்குப்
பொருளி னண்மை மாத்திரத்தின்
விண்ட லில்லா வறிவாகும்
விகற்ப மில்லாக் காட்சியே!
- (சிவ. சித் அளவை 8)

ஐயக் காட்சியாவது, தோன்றினதொரு பொருளைக் குற்றி

கொல்லோ, மகன் கொல்லோ என இரட்டுறக் கருதுமது. திரிவுக் காட்சியாவது, தோன்றினதொரு பொருளை விபரீதமாகக் கருதுகை. அந்தச் சவிகற்பக் காட்சிக்குப் பெயர் முதலிய ஐந்து உறுப்புண்டு, நிரு விகற்பக் காட்சியாவது, பெயர் முதலிய பகுப்பின்றிப் பொருள் மாத்திரமாக உணரும் உணர்வு.

விபரீதமாகக் கருதலாவது பழுதையைப் பாம்பென்றஞ்சுதல்.

பெயர் முதலிய ஐந்து உறுப்பாவன:

| | | |
|---|---|---|
| பெயர் | - | மா என்பது. |
| சாதி | - | மாவின் தன்மை, |
| குணம் | - | வண்ணம், வடிவு முதலியன. |
| கன்மம் | - | அசைதல், நிற்றல் முதலியன, |
| பொருள் | - | மரம். |

விண்டலில்லா அறிவாவது- இஃது ஒன்றென்க.

மேற் காண்டல் நால்வகைத் தென்பதும், அனுமானம் இருவகைத் தென்பதும், உரை மூவகைத் தென்பதும், பிரமேயம் இருவகைத் தென்பதும் உணர்த்துகின்றார்.

காண்டல் வாயின் மனந்தன்
வேதனையோ டியோகக் காட்சியென
வீண்டு நான்கா மனுமானந்
தனக்கும் பிறர்க்கு மென்றி ரண்டாம்
ஆண்டவுரை தந் திர மந்திரத்
தோடுப தேசச் சொலெனமூன்
பூண்ட வளவைக் கெதிர்புலன்றன்
னியல்பு பொதுவென் றிரண்டாமே.
(சிவ. சித். அளவை எண் 9).

காட்சி *வாயிற் காட்சி, மானதக் காட்சி, தன் வேதனைக் காட்சி, யோகக் காட்சி*யென நான்கு வகைத்தாம்.

* அனுமானம் : சுவார்த்தனுமானம், பரார்த்தனுமானம்

என இரு வகைத்தாம்.

* ஆகமம் : மாட்சிமைப்பட்ட தந்திரக்கலை, மந்திரக்கலை, உபதேசக்கலை

என மூவகைத்தாம்.

* பிரமேயம்: அங்கீகரிக்கப்பட்ட பிரமாணத்தால் அறியப்படும் பிரமேயம், தன்னியல்பு, பொதுவியல்பு

என இருவகைத்தாம்.

*(பிரமாணம், அளவை, பிரமேயம் -புலன் அல்லது பொருள்கள், அனுமானம், கருதல், ஆகமம்- உரை.)*

இனி முறையானே இந்திரியக்காட்சி, மானதக் காட்சி இரண்டையு முணர்த்துகிறார்.

உயிரினோ டுணர்வு வாயி
லொளியுரு வாதி பற்றிச்
செயிரொடு விகற்ப மின்றித்
தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞான
வைம்புலன் சார்ந்துயிர்க்கண்
மயர்வற வந்த ஞான
மானதக் காண்ட லாமே.

(சிவ. சித். அளவை எண் 10)

ஆன்மாவோடு சமவாயமாய் இருக்கின்ற சிற்சக்தியானது, கண் முதலிய இந்திரியங்கள் ஐந்தையும், அக்கினியாதி பூதம் ஐந்தையும் பற்றி உருவம் முதலிய விடயம் ஐந்தையும் ஐயந்திரிபின்றிச் சவிகற்பமாக அறிவது இந்திரியக் காட்சி, குற்றமில்லாத அவ்விந்திரிய

ஞானமானது மயக்கற ஆன்மாவினிடத்தில் வந்ததுவே மானதக் காண்டலாகும்.

விடயத்தை இந்திரியம் அறிந்தமையால் இந்திரியக் காட்சி என்றும், இந்திரியத்தை அந்தக்கரணம் அறிந்தமையால் மானதக் காட்சியென்றும் கூறப்பெற்றன. ஆன்மா ஒரு விடயத்தையறியும் பொழுது ....

பொறியில் ஒன்று
அதற்கு இயைந்த பூதத்திலொன்று
அந்தக் கரணம் நான்கு
காலாதிகள் ஏழு
சிவ தத்துவம் ஐந்து

ஆகப் பதினெட்டுக் கருவிகளால் அறியும் என்க. சிவன் செய்யும் கிருத்தியமெல்லாம் சக்தி செய்யும் என்றாற்போல ஆன்மா அறிவதைச் சிற்சக்தி அறியும் என்றார் என்க.

மேல் நிறுத்த முறையானே, தன்வேதனைக் காட்சியும் யோகக் காட்சியும் உணர்த்துகின்றார்.

அருந்தின்பத் துன்ப முள்ளத்
தறிவினுக் கராக மாதி
தருந்தன்வே தனையாங் காட்சி
சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேச கால
வியல்பகல் பொருள்க ளெல்லாம்
இருந்துணர் கின்ற ஞானம்
யோகநற காண்ட லாமே.

(சிவ. சித். அளவை எண் 11).

அருந்தப்பட்ட இன்ப துன்பங்களை, ஆன்மாவைவிட்டு நீங்காத சிற்சக்தியின்கண் இராகாதிகள் சேர்ப்பது தன்வேதனைக் காட்சியாம் சமாதியால் மலங்களைக் கெடுத்துத் தேச காலங்களிலே பொருந்திய பொருள்கள் எல்லாவற்றையும் இருந்த இடத்தே இருந்தறிவது யோகக் காட்சியாம்.

இராகாதியால் வரும் சுகதுக்கங்களைப் புருடன் அடைதலின், அப்புருடனும் ஆன்மாவும் ஒன்றாதலின் அதுபற்றித் தன் வேதனையாங் காட்சி என்றார். சமாதி என்பது (சம்-நன்றாக, ஆதி-வைத்தல்) மனத்தைச் சிவன் திருவடியில் வைத்தல் என்று பொருள்படும்.

அனுமானத்தை விரித்து உணர்த்துகின்றார்.

பக்க மூன்றின் மூன்றேது
வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானம் தன்பொருட் டாம்
பிறர் பொருட்டா மனுமானந்
தொக்க விவற்றால் பிறர்தெளியச்
சொல்ல லாகு மச்சொல்லு
மிக்க வன்னு வயத்திெனாடு
வெதிரே கச்சொ லெனவிரண்டாம்.

(சிவ. சித். அளவை எண் 12).

பக்கம், சபக்கம், விபக்கம் என பக்கம் மூன்றினுள்ள இயல்பேது, காரியவேது, அனுபலப்தியேது என்னும் மூன்று வகை ஏதுக்களையுடைய பொருளை அறியத்தக்க ஞானமானது, தன்னனுமானமென்றும், பிறரனுமானமென்றும் இருவகைத்தாம். இந்த பக்ஷ ஏதுக்களால் பிறர்அறியச் சொல்வதாகும். அந்தச் சொல்லும் அன்னுவயம், வெதிரேகம் என இரண்டாகும். பிரதிக்ஞை ஏது, உதாரணமென்னும் அவய வத்திரயமும் இதனுட் கிடந்ததென்க.

மேல் தொகுத்துப்போந்த பக்க முதலிய மூன்றன் பகுதியை உணர்த்துகின்றார்.

மூன்று பக்கம் பக்கநிகர்
பக்க நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந் துணிபொருளுக்
கிடமா முவமை நிகர்பக்க

மான்ற பொருள்சென் றடையாத
விடமா நிகரில் பக்கமுத
லேன்ற விரண்டும் பொருளுண்மைக்
கிடமா மொன்று பொருளின்றாம்.
(சிவ. சித். அளவை எண் 13).

பக்கம், சபக்கம், விபக்கம் எனப் பக்கம் மூன்றாம் இவற்றில் பக்கம் அறுதியிடும் பொருளுக்கு இடமாம், சபக்கம் உபமானத்துக் கிடமாம், விபக்கம், தான் அறுதியிடும் பொருள் சென்றடையாத இடமாம், முற்கூறிய இரண்டும் பொருளுண்மைக்கு இடமாம். பிற்கூறிய ஒன்றும் பொருளின்மைக்கு இடமாம். இதில் பக்கத்தில் பிரதிக்ஞையும் சபத்தில் உதாரணமும் விரிந்து கிடந்தன.

மேல் நிறுத்த முறையானே ஏது மூன்றையும் வகுத்து உணர்த்துகின்றார்.

ஏது மூன்றா மியல்புகா
ரியத்தோ டனுப லப்தியென
வோதி னியல்பு மாமரத்தைக்
காட்ட லுறுகா ரியம்புகைதன்
னாதி யான வனல்காட்ட
லாகு மனுப லப்தியது
சீத மின்மை பனியின்மை
காட்டல் போலும் செப்பிடினே.
(சிவ. சித். அளவை எண் 14).

*இயல்பேது, காரியவேது, அனுபலப்தியேது* என ஏது மூன்றாகும். இவற்றுள் ...

* இயல்பேது ஆவது 'மா பூத்தது' என்றால் மரத்தின்மேல் நிற்றல்.
* காரிய ஏது ஆவது புகை தனக்குக் காரணமாகிய அனலை அறிவிக்கை.
* அனுபலப்தியேது ஆவது சீதமின்மையானது பனியின்மையைக் காட்டுவது போல்வனவாம்.

மேல், நிறுத்த முறையானே அன்னுவய-வெதிரேக இலக்கணம் உணர்த்துகின்றார்.

புகையா லனலுண் டடுக்களைப்
போலென்னப் புகற லன்னுவயம்
வகையா மனலில்லா விடத்துப்
புகையின் றாகு மலரினோடு
முகையார் நீரிற் போலென்று
மொழிதல் வெதிரேகச் சொலிவை
தொகையா ருறுப்பைந் தொடுங்கூடச்
சொல்லுவா ருமுளர்து ணிந்தே.
(சிவ. சித். அளவை எண் 15).

புகையாகிய காரிய ஏதுவால் இம் மலையின்கண் நெருப்புண்டு. அஃது என்போலவென்னில் அடுக்களையில் (சமையல் அறையில்) புகையும் அனலும் இருத்தல் போல் என்கை அன்னுவயமாகிய உண்மையாம். எங்கே புகை இல்லையோ அங்கே நெருப்புமில்லை. அஃது என்போல வென்னில் மடுப்போல் என்கை, வெதிரேகமாகிய இன்மையாம். இவ்வுண்மையின்மையாகிய இவற்றிலடங்கிய மூன்றுறுப்போடு உபநயம், நிகமனம் என இரண்டுங் கூட்டி ஐந்தென்று துணிந்து கூறுவாருமுளர்.

எனவே, பிரதிக்ஞை, ஏது, உதாரணம் இவை மூன்றுமே இந் நூற் கருத்து என்பது பெற்றாம். இவ்வாறு இவ் ஆசிரியர் மூன்று கூறி யிருக்கவும், உரையாசிரியர்கள் உபநயம், நிகமனம் என இரண்டுங் கூட்டி ஐந்து உறுப்பாகக் கூறியது எக் காரணமோ அறிகிலோம். அனுமானத்தைப் பின்னுமோர் பிரகாரத்தால் உணர்த்துகின்றார்.

போது நாற்றத் தாலறிதல்
பூர்வக் காட்சி யனுமான
மோது முரையா லறிவினள
வுணர்தல் கருத லனுமான
நீதி யான்முற் சுன்மபல
நிகழ்வ திப்போ திச் செய்தி
யாதி யாக வரும்பயனென்
றறித லுரையா லனுமானம்.
(சிவ. சித். அளவை எண் 16).

முன்பு கண்டுள்ள பூவைப் பின்பு காணாது இருக்கவும் மணத்தால் அறிவது பிரத்தியட்ச அனுமானமாம். ஒருவன் சொல்லும் வார்த்தையைக் கொண்டே, இவனுக்கு இந்நூல் வருமென்று உணர்தல் அனுமானன அனுமானமாம். இப்போது இக்கரும முயற்சியால் வரும்பயனைக் கிரமமாக முற்பிறப்பிற் செய்த கருமத்தின் பலன் நிகழ்வதென அறிவது ஆகம அனுமானமாம்.

நிறுத்த முறையானே ஆகமம் மூவகைத்தாம் என உணர்த்துகின்றார்;

அநாதியே யமல னாய
வறிவனூ லாக மந்தான்
பினாதிமா றின்றிப் பேணல்
தந்திர மந்தி ரங்கள்
மனாதிக ளடக்கித் தெய்வம்
வழிபடும் வாய்மை யாகும்
தனாதியீ றிலாதான் தன்மை
உணர்த்துதல் உபதே சந்தான்.
(சிவ. சித். அளவை எண் 17).

இனி அநாதியே மலரகிதனாகிய, சர்வஞ்ஞனான சிவன் அருளிச் செய்த வேதாகமமே ஆகமமாம். அவ் வாகமம் தந்திரகலை, மந்திரகலை உபதேசக்கலை என மூன்றாம். அவற்றுள் தந்திரக் கலையாவது, முன்னோடு பின் மலைவின்றி கிரியா பாதத்தைப் போதிப்பதாம். மந்திரக் கலையாவது, மந்திர செபத்தால் மனாதிகளை யடக்கித் தெய்வத்தை வழிபடும் யோகத்தைப் போதிப்பதாம். உபதேசக் கலையாவது, ஆதியந்தம் இல்லாத கடவுளது இலக்கணத்தைப் போதிப்பதாம்.

இங்கு, ஆகமம் என்றது வேதாகமம் இரண்டையும் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என்னும் பிரமாணத் திரயத்தானும் உணர்க. சரியை, கிரியையில் அடங்குதலின் வேறு ஓதாதாயினர்.

பிரமாணத்தால் அறியப்படும் பிரமேயம் இருவகைத் ;தாம் என்றுணர்த்துகின்றார்.

அன்னிய சாதி யுந்தன்
சாதியு மகன்று நிற்றல்
தன்னியல் பன்னி யத்தைத்
தவிர்ந்துதன் சாதிக் கொத்தல்
துன்னிய பொதுவி யற்கை
சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவும்
அடங்கிடு மான முற்றால்.
(சிவ. சித். அளவை எண்-18)

அன்னிய சாதியாகிய இலுப்பையையும், தன் சாதியாகிய மாவையுந் தவிர்த்து தேமா என நிற்றல் தன்னியல்பாம். அன்னிய சாதியாகிய இலுப்பையை ஒழித்துத் தன் சாதியாகிய மாமரம் எனப் பொதுப் பெயர் பெற்று நிற்றல் பொதுவியல்பாம். இந்த விசேட சாமானியம் இரண்டினுள், உலகத்துள்ள நிலைபெற்ற பொருள்களெல்லாம் பிரமாணத்தைப் பொருத்தி அறியுங்கால் இவற்றினுள் அடங்கும்.

பக்கப் போலி முதலியவற்றைத் தொகுத்து உணர்த்துகின்றார்.

ஈண்டுப் பக்கப் போலிநான்
கேதுப் போலி யொருமூன்றாய்
வேண்டு மெழுமூன் றாகும்
விளங்குவ மைப்போல் யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண்
டிருபத் தி ரண்டாங் கருதிலிவை
யாண்டு மொழிவ ரவையெல்லா
மளக்கி வறுபத் தைந்தாகும்.
(சிவ. சித். அளவை எண் 19).

இவ்விடத்து...........

* பட்சாபாசம் நான்காம்.
* ஏதுவாபாசம் மூன்று வகையாகி விரியால் இருபத்தொரு பேதப்படும்.
* விளங்குகின்ற திருட்டாந்த பாசமானது பதினெட்டாகக் காணப்படும்.
* நிக்ரகத்தானம் இரண்டாகி விரியால் இருபத்திரண்டாம்.

இவற்றை மேலும் கூறுபவர் அவற்றின் பகுதியை விசாரித்து அறியுமிடத்து அறுபத்தைந்தாகும்.

# *ALAVAI* OR LOGIC

Some classify Logical methods into six:

1. Pratyaksha (Observation and Experiment)
2. Anumana (Inference)
3. Agama (Testimony or Authority)
4. Abhava (Non-Existence)
5. Arthapatti (Deduction)
6. Upamana (Analogy)

Some add the following four to the foregoing, namely-

7. Parisesha (Inference by exception)
8. Sambhava (Co- Existence)
9. Aytigam (Tradition)
10. Svabha-Linga (Natural Inference)

All these* are included in the first three Pratyaksha, Anumana and Agama.

---

**Note:** The Tamil equivalents of these ten pramanas are:-

1. காட்சி 2. கருதல் 3. உரை 4. இன்மை,
5. பொருள் 6. ஒப்பு 7. ஒழிபு 8. உண்மை
9. ஐதிகம். 10. இயல்பு.

Abhava is the mere negation of a fact, and Svabha-Linga is merely the gathering the meaning of an ambiguous word from the context, and there is no inference in either case, and they rest therefore and are included under Pratyaksha. Arthapatti (e.g. Rama He does not eat during the day. He is fatty hence he must eat during the night). Prisesha (e.g. Rama fought Ravana, Rama won, hence Ravana failed), Sambhava (e.g. fifty is included in hundred,

2. Pratyaksha is the direct and correct perception of things without doubt and mistake and without the sense of differentiation. By Anumana we infer things hidden from certain data by knowledge of their inseparable connection (by succession or co-existence). Agama Pramana will guide us to the knowledge of things unattainable by the foregoing two methods.

---

*(Note contd)*

a whole), are all included under Inference; but in many of these there is little or no inference. Aytigam is included under Agama. Upamana occupies a peculiar place and is included in inference but is sometimes (which I think is more correct) classed as a separate method. The essential distinction between Western and Eastern Logic has to be borne in mind, namely, that the former deals with names and propositions and Syllogisms (all forms) whereas the later deals with, concepts and real argumentation. Western Logic was, till Mill's time, all deduction and induction was barely enough noticed. But the Eastern Logic was more inductive than deductive, and was concerned more with the proof of things, and the methods of discovering truth by the application of human reason and by the aid of the, Highest Testimony. And in this last respect of inculding Testimony of course, it is broader than Western Logic. Of the ten divisions of proof, herein set forth, the various Indian Schools, adopt only some or all. For instance, the Indian Materialist (Lokayita) accepts only Pratyaksha. The Buddha and Vaiseshika accept this and inference; the Sankhya accepts also Agama Pramana; The Nyayika accepts also analogy; The jain and Prabhakara add to these four'Arthapatti' The vedanti accepts also 'Abhava' The Pauranic adds to these 'Sambhva' and Tradition. Each one of these schools take up Logic as only an instrument for ascertaining the Highest truth; and the subject is merely appended as in Sivanjnana siddhi, as serving to help them in the elucidation of the postulates and proofs they set forth in their discussion as to the nature of God, Soul and matter, and each of the two distinctively so-called Logical schools-Vaiseshika and Nyayika-treat of Logic as such and proceed to discover the Highest truth, whereby and whereby alone can any real escape from human pain and suffering be effected.

"When man shall roll up the sky
as a piece of Leather,
Then shall there be an end of pain
without the knowledge of Siva".

-Svet. V.20

3. Doubtful perception is doubting a thing seen to be this or that: the mistaken knowledge is knowing one thing to be another; Savikarpa knowledge comprises the knowledge of name, class, attribute action and thing. Nirvikarpa knowledge is the knowledge of the thing itself without knowledge of its name, class, attribute and action.

4. Direct Perception or Pratyaksha is classified into four kinds.**

i. Perception by means of external senses
ii. by means of internal senses
iii. by the feeling of pleasure and pain
iv. by Yoga or Seership.

Anumana or inference is divided into two namely,

i. Svart-anumana
ii. Parart-anumana

---

*(Note contd)*

As such, we shall explain certain terms which are used frequently in these discussions. Pramana (Alavai அளவை ) is proof; Prameya (பொருள் ) is the thing proved; Pramatha (அறிகிறவன் ) is the person who investigates; Pramithi (அறிவு ) is the Intelligence cognizing the proof. The term 'Abhava' (Non-existence) is frequently used in vedantic discussions. It is divided into Samasargabhava (Relative non-existenence) and Anyonyabhava (ஒன்றினொன்ற பாவம் ) (natural or Reciprocal non-existence); and the former is divided into Adyantabhava (ஒன்றுமின்மை) (absoulute non-existence) Prabhava (முன்னின்மை- antecedent non-existence). Pratidvamsabhava (உள்ளதன்பாவம்) (emergent non-existence,). The terms Vyapaka,Vyapti, Vyapya are of very great importance in Logic and is Siddhantha Literature. Vyapya are of that which pervades over everything else, the universal , (மேல் நிறைவு )and corresponds to the major term in a syllogism. Vyapti is what is comprised in the universal, the particular (சம நிறைவு ) and corresponds to the middle term and Vyapya what is co-inherits to the Vyapti (ஒன்றின் மிடைந்த நிறைவு ) and corresponds to the minor term.

** The different kinds of perception are called இந்திரிய or வாயிற்காட்சி உள்ளக்காட்சி or மானதக்காட்சி, வேதனைக்காட்சி and or யோகக்காட்சி The different kinds of Anumana are called தன் பொருட்டனுமானம் பிறர் பொருட்டனுமானம்.

Visesha are called தன்னியல்பு and Samanya பொதுவியல்பு

Agama is divided into

i. Mantra,
ii. Tantra
iii. Upadesa

the words of the wise teacher (Jnani). The things proved by means of these logical methods are classed as Visesha (Particular) and Samanya (General)

5. Visesha applies to things which exclude from its denotation, species of its own class, as well as other classes. Samanya applies to class to which the things belongs, excluding other classes. These two classes described above will comprise all things.

6. *** Perception by external senses arises when with the soul's intelligence, the external senses coming in contact with light, air, etc., perceives correctly Form, Sound, etc, without being misled by difference or similarity.

---

*(Note contd)*
The Visesha means the infra species or the lowest species of objects and even among them, it seems to mean the class of differentia more particularly.

*** The first kind of perception is bare external perception without any shade of thought or operation of the internal senses. The mental perception is infact the more direct perception so far as the soul is concerned and the external perception is accordingly remote and indirect . This classification of perception is very exact and strictly scientific. Feelings are also classed properly as a source of perception. As regards perception by Yoga, the Western Scientist may not admit, but proofs are accumulating which make such knowledge possible. If by the interposition of a few slides and by the arrangement of a few wires, things invisible by distance by the interventing matter, etc. can be made visible. Why should not the human intellect be so sharpended by practice as to make such knowledge possible? The differnce between the Eastern and Western method is in this.

Perception by internal senses arises when after such external perception, a mental impression is produced freed from doubt and mistake,involving the operations of retention and reflection and the sense of difference and similarity.

7. Perception by feeling arises when the feeling of pleasure and pain are produced in accordance with the instinct of desire and hate, guided by the law of *kala.**

Perception by Yoga is the perception by the Yogi, seated in one place, of all things, remote in place and time, possible to him by his having destroyed all Mala by remaining in Samadhi.

8. Paksham (propositions) are of three kinds, Paksham (conclusion), Sapksham (analogy). Vipaksham (Negative Proposition),

There are three kinds, of Hetu (இயல்பு, காரியம், அனுபலத்தி ). Inference is drawn out of the invariable concomitants floaing from the Paksham and Hetu. And the inference is of two kinds, inference for oneself and inference for other. Inference for others is for explaining the proof to others. And this latter is divided into Anvaya Anumana and Vyatireka-Anumana.

---

*(Note contd:)* The European tries to subjugate external nature to serve his material ends, etc. but the Oriental aims at the highest and his mind is always turned on himself. In regard to Yoga, the really gifted are so few and the Charlatans and deceivers are so numerous, which latter class are only too much encouraged by the utter stupidity and credulity of the many (we are afraid) that we have to include among them, a large section of even the so-called educated), that it is a pity that the practice should be gradually falling into contempt.

* *kala* ( கலா) is one of the higher Tattvas which enables man to experience perceptions, without at the same time reaching Jannam, by the temporary drawing of the Veli of Apava.

*9. The three Pakshams are-Paksham, Sapaksham and Vipaksham. Paksham is the statement comprising the conculusion or inference. Sapaksham is statement of similar instances. Vipaksham is the negative statement where the thing proved andthe antecedent are absent. The first two give the proof by the method of agreement and the last by the method of difference.

---

* These have reference to purely Logical methods of Inductive proof. The text give here the grounds of all Induction, as based on uniformities in Nature (அவினாபாவம்) as equality or inequality, Co-existence and causation.And on these depends all inductive reasoning; and inference (paksham) is got at by the methods of difference (Vipaksham). This is exactly the foundations of Mills Inductive Logic and, Dr. Bain condenses Mill's six kinds of predicates into three as here stated and Dr. Bain gives five methods, Method of Agreement, Method of Difference, the Joint Method, the Method of concomitant variations, and Method of Residue, of which the first two are no doubt the primary Methods.

We will state the five laws as given by Dr. Bain-

(i) The Method of Agreement -If two or more instances of a Phenomenon under investigation have only one circumstance in common that instance is the cause or effect of the phenomenon.

(ii) The Method of Difference - If an instance when a phenomenon occurs and an instance when it does not occur, have every circumstance in common except one, that one occuring only in the first; the circumstance present in the first and absent in the second is the casue or a part of the cause of the given phenomenon.

(iii) The Joint Methods- It two or more instance when the phenomenon occurs have only one circumstance in common, while two of more instances when it does not occur have nothing in common save the absence of that one circumstance; the circumstance wherin alone the two set of instances differ, is the effect or the cause or a necessary part of the cause of the phenomenon.

(iv) The Methods of concomitant Variations- Whatever phenomenonvaries in any manner whenever another phenomenon varies in some other particular manner, is either a cause or an effect of the phenomenon and is connected with it through some bond of concomitance.

(v) The Method of Residue- Subduct from any phenomenon such part as previous induction has shown to be the effect of certain antecedents, and the residue of the phenomenon is the effect of the remaining antecedent.

10. Hetu or Reason is of three kinds. Reason from natural relation (Co-existance and equality). Reasoning from causal relation (succession) and Reasoning by means of contraries (inequality). As for instance, we exhibit the first kind of reasoning when we infer the meaning of "மா" in the sentences "மா பூத்தது" "மா ஏறினான்" The second, when we infer fire from the presence of smoke, the third, when we infer the absence of dew from the absence of cold.
*(See Note @ in 9.)*

11. Anvayi- anumana comprises the argument with Prathijna Hetu and Instance as in the form. Fire is in the mountain (Prathijna). Because smoke is rising from the mountain (Hetu). Because fire and smoke is both present in the oven (Instance).

Vyatireki argument is of this form. There is no fire in the mountain, because there is no smoke arising from the mountain. For instance, there is neither smoke nor fire in the deep tank filled with lotus flowers. Nyayikas and Saivas clearly state the argument with five propositions including Nigama and Apanaya.

12.* Purvadarsana Anumana is where we infer a particular flower from a particular smell, from our past knowledge of its connection. Vasanalinga Anumana is where we infer the amount of a man's learning by the words he utters; Agama Anumana is when we infer a man's past karma from his present experience of pleasure and pain.

13.** Agama is the word of the Perfect Eternal Being. Of this Agama, the Tantra portion treats of the rituals ascertained without defects and inconsistency and required for salvation. The Mantra portion treats of Upasana required for controlling the senses and contemplation of God; The Jnana Kanda treats of the nature of the Supreme, Beginningless and Endless.

---

* These kinds of inference are to be distinguished from the Logical divisions of Patyaksha, etc.

** Agama is Revelation and means both Veda and Saivagamas.

14. Inferential Fallacies are four in number. Fallacies in reasoning (Hetu) are three. These divide again into twenty-one. Fallacies in agreement or analogy are eighteen. Fallacies of Nigrahasthan are divided into two and sub-divided into twenty-two. There are six other sub-divisions again. On the whole the fallacies are sixty-five in number.

---

*(Note contd)*

It must be the word of the Perfect Eternal Being. The words of any Being who does not answer to this description are of no authority. The Tantra and Mantra portions, The Mantra Kanda and Jnana Kanda portions find place both in the Vedas and Divyagamas. The Mantra portion answers more to the Upanishads, the Yogapada, and Jnana Kanda to the Jnana Kanda the Divyagamas. The Mantra portion answers more to the Upanishads, the Yogpada and Jnana Kanda, the Divyagamas.

************

# 4. தத்துவ ஆராய்ச்சி

## உடல் தத்துவம்- பொருள் தத்துவம்.

தத்துவம் என்ற சொல்லிற்கு உண்மை என்பது பொருளாகும். எனவே தத்துவஞானம் என்பது உண்மையை அறிவதெனப் பொருள்படும். உண்மை என்பதற்கு உள்ளது, அதாவது என்றும் உள்ளது என்பதே கருத்து. நம் உடல் உட்பட நாம் காணும் பொருள்கள் யாவும் என்றும் உள்ளவை அல்ல. என்றுமே உள்ள நிலையான பொருள் ஏதாவதுண்டா? உண்டாயின் அது எது? அதன் இயல்புகள் யாவை? என்பன போன்றவற்றை ஆராய்வதே தத்துவ ஞானம் எனப்படும்.

உண்மையாக என்றுமே உள்ள பொருள்களின் தத்துவத்தை ஆராய்வது மெய்ஞானம் என்றும், அழியும் அல்லது மறையும். அதாவது பகுதிகளாகப் பிரியும் பொருள்களை அறிவது விஞ்ஞானம் என்றும் கொண்டனர்.

மெய்ஞான ஆராய்ச்சி நம் நாட்டில் என்றோ முடிந்து அதன் முடிவுகளும் அறுதியிட்டு வெளியிடப்பட்டு விட்டன. பின் வந்த ஞானிகளின் ஆராய்ச்சிகள் யாவும் அம்முடிவுகளைச் சரியாக விளங்கிக் கொள்வதன் பொருட்டே மேற்கொள்ளப்பட்டன.

மெய்ஞானத் தத்துவ ஆராய்ச்சியைப் பொழுது போக்கிற்காகத் தொடங்கவில்லை. சீவராசிகள் படும் அல்லலும், மனிதர்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுமே இந்திய ஞானிகளை இவ்வாராய்ச்சியில் ஈடுபடச் செய்தன.

மெய்ஞானக் கொள்கைக்கும் மக்களது வாழ்க்கைக்கும் அதிகத் தொடர்புண்டு. இத்தத்துவஞானமும் வாழ்க்கையும் ஒன்றோடொன்று கருதுமளவுக்கு அவை இரண்டும் பின்னிக்

கிடக்கின்றன. இதனாற்றான் சமயம் வேறு, தத்துவஞானம் வேறு என்றில்லாமல் இந்நாட்டில் இரண்டும் பிணைந்து கிடக்கின்றன.

மெய்ஞானிகளும், தத்துவ ஞானிகளும் தத்துவ ஆராய்ச்சியில் மட்டுமன்றி அவ்வாராய்ச்சிக்குத் துணையாகும் சாதனங்களை ஆராய்வதிலும் பெரிதும் ஈடுபட்டனர். சாதனங்கள் அறிவைப் பெறும் வழிகளைக் குறிக்கும். இவைகளைத் தத்துவ ஞானிகள் 'பிரமாணங்கள்' என்பர். பொறிகள், நூல்கள் ஆகிய இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரமாணம் எனப்படும். இப்பிரமாணங்கள் தத்துவ ஞானத்தின் சிறப்பியல்புகளுள் ஒன்றாகக் கருதப்படுகின்றன. தத்துவ ஞான முடிவுகளை ஆகமம், வேதம் என்ற நூல்களில் வெளியிடப்பட்டுள்ளன. இந்த ஆகம வேதங்களில் கூறப்பட்டவைகளுக்கு விளக்கம் கூறுவதில் ஏற்பட்ட வேறுபாடுகளால் பிற்காலத்தில் பல பிரிவுகள் தோன்றின.

இந்தியத் தத்துவ ஞானிகள் அனைவரையும் இரு பெரும் பிரிவினராகப் பிரிப்பது வழக்கம்.

* ஒரு பிரிவினர் ஆகமங்களில் கூறப்பட்டவற்றைச் சரியென ஒப்புக் கொள்வோர்.

* மற்றொரு பிரிவினர் வேத உபநிடதங்களில் கூறப்பட்டவற்றைச் சரியென ஒப்புக்கொள்வோர்.

வேதத்தை ஒப்புக் கொள்ளுவோரை வைதிகர் என்ற சொல்லாலும், ஒப்புக் கொள்ளாதோரை அவைதிகர் என்ற சொல்லாலும் குறிப்பிடும் மரபும் உண்டு.

உலகாயதர், சமணர், பௌத்தர் ஆகிய மூவருமே அவைதிகர் எனப்படும் பிரிவைச் சேர்ந்தவராவர்.

வைதிகருள் சாங்கியர், யோக மதத்தினர், நையாயிகர், மீமாம்சகர், வேதாந்திகள், சித்தாந்திகளெனப் பல உட்பிரிவினர் இடம் பெறுவர். வேதத்தை ஆதரித்தமையால் எழுந்தவை சில பிரிவுகள், அவற்றை எதிர்த்தமையால் எழுந்தவை சில பிரிவுகள்.

ஆகமப் பிரமாணங்களைக் கொண்டு நிரூபிப்பது சிறப்பான அம்சமாக விளங்குகிறது. மற்றவை அளவைப் பிரமாணங்கள், தத்து வார்த்தத்தையறிய இவ்விரு பிரமாணங்களையும் அறிவது அவசியமாகும்.

பிரமாணங்கள்தான் அறிவைத்தரும் கருவிகள்; அவைதான் அளவுகோல்கள். ஒரு பொருளை அளக்கத் தொடங்குமுன் அளவுகோல் சரியானதாவென அறிய வேண்டும். தத்துவஞானம் என்பது பிரபஞ்ச ஆராய்ச்சி. பிரபஞ்ச ஆராய்ச்சி பற்றிய முடிவை நாம் அடையுமுன், பிரபஞ்சத்தைப் பற்றி அறிய உதவிகளாயிருக்கும் கருவிகளைப் பற்றிய ஞானத்தை அவசியம் அறிய வேண்டும். இதனை அளவை என்னும் பிரமாணவியலில் காணலாம்.

எனவே, உடல் தத்துவ நூலில் முதலில் மெய்ஞ்ஞான விளக்கம் தந்து அதனையடுத்து வருவது விஞ்ஞான விளக்கமாகும். விஞ்ஞானமும்பொருள் தத்துவம் கொண்டுள்ளது. பொருள் மூன்று வகைப்படும், அவை...........

அருவப் பொருள்
அருவுருப் பொருள்
உருவப் பொருள் என்பவையாம்,

அருவப் பொருள் மெய்ஞானத்திலும், அருவுருப் பொருள், உருவப் பொருள்கள் விஞ்ஞானத்திலும் விளக்கப்பட்டுள்ளன. அருவப் பொருளை விளக்க மெய்கண்டான் நூலை உறுதுணையாகக் கொண்டு விளக்கவேண்டியுள்ளது. விஞ்ஞானத்தை அறிவது உடல் தத்துவ விளக்கத்திற்கு உறுதுணையும் இன்றியமையாததுமாகும்.

## பொருள் தத்துவம்.

பொருள் என்பது யாதோவெனில் சொல்லில் உணரப்படுவது. அது முதல், கரு, உரிப்பொருள் என மூவகைப்படும்.

முதல் கரு உரிப் பொருள் என்ற மூன்றே

நுவலுங் காலை முறை சிறந்தனவே
பாடலுட் பயின்றவை நாடுங்காலை
(தொல் :அகத்திணை இயல்)

முதற் பொருளாவது: நிலமும் காலமும் எனஇருவகைப்படும்

முதல் எனப்படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே!
(தொல் :அகத்திணை இயல்)

1. நிலம் எனவே நிலத்திற்குக் காரணமாகிய நீரும். நீருக்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும், காற்றிற்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்.

2. காலமாவது மாத்திரை முதலாக நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, அயனம், ஆண்டு, யுகம் எனப் பலவகைப்படும்.

கருப் பொருளாவது: நிலத்திலும், காலத்திலும் தோற்றும் பொருள். அது தேவர், மக்கள், விலங்கு முதலியனவும், உணவு , செயல் முதலாயினவும், பறை, யாழ் முதலியனவும் இன்ன பிறவும் ஆகப் பலவகைப்படும்.

உரிப் பொருளாவது: மக்கட்குரிய பொருள். அஃது அகம், புறம் என இருவகைப்படும்.

அகமாவது உள்ளத்தின் உணரப்படும் நிகழ்ச்சியைக் குறிப்பதாகும். இது புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை, பெருந்திணை எனவும் ஏழுவகைப் படும்.

அகப் பொருளாவது போக நுகர்ச்சி யாதலின் அதனால் ஆயபயன் தானே அறிதலின் அகம் எனப்பட்டது.

புறப் பொருளாவது மறஞ் செய்தலும், அறஞ் செய்தலும்

ஆகலான், அவற்றால் ஆய பயன் பிறர்க்கு புலனாதலின் புறம் என்றார். அஃதற்றாக உலகத்துப் பொருள் எல்லாம் உணர்தல் வேண்டுமெனின் அது முதல், கரு, உரிப்பொருள் எனத் தொகை நிலையான் அடங்கும். அவ்வாறு வகுக்கப்பட்ட பொருளை உருப்பினாலும், தொழிலினாலும், பண்பினாலும் பாகுபடுத்தி நோக்க வரம்பிலவாய் விரியும். இக் கருத்தினாலே உலகத்துப் பொருள் எல்லாவற்றையும் முதல், கரு, உரிப் பொருள் எனக் கூறி, உருவத்தினால் உருவப் பொருளினையும் தொழிலினாலும், பண்பினாலும் அருவப் பொருளையும் ஓதினார் என உணர்க.

" நிலம் தீ, நீர் வளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"
(தொல்: பொருளதிகாரம் 635.)

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென் றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போல"
(புறநானூறு)

என்றாராகலினாலும், இவ்வுலகம் ஐம்பெரும் பூத அணுக்களால் ஆயது என்று சொல்லப்பட்ட இவ் வைம்பெரும் பூத அணுக்களில் ஒவ்வோர் அணுக்கள் தோறும் 96 தத்துவங்கள் பொருந்தியிருக்கின்றன

இவ்வுலகத்தில் காணப்படும் முதல், கருப் பொருள்களாகிய அருவ உருவப் பொருள்களில் இத் தொண்ணூற்றாறு தத்துவங்கள் பொதிந்து கிடக்கின்றன.

பேதமை சார்வாச் செய்கை யாகும்
செய்கை சார்வா வுணர்ச்சி யாகும்
உணர்ச்சி சார்வா வருவுரு வாகும்

அருவுருச் சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா வூறா கும்மே
ஊறு சார்ந்து நுகர்ச்சி யாகும்
நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பற்றா கும்மே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழி முறைத் தோற்றம்
தோற்றஞ் சார்பின் மூப்புப் பிணி சாக்கா
டவல மாற்றுக் கவலை கையா றெனத்
தவலிறுன்பந் தலைவரு மென்ப
ஊழின் மண்டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி
*(மணிமேகலை: பவத்திறமறுகெனப்பாவை நோற்ற காதை)*

இன்னும்,

பேதமை செய்கை யுணர்வே யருவுரு
வாயிலூறே நுகர்வே, வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப் பயன்
இற்றென வகுத்த வியல்பீராறும்
பிறந்தோ ரறியிற் பெரும் பேறறிகுவர்
அறியா ராயினாழ் நர கறிகுவர்
(மணிமேகலை)

என்றும் கூறப்பட்டுள்ளது.

“மானந்தி எத்தனைக் காலம் அழைக்கினுந்
தானந்தி யஞ்சின் தனிச்சுட ராய்நிற்குங்
கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்
மேனந்தி ஒன்பதின் மேவிநின் றானே”
(திருமந்திரம் 1716)

“உருவும் அருவும் உருவோ டருவும்
மருவு பரசிவன் மன் பல்லுயிர்க்குங்
குருவு மென நிற்றாங் கொள்கைய னாகுந்
தருவென தங்குஞ் சதா சிவன் தானே”
(திருமந்திரம் 1733)

"நாலான கீழ்த் துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிக நாப்பண்
நாலான ஒன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் தானே"

(திருமந்திரம் 1734)

கட்புலனும், திணை பால் வேறுபாட்டுருவும், கட்புலனாகா அருவும், கட்புலனாயினும் வேறுபாடு தோன்றா அருவுருவும் ஆகிய முத்திறப் பிழம்புகளாய் உலகத்தில் பொருள்கள் திகழ்கின்றன. இம் முத்திறப்பட்ட பிழம்புகளில் அருவப் பொருள் ஒன்பது திருமேனிகளையுடையன.

* உருவம் நான்கும் கீழ்ப்படி யென்றும்
* அருவம் நான்கு மேற்படி யென்றும்
* அருவுருவம் நடுப்படியென்றும் அழைக்கப்பெறும்.

உருவம்:
1. அயன்.
2. அரி
3. அரன்
4. ஈசன்

அருவுருவம்:
1. சதாசிவம்.

அருவம்:
1. விந்து
2. நாதம்
3. சக்தி
4. சிவம்

ஆக ஒன்பதாம். மற்றும்...

ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந் தெய்வம்
நீதியுள் மாதெய்வ நின்மலன் எம்மினா
பாதியுள் மன்னும் பராசக்தியாமே.

(திருமந்திரம் 1737)

மேல் ஓதிய ஒன்பான் திருப்படிமங்களில் ஒவ்வொன்றிலும் ஓர் பாதி தனதாகக் கொள்ளும் நிலை பெற்ற வனப்பாற்றலாகிய பராசக்தியாகும். எனவே,

சக்திக்கு மேலே பராசக்தி தன்னுள்ளே
சுத்த சிவபதந் தோயாத தூவெளி
அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்
ஒத்தவும் ஆமீசன் தானான உண்மையே.
(திருமந்திரம் 1738)

சக்தி தத்துவத்துக்கு மேல் விளக்கும் இயக்க நிலை அறிவுப் பேராற்றலாகிய பராசக்தியாகும். அப்பேராற்றலினுள் திகழ்வது இயற்கை உண்மைச் சிவனிலையாகும். அதன்மேல் யாதினும் தோயாது அருவப் பெரு வெளி நிற்கும் . அந்நிலையும் ஆற்றலாகிய சக்திக்கு இயைந்த அறிவாகிய சிவம் வீற்றிருந்ததனாலும், மெய்மையாகும்.

கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்றும்
எழுந்திடங் காணில் இருக்கலு மாகும்
பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையு ளானே.
(திருமந்திரம் 1739)

பரம என்றிடத்தில் சிவனும் சக்தியும் ஒரு காற்றிலே உடைய மெய்மை தோன்றும். ஆகவே சக்தி சிவமாகும். சிவம் சக்தியுமாகும். இவ்விரண்டு பொருளானதும் ஒன்றே. அகங்கை, புறங்கை போன்று இயல்பால் இருநிலை என்ப. சக்தியும் சிவமும் இல்லாமல் எப்பொழுதும் தோற்றமுறாது. சக்தியே யாண்டும் எல்லா பொருள்கட்கும் தாங்கும் நிலைக்களம். ஆனால் சிவசக்தியே உலகப் பொருள்களாகச் சமைந்தது என ஏற்றுக் கூறுவர்.

ஆகவே, உலகத்தில் காணப்படும் முதல், கரு, வென்னும் பொருள்கள் உருவமாயும் உருவருவமாயும் அருவமாயும் தோற்றமளிக்கின்றன. அருவமும் உருவமும் பிரிக்கப்படாதது.

அருவத்தில் உருவமும் உருவத்தில் அருவமும் பிணைந்து கிடக்கின்றன என்பதை நன்கு சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

இதனையே திருமூலர் திருமந்திரத்தில்:

பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்து
அருவா யுருவாய் அருவுருவாகிக்
குருவாய் வருஞ் சக்தி கோனுயிர்ப் பன்மை
உருவாயுடனிருந்த தொன்றா யன்றாமே.
(திருமந்திரம் 2442)

உயிர்க்குயிராகிய வுருவா யருவாய்
அயற் புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சக்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருள் மூடமாமே.
(திருமந்திரம் 217)

எந்தை பரமனும் என்னம்மை கூடமும்
முந்த வுரைத்து முறை சொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம் பெருங் கண்ணியை
உந்தியின் மேல் வைத்துகந் திருந்தானே.
(திருமந்திரம் 1740)

சிவ தத்துவமும் சக்தி தத்துவமும் மணி யொளி போலப் பிரிப்பின்றிக் கலந்து கூடிய கூட்டம் ஒரு பாகத்தமர்ந்த சேர்க்கை எனத் திருமூலர் கூறுகிறார்.

அருவமும் உருவுமாகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனியாகக்
கருணை கூர் முகங்கள்........... ...............
(கந்தபுராணச் சுருக்கம்)

அற்றமில் உருவமாகுவன், அருவம் ஆகுவன், அருவுருவகன்ற பெற்றியுமாவன், மறைகளுந் தெரியாப் பெரியவன், பெரியார்க்கும்

பெரியான், சுற்றிடும் பொருள்கள் அனைத்துமாய் அளவாய்த் தோன்றி தனிப் பெருந் தோன்றல். (சுந்தபுராணச் சுருக்கம்)

எனவே, வடிவம், வடிவு இல்லது, வடிவம் இல்லதுமாயது என்ற முத்திறப்பட்ட சகல நிட்கள் திருமேனிகளாக விளங்குகின்றன எனப்பட்டது. மற்றும் இக்குறிப்பையே,

“அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
அருவுருவ மன்றாகு முண்மை-அருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம் போற் றொக்கு.”
(ஏழாஞ் சூத்திரம்)

என்று சிவஞான போதமும்,

“ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப மிலய
மொடு போகமதி காரமாகித்
தேசருவ மருவுருவ முருவமாகித் தேவியுமாய்த்
தேசமொடு செல்வமாகிப்..........”

“அருவினி லுருவந் தோன்றி
யங்காங்கி பாவ மாகி
யுருவினி லுருவ மாயே
யுதித்திடு முலக மெல்லாம்
பெருகிடுஞ் சுருங்கும் பேதா
பேதமோ டபேத மாகும்
மொருவனே யெல்லா மாகி
யல்லவா யுடனு மாவன்”

எனச் சிவஞான சித்தியாரும் விளக்குகின்றன.

எனவே காரண காரியப் பரம்பொருள் அருவாய், உருவாய், அருவுருவாய்த் தோன்றியருளப்பட்டது. இந்நிலைமை தொன்மை யிலேயே இயற்கையாக அமைந்த நன்மைப் பண்பாம். இனி அருவம், அருவுருவம், உருவம் ஆகியவற்றை ஆராய்வோம்.

# அருவப் பொருள்.

அருவப் பொருள் ஒன்பது திருமேனிகளையுடையது. அவை, சிவம், சக்தி, விந்து, நாதம் என நான்கும் மேற்படி, சதாசிவம் மட்டும் நடுப்படி, அயன், அரி, அரன், ஈசன் என நான்கும் ஆகிய ஒன்பதும் திருமேனிகளாகும். இவைகளை முறையே.

1. அறிவு
2. ஆற்றல்
3. ஒலி
4. ஒளி
5. அருளோன்
6. ஆண்டான்
7. படைப்போன்
8. காப்போன்
9. அழிப்போன்

எனச் சித்தாந்த சாத்திர நூல்கள் கூறுகின்றன வென்பதை மேலே கண்டோம்.

## சிவம் இயல்

சிவம் என்ற சொல் முதன் முதல் எந்த நூலில், எந்த மொழியில் காணப்படுகிறது என்பது ஆராயத்தக்கதாகும். புறநானூறு போன்ற மிகப் பழைய தமிழ் நூற்களிலே சிவன் என்ற சொல் காணப்படவில்லை. வேத காலத்தில் தோன்றிய இருக், யசுர், சாம வேதங்களிலும் காணப்படவில்லை. எனினும், சிவன் என்ற சொல் இல்லாதபோதும் சிவபெருமானைக் குறிக்கும்..

**" நீலமணி மிடற்றொருவன்"**

**" கறைமிடற் றண்ணல்"**

போன்ற அநேக சொற்கள் உபயோகித்திருத்தலைப் புறநானூற்றில் காணலாம்.

சைவ சித்தாந்தமும், ஆகம நூலும் தமிழருக்கே உரியதாக இருந்தும் 'சிவன்' என்னும் சொல் பழைய தமிழ்ச் சங்க நூல்களில் காணப்படாமைக்குக் காரணங்களில்லாமலில்லை. தென்னகத்தில் ஆகம நூல்கள் தமிழ் அறிவர்களிடையே மனப்பாடமாக இருந்தது. வாழையடி வாழையாக மனப்பாடமாக இருந்ததே ஒழிய அவ்வமயம் ஏடுகளில் எழுதப்படவில்லை. தென்பாலி முகத்தில் அநேக கடற்கோள்களினால் தமிழர்கள் நான்கு பக்கமும் சிதறி ஓடினர். தமிழர்களும், நாகர்களும் சிந்து கங்கை இடைவெளி தீரத்தை அடைந்தார்கள். ஆகமமும் அவ்விடம் சென்றது. எஞ்சிய தமிழகத்தில் ஆகமம் மறைந்தது. இக்காரணங்களால் பிற்காலத்தில் எழுந்த பழந்தமிழ்ச் சங்க நூல்களில் 'சிவன்' என்ற சொல் காணப்படவில்லை. சிந்து கங்கை இடைவெளி தீரத்தில் பரவிய நாகர்களும், தமிழர்களும், ஆகம நூற்களுக்குப் புத்துயிர் அளித்து மறுமலர்ச்சி அடையச் செய்தார்கள். மனப்பாடமாக இருந்த ஆகம நூற்கள் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டன, அங்குச் சொல்லாட்சி வட மொழியானபடியால் காலக்கிரமத்தில் ஆகம நூல் வடமொழியில் பதிந்துவிட்டது. எனவே தமிழர், நாகர் பரம்பரையிலுதித்த அரசர்களிடையே சைவ சித்தாந்தம் மிகவும் சிறப்பாகப் போற்றி வரப்பட்டது. அம்மன்னர்களின் ஆட்சி நிலை குலையவே, அன்னார்கள் தெற்கு நோக்கிப் போந்தார்கள், அவ்வாறு போந்தவர்கள் வாகடர்களும் பல்லவர்களுமாம். இம் மன்னர்கள் தென்னகத்தில் குறுநில மன்னர்களாகி, பிறகு பெரியதொரு அரசையே தோற்றுவித்தார்கள். அவ்வாட்சியுடன் சைவ சித்தாந்தமும் சிறந்தோங்கியது. ஆனால் வட மொழியிலே வலுவுற்றிருந்தது. இச் சம்பவங்கள் எல்லாம் வரலாற்று காலத்திற்கு முன்பு நடந்ததாகும்.

ஆகவே தென்னகத்தில் சைவ சித்தாந்தம் சற்று மறைந்தே இருந்தது. கங்கை நாட்டை விட்டு, தென்னகத்திற்கு வந்து மறுபடியும் தமிழில் மறுமலர்ச்சியடையும் வரையில் ஆகம நூற்களுக்கு இருண்ட காலமாக இருந்தது.

வரலாற்றுக் காலத்துக்கு முன்பு வடக்கில் போற்றியிருந்த ஆகம நூலின் கருத்துகளைத் தென்னகத்தில் திருவாடுதுறையில் முதன் முதலாக இனிய தமிழில் திருமூலர் தன் திருமந்திரத்தில் ஒன்பது தந்திரங்களாகக்கூறியுள்ளார். அவ்வமயம் பிறமொழி, ஆட்சியானபடியால் திருமந்திரமும் கி.பி.700 வரையில் மறைந்து கிடந்தது. ஆனால் கடைச் சங்க நூற்களில் 'சிவன்' என்ற சொல் மிகவும் பொலிந்து கண்ணுற்றது. கடைச் சங்க காலம் ஏறத்தாழ கி.மு. 760 முதல் கி.பி. 1300 எனலாம். கி.பி. 700-க்குமேல் தமிழில் சைவ சித்தாந்தத்திலும் தேவார திருவாசகத் தோத்திரப் பாடல்களிலும் 'சிவன்' சொல்லாட்சி பெற்றது. கி.பி. 1300-ல் மெய்கண்ட தேவர் தோன்றி தமிழில் முறையாக, சைவசித்தாந் தத்தைச் 'சிவஞான போதம்' என்ற நூலாக வெளியிட்டார். அதனைத் தழுவி மெய்கண்ட சாத்திரத்தோடு மேலும் பதின்மூன்றும் உண்டாயது.

முறையான சைவ சித்தாந்தம் தமிழில் வரலாற்று வாயிலாக கி.மு300-க்கும். கி.பி.1200-க்குமிடைப்பட்ட காலத்தனவாகிய ஆகம நூற்கள் தென்னகத்தில் இடம் பெற்றிருந்த போதிலும். கி.பி. 400-க்கும் கி.பி.1300கும் இடைப்பட்ட காலத்தில் தமிழில் முறையான சைவ சித்தாந்த நூல்களும் மெய்கண்டான் சாத்திரமும் வெளியிடப்பட்டன என்பது திண்ணம்.

'சிவம்' என்ற சொல்லினைப் பற்றிய ஆராய்ச்சியை இம்மட்டோடு நிறுத்தி 'சிவன்' என்பது என்னென்பதை ஆராய்வோம்.

சிவனைக் கடவுள் என்று குறிப்பிடுகின்றனர். கடவுள் என்ற தனித் தமிழ்ச் சொல்லின் பொருளிலேயே சைவ சித்தாந்த கருத்துப் பெரிதும் அடங்கியுள்ளது எனக் காட்டுவதுண்டு. கடவுள் என்பது தனித் தமிழ்ச் சொல். அது புறநானூறு, தொல்காப்பியம் போன்ற மிகப் பழைய தமிழ் நூல்களிலே காணப்படுகின்றது. கடவுள் என்றால் இயக்குதல்; எனவே கடவுள் என்பதற்கு உலகை இயக்குபவர் என்பது கருத்து; கடவுள் என்பதற்கு உள்ளத்தைக் கடந்தவர் எனப் பொருள் கூறுவதுமுண்டு. கடவுள் உலகைக்

கடந்தவர். அதே சமயம் உலகிலும் உள்ளவர் எனக் கொள்வது, உலகினுள்ளும் உயிர்களினுள்ளும் நிறைந்து நிற்கும் நிலையை 'உள்' என்ற சொல்லும் அவற்றைக் கடந்து நிற்கும் நிலை 'கட' என்ற சொல்லும் குறிக்கும். உலகை இயக்குபவன் இறைவன். அவன் உலகெங்கும் நிறைந்தவன். அதே சமயம், உலகைக் கடந்து நிற்பவனுமாவான். கடவுள் என்ற சொல்லிலே அடங்கியிருக்கும் இக் கருத்துகள் சைவ சித்தாந்தக் கருத்துகள். மிகப் பழைய தொல்காப்பியம், புறநானூறு ஆகியவற்றிலேயே பயின்ற இச்சொல் குறிப்பிடத் தக்கது அவற்றைக் கீழ்கண்ட வரிகளில் காணலாம்.

1. "அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமைப்
   பெருங்கல் நாடன்" (புறம் 158)

2. "கடவுள் ஆலத்து" (புறம் 199)

3. "ஆலமர் கடவுளன்ன - நின்
   கடவுள் சான்ற கற்பு" (புறம் 198).

4. அறங்குறித் தன்று பொருளாகுதலின்
   மருள் தீர்ந்து மயக்கு ஒரீஇ (புறம் 29)

ஆகவே கடவுள் சிவன் போன்ற மற்ற சொற்களாலும் அதற்கேற்ப பிற மொழியாலும் உணரப்படுவதெல்லாம் அருவப் பொருள், ஊனக் கண்களால் காண்பவை அல்ல. அறிவால் உணரப்படுவதே. அதனை நேரடியாகக் கூறுவதே சைவ சித்தாந்தம். சிவனைப் பற்றியோ, கடவுளைப் பற்றியோ நிரூபிப்பது சைவ சித்தாந்தம். இது ***சுபக்கம்*** என்றும் ***பரபக்கம்*** என்றும் இருவகைப்படும். சுபக்கம் என்பது கடவுள் உண்டென்பதை நிரூபிப்பது.

ஒரு பொருள் உண்டென்பதை நிரூபிக்கப் பொதுவாக மூன்று வழிகள் உண்டு. அவ்வழிகள் அளவைகள் எனப்படும். *உரைகல், கருதல், காண்டல்* என மூன்றுமே அளவைகள். இவை அளவை

நூலில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றுள் முதலாவதாகிய ***உரைகல்,*** ஒரு பொருளை அனுபவத்தால் அறிந்த மகான்களின் அல்லது அறிஞர்களின் வாய்மொழி மூலம் அறிதலாகும். அவர்களது வாக்கைக் கேட்பதன் மூலம் அறிதலாகும். இம் மூன்றினுள்ளே ...

**“ கடவுளுண்டு அல்லது சிவன் உண்டு”**

என்பதற்கு முக்கிய ஆதாரமாகச் சைவ சித்தாந்திகள் கைக்கொள்வது உரைகல்லே. ஏனைய அளவைகளைக் கொண்டு சிவத்தை நிரூபிப்பது கடினம். இக்காரணத்தால்தான் சிவம் உண்டென்பதை ஒப்புக் கொள்வோர் அனைவரும் உரை கல்லையே முக்கிய அளவையாகக் கொள்ளுகின்றனர்.

இறையருள் பெற்ற அநுபூதிமான்களுடைய வாக்குகளே இன்று வேதம் என்றும் ஆகமம் என்றும் குறிப்பிடப்படுகின்றன.

கருதல் அளவை மூலமாகவும் சிவத்தை நிரூபிக்கலாம். வேத ஆகமங்களிலே கூறப்பட்டவற்றை மேலும் வலியுறுத்த கருதல் பிரமாணம் பயன்படும். சில சமயம் வேத ஆகமங்களை ஒப்புக் கொள்ளாதவர்களுக்குக் கடவுள் உண்டென்பதை நிரூபிக்க கருதல் மட்டுமே பயன்படும். கருதலைக் கொண்டு சிவத்தை மூன்று விதமாக நிரூபிக்கலாம்.

* உலகின் உண்மையைக் கொண்டு அதனைப் படைத்தவனும் உளன் என நிரூபிப்பது.

* இரண்டாவது இப் படைப்பின் நோக்கத்தை ஆராய்வதன் மூலம் படைத்தவனும் உளன் என நிரூபிப்பது

* மூன்றாவது பொருள்களிலுள்ள குறைகளைக் கொண்டு குறைவில்லா பரிபூரணமான பொருளும் உண்டென நிரூபிப்பது.

சைவர்கள் உலகைக் கொண்டு நிரூபிக்கும் விதம் மிகவும் சுருக்கமானது. பானையைக் கொண்டு அதனை வனைந்த குயவன் ஒருவன் உளன் என்பது அறியப்படுகிறது. அதைப் போலவே,

உலகத்தைக் கொண்டு அதனைப் படைத்தவன் ஒருவன் இருந்தேயாக வேண்டும் என்பது உறுதியாகின்றது. பானை தன்னைத் தானே ஆக்கிக் கொண்டது என்று கூறுதல் பொருந்தாது.

*"அது என்றைக்கோ ஒருநாள் ஆக்கப்பட்டது அல்ல;*
*அநாதி தொட்டே ஆக்கப்பட்ட படியே உள்ளது"*

என்றும் வாதிக்க முடியாது. இதைப் போலவே, உலகம் தன்னைத் தானே படைத்துக் கொண்டது என்றோ அல்லது குறிப்பிட்ட ஒரு காலத்தில் படைக்கப்பட்டது அல்ல; என்றுமே இந்த நிலையிலேயே உள்ளது என்றோ, வாதிடல் பொருந்தாது; பானை தானாகவே உற்பத்தியானது பொருந்தாது, உலகம் பகுதிகளையுடையது. பகுதிகளையுடைய பொருள் எதிலும் அப்பகுதிகளைத் தாமாகவே வந்து சேர்ந்து கொள்வதை நாம் எங்கும் கண்டதில்லை. அப்பகுதிகளை ஏற்ற மாதிரி யாராவது ஒருவர் ஒன்று சேர்த்தால் தான் அவை ஒன்று சேர்ந்து ஒரு பொருளாகும். பானை என்றைக்கோ ஒரு நாள் வனையப்பட்டது அல்ல. அது என்றுமே உள்ளது என்பது பொருந்தாது. உலகிலுள்ள ஒவ்வொரு பொருளும் ஒரு காலத்தில் தோன்றி இன்னொரு காலத்தில் அழியக் காண்கிறோம். இதிலிருந்து உலகம் முழுவதற்கும் இக்கதியுண்டென்பது தெளிவாகிறது. உலகம் படைக்கப்பட்ட பொருள் எனக் கொண்டு அதனைப் படைத்தவன் உளன் எனச்சைவ சித்தாந்திகள் நிரூபிக்கும் விதம் எடுத்துக் காட்டப்பட்டது.

சிவத்தை ஆண் பாலாக உருவகப்படுத்துவதன் காரணம் என்ன எனின், ஆண், பெண், அலி என்னும் மூன்றுமல்லாத பதியாகிய சிவம் சர்வான்மாக்களுக்குந் தனுகரண புவனபோகங்களைத் தோற்றுவித்தலால் ஆண்பாற் படுத்தி பலவிதமாக உருவகப்படுத்தப் பட்டிருக் கின்றதைக் காண்கிறோம். ஆண்பால் படுத்தி வழக்கில் வந்தமையால் சிவத்தைச் சிவனென, வழங்க நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. உண்மையில் சிவத்துக்குப் பால் வேற்றுமையே கிடையாது. உருவமும் கிடையாது.

சிவத்தின் பண்புகளைக் கூறுமிடத்து, திருவள்ளுவர் எண் குணத்தான் என்கிறார். அவை.......

1. தன்வயத்தனாதல்.
2. தூய உடம்பினனாதல்
3. இயற்கையுணர்வினனாதல்.
4. முற்றுமுணர்தல்,
5. இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல்
6. பேரருளுடைமை,
7. முடிவிலாற்றலுடைமை,
8. வரம்பி லின்பமுடைமை

என்பனவாம். இதனையே உமாபதி சிவாச்சாரியார்.

"......... ........... பதி பரமே யதுதான்
நிலமரு வுருவன்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமா யேகமாய் நித்தமாகி
அலகிலு யிர்க்குணர்வாகி அசலமாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்
திகழ்வது தற்சிவமென்பர் பெரிதாய்ச் தெரிந்துளோரே."

இவ்வாறு தெளிவாகக் கூறுகிறார்.

**சிவமே மேலான பொருள்:** உருவமும் இல்லை; குறியும் இல்லை, குணமும் இல்லை; அழுக்கு அற்றது; அது ஏகம்; அழிவில்லாதது. உயிர்களின் அறிவுக்கு அறிவு. சலனம் அற்றது, எல்லை அற்றது. ஆனந்தமே உருவானது. மாறுபட்டவர்களுக்கு அரியது. வழிபடுபவருக்கு எளியது. சிறியவற்றுள் சிறியது. பெரியவற்றுள் பெரியது, அறிவுடையோர் அதனைச் **"சிவம்"** என்பர். இதனையே,

எல்லா வுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக் கொண்டிங்கே அளித்தலாற்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே.

என்று திருமந்திரம் 1551- ஆம் பாடலும் விளக்குகிறது. மேலும் இதன் விளக்கத்தைக் கீழ்வரும் பாடல்களில் நன்குணரலாம்,

1. அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறைநிற்கும் நிறைந்து.

2. தன்நிலைமை மண்உயிர்கள் சாரத் தரும் சக்தி
பின்னமிலான் எங்கள் பிரான்.

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்.

4. ஆக்கி எவையும் அளித்தா சுடன் அடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

5. அருஉருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன்.

6. எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
தங்குமவன் தானே தனி.

7. நலமிலன் நண்ணர்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்.

சிவத்தைச் சிவன் என்றும் கடவுள் என்றும் அநுபூதிமான்கள் கூறினர். முதன் முதல், முடிவுக்கு முடிவான பொருளைக் கண்டவர் சிவ பெருமான். அம் மாபெரும் சித்தனின் பெயரையே முடிவுக்கு முடிவான பொருளுக்கு ஏறிட்டுக் கூறப்பட்டுள்ளது. ஆகவே மெய்கண்டான் நூலில் 'சிவன்' என்றால் மாபெரும் சித்தனாகிய சிவபெருமான் கண்டு ஆகமத்தில் கூறியதைக் குறிக்கும். இந்நூலில் கூறுவதெல்லாம் எல்லாப் பொருளையும் தன்னுள் அடங்க வைத்திருப்பதனால் பெரியோனாக இருப்பதோடு கூட, மிகமிக நுண்ணிய பொருளினுள்ளும் தான் அடங்கியிருக்கும் தன்மையும் உடையது சிவம். ஆதலால், புரியட்டமாகும். இங்ஙனம் அணுவுக்குள்

அணுவாய்த் தங்கியிராவிட்டால் எந்தப் பொருளும் நிலை கொள்ளாது. அணுவுக்கு அணுவாகச் சிவம் இல்லாவிடின் எங்கும் நிறைந்த பொருளாக வழங்கப்படமாட்டாது. இதனால் புறத்தே நிறைந்திருத்தலேயன்றி அகத்தும் அங்ஙனமிருப்பது **'சிவம்'** என்பது உணரப்படும். ஆகவே, சிவம் நுண்மைநிலை உணரப்பட்டது. இந்நுண்மை நிலைதான் யாவரையும் யாவற்றையும் ஆட்டுவிக்கும் நிலையாம் சிறப்புடையது. உயிர்க்குயிராம் நொய்மை நிலையிலும் சிவத்துக்கும் எவரும் இணையாகார். மற்றும், சிவம் ஒன்றே முத்தொழிற்கும் உரியது. ஏனையோர் தத்தமக்குரிய தொழிற்கே உரியராவர். இதனால் பிரபஞ்சத் தோற்ற ஒடுக்கங்கள் சிவத்தாலே உள என அறியலாம். தானே யாவற்றிற்கும் முதன்மையாயிருத்தலே கடவுள் தன்மையாம். இத்தன்மை சிவத்திற்கே இயல்பாக உள்ளது. ஏனைய எவர்க்கும் எதற்கும் இல்லை. முதல்வன் ஒருவராலும் அறிய முடியாதவனல்லன். அறிவர்க்கு எளியன், அல்லோர்க்கு அரியன்.

எனவே, அறிவுடைய உயிரானது மனத்தோடுகூடி ஒரு காரியத்தை நினைக்கிறது. பிறகு அறிவினால் இந்த விதமாய்ச் செய்யவேண்டுமென்று பகுத்துத் திட்டமிடுகின்றது. ஆனால் காரியத்தைச் செய்யும்போது அதற்கு ஓர் உடம்பு வேண்டியிருக்கிறது. ஆன்மாவானது ஒரு தொழிலைச் செய்யும் போது ஓர் உருவத்தை மேற்கொண்டே ஆக வேண்டியுள்ளது. உடம்பு இல்லாவிடில் உயிர் எத்தொழிலும் செய்ய இயலாது. உடம்பை அசைப்பதற்கு உயிரின் நினைப்பே போதும். ஆனால் பிறிதொரு பொருளை அசைப்பதற்கு உடம்பு (உருவம்) வேண்டியுள்ளது. உயிருக்கு இவ்வகையான உடம்பு அதன் வினைக்கேற்ப அமைகிறது. உயிரும் நினைத்தல், அறிதல், தொழிற்படுத்தல் என்ற மூன்று நிலைகளை அடைவதை நாம் அறிகிறோம்.

இங்ஙனமே சிவமும் உயிர்களுக்குப் படைத்தலாகி தொழிலியற்ற விரும்புகையில் உருவங் கொள்ளுகின்றது. ஆனால், சிவத்தின் சங்கற்ப சக்தியாலடைகிறதேயன்றி, நம்போன்று வினையினால் அமையப் பெறுவதன்று. சிவம் அனாதியாகவே வினையின் நீங்கிய இயல்புடையது. ஆதலால், சிவத்திற்குக் கன்ம

உடம்பு கிடையாது. எல்லாத் தத்துவங்களையும் தன்னுள் ஒடுங்கச் செய்தலும், அத்தத்துவங்களை உயிர்களின் பொருட்டாக உபகரித்தலும், அவற்றை உயிர்கள் பற்றி நின்று துய்த்து அறிவு விளக்கம் பெறச் செய்தலும் என்கிற இந்த மூன்று தொழில்களுக்கும் சிவமே முதலாகும். இந்த நிலைகளை இலயம், போகம், அதிகாரம் என்ற பெயர்களால் ஓதுவர் அறிஞர். இம் மூவகைச் சிவபேதங்களும் சுத்த மாயா தத்துவங்களைக் கடந்து நிற்பதே சுத்த சிவம். இதனையே *இறைவன், முதல்வன், கடவுள்* எனவும் செப்புவர்.

சிவம் எனப்படுவது முழு வியாபக அருவப் பொருளாம். உயிர் அவ் வியாபகத்துள் அடங்கிய வியாப்பியப் பொருளாம். ஆதலால் உடல் வியாப்திப் பொருளாம். சிவம் எல்லா இடங்களிலும் இருப்பது. ஆதலால் எங்கும் தங்குவது என்பது...

"சொல்லினும் முடிவினும் "

என்னும் பட்டினத்தடிகள் பாடலாலும்,

"வானாகி மண்ணாகி"

என்னும் திருவாசகத்தாலும்,

"இருநிலனாய்த் தீயாகி"

என்னும் தேவாரப் பாடலாலும் சிவம் எங்குமாகி, எவையுமாகியும் நிற்கும் நிலையினை உணர்த்துகின்றனவாம். நீருக்கும் நீரோடு கலந்துள்ள உப்புக்கும் ஆகாயம் இடந்தந்து நிற்பது போல்வது இந்நிலை. எப்பொருளிலும் சிவம் நீருள் வெளிபோல் கலந்தும் உள்ளது. அங்ஙனம் சிவம் கலந்திராவிட்டால் உடல் அல்லது உருவப் பொருள் அசையாது. உயிர் அறியாது. இதனால் "எவையும் தங்குவது" எனப்பட்டது. எவையும் தங்குவதற்கு இடமாயிருப்பது என்று பொருள்பட்டது. ஆகாயம், நீருக்கும் உப்புக்கும் இடந் தந்து நிற்பினும் ஆகாயம் உப்புத் தன்மை அடையாது. உப்பு நீருக் குள்ளேயே வாழினும், மீன்கள் உப்பு ஏறிய உடம்பினை அடைவதில்லை. எனவே ஆகாயம் உள்ளும் புறமும்

வியாபித்திருப்பினும் உவராந் தன்மையெய்தாமல் தனிப்பட விளங்குதல் போல் சிவமும் எங்கு தங்கினும எவையுள்ளும் தங்கினும் தோய்வு உறான். "ஏகம் தங்குவது தனித்தாமே" எனப்பட்டது. சிவம் நடுவு நிலையின்பாற் பட்டது.

"வேண்டுதல் வேண்டாமை இலான்"

என்று திருவள்ளுவர் சொல்வது போலும்,

"நினக்கு மற்றொருவரும் இலர், கேளிரும் இலரே"

என்று பரிபாடலில் கூறியது போலும் **சிவம், சலம் இலன்** எனப் பட்டது.

## சக்தி இயல்

ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசக்தி
போதா லயத்த விகாரந்தனிற் போத
மேதாதி யாதார மீதான உண்மையே. (திருமந்திரம் 1677)

நிலமுதல் நாதம் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு மெய்களுக்கும் மேலாகப் பேராற்றலாகிய திருவருள் சக்தி வீற்றிருக்கும் இயற்கையுணர்வின் இருப்பிடமாகிய தனி முதற் சிவம் அதற்கு மேல் காணப்படும்.

உலகில் எடுத்தது சக்தி முதலா
உலகில் எடுத்தது சக்தி வடிவாய்
உலகில் எடுத்தது சக்தி குணமாய்
உலகம் எடுத்தது சதாசிவன் தானே. (திருமந்திரம் 1684)

சிவம் தன்னை விட்டு நீங்கா ஆணையாகிய சக்தியே வினைமுதற் காரணங் கொண்டு உலகினைக் கருத்தளவானே படைத்தருளுகிறது. அதனால் சக்தியே உலகின் காரணம்; உலகின் வடிவம்; உலகின் குணம்.

எண்ணில் இதயம் இறைஞான சக்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே!

(திருமந்திரம் 1714)

சிவத்துக்கு நெஞ்சம் அறிவாற்றலாகும் (ஞான சக்தி), அறிவுப் பெருவெளியாகிய வனப்பாற்றல் பரையாகும். (பராசக்தி), நடப்பாற்றல் ஆதியாகும் (ஆதி சக்தி) அழகிய போர்வை திருவளர் அன்பாற்றலாகும் (இச்சா சக்தி) தொழிலாற்றல் கிரியை ஆகும் (கிரியா சக்தி). எனவே சிவத்தின் அனைத்தும் திரு ஆற்றல் மயம் என்பது தெளிவு. இதனையே,

சக்திதா னாத மாதி
தானாகுஞ் சிவமு மந்தச்
சக்திதா னாதி யாகுந்
தரும் வடிவான வெல்லாஞ்
சக்தியுஞ் சிவமுமாகுந்
சக்திதான் சத்த னுக்குச்
சக்தியாஞ் சத்தன் வேண்டிற்
றெல்லாமாஞ் சக்தி தானே!

சிவஞ் சக்திதன்னை யீன்றுஞ்
சக்திதான் சிவத்தை யீன்று
முவந்திரு வரும்பு ணர்ந்திங்
குலகுயி ரெ்ல்லா மீன்றும்
பவன் பிரம சாரியாகும்
பான்மொழி கன்னி யாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்குத்
தன்மைதான் தெரியுமன்றே!.

என்று சிவஞான சித்தியார் வலியுறுத்துகிறது.

மற்றும், சிவம் நிமித்த காரணமாகி, அச்சிவத்தை அகலகில்லேன் என்றும், பண்புடைய சக்தியே, அச்சிவம் ஐந்தொழிலை இயற்றுவதற்குத் துணைக் காரணமாயிருத்தலால் பெண் பாலெனப்பட்டது. உலக வழக்கில் ஆற்றலைப் (சக்தியைப்) பெண்பாலாகவே உருவகப்படுத்தி உணரப்பட்டுள்ளது கவனிக்கத் தக்கதாகும். ஆராயுமிடத்து சக்தி ஆற்றலே அன்றி வேறல்ல.

சக்தியும், சிவமும் ஒரு விதத்தில் ஒன்றாகவும், இன்னொரு விதத்தில் அவை இரண்டும் வேறு எனவும் அறிஞர்கள் கூறுவர் இறைவனும் அவனது சக்தியும், சூரியனும் அவனது ஒளிக் கதிர்களும் போன்றவை. சூரியனின்றி ஒளிக்கதிர்கள் இருக்க முடியாது. ஆயினும் கதிர்கள்தான் சூரியன் ஆகமாட்டா. ஆகவே தீயினுக்குச் சூடு போலவும், பூவுக்கு மணம் போலவும், மணிக்கு ஒளி போலவும் விளங்குகின்றன சிவமும் சக்தியும். எனவே ஆற்றல் என்னும் பராசக்தி சிவத்தினிடமாகப் பாதியுள் மன்னி இயங்குகிறது.

சிவத்தின் ஒன்பது திருமேனிகளிலும் சக்தி உடனிருந்து தன்னைவிட்டுப் பிரியாமல், ஓர் பாதி தனதாகக் கொள்ளும் நிலைபெற்ற வனப்பாற்றலாகிய பராசக்தி யாகும். அரு, உருவ, அருவுருவ முத்திறப் பொருள்களில் சிவத்துடன் சக்தி சரிபாதி இடம் பெற்றிருக்கிறது என்பது வெள்ளிடை மலை.

சக்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்
சக்தி சிவமாம் இலிங்கமே சங்கமஞ்
சக்தி சிவமாம் இலிங்கஞ் சதாசிவஞ்
சக்தி சிவமாகுந் தாபரந் தானே. (திருமந்திரம் 1725)

என்று திருமூலர் வாக்கு வலியுறுத்துகிறது.

சக்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சக்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்
சக்தி சிவதத் துவமுப்பத் தாறே. (திருமந்திரம் 1707)

சக்தியும், சிவனும் ஆகிய இரண்டும் நிலைத்திணை இயங்கு திணை ஆகிய இரண்டன் கண்ணும் இயைந்து இயக்குவர் சக்தி, உருவம்; சதாசிவம் அருவுருவம் ; ஆகவே...

*"சக்தி இன்றேல் சிவமில்லை;*
*சிவமில்லையேல் சக்தி இல்லை."*

எனவே தோற்றக் கிரமமே இல்லை. சக்தி ஆற்றல், சிவம், பரம் ஆக மெய்களில் முப்பத்தாறுள் உயர்ந்தும் சிறந்து விளங்குகின்றன.

## விந்து (ஒளி) இயல்

தானே யுலகுக்குத் தத்துவனாய் நிற்குந்
தானே யுலகுக்குத் தையலுமாய் நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவுமாய் நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே! (திருமந்திரம் 1941)

முன் கூறிய சிவமே உலகினுக்கு என்றும் ஒரு படித்தாய் நிற்கும் மெய்ப்பொருளாகும். சிவமே உலகியல் நடத்தற் பொருட்டுத் தையலாகிய திருவருளாயும் நிற்கும். சிவமே உலகினுள் ஒவ்வொரு அணுக்கள் தோறும் தானுமாய் மிளிர்ந்து அவ்வணுக்குள்ளே இன்பருளச் சம்புவுமாய் நிற்கும். சிவமே தண்சுடராகிய திருவருட் பேரொளியாய் நிற்கும். இது அண்டாதித்தன் எனப்படும். இவ்வொளி...

* வளையம்
* முக்கோணம்
* வட்டம்
* அறுகோணம்
* துளை
* இருவட்டம்

ஆகிய அறுவகை அடையாளங்களாகக் காணும். இவ்வித அடையாளங்களில் தூய தன்மையாகச் சுழன்று கொண்டிருக்கும் அச்சுழலை ஆராயின் முன்சொன்ன அடையாளங்களில் பதினாறு இதழ்த் தாமரை காணப்படும்.

அணுவினில் அணுவனாகிய சிவம் மண் என்னும் மெய்ப்பொருளைப் பிளந்து விண்ணின் கண்ணாய்ச் சுழலும்போது தன்னையும் மற்ற மெய்ப் பொருள்களையும் தன் கதிரால் விளக்கி நின்றிடும். அவ்வாறு நிற்கையில் மற்ற மெய்ப் பொருள்கள் கண்டும், கொண்டும், உண்டும், கூடியும் அன்புற்றுக் களிக்கின்றன. இதனைத் திருமூலர்,

மண்ணை யிடந்ததின் கீழொடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்து நின்றானே.
(திருமந்திரம் 1946)

என்று திருமந்திரத்தில் கூறுகிறார். ஒளியை ....

* அண்ட ஒளி
* பிண்ட ஒளி
* மன ஒளி
* ஞான ஒளி
* சிவ ஒளி

என ஐம்பெரும் பிரிவில் அடக்குவர். இவைகளை முறையே அண்ட ஆதித்தன், பிண்ட ஆதித்தன், மன வாதித்தன் ஞான வாதித்தன், சிவ ஆதித்தன் என்பர்.

**பிண்ட ஆதித்தன்:** உயிர் என்னும் அணுக்கள் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும் அருவாகிய சிவம் அவைகளை விட்டு அகலாது நின்று ஆற்றல் புரியும். அதனால் மலங்கள் அல்லது

பாசங்கள் அடங்கும். இவ்வாறு அணுக்களில் அருள் புரியும் ஆற்றலை அக ஒளி என்றும், அக ஞாயிறு என்றும் உணர்த்தப்படுகிறது. அகத்துவ முயற்சியால், அக ஒளியைக் காணலாம். அக்காட்சியிற் பல அண்டங்கள் ஒன்றோடொன்று நெருங்கிச் சுழன்று கொண்டு நிற்கும் உண்மை நிலையினை உணர்வர்.

**மனவாதித்தன்:** அணுவினுள் வலப்பால் உயிர்ப்பைப் பிங்கலை என்றும் ஞாயிறு என்றும், -இடப்பால் உயிர்ப்பை இடைகலை என்றும் திங்களென்றும் அனலாகிய தீயும், கலை எனப்படும். நடு நாடி ஆகிய சுழுமுனையும் சேர்ந்து நான்கு கலைகள் இயங்குகின்றன. வெப்பக்கதிரினை வீசும் ஞாயிறும் தட்பக்கதிரினை வீசும் திங்களும் மேல் கீழாய் நேரொக்கத் தோன்றுங் காலம் உவா எனப்படும். முற்கூறிய நான்கு கலைகள் உவா என்னுமிடத்தில் கூடிப் பொருந்தியிருப்பது அறிவுப் பிழம்பாய் நிற்பது.

**ஞானாதித்தன்:** அறிவுச் சுடர் என்பதாகும். இவ்வறிவுச் சுடர் மூலத்திடமாக நின்று ஓசை வடிவாய்த் தோன்றும். அவ்வோசை மேல்நிலை நாதத்தின் செயல். அந்த மேல்நிலையில் விந்துவினின்று ...

* நுண்ணோசை
* நினைவோசை
* மிடற்றோசை
* தன் செவிக்குக் கேட்கும் ஓசை
* பிறர் செவிக்குக் கேட்கும் ஓசை

என்ற ஐந்து ஓசைகள் தோன்றும். அது போலவே பரநாதத்திலிருந்து ஐவகைக் கலை தோன்றியது. அவை....

1. நீக்கி
2. நிலைப்பி
3. நுகர்வி
4. அமைப்பி
5. அழுத்தி

இவ்வைந்து வகை ஓசையினோடும் ஐவகை ஒளியோடும் சிவம் அறிவுச் சுடரை இயக்குவான் . இவ்விதம் தோன்றுவது அருணோதயம் எனப்படும். (அருள் நன் தோற்றம்). இதனைத் திருமூலர்,

"விந்து அபரம் பரமிரண்டாய் விரிந்து
அந்த அபரம் பர நாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்து
உந்து அருணோ தயமென்ன வுள்ளத்தே"

(திருமந்திரம் 1956)

உள்ள அருணோதயத் தெழும் ஓசைதான்
தெள்ளும் பர நாதத்தின் செயலென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்கு
உள்ளன ஐங்கலைக் கொன்றாம் உதயமே"

(திருமந்திரம் 1957)

என்று திருமந்திரத்தில் கூறுகிறார்.

### சிவ ஆதித்தன்:

கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காய்த்து
அடங்கிட நின்றதும் அப்பரி சாமே.

(திருமந்திரம் 1965)

நிலத்தே நீர் நிரப்பி வைக்கப்பட்ட குடங்கள் பலவற்றிலும் வானத்தே காணப்பெறும் கதிரவன் தோன்றுவன். அக்கதிரவன் பல குடங்களிலும் ஒரே வடிவாய்த் தனித் தனி வெவ்வேறாகக் காணப்படுவன். அங்ஙனம் காணப்படினும் கதிரவன் ஒருவனே. குடமாகிய கடம் பலவாதல் பற்றி அவன் நிழலுரு பலபோன்று தோன்றினும் உண்மையில் கதிரவன் ஒருவனே அக்கதிரவனைத்

ஞான மார்க்கத்தையோ அன்றி யோக மார்க்கத்தையோ பின்பற்றல் ஏதோ ஒரு சிலர்க்கு மட்டுமே சாதிக்க முடியுமேயன்றிப் பெரும்பாலரான மக்கட்கு இவ்வுபாயங்கள் பயன்படா! பெரும்பான்மையரான இவர்கள் பிறவியின் பயனைப் பெறாமலேயே பிறவிக் கடலில் மூழ்கிக் கிடத்தல் வேண்டுமன்றோ? அவர்கட்கும் நற்கதி வாய்க்க யாதொரு வழியும் வகுக்கப்பட வில்லையா? மேலும் ஏகமாய் நின்ற பிரம்மம் இன்னதென்று வகுத்துரைக்க முடியாததென்று நூல்கள் அறுதியிட்டுக் கூறுமேல், இன்னதென்றும் இத்தன்மைத் தென்றும் வகுக்க முடியாததை அறிவினால் எங்ஙனம் காண்டல் கூடும்? அல்லாமலும் அபேதமாய் (வேறுபாடு அற்றதாய்) நிர்க்குணமாய் (யாதெரு பண்பும் தோற்றாததாய்) ஏகமாய்க் (ஒன்றே ஒன்றாய்) கேடின்றி என்றும் நிலைத்து நிற்கும். பிரம்மம் ஒன்றுதான் நாம் அறியக் கிடக்கும் தத்துவமாகுமென்று சுருதிகள் ஒருபுறம் முறையிட, பேதம் (வேறுபாடு) என்று சொல்லும் சுருதியின் மற்றொரு பாகத்துக்கும், பேதா பேதம் (ஒற்றுமையில் வேறுபாடு அல்லது வேறுபாட்டில் ஒற்றுமை) என்று கூறும் அதே சுருதியின் மூன்றாம் பகுதிக்கும் அளவின்றிப் (பிரமாணம், சான்று) பிதற்றல் என்று நீக்கத்தக்கதா? அல்லது கொள்ளத்தக்கதா? அவ்வண்ணமே **கன்ம மார்க்கம், பக்தி மார்க்கம்** என்றெல்லாம் வகுக்கப்பட்ட வழிகள் பயனற்றவைகளா?

பிரம்மத்தைச் **'சகுணம்'** என்றும் உலகம் உளது என்றும் விவரிக்கும் (வருணிக்கும்). சுருதி வாக்கியங்கள் பொருளில் மொழிகளா? இவ்வித வினாக்கட்கு விடை கூறிய வகையிலும், குறிப்பிட்ட ஒரு சிலரேயன்றி கல்லாதவர் கற்றவர் ஆகிய யாவர்க்குமே பயன்படக்கூடியதுமான சில விளக்கமான பொருள்கள் அவ்வேத வாக்கியங்கட்கே கொடுக்கப்பட்டு அவ்வழியாய் உதவிய **'சைவ சித்தாந்தம்'** என்னும் மரபுகள் தோன்றின.

இம்மரபுகளின் விசாரணையே (விவாத விளைவுகள்) இவ்வியலில் கூறப்படும்.

கன்ம மார்க்கத்தால் (வினைவழியில்) மோட்சம் (வீடு) அடையலாம் என்பதை உன்னிப் பார்க்கில் ஈசன் ஒருவன் உளன் என்பதையே ஒப்புக்கொள்ளாத மீமாஞ்சகர்கள், இந்திரன், அக்கினி

போன்ற பல்வேறு கடவுளர் இருத்தலை ஏற்றலும் வேள்வி (யாகாதி கன்மங்கள் ) முதலான பற்பல நல் வினையால் மந்திர மூர்த்திகளான (தீக்கடவுள், புரந்தரன், நீர்க்கடவுள்)அவர்களைத் திருப்தி செய்து அதனால் 'சுவர்க்கம்' (துறக்கம்) என்னும் லோகாந்தரத்தை (இகவுலகை விட்டுப்போன நிலை) பெற்று இன்பம் துய்க்கலாம் என்று சொல்வதும், அவற்றை முற்றும் எதிர்க்கும் அத்துவித சமயத்தினர் ஞான மார்க்கம் ஒன்றையே ஏற்றலும் இருமுனை(கோடி)களாகும் இவ்விரு கோடியினருக்கும் போதிய சான்றுகள் வேதத்தில் கிடக்கின்றன. இவற்றுள் எது சரியானது என்று நிலைநாட்டுவது (நிர்ணயம் செய்தல்) எவ்வாறு?

வேதத்தில் சொல்லிய சில பாகங்களை மட்டுமே ஏற்று ஏனைய பாகங்களைத் தவிர்த்தல் நன்றன்று. தகுதியுடைய தீர்மானத்தை நிலைநாட்ட இயலாமற் போய்விடும். இதை மனங்கொண்டு மேற்கூறிய இரு கொள்கையினர்க்கும் மாறாகச் **'சைவ சித்தாந்தம்'** என்னும் மார்க்கமானது, வேதங்களில் கூறப்பட்ட **'கன்மகாண்டம்'**, **'ஞான காண்டம்'** என்ற இரு பாகங்களையும் ஒப்புக்கொண்டு ஒருமைப்பாடு கண்டு ஞானமும் கன்மமும் தேவைதான் என்பதை வற்புறுத்தி 'ஞான கன்ம சமுச்சயம்' என்ற தத்துவத்தை வற்புறுத்துகிறது. அவ்வாறே **'நிர்க்குணமான'** பிரம்மம் (உருவற்ற பிரம்மம்) சகுணமான (உருவத்துடன்) தென்றும், அது உருவாயும், அருவாயும், உளதாயும், இலதாயும், அணுவில் அணுவாயூம், மேருவினும் வலிதாயும், ஆயினும் வாக்கன்றி மனத்துக்கும் எட்டாததாயும் உளதென்றும் கூவறியுள்ளனர்.

இந்தச் சித்தாந்தப்படி யாவற்றினும் மேலான பொருளாய்த் தலைமையுல் நிற்கும் தலைவனாய் உள்ளது **'சிவன்'** என்னும் தத்துவம். இவனே, ஈசன், இறை, இறைவன், பதி என அழைக்கப்படுவதன்றிக் குறிப்பிட்ட மொழியிலுள்ள சொற்கள் யாவுமே இவனைக் குறிப்பவை யாகுமென்றும் சொல்லர். சீவாத்மாக்கள் உண்டென்றும் அவை ஒவ்வொரு சரீரத்துக்கு முன்சொன்ன பரமனின் திரிபேயென்றும் கூறுகிறது. இவ்வண்ணம் **'தான் அவனே'** என்றறிதலே பிறவியைப் பெற்ற ஆன்மா செய்யத்தக்கதாகும். இதுவே ஆன்மாவுக்கு மோட்சம் என்று கூறப்படும்.

ஈசனுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள சம்பந்தத்துக்குத் '**தாதான்மியம்**' (அவ்வண்ணமாய் இருந்தல்) என்று பெயர். படமாகிற காரியத்திற்கு நூல் முதற் காரணமாயும் துணைக்காரணமாயும் இருப்பதுபோல் நூலின் சேர்க்கை (நெசவு)யும் ஒரு காரணமாமன்றோ? இக்காரணமாகின்ற நூலின் 'சேர்க்கைக்கும்' காரியமாகிற படத்திற்கும் உள்ள சம்பந்தத்தைத் 'தாதான்மியம்' என்பர். ஆன்மாக்களுக்கும் ஈசனுக்கும் உள்ள சம்பந்தம் தாதான்மியம் என்றதால் பலகோடி ஆன்மாக்களின் சேர்க்கையே ஈசனாம் என்பது இதனால் புலனாகிறது. ஆகவே இங்கு பேதம், அபேதம் இரண்டுமே ஏற்கப்பட்டுள தென்றறியவும். இதனால் தானே அவன் என்பதை ஒரு ஆன்மா அறிதலே பிறவிப்பயனாம் என்பது விளங்குகிறது. இது *ஞான மார்க்கமாகும்.* இவ்வறிவைப் பெறற்குக் கர்ம மார்க்கம் உதவியாய் ஏற்கத்தக்கது என்பதை விளக்கும் சைவ சித்தாந்தம். மேற் சொன்ன வண்ணம் ஈசனின்றும் வேறுபடாததான ஆன்மா, தான் யார்? என்பதை மறந்தது எங்ஙனம்? என்றால் அஞ்ஞானத்தினால் உண்மைநிலை மூடப்பட்டு தன்னைத்தான் அறியாமை வந்து கூடும். பிறகு அதைத் திரும்பவும் நினைப்பூட்டிக் கொண்டறிதலே மோட்சமாகுமென்று **'பிரத்ய பிக்ஞா'** தரிசனம் கூறும். 'பிரத்ய பிக்ஞா' என்றால்: பண்டொருமுறை நான் கண்ட தேவதத்தனே யாவான்; இன்று என்முன் நிற்கும் இவன் என்ற அறிவிற்கு பிரத்ய பிக்ஞை என்று பெயர். இதற்கு 'ஸ்மிர்த்தி' (நினைப்பு) அனுபவம் (பார்த்தல்), இரண்டும் வேண்டும். இதனால் ' அகம் பிரம்மாஸ்மி' என்னும் முடிவான நிலை கிடைக்குமென்பது ஞான மார்க்கத்தை மாத்திரமே ஏற்கும் இம்மதத்தினரின் கொள்கையாகும்.

சைவ சித்தாந்தமோ வென்றால் ஞானம், கன்மம் இரண்டையுமே ஏற்று ஈசனைச் சிவனென்றழைத்து 'சிவோகம்' (தானவன் என்றறிதல்) ஞான மார்க்கத்தைத் தழுவியும் அவ்வறிவைப் பெறற்கு உபாயமாகக் கன்ம மார்க்கத்தை ஏற்று, ஜபம், தியானம், சரியை என்னும் கன்மங்களை வகுத்து அவற்றின் வாயிலாய், உண்மையைக் காணவொட்டாது மறைக்கும் அஞ்ஞானத்தைப் போக்கி, 'சிவோகம்' என்ற மெய்ஞ்ஞானத்தைப் பெற்று ஓர் ஆன்மா ஈசனுடன் இரண்டற்ற நிலையைப் பெறல் என்ற 'ஞான கன்ம சமுச்சயம்' ஆகிய ஒரு மார்க்கத்தை வகுத்துக் காட்டும்.

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண்- ஒன்றின்றால்
அக்கரங்க ளின்றாம் அகர வுயிரின்றேல்
இக்கிரமத் தென்னு மிருக்கு" (சிவஞான போதம்)

மெய்கள் அகரமொடு சிவணியன்றி இயங்காமையானும், இகர, ஈகார, உகர, ஊகாரங்கள் அகரத்திற்குரிய அங்காப்பு முயற்சியொடு சிவணியன்றிப் பிறவாமை யானும், எகார, ஒகார முதலாயின முன் அகரக்கூறும் பின் இகர உகரக் கூறுகளுமாய் இயைந்தன்றிப் பிறவாமையானும், அவையெல்லாம் அகரமாகிய உயிரையன்றிப் பிறவாமையானும், அவையெல்லாம் அகரமாகிய உயிரையின்றி அமையாமை பெற்றாம். அதுபோல.....

'பிரமமில்லை யாயின் ஒரு பொருளுமில்லை'

என்றதூஉம் பிரமத்தை யின்றியமையாமைப் பொருட்டென்பார்,

**'அக்கரங்களின்றா மகர உயிரின்றே**
**லிக்கிரமத் தென்னு மிருக்கு'**

என்றார். அகர உயிர்நாதமென் றுரைப்பாருமுளர்.

"அரக்கொடு சேர்த்தி அணைத்தவக் கற்போல்
உருக்கி உடங்கியைந்து நின்று-பிரிப்பின்றித்
தானே உலகாந் தமியே னுளம்புகுதல்
யானே உலகென்ப னின்று". (சிவஞானபோதம்)

கலப்பாய் நிற்றலான உலகேயாம் என்பார் *உடங்கியைந்து* எனவும், பொருட்டன்மையான் வேறு நிற்றலால் தானேயாம் என்பார் *நின்று* எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானே உலகாம் என்பார், *பிரிப்பின்றி* எனவும் கூறினார்.

ஈண்டும் இரட்டுற மொழிந்து கொள்க. உலகென்றது ஈண்டு உயிர்களை. இலனாகலான் என்பது இன்றி எனத் திரிந்து நின்றது. இதனால் மூவகையும் ஒருங்கு கூறுவதற்கு எடுத்துக் காட்டிய வாறறிக.

இவ்விரு செய்யுட்களும் ஆன்மாவுக்கும் ஈசனுக்குமுள்ள தாதான்மியத்தை விளக்கி ஒரு வகையில் இவ்விரண்டும் வெவ்வேறென்றும், மற்றொரு வகையில் இவ்விரண்டும் ஒன்றேயாமென்றும் ஏற்குங் கொள்கை விளக்கப்படுகிறது.

மேலும் ஆன்மா பேதமானதென்று ஏற்குந் தருணத்து,

"அவ்வினையைச் செய்தவனில் அவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போல்-அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தா மறிந்தணைப்பா ரர்ங்கு." (சிவஞானபோதம்)

ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், வினை சடமாகலானும் மாயை "**தாரகமாம் அத்தன்றாணிற்ற**" லெனப் போந்தமையானும், முதல்வனே அறிந்தணைப்பானெனப் பாரிசேடப் பிரமாணங் கூறுவார். அவ்வினையைப் பேராம லூட்டும் பிரானின் நுகராரேல் ஆர்தாம் அறிந்தணைப் பார் என்றார். செய்வதற்கிடனாகிய உடம்பைச் செய்வது என்று உபசரித்தார். அற்றேல், இவ்வினை ஆதியோ, அநாதியோ, ஆதியாயின் முன்னில்லது இடையே தோன்றுமென்பது சத்காரிய வாதத்திற் கேலாது, அநாதியாயின் ஒருவர் கூட்ட வேண்டுவதில்லை யென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்-

"நெல்லிற் குமியும் நிகழ்செம் பினிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத் தாம்,"

(சிவஞானபோதம்)

மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சக்தியாதலின், வல்லி என்றார். இஃதறியாதார் மகடூஉ முன்னிலையாக்கி யுரைப்பர், வினைக்குத் தொன்மை கூறுவார் இனம் பற்றி மாயை மலங்கட்குத் தொன்மையும் உடன் கூறினார். இருவினை யுண்மைக்கோதிய பிரமாணமே அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய மாயை யுண்மைக்கும்

பிரமாணமா மென்பதாலும், மேலைச் சூத்திரத்திற் கூறிய சத்காரிய வாதத்தானும், மாயை யுண்மை பெறப்பட்டது. மலமுண்மைக்குப் பிரமாணமும் மேலைச் சூத்திரத்திற் பெறப்பட்டது.

மேற்கூறப்பட்ட செய்யுள்களால் உலகத்தில் பிறவியைப் பெற்ற ஆன்மா சுகதுக்க அனுபவங்கள் யாவற்றையும் 'அவனிடமாய்ப்' பெறுகின்றன வென்றும். இதற்கு அவ்வான்மாவின் வினையே காரணமாமென்றும் விளக்கப்பட்டிருப்பது காணக்கிடக்கிறது. ஆயினும்,

"எங்குமுள னென்றளவை ஒன்றன் றிரண்டென்னில்
எங்கு முளனன் றெவற்றெவனும் - அங்கண்
அவையவன் அன்றில்லைப் பொன்னொளிபோ லீசன்
அவையுடைமை யாளாநா மங்கு. (சிவஞானபோதம்)

எனவரும் பசு பாசங்களும் வியாபக மாகலின், அவையும் இம்முறைமை பற்றித் தத்தம் சக்திகளோடும் தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனோடு அவற்றிடை வேற்றுமையில்லை போலு மென்னும் ஆசங்கை நிகழாமைப் பொருட்டு...

**'அவையுடைமை யாளாநா மங்கு'**

என மேலைச் சூத்திரத்தில்..

**'தாரகமா மத்தன்றாள்'**

எனவும்,

'அதனி னீறலா வொன்றுபல வாறே
தொழும் பாகும்'

எனவும் கூறிப்போந்தவற்றை அநுவகுத்துணர்த்தினாராகலின், அது கூறியது கூறலன்மை யுணர்க.

**' எவற்றெவனு மங்க ணவையவ னன்றில்லை'**

என்பது எவ்விடங்களினுள்ள எத்திறப் பொருளுமாகிய அவ்விடத்துப் பொருள்கள் அம்முதல்வனை இன்றிமையா வென்றவாறு.

இச்செய்யுளால் பேதமாயும் அபேதமாயும் (வேறுபடுத்தியும் ஒருமைப்படுத்தியும்) சொல்லப்பட்ட தத்துவங்களை ஒன்றுபடு திப் பார்க்கப் பேதாபேதம் (வேற்றுமையில் ஒற்றுமை அல்லது ஒற்றுமையில் வேற்றுமை) என்ற சித்தாந்தக் கொள்கை விளங்கும். இதுவே சைவ சித்தாந்தத்தின் சுருக்கம்,

இனி, அத்தகைய சைவ சித்தாந்தத்தை விளக்க வல்ல சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் முதன்மையானது சிவஞான போதம். சித்தாந்தத்திற்கு ஆணிவேர் போன்ற இந்நூலில் பன்னிரண்டு சூத்திரங்கள் உள; இவற்றைப் பொது அதிகாரமென்றும் உண்மை அதிகாரமென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். பொது, அதிகாரத்தில் ஆறு சூத்திரங்களும் உண்மை அதிகாரத்தில் ஆறு சூத்திரங்களுமாகக் கூறப்பட்டிருக்கின்றன; இவற்றுள் முதற் பகுதியான பொது அதிகாரம் இரண்டு இயல்களாக ஆக்கப்பட்டுள்ளன. அவற்றுள் **பதி,பசு,பாசம்** என்னும் முத்தத்துவங்களுக்குப் பிரமாணங் கூறும் முதல் மூன்று சூத்திரங்களுக்குப் **பிரமாணவியல்** என்றும், அத்தத்துவங்களின் இலக்கணத்தை விவரிக்கும் அடுத்த மூன்று சூத்திரங்களுக்கு இலக்கணவியல் என்றும் பெயர். உண்மை அதிகாரத்தில் ஏழாவது முதல் பன்னிரண்டாவது வரை உள்ள ஆறு சூத்திரங்கள் விளக்கப் பட்டிருக்கின்றன. இவற்றுள் ஏழாஞ் சூத்திரம் முதன் மூன்று சூத்திரங்கள் துன்பம் நீங்குவதற்கும் இன்பம் பெறுவதற்கும் நாம் ஏற்கத் தகுந்த சாதனங்களை வகுக்கும்; ஆதலால் இதற்குத் **'சாதனவியல்'** என்றும். இச்சாதனத்தால் பெறும் பயனை, அஃதாவது (பாசம் அறவே ஒழிந்து சிவப்பேறு பெறலென்னும் இரு வகைப் பயனை) பெறும் பேற்றின் இலக்கணங்களைப் பத்து முதல் மூன்று சூத்திரங்கள் விளக்கும் காரணத்தால் இதற்குப் **'பயனியல்'** என்றும் பெயர். இவ்வாறு உண்மை அதிகாரமும். **சாதனவியல், பயனியல்** என்ற இருபிரிவுகளையும் உடையதாம்.

## அ. பதியின் விளக்கம்

பேதா பேதத்தைச் சைவ சித்தாந்தம் ஏற்கிறது. மேலும் இது நிர்குண பிரம்மத்தையும் சகுண பிரம்மத்தையும் சமமாக ஏற்கிறது. பரப்பிரமத்தை இச்சமயத்தினர் பதியென்றும் சிவனென்றும் பெயரிட்டழைக்கின்றனர். ஆன்மாக்கள் உண்டு என்றும் அவை பலகோடி என்றும், பிறப்பும் இறப்பும், சுகமும் துக்கமும் எல்லாம் கன்மத்தின் பயனாய் விளைவன என்றும் சொல்லுகிறது.

**'சிவம்'** குறிப்பிட்ட ஆன்மாவின் கன்மத்தை ஒட்டி அதற்குப் பிறப்பை அளிப்பதல்லாது அதனுடன் தனது சித் சக்தியையும் நிலைக்கச் செய்கிறது. முதலில் சொன்ன வகையில் பேதமும் பின்னர் சொன்ன வகையில் அபேதமும் ஏற்கப்பட்டது என்பது இதனால் விளங்குகிறது.

'சிவம்' என்னும் பதி ஒரு வகையில் ஞானப் பிழம்பாய் மாற்ற மொன்றுமின்றித் தன்னைத் தெரிவிக்கும் இயல்பை மட்டும் பெற்று நிற்கும். இச்சிவத்தின் மற்றொரு அம்சம் தன் ஒளியை உலகத்தின் மேல் வீசி இவ்வுலகத்திலுள்ள பொருள்கள் அறியப்படும் நிலையை அடைவிக்கும். இவ்வொளியின் ஒரு கணமே இவ்வுலகிலுள்ள சட அசடப் பொருள்கள் யாவற்றினும் உட்புகுந் திருத்தலால் அவை அறியப்படும் இயலைப் பெறலாயின. சிவத்தின் இந்நிலையைப் பரிதி (ஞாயிறு)யும் அவன் கதிரும் போலாகும் என்று விவரித்துள்ளார்கள். சூரியன் தனது ஒள்ளொளியால் (ஜோதியால்) தன்னைக் காண்டற்குக் கிடைக்கும் வண்ணம் செய்வதன்றித் தன்னொளியால் ஏனையவற்றைக் காணக் கிடக்குமாறு செய்வித்தலைப் போல, பதியின் ஞானமாகிய அம்சத்திற்குச் சிவம் என்ற பெயரும் மற்றொரு பாகமாகிய ஒளிக்குச் சக்தி என்ற பெயரும் சைவ சித்தாந்தம் கூறும். ஆகவே சிவமும் சக்தியும் சேர்ந்த தனி (ஒப்பற்ற) பெருஞ்சோதி சொரூபத்துக்குப் பதியென்னும் பெயர் வழங்கலாயிற்று.

*(இதனையே இராமலிங்க அடிகளார் அருட்பெருஞ்சோதியென்றும் தனிப் பெருங் கருணையென்றும், தனிப்பெருஞ் சோதியென்றும் கூறுதல் காண்க.)*

மேற்சொன்ன சக்திக்குச் **சிவசக்தி** என்றும், **அருட்சக்தி** என்றும் பெயருண்டு. 'அருளின்றி அவன் இலன்' அவனைஅறிவுக்கு எட்டுவிப்பதுவும் அவ்வருளின் செயலேயாகும் என்று சித்தாந்தத்தில் வற் றுத்தப்பட்டிருக்கிறது. இங்கு ஒவ்வொரு சட, அசடப் பொருளிலும் புகுந்து நின்று அப்பொருள்களுக்கு மூன்றுவித அவத்தைகளையும் **தோன்றல், நிற்றல், மறைதல்** அளித்தற்குக் காரணமாய் இருப்பது இப்பதியின் அருள் என்னும் பகுதியேயாகும். இதனால் அவனருள் சொரியும் பொழுது விரிவைப் பெறும் இவ்வுலகின் போக்கைச் சிருட்டி (தோற்றுவித்தல்) என்றும், அவ்வருளினாலுண்டான சட, அசட பொருள்கள் இங்கிருக்கும் காலத்தை ஸ்ஸ்திதி (இருக்கை அல்லது நிலைத்திருத்தல் Existencess) என்றும், அவ்வருள் அவனிச்சையால் அவனுட் சென்றடங்கும் நேரத்து, அருளின் இன்மையால் இருத்தற்கு இயலாததாய் இவ்வுலகமும் அவனுட்சென்றடங்கி மறையும் அல்லது அழியும். இதனையே **பிரளயம்** என்பர்.

சிவனைப் **'பிரளய கர்த்தா'** என்று சகல வேத சாத்திரங்களும் (எல்லா மறைகளும் அறிவியல்களும்) வகுத்துள்ளதை மறக்க வியலாது. பிரளயத்துக்குப் பின் சிருட்டியைத் தொடங்குங்கால் (ஆக்கத் தொடங்கும் போது) உண்டாக்குவதற்கு (சிருட்டிக்கு) இன்றியமையாத துணைப் பொருள்கள் (உபகரணங்கள்) யாவும் பிரளய காலத்தில் எச்சிவத்தினுள் ஒடுங்கி நின்றனவோ அச் சிவனையல்லாமல் மற்றெவர்க்கும் அவ்வுபகரணப் பொருள்கள் பெறக்கிட்டா. ஆதலின் அச்சிவனாலேயே அத்துணைப் பொருள்களைக் கொண்டு ஆக்கத்தைத் தொடங்க முடியுமென்று எளிதில் விளங்குமாதலின் சிவனே முதற்பொருளாம் என்று சைவ சித்தாந்தம் அணுவளவும் ஐயமின்றியும் சிறிதும் திரிபின்றியும் வற்புறுத்தி விளக்கும்.

**சீவான்மா** என்பது ஒவ்வொரு சரீரத்திலும் தனித்து நிற்கும் உயிர்ப்பேறாகும். **(பேறு-ஐசுவரியம்)** இதனைச் சிலர் அசடப்பொருள் என்பர். இவ்வான்மாவும் பதியினிடமாய் உண்டானதாயும் அந்தர்யாமியென்ற நிலையில் தன்னுள் கிடக்கும் பதியின் ஒரு சிறு அணுவுக்கு, தான் சரீரமாய் நின்று அப்பதியினால் இயக்கப்படுவதாயும், அப்பதியின் ஆணையைத் தவிர்க்க மாட்டாத தாயும் நிற்கும்.

இப்படி உயிர்ப்பொருள் (ஆன்மா) சடப்பொருள் இரண்டினாலும் ஆகிய இவ்வுலகத்தையே தனக்குச் சரீரமெனப் பதியென்னும் சிவன் ஏற்று அணுவினில் அணுவாகியும், உயிருக் குயிராகியும் நின்று இவ்வுலகையே நிலை நிறுத்தியும், தன்னிச்சைப்படி ஆட்டுவித்தும், தன்னிச்சையாலே அழித்தலையும் செய்வதால் பேதமும் அபேதமும் விளக்கப்பட்டது காண்க. (இதற்கு உதாரணமாக நமது சரீரத்தின் அமைப்பையே கூறலாம்) இவ்விதம் சடப் பொருளாலான இச்சரீரத்தினுள் சரீரியாக நிற்கும் நிலை இவ்வான்மாவுக்கு வந்தது ஏன்? கன்மத்தினாலென்று விளக்கப்பட்டது. தன்னுள் அந்தர்யாமியாய்க் கிடக்கும் (மறைந்து கிடக்கும்) பரம்பொருளை இவ்வான்மா உணரமாட்டாமைக்குக் காரணம் யாதெனில் அது தன்னைச் சார்ந்த மலங்களே யாகும். இம்மலங்களை நீக்கும் உபாயத்தையறிந்து அவற்றை அறவே ஒழித்திடின் இவ்வான்மா தன்னையுங் கண்டு 'தனக்காதாரமாம்' தலைவனையுங் கண்டு '*தானே அத் தலைவனாய்*' விளங்குவன். இதுவே சைவ சித்தாந்தம் வகுக்கும் **'மாபேறாகும்'.**

மேற்சொன்ன மலங்களின் சேர்க்கையால் தானே அவன் என்னும் உண்மையை அறிய மாட்டாமல் கிடக்கும். இவ்வான்மா அதனால் '***சிவோகம்***' என்னும் உண்மை நிலையை அறியாமல் மாயையில் கிடந்துழலுகிறது.

சற்குருவின் உபதேசத்தின் வாயிலாய்ச் சிவதீக்கைப்பெற்ற ஒருவன் ***ஜெபம், தியானம், சரியை*** என்ற மூன்று உபாயங்களால் ஈசனருளைப் பெற்று மேற்சொன்ன ஆறு தத்துவங்களை அறிந்து (பதி-பசு-பாசம்-வித்தியா-அவித்தியா-இந்திரியம்) மலங்களைக் களைந்து, அகக்கண்ணால் அருட் பெருஞ் சோதியைக் கண்டு ஆனந்தத்தைப்பெற்று அச்சோதியுடன் இரண்டற்ற நிலையில் முடிவற்ற ஆனந்தத்தில் மூழ்குவான். இதுவே சைவ சித்தாந்தம் வகுத்துக்காட்டிய முக்திப் பேறாகும். இவ்விதம் முக்திபெற்ற ஆன்மா (பசு) திரும்பவும் வராது. (பிறப்பிறப்பற்று நிற்கும்) இப்பேற்றைப் பெற்ற ஆன்மா மறுபடியும் பிறக்க நேராது.

**பிறத்தலாவது:** தான் செய்த கன்மங்களுக் கேற்றதாய சுக துக்கங்களை அனுபவிப்பதற்குத் தக்கதாயும், அச்சுக துக்கங்களை

வல்லான் வகுத்த விதிப்படி உணரவல்ல பொறி புலன்களையு முடையதாயுமாய ஒரு உடலைப் பெற்று பிறப்பிறப்புக் கடலில் உழல்வதாகும் என்றறியவும். பேதாபேத வாதத்தை அடிப்படை யாக்கியுள்ள சைவ சித்தாந்தத்தின் கொள்கைப்படி பதியும் பசுவும் ஒன்றே. ஆயினும் பாசத்தோடு கூடியிருப்பதால் பசுவினால் 'தான் யார்' என்பது அறியக் கூடாமை என்பதை.....

'ஒன்றென்ற தொன்றே காண்
................................ ......... மிருக்கு'

என்ற இச்செய்யுள் விளக்குகிறது. *(இதன் விளக்கத்தைப் பக்கம் 279 ..ல் காண்க)*

மற்றும், '*அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்தும்.*'

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ளம்
இட்டதொரு பேரழைக்க வென்னென்றாங்-கொட்டி
அவனுளமா கில்லா னுளமவனா மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

என்ற செய்யுளால், அத்துவிதம் என்ற பதத்தினாலேயே ஈசனும் ஆன்மாவும் இரண்டற ஒன்றுபட்டவை என்ற பொருள் உண்மையேனும், ஏகம் என்று மற்றுமொரு வற்புறுத்தல் கூறியது கூறல் என்ற குற்றத்தின்பாற் படாதோ எனில் அன்று; அதற்கு விடை கீழே தரப்படும். விடையைத் தந்து சுபக்கத்தை நிலை நிறுத்துதல் போற்றத்தக்கது. இங்கு.........

1. பதிப்பொருளை ஓரினமாக்கிச் சிவனை அதனுள் ஒன்றாய்க் கணித்தல் தகாது என்பதை வலியுறுத்தவும்,

2. அச்சிவனின் அருட்பெருக்கினால் தோன்றிய உலகம் சத்தியமானதென்று வாதிக்குங்கால் (உள்ளதிலிருந்துதான் உள்ளது

விளையும் என்ற சத்காரிய வாதத்தைத் தழுவி ) காரியமாகிய சத்தியப் பொருளின் காரணமாகிற **'அருளும்'** சத்தியப் பொருளேயாக வேண்டுமாதலால், அவ்வருளைச் (சக்தி) சிவனிடமிருந்து வேறுபட்டதாய்க் கொள்ளக் கூடாதென்பதையும் விளக்கியிருத்தல் காண்க. இதற்கு உதாரணமாக 'அ' கரம் முதலான உயிரெழுத்துகள் மெய்யெழுத்துகளுடன் சேர்ந்து உயிர்மெய்யெழுத்தாவதைக் குறிப்பிட்டுள்ளார். மற்றும் 'அ' கரம் முதலான என்றதால் ஓரெழுத்துள் ளடங்கிய மூவெழுத்தின் பொருளையும் அதிலும் முதலெழுத்தின் பொருளில் புதைந்திருக்கும் சூக்குமத்தினுள் பொருளையுப சுட்டியதாகும் எனச் சமய வல்லுநர் உரைப்பர்.

பதியை ஓரினப் பொருளாக்குதலுங் கூடுமோவெனில் ஆம் என்பது முதல் சூத்திரத்தின் முதல் வாக்கியத்தில் காண்க.

**'ஒன்றென்றது ஒன்றே காண்'**

இஃது என்னுதலிற்றோவெனின் சங்காரகாரணனாயுள்ள முதல்வனையே முதலாகவுடைத்து இவ்வுலகமென்ப துணர்த்துதல் நுதலிற்று. இவ்வார்த்திகத்தின் உரையாசிரியர் மேற்குறித்த சங்கையைத் தீர்த்திருப்பதையுங் காண்க .

**'சங்கார காரணனாயுள்ள'** என்றதனால் வேறு காரணனாருமுண்டு என்று கிடைக்கப்பெறுகிறது. அன்றியும், நிவர்த்திக்கலை முதலிய பஞ்ச கலைகள் உட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக் கண்ணதாகிய மகா சங்காரத்தைச் செய்யும் வினை முதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற் கடவுளாயுடைத்து.

3. **'முதல்வனையே'** என்ற சொல்லின் ஏகாரம் இயைபின்மை நீக்குதற்கும் பிறிதினியைபு நீக்குதற்கும் பொதுவாய் நின்ற 'பிரிநிலை' என்னும் இம்மேற்கோளால் ***அத்துவிதம், ஏகம்*** என்னும் இரு சொற்களும் முக்கிய வாக்கியத்தின் பொருளையூட்ட இன்றியமையாதவை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி யாகிறது.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம்-அண்ணல்தாள்
அத்துவித மாதல் அருமறைக ளொன்றென்னா
தத்துவிதம் என்றறையு மாங்கு.

(சிவஞானபோதம்.)

ஆண்டுப் **'பிரம்மம் அத்துவிதம்'** என்றது, பிரம்மம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதென்னும் பொருட்டாகலான், அஃது **'ஏகம்'** என்பதனோடு முரணுமாறில்லை யென்பதாம்.

**'எங்குமா மண்ணறாள்'** என விசேடித்தது குணமும் குணியும் போல உடனாயும், அவ்வாறு உடனாகாமைக்கு அனுபவங் காட்டியவாறு. வியாப்பியமும் வியாபகமுமாதலொப்புமை மாத்திரையே பற்றிக் குணகுணிகளை உவமை கூறினாரென்பது. மேற்படி செய்யுளால் காரியப் பொருளான இவ்வுலகில்...

'தன்னருள் வெளிக்குளே
அகிலாண்டகோடியெல்லாம்
தங்கும்படிக் கிச்சைவைத்து உயிர்க்குயிராய்த்
தழைத்ததெது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது?'

அணுவினிலணுவாகி நிற்கும் ஈசனின் இரண்டற்ற நிலையென விளக்கியுள்ள தத்துவமே இன்று யாண்டும் கொள்ளப்படுகிறது.

அசித்துப் பொருளான இவ்வுடல் சித்துப்பொருளான ஆன்மாவுக்குப் போர்வை போலமைந்துள்ளது. அவ்வண்ணமே உயிரினுக்குயிராய் நிற்கும் பதியும்- ஆன்மாவைத் தனக்குப் போர்வையாய் ஏற்றுள்ளான். **'சித்தாம்'** ஆன்மாவைத் தனக்கு ஓர் அம்பரமாய் ஏற்றுள்ள நாதனைச் சிதம்பர நாதனென்றழைத்ததன் பொருளினிமை ஈண்டு சுவைக்கக் கிடக்கின்றது. அசித்து சித்துகள் இரண்டையுமே தனக்குச் சரீரமென்ற வகையிலேற்றுள்ளான் ஈசன். ஆகவே, ஒவ்வொரு தனி மனிதனும் ஒரு சிறிய உலகமென்பது

உண்மையேயாமன்றோ? இதனாலேயே அண்டத்திலுள்ளதைப் பிண்டத்திற் காண்பீரென்ற சொல்லால் சுருக்கிச் சொன்னார் போலும். இத்தத்துவத்தை.... 280-ஆம் பக்கத்திலுள்ள....

'அரக்கொடு சேர்த்தி..........
.............................................'

என்ற செய்யுளாலும் பொருளாலும் முன்னரே விளக்கிக் கூறப்பட்டுள்ளது காண்க.

ஆயினும் பாசம் போகும் வரை, மலங்கள் நீங்கும் வரையில் வேற்றுமை நீங்கா, பிறப்பும், சின்னாள் வாழ்வும். பின்பு இறப்பும் மாறி மாறி,வந்துகொண்டிருக்கும். இவ்வண்ணம் உலகிலுள்ள எல்லாப் பொருள்களுமே(உலகமே) **தோன்றல், நிற்றல், மறைதல்** என்னும் இயல்புற்றதாய் இருத்தலின், இவ்வுலகத்தைத் தருபவன் ஒருவன் (படைப்பவன்) வேண்டுமென்றுணரக் கிடக்கின்றது, அவனே கர்த்தா. அவனே முதல்வன்; அவனே தலைவன். அவனே ஈறுமாக நிற்பவன். அவனாணையால் உலகந் தோன்றலும் நிற்றலும், அழிதலு மாதலால் *'அவனருள் வெளிக்குளே அகிலாண்ட கோடியெலா மடங்கவும், அவனே இவ்வண்டங்கள் பதினான்கிற் கப்பாலும் இப்பாலும் நிற்பவனாவன்'*. இக்கருத்தை....

ஒருவனோ டொருத்தி யொன்றென்
        றுரைத்திடு முலக மெல்லாம்
வருமுறை வந்து நின்று
        போவது மாத லாலே
தருபவ னொருவன் வேண்டுந்
        தான்முத லீறு மாகி
மருவிடு மனாதி முத்த
        சித்துரு மன்னி நின்றே!

(சிவ. சித்: முதல் சூத்திரம். பா. எண்1)

அவன், அவள், அது என்று சுட்டப்படும் பிரபஞ்சமெல்லாம் உபாதானத்தினின்று மலவேதுவால் தோன்றும் முறைப்படி தோன்றி, நிற்கு முறையானே நின்று, ஒடுங்கும் முறைப்படியே ஒடுங்குவதுமாகிய காரியமாய் இருத்தலின், மருவிய அநாதி முத் தத்துவத்தையும், சித்திருவையும் பொருந்தி நின்று சிருட்டிப்பவனும் சங்கரிப்பவனும் (ஆக்கல், அழித்தல் என இரண்டையும் செய்பவனாகி) தானேயாகித் தருபவன் ஒருவன் வேண்டும். தருபவன் ஒருவன் வேண்டுமென்பது, பிரதிஞ்ஞை, வருமுறை வந்து நின்று போவது மாதலாலே என்பது, ஏது இவ்விரண்டவயவங் கூறலே கடாதிகட்குக் குலாலனைப் போலென்னும் உதாரணம் தானே போதரும். மேலே கூறிய பாடலும் பொருளும் இக்கருத்தை விளக்குவதைக் காண்க.

அவனே முன்சொன்னதுபோல் உலகெலாமு மாகிறான். அவ்வுலகினின்றும் வேறுபட்டவனுமாகிறான். தானே அனைத் திற்கும் தலைவனாய் நின்று தன் ஆணைக்குட்பட்டு உலகம் யாவும் தனது கன்மானுசாரம் அமர்ந்து செல்லக் காரணமாகிறான்.

அமலனாகிய அவன், அழிவற்ற சீர்பெற்றவனேனும் மலங்களோடு கூடிய சேதனாசேதனப் பொருள்களுடன் நீங்காது எங்குமுளனாய் என்றுமுளனாய் நிற்கிறான்.(சேதனன்- அறிவுள்ளவன்; அசேதனன்- அறிவில்லாதவன்). இத்தத்துவத்தை...

உலகெலா மாகி வேறா
யுடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத்
தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் தன்மை
தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி
நின்றனன் நீங்கா தெங்கும்.

(சிவ.சித் இரண்-சூ பா.எண்.1)

'பிரபஞ்சமெல்லாந் தானே யாகி அவையிற்றுக்கு வேறுமாகி வியாப்தியினாலே அனன்னியனுமாகி, ஞானப்பிரகாசமாய் உயர்ந்து அளவற்ற ஆன்மாக்கள் தத்தங் கன்மங்களுக் கீடாய்த் தனது கட்டளை வழியில் நடக்கத்தானே எல்லாக் கிருத்தியங்களுக்கும் தலைவனாய் இவ்வான்மாக்களின் இயல்பு தன்கண் நிகழ்தலின்றி நிறைந்த சீரையுடைய நின்மலன்தான் ஒருவனேயாகி எங்கும் பூரணனாய் நிற்பவன்' என்று இப்பாடலும் பொருளும் கூறியுள்ளதைக் கொண்டறிக.

பல்வேறு கட்சியினர் கொண்டுள்ள ஆன்மா இல்லை என்ற கோட்பாட்டை (நைரான்ம வாதம் என்பர் வடநூலார்) மேற்படி பாடலுக்குப்பின் பன்னிரண்டு பாக்களால் கண்டித்து ஆன்மா உண்டு என்று **தர்மிக்கிராகமானம்** எனப்பட்ட அளவை முறையானே நிலைநாட்டியுள்ளார்.

**தர்மிக்கிராக மானம் என்பதன் விளக்கம்:**

***தர்மம்*** என்பது ஒரு பொருளின் இயல்பு.
***தர்மி*** என்பது ஒரு குறிப்பிட்ட இயல்பையுடைய பொருள்.
***கிராகம்*** என்பது ஏற்றல் என்ற பொருள் தருவது.
***மானம்*** என்பது அளவை என்ற பொருள் தருவது.
***மேயம்*** என்பது அளந்தறியப் படுவதாகிய ஒரு பொருள்.

ஆகவே, தர்மிக் கிராகமானம் என்பது, ஓர் இயல்பைக் கண்டு அதன் வாயிலாய் அவ்வியல்பையுடையது (ஒரு பொருள்) ஒன்று இருத்தல் வேண்டும் என்று அறியும் முறைக்குச் சூட்டப் பெற்ற பெயராம் என்றறிக. இதையே சரீரத்துக்கும் ஆன்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தைப் போல் ஆன்மாவுக்கும் ஈசனுக்குங்கூட சரீர சரீரி பாவமே உண்டென்றும், ஆயினும், சரீரம் ஆன்மாவாக ஆகாது என்பது போல் ஆன்மா ஈசனாகாதென்றும், ஆன்மாவினால் தரிக்கப் பட்டாலன்றிச் சரீரம் நிலைக்கப்பெறாது என்றது போல், ஈசனால் தரிக்கப்பட்டாலன்றி (அந்தர்யாமியாய்) ஆன்மாவும் நிலையாது என்ற தத்துவம், கீழ்வரும் செய்யுளில் விளக்கப்பட்டிருக்கிறது.

உருவொடு கருவி யெல்லா
முயிர்கொடு நின்று வேறாய்
வருவது போல வீச
னுயிர்களின் மருவி வாழ்வன்
றருமுயி ரவனை யாகா
வுயிரவை தானு மாகான்
வருமவ னிவைதா னாயும்
வேறுமாய் மன்னி நின்றே.

(சிவ. சித்.2-ஆம் சூத்திரம் பா.3.)

ஆன்மா பருவுடலோடு சூக்குமமும் மற்ற தேகங்களிலும் பொருந்தியும் வேறாகியும் நிற்பதுபோலச் சிவனும் ஆன்மாக்களைப் பொருந்தி இருப்பன்.இருந்தாலும் அவ்வான்மா சிவனாக மாட்டாது. அச்சிவனும் ஆன்மாக்களாகமாட்டான். சிவன் இப்படி வேற்றுமை யுள்ளவனாகவும், வேற்றுமை யற்றவனாகவும் நிலைபெற்று நிற்பன்.

மேற்கூறிய விவரங்களை விரிவாய் அறிய மேற்படி நூலைத்தக்க குருவினிடம் அமர்ந்து முறைப்படி கற்றல் மிகவும் பொருந்துமாயினும் அதனுடைய சுருக்கத்தை ஈண்டுச் சிறிது விளம்பினோம்.

## ஆ. பசு இலக்கணம்

இனிப் பசுவென்னும் (ஆன்மாவின்) தத்துவத்தை ஆராய்வோம். இதற்கு *உயிர், சேதனன், சீவன், சீவான்மா* என்று பெயர்கள் உள. பசு இலக்கணத்தைப் படிக்கும் முன்பு பசு வென்னும் பொருள் ஒன்று உண்டோ வென்னும் நைரான்ம வாதிகளின் மருளையும் இருளையும் போக்க நூலாசிரியரும் உரையாசிரியரும் பொழிந்துள்ள தேன்மொழிகளின் தித்திப்பைச் சுவைத்தல் இன்றியமையாததாகும்.

சைவ சமய நூற்கள் பதினான்கும் ஒவ்வொன்றும் மிக உயர்ந்தவையாகும். சிவஞான போதமோ எனில் நூல்களைக்

காட்டிலும் சிறந்ததாகும். நூலைத் தொகுத்துள்ள நுட்பத்தைப் போற்றவியலாது. சைவாகமத்தைத் தழுவி மெய்கண்டார் அருளிய சிவஞான போதமென்னும் சூத்திரமும், அதற்கவர்களே அருளிய வார்த்திகமும், அவற்றைத் தழுவி சிவஞான சித்தியார் அருளியுள்ள அவையடக்க முறையில் சிற்றுரை யென்றழைக்கப்பட்ட பேருரையும் முற்றும் வைதீக முறையை ஒட்டியவை. இவர் என் கட்சி (தன்கட்சி) 'சுபக்கத்தில்' நிரீசுரவாதிகளைக் கண்டித்து **'ஈசன் உளன்'** எனச் சாதித்திருக்கும் வன்மையும் பரபக்கத்தினரை வரவேற்கும் நேர்மையும் நம் முன்னோரின் பண்பை விளக்குகின்றன.

அவ்வண்ணமே, நைரான்ம வாதிகளின் போக்கையும் கண்டித்து, ஆன்மா என்னும் உயிர்ப்பொருள்- பசுவென்று அழைக்கப்படும் தத்துவம் ஒன்றுண்டு என்றும் கல்லின்மேல் வெட்டெனச் சமைத்துள்ளார்.

உயிரெனப் படுவ திந்த
வுடலின் வேறுளதா யுற்றுச்
செயிருறு மிச்சா ஞானச்
செய்திக ளுடைய தாகிப்
பயில்வுறு மின்ப துன்பப்
பலன்களும் நுகரும் பார்க்கில்
துயிலொடும் ஐந்து வத்தைப்
படுமுண்மை துரியா தீதம்.

(சிவ.சித்.சுபக்.3 சூத்திரம் பா-1)

உயிரென்று சொல்லப்படுவது இச்சரீரத்துக்கு அன்னியமாய்ப் பொருந்தி நின்று மலத்தால் குற்றம் பொருந்திய இச்சா, ஞான, கிரியைகளை யுடை யதாய்ப் பழக்கமாக வரும் இன்ப துன்பங்களைக் கர்மானு குணமாகப் புசிக்கும். பார்க்குமிடத்து நித்திரையுடனே பஞ்சாவஸ்தைகளையும் அடையும். ஆயினும், துரியா தீதத்தில் பொருந்தி இருப்பதுவே உண்மையாம்.

**துரியா தீதமே ஆத்ம ஸ்தான** மாதலால் உண்மை யென்றார்.

*'தர்மிக்கிராக மானம்'* என்னும் அளவையால்-ஆன்மா உண்டெனச் சாதித்து, அடுத்த பன்னிரண்டு பாக்களால் ஆன்மா இல்லை என்னும் பல்வேறு கட்சிகளின் நைரான்ம வாதத்தைக் கண்டித்துள்ளார்.

இவ்விவரங்களை நூலின் வாயிலாய்க் கற்றலே நலம் ஆயினும் சுருங்கக் கூறுவாம்:

1. **சூனிய வாதம்:** இது புத்த சமயத்தின் கொள்கையாம். **'சர்வம் சூன்யம்'** என்பது இவர்களின் துணிபு. அஃதாவது, யாவும் இன்மையே எனப் பொருள்படும்.

* இங்கு யாவும் என்பது எதைக் குறிக்கும்?
* இன்மை என்பது உண்மையாயின் யாவும் என்ற சொல்லால் குறிப்பிடப்படுபவை யாவை?
* இல்லாத பொருள்களுக்கு வழக்குண்டானது எங்ஙனம்?
* சூனியமாயின் அறிவும் இல்லை யென்றன்றோ கொள்ளவேண்டும்?
* அறிவும் இல்லையேல் சூனியம் என்ற தத்துவத்தை உணர்வதெங்ஙனம்?

அவ்வாறின்றிச் சர்வம் (எல்லாம்-யாவும்) என்ற சொல்லுக்கு ஞானம் (அறிவு) எனப்பட்டது ஒன்று நீங்கலாக உள்ள எல்லாம் என்று பொருள் கொள்க என்பாராகில் சர்வம் (யாவும்) என்ற சொல்லுக்கு இவர்கள் கற்பிக்கும் பொருள் மொழிக்கே புதுமையானதாகும், அப்பொருளையும் ஒருகால் ஏற்போமாயின் அறிவு மட்டும் உளது, மற்றைய யாவுமில என்பது பௌத்தர்களின் சித்தாந்தமாகும். அறிவினால் அறியப்படுபவை ஒன்றுமே இல்லையேல் அறிவு மாத்திர முண்டென்பதை அறிதலெங்ஙனம் சாத்தியமாகும்? என்றிவ்வா றெல்லாம் வாதங்களும் பிரதி வாதங்களும் (சொற்போர்கள்) உண்டாகும். அவற்றையெல்லாம் ஒரு புறம் விடுத்து ஆன்மா என்னுஞ் சொல் வழக்கிலிருப்பதாலும், அச்சொல்லைக் கேட்குங்கால் ஏதோ ஒரு பொருளைப் பற்றிய அறிவு உண்டாதலாலும் இல்லாததற்கு ஒரு

பெயரும் பொருளும் உண்டாகாது, ஆதலாலும் ஆன்மா என்னும் உயிர்ப்பொருள் உண்டென்று சாதிக்கப்படுகிறது.

2. **தேகான்மா வாதம்:** இவ்வுடலே ஆன்மா எனப்படுவது என்று ஒரு சிலர் கூறுவர். தேகம் ஆன்மாவாயின் 'யான்' 'எனது' என்பன போன்ற அகம்பாவம் என்னும் பொருள் தரும் சொற்களால் யாது பயன்?' என் காளை என்னும் தொடரில் 'என் கால்' என்பதிலுள்ளதுபோல் என் என்ற சொல்லுக்குத் தனது சரீரத்துடன் சேர்ந்த என்ற பொருள் ஒட்டாதே 'என் காளை' என்ற விடத்து, *என்* என்ற சொல் இவ்வுடலுக்குப் புறம்பானது என்னும் ஒரு பொருளைக் குறிப்பது மறுக்க முடியாத உண்மை. ஆன்மா என்பது இதுவே. இது சரீரம் அன்று; சரீரத்துக்குப் புறம்பானதும் ஆயினும் தேகத்தோடு ஒத்து இயங்குவதுமான ஒரு தனிப்பொருளென்பது உண்மை.

3. **இந்திரியான்மா வாதம்:** ஒரு சிலர் ஞானேந்திரியங்களாகிய *மெய்,வாய்,கண்,மூக்கு,செவி* ஆகியவற்றின் கூட்டத்துக்கே *ஆன்மா* என்னும் இனப்பெயர் என்று கூறுவர். இதுவும் சரியன்று. இவ்விந்திரியங்களில் ஒவ்வொன்றும் தத்தமது விடயத்தை மட்டுமே ஏற்க உதவியாகுங் கருவியாம். சுவை, ஒளி , ஊறு, ஓசை, நாற்றம் (மணம்) என்பவையே இவ்வைந்து இந்திரியங்களின் விடயங்களாம். இவ்விந்திரியங்களின் உதவியால் மேற்சொன்ன விடயங்களின் உணர்வு ஏற்படுவது உண்மை. மற்றும் இச்சை, கிரியை போன்று வேறு சில தர்மங்களும் உண்டென்பதை மறுக்க முடியாது. இவை முன் சொன்ன இந்திரியங்களால் சாதிக்கக் கூடியவை யல்ல; மிகைப்படுமித் தருமங்களுக்கு உறைவிடமான ஒரு தருமி இருத்தல் வேண்டுமென்ற முடிவை மறுக்க முடியாது. அத்தருமியே ஆன்மாவாகுமென்று இந்திரியான்மா வாதம் மறுக்கப்படுகிறது.

4. **இலிங்க சர ஆன்மவாதம்:** இறந்த பின் பிறப்புற ஆன்மாவுக்குச் சுதி சாதனமாயுள்ள இலிங்க சரீரமே ஆன்மாவாகுமென்பது வேறு சிலர் கொள்கையாகும் (இவ்விலிங்க சரீரத்துக்குச் சூக்கும சரீரமென்றும் பெயராம்). மேற்படி கொள்கை சரியன்று. தூல சரீரத்தின் இந்திரியங்களால் அறியப்படும் விடயங்கள் சூக்கும சரீரத்துக்குப் புலப்படா. அவ்வண்ணமாயின்..

* உறங்கினவர் தாம் கண்ட கனாப் பொருளை உணர்ந்த பின் ஓதுங்காலை- உணர்ந்தபின்பும் தொடர்ந்து அக்கனாவினைக் காணுகின்றாரெனல் தகுமா?

* அன்றி, உணர்ந்தபின் அக்கனவு மாறுவதால், கனாவினைக் கண்ட ஆன்மா உணர்ந்தவனின் உடலினின்றும் பறந்து போயிற்றெனல் தகுமா?

* அல்லது கனாவினைக் கண்ட சரீரம் உணர்ந்தவனின் உடலைவிட்டு வெளியேறி விட்டதென்றுதான் சொல்லத்தகுமா?

உறங்குங்காற் கண்ட கனாப் பொருள் உணர்ந்த பின்னும், உணர்ந்த நேரத்தைய அனுபவங்கள் கனாவிலும் பின்னிக்கிடப்பதால் நுண்ணுடலுக்கும் பருவுடலுக்குமுள்ள பிணைப்புப் புலனாகிறது. ஆன்மாவானது பருவுடலை விழிப்பு நிலையில் பயன்படுத்திக் கொள்வதுபோலவே நுண்ணுடலைக் கனவு நிலையில் பயன் படுத்திக் கொள்கிறது. ஆகவே ஆன்மா என்னும் தனித் தத்துவப் பொருள் இவ்விரு உடல்களையும், உட்சட்டை புறச்சட்டைகளை நாம் அணிவது போல (நுண்ணுடல் பருவுடல் ஆகிய இரண்டையும்) அணிந்துள்ளது. ஆகவே ஆன்மா என்பது பருவுடலிலிருந்து வேறுபட்டது. போலவே நுண்ணுடலி (இலிங்க சரீரத்தி)னின்றும் வேறுபட்டதாகும் என்ற சமாதானத்தினால் இச்சார்பினரையும் தவிர்த்துள்ளார்.

5. **பிராணான்ம வாதம்:** நாம் சுவாசிக்கும் (உட்கொள்ளும்) வாயுவிற்குப் (பிராணவாயுவுக்கு) பிராணன் என்று பெயர். ஆன்மாவுக்கும் பிராணன் என்று ஒரு பெயர் உண்டாதலின் இவ்வாயுவே-ஆன்மா வென்பர் சிலர். இதுவும் சரியன்று. பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னும் ஐவகை வாயுக்களும் அதனதன் செய்கைகளை (கருமத்தை) ஒட்டி வேறுபடுத்திக் கூறப்படுபவை யாதலால் இவையாவும் ஒன்றாகித் தம்முள் முக்கியமான பிராணன் என்னும் பெயராலே அழைக்கப்படுவதில் குற்றமில்லை யாதலின், இச்சை கிரியைகளுங் கூட ஒரு விதத்தில் இவ்வாயுக்களின் செய்கை(கருமங்களின்)யினுட்படு மாதலின் இவ்வாயுவே ஆன்மாவென்பது இப்பாலாரின் கொள்கை.

அங்ஙனமாயின் **சுகம், துக்கம், இன்பம், துன்பம், அன்பு, கனிவு, ஆர்வம்** முதலிய உணர்ச்சிகள் இவ்வகை வாயுக்களின் கருமங்களுக்குப் (செயல்களுக்கு) புறம்பானதன்றோ? இவ்வுணர்ச்சிகளுக்கு உறைவிடம் யாது?

பிராணன் என்னும் சொல் சில சமயங்களில் ஆன்மாவைக் குறிக்கும் வகையில் வழங்கப்படுவதாலேயே பிராணவாயுவே ஆன்மாவெனத் துணிதல் தகாது. பிராணன் என்னும் சுவாச நடப்பு ஆன்மா சரீரத்திலிருக்கிறான் என்பதைக் காட்டும் இலக்கணமும் சான்றுமாகும். வாயுவைப் போல ஆன்மாவுக்குப் பிரிவுகளில்லை. மற்றும் வாயுவைப் போலன்றி *ஆன்மாவானது ஞான, இச்சா, கிரியை என்னும் சக்திகளுடன் கூடியது.* ஆகையால் பிராணவாயுவை ஆன்மாவென்று ஏற்கத் தக்கதன்று.

6. **பிரமாத்தும வாதம்:** சிலர் பிரம்மமே ஆன்மா வென்பர். இந்திரியங்களின் உதவியின்றியே எல்லாவற்றையும் அறியவும் செய்யவும் ஆற்றலுள்ளது பிரம்மம்.

ஆன்மாவோ என்னில் பஞ்ச பூதங்களாலான பஞ்ச கோசமய சரீரத்தின் (இந்திரியங்கள் உட்பட) உதவியின்றி நிலவி தன் ஞான, இச்சா, கிரியா சக்திகளை யுபயோகிக்க மாட்டாது.

புருடனே யறிவ னாகிற்
பொறிபுல னாதி போதந்
தருவதென் னறிவு மாயா
தநுகர ணாதி பற்றி
வருவதிங் கநாதி யாக
மலத்தினின் மறைந்து நிற்ப
னருவனா யிவற்றோடாளு
மசைச்சரும் அரசும் போல்வான்.

(சிவ. சித்.4-ஆம் சூத் பாட்டு 31)

ஆன்மாவே அறிவன் என்னில் பொறி புலன் முதலியன அவ்வான்மாவுக்கு ஞானம் தரும் காரணம் யாது? மாயா காரணமாகிய

தநுகரணாதிகளைப்பற்றி ஆன்மாவுக்கு ஞானமுண்டாம். ஆன்மா அனாதியே; மலத்தில் மறைந்து அருபியாய் நிற்பன். ஆதலால் அமைச்சர் முதலானோரோடு அரசாளும் மன்னனைப் போல இப்பொறி புலன் முதலியவற்றோடு பொருந்தி இருப்பான். (உடல் என்பது இந்திரியங்களும் அந்தக் காரணங்களும் கூடியது என்பது இப்பாடலில் குறிக்கப்படுகின்றது.)

இச்செய்யுளால் 'ஆன்மா அரசன்போல நின்று, தனு (உடல்) கரணாதிகளை (மனம், சித்தம், புத்தி அகங்காரம்- ஆதிகள் என்பது ஐம்புலன்களையும் ஐம்பொறிகளையும் சுட்டுமென்க) அமைச்சர் போல ஏற்று நிலவுகின்றான். மாயையின் விளைவான இத்தனுகரணாதிகளைப் பிரம்மம் ஏற்க வேண்டியதில்லை' என வகுத்து, *ஆன்மா பிரம்மத்தினின்றும் வேறுபட்டது. கன்மத்தினால் உண்டான மலங்களோடு கூடி இருப்பதால் மாயையில் சிக்குண்டு கிடப்பது* என்பதை வலியுறுத்துகிறார்.

7. **சமுச்சயான்ம வாதம்:** சுக்கிர சுரோணிதங்கள், பஞ்ச பூதங்கள், பஞ்சகோசங்கள் மற்றும் இந்திரியங்கள், பஞ்ச வாயுக்கள் என்னும் இவற்றின் கூட்டமே **ஆன்மா** (கூட்டம் என்பது சமுச்சயம்) என்பர், மற்றும் சிலர். இதுவும் சரியன்று. யோக சாதனத்தினால் துரியம், துரியாதீதம் என்னும் நிலைகளை அடைந்த யோகிக்கு- ஆங்கு ஏற்படும் தனிச் சிறப்பான அனுபவங்களை அந்த யோகியின் ஆன்மாவன்றி வேறு ஒன்றினாலும் அறியவோ, அதனைத் துய்க்கவோ இயலாது. ஆகையால், ஆன்மாவென்னும் தனித்தத்துவம்-மேலே சொன்ன கூட்டத்தினின்றும் வேறுபட்டிருக்கின்றதென்று சுபக்கத்தை நிலை நிறுத்தியுள்ளார். இவ்விதம் ஆன்மா உண்டென்று வகுத்து, அடுத்த ஐந்து செய்யுள்களால் இவ்வான்மாவின் சொரூப இலக்கணத்தை விவரித்து இருக்கிறார். அஃதை ஈண்டுச் சிறிது பயில்வோமாக.

பின்னர் ஆறு பாக்களால் ஆன்மாவைப் பற்றிய ஐயந்திரிபு களைக் களைகின்றார். ஆகவே ஆன்மா அல்லாததை ஆன்மா என்று கொள்ளல் தகாததன்றோ? வட நூலாசிரியர்கள் இதனை 'அந்யதா க்யாதி' (அந்யதா-வேறுவிதமான- உண்மைக்கு மாறுபட்ட) க்யாதி -

ஞானம்) என்பர். இதைத் தவிர்த்தல் இன்றியமையாததாகும். இவ்விதம், ***ஆன்மா உண்டு, ஆன்மா அல்லாததை ஆன்மாவென்று ஏற்றல் தகாது*** என்று கூறி, ஆன்மாவின் இலக்கணங்களையும் வகுத்துள்ள பேருபகாரத்துக்கு யாம் ஈயவல்ல கைம்மாறுமுண்டோ?

இவ்வான்மா பசு-சேதனன் எனப்படும் உயிர்ப் பொருள். ஞானசக்தி, இச்சா சக்தி, கிரியா சக்திகளைப் பெற்ற தாய். சுக, துக்க, இச்சா, துவேஷ, பிரயத்தன, தர்மா தர்மங்களுக்கு (இவை தமிழில் முறையே இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, முயற்சி, அறம், மறம் என்பவைகளாம்)உறைவிடமாய், தன் கன்மத்தின் மலத்தால் பூசப்பட்ட மாசுடன் கூடியதாய்த் தன்னைத் தானறியமாட்டாதாயும், கன்மத்தின் விளைவாய் இன்ப துன்பங்களைப் பெற வருவதும் போவதுமான (பிறப்பு-இறப்பு) இயல்புடையதாயும், அக்கன்மத்திற்கு ஏற்றதான இன்ப துன்பங்களைத் துய்க்கத் தகுந்ததான பலவகைப்பட்ட உடல்களை (தனுக்களை) அம் மாயையினால் பெற்று ஒவ்வொரு உடலுக்கு ஒவ்வொன்று எனும்படி அவ்வவ்வுடல்களில் இருந்து தான் ஓர் அரசன் எனத் தனது தநுகரணாதிகளைத் தனதமைச்சுரிமை யெனப் பெற்றதாய் வழங்குந் தனிப்பொருளாம். மலங்களைப் போக்கிக்கொண்டால் தன் சொரூபத்தைத் தான் அறியவல்ல தாகும். முன் சொன்ன சரியை, கிரியை, ஆசானுபதேசம் முதலிய உபாயங்களால் மாயையை நீக்கிப் பிறவிப் பெருங்கடலைத் தாண்டி இறைவனுடன் இயங்கும் இயல்பையும் பெற்றது. இதுவே பசுவின் தத்துவம். விரிவான விளக்கங்களுக்குச் சிவஞான சித்தியாரின் 3-4 ஆம் சூத்திரங்களின் உரையைக் காண்க.

குறிப்பு- சொரூப நிரூபகம் என்றால் ஒரு பொருளின் சொரூபத் தன்மை (சுயரூபம்) எவ்வகைப்பட்டது என்பதை ஐயந்திரிபு இல்லாமல் வரையறுத்தச் சில இலக்கணங்களை எடுத்துக்காட்டி நிலைநாட்டுவதாகும். எடுத்துக்காட்டாக- ஆன்மா என்பது- உயிர்ப்பொருள்-அதை நிரூபிக்க வல்ல சுக துக்கங்களை நுகர்தல் என்னும் குணம் ஆன்மாவின் சொரூபத்தை நிரூபிப்பதாம். ஆகவே ஆன்மாவின் உண்மையும் புலப்படும்.

நிரூபித சொரூபம் என்பது முன்சொன்ன பொது குணங்களால் நிலைநாட்டப்பெற்ற பொருளின் (ஆன்மாவின்) தனிச் சிறப்பான

குணங்கள், அப்பொருளை ஏனைய பொருள்களினின்றும் பாகுபாட்டால் வலியுறுத்திக் காண்பிக்கும்.

இதற்கு எடுத்துக்காட்டாக உள்ளவை- **ஞான, இச்சா, கிரியா** முதலியனவும், யோக சாதனையால் கிடைக்கப் பெற்ற அணிமாதி எண்வகைச் சித்திகள்.

## இ. பாச இலக்கணம்.

இனிப் பாசம் என்பதைப் பற்றி படிப்போம். பாசம் என்பது மலம். இது ஆன்மாவை மறைத்து-அதன் மேற்பூச்சு எனும்படியாக-தாம்பிரத்திலுறும் களிம்பு போலவும், இரும்பிலே உண்டாகும். துருவைப் போலவும் நிற்பது பாசம் ஐவகைப் படும். அவையாவன: **ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம்** என்னும் இவையேயாம். இவை ஆன்மாவைச் சிவப்பேறு பெறவொட்டாது தவிர்த்து பவப்பேற்றுடன் கட்டிவைக்கும் கயிறு போன்றவை. இவற்றைப்பற்றி இதுவரையிலும் ஆங்காங்கு ஒருவாறு விளக்கப்பட்டுள்ளது.

மகாப் பிரளய காலத்தில், மகா சம்மாரமூர்த்தியான ஈசனிடத்தில் சகல சட அசடப் பொருள்களும் (அறிவற்றவை-அறிவுற்றவை) சென்றடங்கு மென்பதும், அதனால் அச்சம்மார மூர்த்தியே தன்வசமுள்ளவற்றைக் கொண்டு திரும்பவும் உலகைத் தோற்றுவிக்கிறான் என்பதும் முன்னமே விவரிக்கப்பட்டதாகும்.

அவ்வீசனுள் அடங்கும் ஆன்மாக்கள் தத்தம் வினைப்பயனால் பெற்ற மலங்களைக் களிம்பைப் போல மேற்பூச்சாகத் தத்தம்மிடத்துப் பெற்றே இருக்கும். ஆதாரம் ஒன்றுமின்றி ஆன்மா நிலையுறாதாதலினால் இதற்குக் கதி சாதனமெனப்படும் சூக்கும சரீரமும் (நுண்ணுடல்) இவ்வவத்தையிலுண்டு. இச்சூக்கும சரீரத்தில், தூல சரீரத்துக்கு வேண்டிய மூலப்பொருள்கள் யாவும் மிக நுண்ணியதாய் வித்தினுள் கிடக்கும் மரத்தைப் போன்று சேர்ந்துள்ளன.

பிரளயகாலத்துக்கு முன் தான் செய்த தக்க (இதமான) தகாத (அகிதமான) கன்மங்களை ஒட்டியே-மேற்சொன்ன களிம்பு போன்ற மலப்பூச்சுடன் கூடிய ஆன்மா-சிருட்டி (ஆக்க) காலத்தில் அக்கன்மங்களுக்கு ஏற்ப பலனைப்பெற அதனைத் துய்க்க ஏற்புடையத்தானதும் உதவக்கூடியதுமான ஓர் உடலைப் பெறும்.

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலின்
உள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே-வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

-சிவஞானபோதம்.

மேலைச் சூத்திரத்தினோதிய சத்காரியத்தின் இயல்பு பற்றி வினையுண்மை சாதிப்பார், உள்ளதே தோற்ற என்றும், உள்ள தாகிய சஞ்சிதவினை தோற்றப்பட்ட இன்ப துன்ப நுகர்ச்சிக்கு நிலைக்களமாகிய உடம்பிற் பொருந்தி அவற்றை அனுபவிப்பது சடமாகிய புத்தி தத்துவமேயாமென்னுஞ் சாங்கியரை மறுப்பார், உயிரணையு மவ்வுடலின் என்றும், முற்செய்வினையை ஈண்டு அனுபவித்தொழிந்தால் மேலைக்கு வருமாறு என்னையென்னுங் கடாவை விடுப்பார், முற்செய்வினை யுள்ளடைவே யுள்ளதாம் என்றும்' வினை தானே பயனாக வரும்; இறைவன் எற்றுக்கென்னும் மீமாஞ்சகரை மறுப்பார்.....

'செய்பவர் செய்திப் பயன் விளைக்குஞ்
செய்யேபோல் வள்ளலவன்
செய்வன் செயல் சென்றணையா .....'

என்றுங் கூறினார்.

அக்கன்மங்கட்கு ஏற்ற பலனைத் துய்க்காது தவிர்க்க முடியாது. அக்கன்மங்களுக்கு உற்ற பலனை அனுபவிக்கப் பொருத்தமான உடலையே ஒவ்வொரு ஆன்மாவுக்கும் ஈசன் அருளுவன். ஒவ்வொரு ஆன்மாவின் கன்மத்தையும் அதனால் அவ்வான்மா பெறக்கிடக்கும் பிறப்பின் வகையையும் நன்கறியும் வல்லமையுள்ளவன் ஈசனேயாம்.

அவனிடம் படைப்பிற் கவசியமான ஏனைய துணைப் பொருள்களுமுண்டு. ஆகவே ஈசன் தானே கர்த்தனாய் (படைப்புக் கடவுளாய்) நின்று மாயையைத் துணைக் காரணமாக ஏற்று உலகைப் படைத்துப் போக்கியங்களைத் (நுகர் பொருள்களை) தோற்றுவித்து உயிர்களுக்கு உடலையும் அளித்து மற்றும் பவத்தில் (பிறப்பில்) புகுத்தித் தமது இத (தக்க) கன்மங்களால் சிவப்பேற்றைப் பெற முயலுமாறு ஒரு வாய்ப்பை அளிக்கிறான். இதற்கு மேற்கோளாக,

**'உலகெலாமாகி வேறாய் உடனுமாய்'**

என வரும் செய்யுளால் கண்டுகொள்க. இங்கு, 'தலைவனாய் என்ற சொல்லால் உலகத்துக்கு அவனே கர்த்தன்; நிமித்த காரணன்; முதற் காரணமாவன் என்பதும்,

**'உலகெலாமாகி நின்றனன்'** என்பதாலும்,

**'உலகெலாமாகி யுடனுமா நின்றனன்'** என்பதாலும்,

**'உலகெலாமாகி உடனுமாய் எங்கும்**
**நீங்காது நின்றனன்'** என்பதாலும்,

நிமித்த காரணம் (முதற் காரணம்) என்னும் ஈசனே உபாதான காரணமும் (சமவாயி காரணம்) ஆவானென்பது விளங்குகிறது. ஆகவே உலகத்தைப் படைக்கும் கர்த்தனாகிய ஈசன் உலகத்திற்கு நிமித்த உபாதான காரணமுமாவான்.

*குறிப்பு- **சமவாயி அல்லது உபாதான காரணம்***

யாதொரு காரணத்தின் கூட்டின்றிக் காரியம் நிலையுறாதோ அக்காரணத்துக்கு உபாதான காரணமென்றும், அக்காரணத்துக்கும் காரியத்துக்கும் இருக்கும் சம்பந்தத்தைச் சமவாயமென்றுங் கூறுவர். உபாதான காரணம் தன்காரியத்துடன் சேர்ந்தே இருப்பதாலும் (மண்ணும் குடமும், நூலும் படமும் போல) இதையே ***சமவாயி காரணம்*** என்று சொல்வர்.

நூலின் சேர்க்கை (தந்து சம்யோகம்-நூலின் கூட்டுறவு) என்னும் அசமவாயி காரணம் படமென்னுங் காரியத்தை உண்டாக்குவதன்றோ? இங்குக் காரிய காரணங்களுக்குள்ள தொடர்பையன்றோ **தாதான்மியம்** என்பர். அவ்வண்ணமே மாயையும் மாயேயமும் உலகத்திற்கு அசமவாயி காரணங்களன்றோ எனில், அன்று என்பது இச்சித்தாந்தத்தின் கொள்கை.

படமென்னும் காரியமாவது தந்து (நூல்) என்னும் உடாதான காரணம் சமவாயமாக நின்று காரியத்தோடு சம்பந்தப்படல் என்னும் தாதான்மியம் (அவ்வண்ணமாகுக) என்னும் சம்பந்தத்தை அசமவாயி காரணமாய்ப் பெறுதலால் உண்டாகுங் காரியமே படமெனப்படும்.

தந்து சம்யோகம் என்பது காரணத்தின் ஒருநிலை -அந்நிலை காரணத்தின் காரியாவத்தையில் இருப்பதேயன்றி -ஆங்கோர் அசமவாயி காரணமென்னும் ஒரு புதிய பாகுபாட்டைப் புகுத்துவது வீண்-அங்ஙனமாயின், நிமித்த காரணத்துக்கும் எதிரியல்புடைய அநிமித்த காரணமும் ஒன்றைப் புகுத்தலாமல்லவா? இவையெல்லாம் வீண் வாதங்களாகவே தவிர்க்கத்தக்கவை. அவ்வாறு நோக்கப் புகின் உலகந் தோன்றுவதற்கு ஈசனின் அருளும் ஒரு காரணமன்றோ? அவ்வருளின் மிகையையும் குறைபாட்டையும் இதில் பல பிரிவுகளாகக் கற்பிக்கலாமன்றோ? ஆகவே இவ் வீண் வாதங்களை விடுக்கவும்.

ஈசன் உலகிற்கு அபின்ன நிமித்தோபாதான காரணமாவான் என்னும் தத்துவத்தை ஏற்கவும். அவன், உயிர்கள் கன்மத்து ஆணையில் அமர்ந்து செல்லுமாறு செய்விப்பவன். அவ்வண்ணமே அவற்றைச் செலுத்துபவனுமாவன். ஆயினும், அவன் (ஈசன்) அமலனாய் நிற்பவன். அவனை மலங்கள் பற்றா அவனுக்குப் பிறப்பிறப்பில்லை. ஆயினும் உயிர்களைக் கன்மத்தாணையில் செலுத்த- உலகெலாமுமாகி- அதனுடனுமாகி- உயிரினுக்குயிராய் நிற்பவனென்னும் சித்தாந்தத்தை மட்டும் ஏற்கவேண்டுமெனக் கிடைக்கப் பெறுகிறது. உடலினைப் பெற்ற உயிர், உடலையும் இந்திரியங்களையும் இந்திரியார்த்தங்களையும் அறியவல்லது. ஆயினும் இவ்வுடலோ, இந்திரியங்களோ, இந்திரியார்த்தங்களோ அவ்வுயிரினை அறியமாட்டா. அவ்வாறின்றி ஈசன் உயிரினுக்குயிராய் நின்று உயிரையும் அதனாலறியப்படும் யாவற்றையும் அறிய வல்லவனாவான். ஆயினும் இவை ஒன்றும்

அவனை அறியமாட்டா. இக்கருத்தைக் கீழ்க்காணும் பாடலிலும் பொருளிலும் காண்க.

பொறிபுலன் கரண மெல்லாம்
புருடனா வறிந்தான் மாவை
அறிதரா வவையே போல
ஆன்மாக்க ளனைத்து மெங்கும்
செறிதருஞ் சிவன்ற னாலே
அறிந்திடுஞ் சிவனைக் காணா
வறிதருஞ் சிவனே யெல்லாம்
அறிந்தறி வித்து நிற்பான்.

(சிவ-சித். 5 ஆம் சூத். பா. எண்1)

பஞ்சேந்திரியங்கள், அறிவு, அந்தக்கரணங்கள் இவை எல்லாம் புருடனாகிய ஆன்மாவினால் அறியப்பட்டும் அவ்வான்மாவை அறியமாட்டாதனவாகும். அவை போல ஆன்மாக்களெல்லாம் எங்கும் நிறைந்தவராகிய ஈசனாலே அறியப்படும். ஆனால் அவ்வான்மாக்கள் சிவனையறியாவாம். அறியத்தக்க சிவனே எல்லாவற்றையும் அறிந்து ஆன்மாக்களையும் அறிவித்து நிற்பான்.

ஈசன் யாவற்றையும் அறிபவன். யாவற்றுள்ளும் நின்று யாவற்றையும் இயக்குபவன். உலகிலுள்ள யாவும் அவன் நிலையுற்றுள்ள ஆலயங்கள். யாவும் அவன் ஆணைப்படி தோன்றியவை. அவனால் இயக்கப்படுபவை; அவனாணைக்குட் பட்டவை என்பதால் பேதமாயினும் அபேதம் என்னும் தத்துவங்களின் பிணைப்பே சைவ சித்தாந்தத்தின் அடிப்படையான தத்துவமென்பது விளங்குகிறதன்றோ?

உயிர்கள் உடலைப் பெறற்கும், அதற்குத் துணையாய் உலகமே தோன்றற்குங் காரணமாய் நிற்பது கன்ம மலமென்றாயிற்றன்றோ? இக் கன்மம்.....

* இதம் (நல்லது. தக்கது)
* அகிதம்(தீயது,தகாதது)

இரு வகைப்படுமென்று முன்னமே கூறப்பட்டுள்ளது. இவற்றுள் - மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் பிறர்க்கு நலம் செய்தலும், மறைகள், சமயநூல்கள், ஆகியவைகளில் செய்யக் கடவையென விதிக்கப்பட்டவைகளைச் செய்தலும், அவ்வண்ணமே மேற்படி நூல்கள் தவிர்க என்ற கன்மங்களைச் செய்யா தொழிதலும் இதமான (தக்க செயல்கள்) கன்மங்களாகும்.

**'அறஞ்செய விரும்பு,**
**ஐயமிட்டுண்,**
**நப்போல் வளை,**
**சக்கர நெறி நில்,**
**தந்தை தாய்ப் பேண்'**

என்பன போன்ற செய்யக் கடவதென விதித்து வகுக்கப்பட்ட அறச் செயல்களை வழுவாது செய்தலும்,

**'ஈவது விலக்கேல்,**
**கண்டொன்று சொல்லேல்,**
**உடையது விளம்பேல்,**
**ஔவியம் பேசேல்'**

என்பன போன்ற செய்யத் தகாதவை யென்று விலக்கிக் கூறப்பெற்றுள்ள கன்மங்களைத் தவிர்த்தலும் இதமாம்(தக்கதாம்). இதுவே நன்மை தருவதுமான செயல்களாம். இக் கன்மங்கள் (நற்செயல்கள்) ஈசனின் நல்லருளைப் பெறற்கு ஏதுவாகும். மற்ற மலங்களை நெருங்க வொட்டாது. மாயையைத் தவிர்க்க உதவும். பிறவியைப் போக்கிச் சிவப்பேற்றைச் சாதிக்கவல்ல துணையாகும்.

**அகிதமாவது** - பிறருக்குத் தீங்கிழைத்தல், மற்றுஞ் செய்யக்கடவை என வகுக்ககப்பட்டவற்றைச் செய்யாதிருத்தல், தவிர்க்கக் கடவையென வகுக்கப்பட்டவற்றைத் தவிர்க்காமல் ஏற்றலும் இயற்றலும் அகிதமாகும்.

இவ்வண்ணம் ஒருவன் செய்யும் நலந் தீங்குகளுக்குத் தக்க (இதாமகிதங்களுக்குத் தக) பலனாகச் சுகதுக்கங்களை (இன்ப துன்பங்களை) ஈசன் வழங்குகிறான். இவ்வின்ப துன்பங்களைத் துய்க்கத் தக்கதான பிறப்பையும் அளிக்கிறான் என்பதைக் கீழ்க்காணும் பாடலாலும் பொருளாலும் அறியலாம்:

"இதமகி தங்க ளென்ப
திகன்மன வாக்குக் காயத்
திதமுயிர்க் குறுதி செய்த
லகிதமற் றதுசெய் யாமை
இதமகி தங்க ளெல்லா
மிறைவனே யேற்றுக் கொண்டங்
கிதமகி தத்தா லின்ப
துன்பங்க ளீவ னன்றே!

(சிவ. சித் 2ஆம் சூத் பா எண்.13)

இதம் அகிதங்களென்று சொல்லப்படும் கன்மங்கள் மனோ வாக்குக் காயங்களா லுண்டாவது. அவற்றுள் இதமென்பது உயிர்க்கு உறுதியாகிய புண்ணியங்களைச் செய்தல். அகிதமென்பது அப்புண்ணியங்களைச் செய்யாமை. இந்த இதாகிதங்களை யெல்லாம் சிவன் தானே ஏற்றுக்கொண்டு அந்த இதாகிதங்கள் காரணமாகச் சுக துக்கங்களைக் கொடுப்பவன். ஆன்மா சுதந்தரவீனன் ஆதலாலும், கன்ம ஜடமாதலாலும் இவ்விரண்டையும் காரியப்படுத்துவோன் இறைவனாதலால் 'இறைவனே ஏற்றுக் கொண்டு' என்றார்.

இவ்வித புண்ணிய பாவச் செயல்களுக்குத் தக்க பலனாகப் பிறப்பெடுத்த ஆன்மா முறையே வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் பெறுகின்றது. பிறகு ஓரான்மா தான் ஈட்டிய இதாகித கன்மங்களுக்குத் தக்க சுக துக்கங்களைப் பெறுவதன்றி மீண்டும் மீண்டும் இப்பிறவிக் கடலிலேயே சிக்குண்டுக் கிடக்கவும் ஏதுவாகிறது. இவ்வண்ணம் சீவன் பிறவிக் கடலுக்குள் சிக்குண்டு கிடத்தற்கும் அதனின்றுங் கரையேறுதற்கும் அச்சீவனின் கன்மமே காரணமாயின் இறைவனொருவன் உண்டென்று ஏற்பது ஏனெனில் கீழ்க்காணும் செய்யுட்களாலும் அவற்றின் உரைகளாலும் அறியலாம்.

இறைவனிங் கேற்ப தென்னை
இதமகி தங்க ளென்னி
நிறைபர னுயிர்க்கு வைத்த
நேயத்தி னிலைமை யாகும்
அறமலி யிதஞ்செய் வோருக்
கனுக்கிர கத்தைச் செய்வன்
மறமலி யகிதஞ் செய்யி
னிக்கிர கத்தை வைப்பன்.

(சிவ. சித்.2ஆம்சூத். பா. எண்.14)

இதாகிதங்களை இறைவன் ஏற்பது யாது காரணமென்னில் காரணனாகிய சிவன் ஆன்மாக்களிடத்து வைத்த காருண்ய நிலைமையேயாம், இதமாகிய மிக்க புண்ணியங்களைச் செய்வோர்க்கு அனுக்கிரகத்தைச் செய்வான். அகிதமாகிய மிகப் பாவங்களைச் செய்பவர்களுக்குத் துன்பத்தைச் செய்வான்.

நிக்கிர கங்க டானு
நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்றம்
மடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
இக்கிர மத்தி னாலே
யீண்டற மியற்றி டென்ப
னெக்கிர மத்தி னாலு
மிறைசெய லருளே யென்றும்.

(சிவ. சித். 2 ஆம் சூத். பா. எண் .15)

சிவன், உயிர்களுக்கு அருள் செய்வதன்றித் துன்பம் செய்வதும் காருண்யமே ஆகும். அஃது எங்ஙனமெனில், அவரவரது பாவங் காரணமாக அவர்களைத் தண்டித்துக் குற்றங்களைப் போக்கி அச்சமுண்டாக்கிக் கிரமங்களைப் போதித்து இம்முறைமையாக இப்போது புண்ணியங்களைச் செய்யும் என்பன். ஆதலால் சிவன் செயல் எந்தக் கிரமத்தில் இருந்தாலும் அச் செயற்கு எப்போதும் அருளே காரணமாகும்.

தந்தைதாய் பெற்ற தத்தம்
புதல்வர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடிலு றுக்கி
வளாரினா லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம்
பார்த்திடிற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ
ஈசனார் முனிவு மென்றும்!
(சிவ.சித்.2ஆம் சூத். பா.எண். 16)

தாய் தந்தைகள் தாங்கள் தாங்கள் பெற்ற பிள்ளைகள் தங்கள் சொல்வழி வராவிட்டால் இளங் கொம்பினால் அடித்துப் பயமுறுத்திக் கொடிய விலங்கும் பூட்டுவர். ஊகிக்குமிடத்திவை எல்லாவற்றிற்கும் அன்பே காரணமாகும். சிவன் ஆன்மாக்களுக்கு நிக்ரகஞ் செய்வதும் எப்போதும் இம்முறைமைத்தேயாம்.

தானஞ்செய் பொருட ரித்தோர்
செய்தவர் தக்க செய்தி
யூனம்பி னுறவே காண்டும்
பலனுறு விப்பான் வேண்டு
மீனமில் செய்தி யீச
னிடும்பணி யிவைநாஞ் செய்தா
னூனங்க ளதிக நோக்கி
நுகர்விப்பின் வினைநோய் தீர,
(சிவ.சித்.2ஆம் சூத்.பா.எண்.-21)

தானஞ் செய்த பொருள், அதனைப் பெற்றவர், அத்தானஞ் செய்தவர் இவ்வகையாக வந்த கன்மங்கள் இவை எல்லாம் உடனே நாசமடைவதைக் கண்டோம். ஆதலால், பலன்களைக் கொடுப்பவன் ஒருவன் வேண்டும். விதிவசத்தான சாத்திர கன்மங்களெல்லாம் சிவன் ஆஞ்ஞாபித்த பணிவிடைகளாகும். இப் பணிவிடைகளை நாம் செய்யின் அவரவர் கன்மங்களின் ஏற்றக்குறைவைக் கண்டு இருவினையாகிய நோய் தீரும்படி புசிப்பிப்பான்.

உலகுடல் காரணங் கால
முறும்பல னியதி செய்தி
பலமிவை கொண்டு கன்மம்
பண்ணுவ துண்ப தானா
னிலவிடா விவைதாஞ் சென்று
நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா வறிவ னாணை
யணைந்திடு மருளி னாலே.
(சிவ. சித்.2ஆம் சூத்.பா.எண்.-22)

புவனமும் தனுவும் கரணமும் காலமும் அதனா லுறும் பலனும் அதனை வரையறுக்கும் நியதியும் இவற்றின் தொழிலும் ஆகிய இவற்றைக் கொண்டு ஆன்மாக்கள் கன்மம் புரிவதும், அக்கன்ம பலன்களைப் புசிப்பதும் ஆகிய இவையாவும் ஜடங்களாதலால் ஆன்மாவைச் சென்றடைய மாட்டா. ஆன்மாவும் சுதந்தரவீனன் ஆனதால் ஊகித்து நிறுத்திக் கொள்ள மாட்டான். ஆதலால் எண்ணிறந்த ஞானத்தையுடைய சிவன் தன் ஞான சத்தியானது கிருபையினாலே தனுவாதிகளையும் ஆன்மாவையுங் கூட்டிப் புசிப்பிக்கும்.

ஒழுக்க மன்பரு ளாசாரம்
உபசார முறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள்
வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவ டக்க
மறிவொடர்ச் சித்த லாதி
இழுக்கிலா வறங்க ளானால்
இறங்குவான் பணிய றங்கள்
(சிவ.சித். 2ஆம் சூத். பா.எண் -23)

*நல்ல நடத்தை, சிவபக்தி, சீவகாருண்யம், வேதாகமங்களில் கூறிய கர்மானுட்டானங்கள் (வினையாற்றுதல்), பெரியோரை உபசரித்தல், அப்பெரியோரை நட்டல், நல்லறிவு, குற்றமற்றதவம், சத்பாத்திரதானம், பெரியோரைத் துதித்தல், அவரை வணங்கல்,*

*சத்தியம், களங்கமற்ற துறவு, செருக்கில்லாமை, ஆகம அறிவுடன் அர்ச்சித்தல், அக்னி காரியம், கபில பூசை, சிவாலய தரிசனம்* முதலான தவறில்லாத நல்வினைகளைச் செய்யின் சிவன் அத்தருமச் செயல்களுக்கு அருள் செய்வன்.

மனமது நினைய வாக்கு
வழுத்தமந் திரங்கள் சொல்ல
வினமலர் கையிற் கொண்டங்
கிச்சித்தத் தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழும்
செயலற மானா லியார்க்கும்
முனமொரு தெய்வ மெங்குஞ்
செயற்குமுன் னிலையா மன்றே.
(சிவ.சித்.2 ஆம் சூத் பா. எண் -24)

மனமானது தியானிக்கவும், வாக்கு துதிக்கவும், மந்திரங்களை உச்சரிக்கவும், காயமானது பல மலர்களைக் கையிலெடுத்து, அவரவர் வழிபடு தெய்வத்தை அர்ச்சித்துக் கோபம் முதலிய குற்றங்கடிந்து வாழுஞ் செயலெல்லாம சிவ தன்மமாதலால் எத்தேவர்களுக்குங் காரணனான சிவனே எவ்விடத்தும் அவரவர்களது தியானாதி செய்கைகளுக்கு முன்னின்றருள் செய்வான்.

சிவனொருவன் உண்டு என்று ஏற்பதற்குத் தக்க காரணங்களை மேற்படி பாடல்களால் நன்குணரலா மன்றோ?

பகுத்தறிவுடன் கூடிய ஆன்மாக்களுக்குப் பிறப்பையீந்து நன்மை தீமைகளைத் தானறியும் ஆற்றலையும் அருளி, இதங்களை ஏற்றும், அகிதங்களைத் தவிர்த்தும், அவனருளுக்குத் தன்னைப் பாத்திரனாக்கிக் கொள்ளவும், அதனால் பிறவிக் கடலைத் தாண்டிப் பிறப்பிறப்பைத் தவிர்க்கவும், அளித்த ஓர் அரிய வாய்ப்பே பிறவியாகும்.

விகித கன்மங்களை வழுவாது ஏற்றுச் செய்தும், நிஷித்த (தீய) கன்மங்களை நெருங்கவொட்டாது தவிர்த்தும், அவனருளுக்குத் தன்னைப் பாத்திரனாக்கிக் கொள்ள ஈசன் அளித்த பிறவியாம் இந்த அரிய சந்தர்ப்பத்தைத் தக்க முறையில் பயன்படுத்திக் கொள்ளாமல் ஒரு

மூடன் பிரகிருதியின் பாசத்துள் பட்டவனாய்,

**'கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி'**

என்றது போலத் தனக்குக் கிடைத்த பிறவியாம் அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமல் புலன்களுக்கு வசப்பட்டவனாய் இங்கேயே கிடந்து உழல வழிதேடிக் கொள்கிறான்.

நன்மை தீமைகளையும் இதாகிதங்களையும் அறியக் கூடிய புத்தியைக் கொடுத்து, இருள் நிறைந்த வாழ்க்கையில் வழிகாண விளக்கெனச் சாத்திரங்களையும் இறைவன் ஈந்துள்ளான். இனி இவற்றைப் பயன்படுத்திக் கொள்ளல் ஓரான்மா செயற் கடவதைச் செய்தலேயன்றி ஈசனைப் பழிப்பதோ கன்மமே காரணமாதலால் ஈசன் யாதுக் கெனத் தருக்கித்தலோ தகாது. மேற்சொன்னபடி வினைப்பயனை அனுபவிக்குங்காலேனும்...

**'தன்னை நாடுவனோ?'**
**'தன்னை நினைப்பனோ?'**
**'தான் வகுத்த நெறிமுறையைக் கடைபிடிப்பனோ?"**

என்னும் நோக்கத்துடனேதான் இப்பிறவியை ஈசன் அளித்துள்ளான். இவ்விவரங்களை 305-ஆம் பக்கத்தில் காட்டப்பெற்றுள்ள செய்யுள்களால் அறியலாம். நம்மால் ஈசன் அருளுற நாம் நடக்க வேண்டும் என்னும் சரியை கிரியைகளையும் வகுத்துக்காட்டி,பாசத்தைக் களையும் உபாயத்தையும் கூறியுள்ளமை காண்க.

மேற்சொன்ன ஐவகைமலங்களுமே பாசமென்பவை யாயினும், ***ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதான சக்தி*** என்னும் இவ்வைவகை மலங்களுள் கன்மமும் மாயையும் திரோதான சக்தியில் அடங்கியவையாகும்; இத்திரோதான சத்திக்கே சிவசக்தி யென்றும், அருளென்றும் பெயர். மற்றுள்ள மலங்கள் இச்சிவசக்திக்கு அடங்கியும் அதன் பலத்தாலேயே செயலாற்ற வல்லவை.யாகின்றன. ஆகவே, இச்சிவசக்தியென்பது யாதென்றறிந்து அதன் செயல் யாது? அது எங்குக் கிடக்கிறது? என்ற உண்மைகளை அறிவோமானால் மலங்களை எல்லாம் அறிந்தவராவோம்.

திரோதானம் என்பது மறைவு, மறைத்தல், மூடல் எனப்படுவது மறைக்கும் சீலை, மூடுந்திரை எனப் பெயர் சொல்லில் பொருள்படும்.

திரோதாயி என்பது, தான் வேறொன்றை மறைப்பதல்லாது தானேயும் மறைந்து கிடக்கும் தத்துவமாம். திரோதாயியின் செயலால் மறைக்குந் திரையும் காணக் கூடாததாகும். மறைக்கப்படும் தத்துவமும் புலனாகாது. திரோதான சக்தியென்றும் சிவசக்தியென்றும் முன் குறிப்பிட்டது, இத் திரோதாயியைத்தான்!

ஆன்மாவினுட் புகுந்து மறைந்துள்ள இத்திரோதாயிதான் ஆன்மாவுக்கு அறிவுப் பெருக்கைச் சுரக்கும் ஊற்றாகும். அவ்வான்மாவின் கன்மத்தை அனுசரித்துத்தான் திரோதாயியின் வாயிலாய்ச் சுரக்கும் அறிவின் தூய்மையும் வாய்க்கும். கண்டதையும் கேட்டதையும் சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்து உண்மையைப் பிரித்து எடுத்து ஏற்றற்கும், தீமையைத் தவிர்த்தற்கும் இவ்வறிவுப் பெருக்கின் தூய்மையே காரணமாகும். இவ்வறிவின் பெருக்கோ திரோதாயியின் வாயிலாய்ச் சுரப்பதாகும். *திரோதாயியோ சிவசக்தியாகும். அவனே அருள் எனப்படுவன். அவ்வருளோ சிவனின்றித் தனித்திராது. சிவனோ அருளின்றி நிற்பவனல்லன்.*

(இவ்விடயம் பின்னர் வரும் 'அருளது சக்தியாகும்' என்னும் பாடலின் முதற்பகுதியின் உரையில் விளக்கப் பட்டுள்ளதைக் காண்க.)

அவ்வருளின் உதவியினாலேயே,

கருவியால் பொருளால் காட்டால்
காலத்தால் கன்மந் தன்னால்
உருவினால் அளவால் நூலால்
ஒருவனா லுணர்த்த லானும்
அருவனா யுண்மை தன்னி
லறியாமை நிற்ற லானும்
ஒருவனே அனைத்தி னாலும்
உணர்த்துவன் அருளி னாலே!

(சிவ. சித்.5 ஆம் சூத். பா . எண்-4)

தத்துவங்களாலும், விடயங்களாலும், தேயு முதலிய பூதங்களாலும். முக்காலங்களாலும், இரு வினைகளாலும், பருவுடலாலும், அளவைகளாலும், சாத்திரங்களாலும், வேறு ஒருவன் உணர்த்தலானும், அரூபியாகிய கேவலாவத்தையில் ஒன்றுமறியாது நிற்றலாலும் சிவன் ஒருவனே காரணமாகக் கருவி முதலியவற்றால் உணர்த்துவன்.

கருவியும் பொருளும் காட்டும்
காலமுங் கன்மந் தானும்
உருவமும் அளவு நூலும்
ஒருவரும் உணர்த்த லின்றி
அருவனா யகில மெல்லாம்
அறிந்தவை யாக்கி வேறாய்
ஒருவனே உயிர்கட் கெல்லாம்
உயிருமாய் உணர்த்தி நிற்பான்!

(சிவ.சித் 5 ஆம் சூத்திரம் பா. எண்.5)

மேலே சொன்ன கருவி முதலிய ஒன்பதாலும் உணர்த்தப்படுதலின்றி அரூபியாய் சர்வஞ்ஞனாய் சர்வகர்த் திருத்துவமும் உடையவனாய் (முற்றும் உணர்ந்தவனாய் எல்லா ஆக்க ஆற்றலும் உடையவனாய்) இவற்றிற்கு வேறுபட்டவனாகச் சிவன் ஒருவனே உயிர்க்குயிராய் இருந்து உணர்த்தி நிற்பன்.

மேலே கூறப்பட்ட பாட்டும் பொருளும் விளக்கியாங்கு ஒரு வகையானும் அறியக் கூடாது நிற்கும் சிவனாம் ஒருவனே அவ்வருளின் உதவியால் தூய்மையான அறிவுச் சுரப்பின் பெருக்கால் யாதேனும் ஒருமாயத்தாலோ அன்றிப் பல உபாயங்களாலோ உண்மையை (தத்துவத்தை) ஆன்மா அறியத் துணை புரிந்து உதவுவான். மற்றும்,

அருளது சக்தி யாகும்
அரன்றனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை யந்தச்
சிவமின்றிச் சக்தி யில்லை

மருளினை யருளால் வாட்டி
மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டும்
இரவியைப் போல வீசன்.

(சிவ. சித் 5ஆம்·சூத்திரம் பா. எண்.9)

சிவத்துக்கு அருள் என்பது சக்தியாகும். அவ்வருளையின்றித் தெருளத்தக்க சிவமில்லை. அந்தச் சிவத்தை யன்றிச் சக்தியில்லை. இக்கருத்து 312-ஆம் பக்கத்தில் வந்துள்ளதைக் கண்டு கொள்க.

ஆணவத்தைத் (மலங்களில் ஒன்று) தமதருளால் வாடச் செய்து நிலைபெற்ற ஆன்மாக்களுக்கு (சிவன்) அருளுவன். கண்களுக்குப் புலப்படும் இருளைச் சூரியன் தன் ஒளியால் போக்குவது போல.

ஆகவே, ஈசனது அருளைப் பெறுதற்கு உற்றவையென வகுக்கப்பட்ட ஒழுக்கச் செய்கைகளால் (சரியை, கிரியைகளால்) ஈசன் ஆன்மாவின்பால் இரங்க அதனால் அவனருளென்னும் திரோதாயியின் வாயிலாய் நல்லறிவு (சஞ்ஞானம்) சுரக்க, ஆன்மா அழியும் பொருட்களின் (அநித்தியப் பொருள்களின்) உண்மை நிலையை அறிந்து அவற்றைத் தனது இலட்சியமாக்காமல் மாற்றுவித்து, உண்மைப் (மெய்ப்) பொருளாம் ஈசனின் உண்மைத் தத்துவத்தை நன்றாய் அறிந்து ஏனைய மலங்களால் தீண்டப்படாதனவாய் (மலம் நீங்கிய காரணத்தால்) அமலனாய்ப் பிறவிக் கடலைத் தாண்டியவனாய்த் தில்லை வெளியில் கலந்து நிற்பன்.

அவ்வாறின்றி அகித (தீய, பாவச் செயல்களில்) கன்மங்களின் மீசுரத்தா லுற்ற அதர்மத்தின் ஆக்கம் (மறத்தின் பெருக்கம் மேம்பட்டு) மிகைப்பட்டு இருக்குமேல் அவ்வருளே ஏனைய மலங்களைக் கிளறி- அறிவைச் சேறாக்கிச் சேற்றில் புரளும் பன்றியைப் போல, ஆன்மாவைப் பவத்துடன் (பிறபிறப்பில்) பிணைத்துக் கட்டும் கயிறுபோல் செயலீட்டு மாதலின், இவ்வருளாம் சிவசக்தியை-உண்மையை மறைத்துச் சிவப்பேற்றைத் தடுக்கும் இயல்புடையதைப் பாசம் என்று அழைத்தது முற்றும் பொருந்துமன்றோ?

முதலில், சொன்ன விதத்தில் இவ்வருள் (சக்தி) துணை புரியுவாளேல், அவள் வாயிலாய்ச் சுரக்கும் தூய்மை நிரம்பிய அருளினால் உண்மையைத் தெரிந்து கொள்ள இயலும். அதன் விளைவாக ஈசன் ஆன்மாவின்பால் இரங்குவன். இவ்விரக்கம் மேலும் மேலும் பெருக,

தெரிந்துகொண் டோரொன் றாகச்
சென்றைந்து புலனும் பற்றிப்
புரிந்திடு முணர்வி னோடு
போகமுங் கொடுத்த யோனி
திரிந்திடு மதுவுஞ் செய்து
செய்திகண் டுயிர்கட் கெல்லாம்
விரிந்திடு முணர்வுங் காட்டி
வீட்டையு மளிப்பன் மேலோன்
(சிவ.சித்.5ஆம் சூத். பா.எண் )

ஒன்றொன்றாகத் தெரிந்து கொண்டு சென்று பஞ்சேந்திரிய வழி (ஐம்பொறிவழி) யால் அறியும் அறிவோடு போகத்தையுங் கொடுத்து யோனிகள் தோறும் உழலுந் தொழிலை (பிறப்புத் தொழிலை) யுஞ் செய்வித்துப் பக்குவச் செயலையுங் கண்டு ஆன்மாக்களுக்கெல்லாம் வியாபகமான (பரந்த) அறிவையும் கொடுத்து வீட்டையும் கொடுப்பன் மேலான சிவன்.

இவ்விதம் வீட்டைப்பெற உதவுங்கால் இத்திரோதாயிக்கு **'அருள்'** என்றும். பந்தத்தைப் பயக்குங்கால் **'திரோதாயி'** என்றும் பெயர். சித்தரின் முதற்கோட்பாடு என்ற முதல் அத்தியாயத்தில் வேதாந்தத்தில் சொன்னவாறு பிரம்மத்தின் தோற்றும் உரத்தின் (விட்சேப சக்தியின்) செயலால் இயங்கிய மூலப்பிரகிருதியின் பரிணாமத்தால் தோற்றம் பெற்ற உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் (இந்திரியங்கள், இந்திரியார்த்தங்கள் யாவுமே) இங்கு விளக்கப்பட்ட பாசம் என்னும் தத்துவத்தைச் சேர்ந்தவையே ஆகும்.

அந்தத் தோற்றுவிக்கும் உரத்தின் (விட்சேப சக்தியின்) செயலாலேயே உண்மை நிலையை அறிந்து ஆன்மா எல்லாத் தளைகளிலிருந்தும் (பந்தம் நீங்கி) நீக்கம் பெற்று வீடு அடைதல் (மோட்சம் பெறுதல்) கை கூடும். ஆகவே,

வேதாந்த பாகத்தில் ஏட்டுச் சுரைக்காய் என விளக்கிய தத்துவத்தின் அடிப்படையான உண்மையும், சித்தாந்தப் பாகமாகிய சித்தர்களின் மற்றொரு கோட்பாடு, என்ற இந்த அத்தியாயத்தில் தெளிவித்த உண்மையின் அடிப்படையான தத்துவமும் ஒன்றே யென்றும், பரிபாஷையும் முக்திபெறற்கு வகுத்த உபாயமும் மட்டுமே வேறுபட்டவை. (வேதாந்த பாகத்தில் ஞானமார்க்கமும், அறிவின் வழியும், சித்தாந்த மார்க்கத்தில் ஞான கன்ம சமுச்சய மார்க்கமும்-அறிவும் நல்வினை தீவினையும் கூடியதாலுண்டான சேர்க்கையால் ஏற்பட்ட வழியும் ) என்பதும் கவனிக்கத்தக்கது.

## பாச(பந்த) நிவர்த்தி- மோட்சப் பிராப்தி

இதை விளக்குமிடத்துப் பாசம் என்பது கயிறு என்றும், பந்தம் என்பது தளை அல்லது கட்டு என்றும் நிவர்த்தி என்பது நீக்கம் என்றும் பொருள்படும். ஆகவே கயிறு நீங்குதல் அல்லது கட்டு நீங்குதல் என்பது மோட்சம். மோட்சம் என்பது வீடு என்றும் பிராப்தி என்பது அடைதல் என்றும் பொருள்படுமாதலால், வீடடைதல் என்று பொருள் பயக்கும்.

இது குறித்து வேதாந்தமும் சித்தாந்தமும் கொண்டுள்ள கருத்தை ஈண்டுக் கூறுபடுத்திக் காண்போம்.

**வேதாந்திகளின் கருத்து:** வேதாந்தப் பகுதி ஞான மார்க்கத்தை (அறிவுப் பாதையை) மோட்சோபாயமாக (வீடடையும் வழியாக) வகுத்துள்ளது. உலகம் மித்தை யென்றுணராது (உலகம் பொய்யானது) அவித்தையின் (அஞ்ஞானத்தின்- அறியாமையின்) விளைவாய் **'அகம் பிரம்மாஸ்மி'** என்னும் உண்மையைக் காணக் கூடாமையே **பந்தம்** (கட்டு அல்லது பாசம்). ஞானமுண்டாகவும் அதனால் அஞ்ஞானம் நீங்கும். அப்போது 'அகம் பிரம்மாஸ்மி' என்ற உண்மை விளங்கும். அப்போது 'பந்தம்' தானே நீங்கவும் **'பிரம்மாத் மைக்கியம்'** (பிரம்மத்துடன் ஆன்மா ஒன்றுதல் என்னும் இரண்டற்ற நிலை) என்ற நிலை நிலைத்துவிடும். இதுவே முக்தி, மோட்சம், ஆன்மைக்கியநிலை, அத்துவிதநிலை, வீடு என்று கூறும் வேதாந்திகள் யோக

சாதனைகளையும் ஞான மார்க்கத்தையும் ஏற்கின்றனர். (*வேதாந்திகளை ஞான மார்க்கத்தினர்* என்பர்.)

**சித்தாந்திகளின் கருத்து-** இது கன்ம மார்க்கத்தையே வலியுறுத்துகிறது. ஆயினும் ஞானத்தை அறவே மறுப்பதில்லை. ஆகவே, சித்தாந்தமென்பது 'ஞான கன்ம சமுச்சயம்' என்னும் வழியை வகுத்துள்ளதாய்க் கூறலாம். இவர்கள் ஜபம், தியானம், சரியை, கிரியை என்னும் மார்க்கங்களை ஆதரித்து ஏற்கின்றனர். இவ்வுபாயங்களால் ஈசனின் நல்லருள் பிறக்கும். அவ்வருளால் மலங்கள் நீக்கம் பெறும். அவ்வாறு மலநீக்கம் பெற்ற ஆன்மா பந்தம் விலகிவிட்டபடியால் 'சிவோகம்' என்னும் தனதுண்மை நிலையை உணர்ந்து சிவப்பேறு பெறும். (பந்தம் நீங்கிவிட்டதால்) சித்தாந்தம் பக்தியையும் ஒருவாறு ஏற்கிறது. சித்தாந்திகள் ஜபம், தியானம் என்னும் கிரியைகளில் பற்றுக்கொண்டுள்ள காரணத்தால் பக்தியையும் ஒருவாறு ஏற்கின்றனர் என்று கொள்ளக் கிடக்கிறது. இவ்விரு சாராரும் குருவின் துணையை இணையற்ற சாதனமாக ஏற்றுப் போற்றுகின்றனர்.

ஆயினும், சித்தாந்திகள், உலகு உள்ளது; மித்தை (பொய்) அன்று என்று ஏற்று- **'சத்'** என்னும் சொல்லால் பதியையும், **'அசத்'** என்னும் சொல்லால் பாசமாகிய உலகத்தையும் **'சதசத்'** என்னும் சொல்லால் ஆன்மாவையும் அழைத்துள்ளார்கள். இப்பெயர்களின் விவரங்கள் சிவஞான போதத்தின் 6-7 சூத்திரங்களில் விளக்கப்பட்டுள்ளன.

வேதாந்திகளும் சித்தாந்திகளும் ஒருமனத்துடன் ஏற்கும் மற்றொரு மார்க்கமும் உண்டு. அதுவே சித்தர் வகுத்தவற்றுள் சிறந்தது. இங்கு அப்பாகம் *'சித்தரின் தனிச் சிறப்பு'* என்னும் பெயரால் அழைக்கப்பெறும். இதைக்கண்டு மிரளற்க.

## உ. சித்தரின் தனிச்சிறப்பு

மருத்துவம் பயில வந்துற்றவர்களுக்கு இதுகாறும் சொல்லி வந்த வேதாந்தமும் சித்தாந்தமும் வேண்டுவனவோ என்று சற்று ஆய்வோமாக.

உலகில் கண்கூடாகும் பொருள்களை விடுத்து மனத்துக் கெட்டாததென்ற பொருளைப்பற்றிய ஆய்விலும், பயிற்சியிலும் காலத்தைக் கழித்தற்றகுமோ? என்று சிலர்க்குத் தோன்றலாம்.

…னிதனாகப் பிறந்தவனுக்கு அறிவு மட்டுமே உண்டென்றும், தனது புலன்களால் அறியப்படுவது அல்லாது வேறொன்றும் அதற்கில்லையென்றுஞ் சொல்ல முடியாது. அறிவு மட்டுமின்றி உணர்ச்சியும் பெற்றவன் மனிதன். அறிவிற்கு விடயமான பொருள்களைப்பற்றிய ஆய்வுகளால் மனிதனுக்கு ஓரளவு மட்டுமே ஆற்றல் ஏற்படும். ஏனைய உணர்ச்சிகளுக்கு விடயமானவற்றைப் பற்றியும் அறிந்தாலன்றி மனிதனின் ஆற்றல் முழுவதும் முடிந்ததாக மாட்டாது. கடவுளின் வழிபாட்டில் ஈடுபட்டு பக்திப் பரவசமாய் இருக்கும் ஒருவனின் மனத்திலுதிக்கும் உணர்ச்சிகளை எவ்வளவை யான் நிச்சயிக்க முடியும்? மருத்துவத்தால் மாற்றவியலாத கொடிய நோய்களுங் கூடக் கடவுள் வழிபாட்டினால் குணமாயினவென்று மேனாட்டு விஞ்ஞான வாதிகளே ஒப்புக் கொள்கின்றனர். ஆகவே, ஐயறிவிற்கும் புறம்பான விடயங்களுமுண்டு. அவற்றிற்கும் நமக்கும் சம்பந்தமுண்டு. இவ்விடயங்களின் ஆராய்ச்சி, பயிற்சிக் கிரமங்கள் முறையே வேதாந்தமும் சித்தாந்தமும் ஆகும்.

ஒருவகையில் வேதாந்தமும் சித்தாந்தமும் உபயோகமான விடயங்களாய் இருப்பினும், ஒருகாலத்தில் இச் சாத்திரங்கள் பயன் பெற்றிருப்பினும் இன்றைக்கு இச்சாத்திரங்களாலாவது ஒன்றுமில்லை யென்று வேறு சிலர் கூறலாம்.

மேனாட்டு விஞ்ஞானிகள் சில நாள்களுக்கு முன் இவ்வாறு கூறிவந்தனர். அவர் சொல்லைக் கேட்டும், விஞ்ஞானத்தின் பெருக்கால் வாழ்க்கையில் கிடைக்கப்பெற்ற வசதிகளைக் கண்டு பிரமித்தும் நம்முள் ஒருசிலர் விஞ்ஞானமே போற்றி ஏற்கத் தக்கதென்றும், விஞ்ஞானம் விளக்காத விடயமே இல்லையென்றும் வேதாந்த சித்தாந்தங்களில் காலத்தை வீணாக்குதல் மதியீனம் என்றும் சொல்லி வந்தனர்.

ஆனால் இன்றோ அதே மேனாட்டு விஞ்ஞானிகள், "தமது ஆராய்ச்சிகளின் முடிவினால் கிடைக்கப் பெறுவது யாதுமில்லையென்றும் தமக்கும் தமது விஞ்ஞானத்துக்கும் எட்டாத தத்துவமொன்று உண்டென்றும், அது உயிர்ப் பொருளாகவே இருத்தல் வேண்டுமென்றும், அதன் வாயிலாகவே உலகத்திலுள்ள யாவும் விளைந்தனவென்றும், அப் பொருளையே ஆதாரமாய்ப் பெற்று உலகம் நிலைத்திருக்கிறதென்றும், தமது ஆராய்ச்சியாலும், பரிசோதனைகளாலும் கிடைக்கப் பெறுவதாயும், அப்பொருளே மெய்ப்பொருளென்றும்" தெளிந்தெழுந்து தமது பழைய கொள்கைகளை விட்டு வேதாந்த பரமான மேற்சொன்ன கொள்கைகளையேற்று அம்மெய்ப் பொருளையறிய வழி யாது? என ஆராய்ச்சி நடத்தி வருகின்றனர்.

வேறு சிலர், மேற்சொன்னதே போல் ஒரு மெய்ப்பொருள் தத்துவத்தை ஏற்று, அந்தத் தத்துவமே சூரிய மண்டலத்துக்கு அப்பாலும் ஓங்கி நிற்பதாயும் அப்பொருளின் ஆணையை மறுக்க இயலாது, எல்லாச்சேதன அசேதனப் பொருள்களும் கீழ்ப்படிந்து நடப்பதாயும் அப்பொருளின் ஆணையாலே சூரிய மண்டலத் திலுள்ள கிரகங்களுக்குள் காணப்படுகின்ற பரஸ்பர சம்பந்தம் நிலவுகிறதென்றும் இன்னும் இப்பொருளை ஏதோ ஒருவகையில் உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளுடனும் தொடர்புற்று இருப்பதாலேயே உலகத்தில் சட அசடப் பொருள்கள் யாவற்றிற்கும் ஒருநிலை ஏற்பட்டதன்றி ஒவ்வொன்றும் தனது பிரத்தியேக தர்மத்தைப் பெற்றிருப்பதாயும், இவற்றைத் தமது விஞ்ஞானத்தின் வாயிலாக, தாம் அறிவதாகவும் சொல்லுகின்றனர்.

விஞ்ஞானமும் மருத்துவமும் வல்லவர்களுள் சிறந்தவர்கள் ஒரு மதமும், மதாசாரங்களுமில்லாது கேவலம் விஞ்ஞானத்தால் மட்டும் ஆகக் கிடப்பது ஒன்றுமில்லை யென்று வலியுறுத்துகிறார்கள். இவ்விதமான போக்குகள் வேதாந்த சித்தாந்த மார்க்கங்களல்லாது வேறு யாதென்று சொல்லுவது? அவ்விதம் மேனாட்டு விஞ்ஞான வித்தியா திலகங்களெல்லாம் ஒருமுகமாக ஆஸ்திக புத்தியுடன் வேதாந்த சித்தாந்தங்களையும் மிகமிக மெச்சி ஏற்கவரும் இக்காலத்தில் நம்நாட்டிலுள்ள ஒருசிலர் பழைய கருத்துகளை மாற்றிக்கொள்ளாது, மேனாட்டினரின் இன்றைய கொள்கைகளை அறியாமலும், ஆயினும், தானே அன்னாரின் வாரிசுகளெனக் கருதி நமது சாத்திரங்களையும் வேதாந்த சித்தாந்தங்களையும் குறைகூறுங் குணத்தைக் கைவிட்டாரில்லை. இவ்விதமான விடயங்களை எல்லாம் நமது இந்திய மருத்துவ சஞ்சிகையில் (Journal of Indian Medicine) அவ்வப்போது பிரசுரித்து வருகிறார்கள். அதன் வாயிலாக வேதாந்தமும் சித்தாந்தமும் விஞ்ஞானமும் தாம்பினுட் சேர்ந்துள்ள பிரிவுகளெனக் காணலாம். ஆகவே, சித்தர்களின் முதற் கோட்பாடு 'சித்தர்களின் மற்றொரு கோட்பாடு' என்று இதுவரை கூறப்பட்ட விடயங்கள் விஞ்ஞானத்துக்கும், அதைத் துணைச் சாத்திரமாய் ஏற்ற வைத்திய சாத்திரத்துக்கும் மிகமிக அவசியமும், முற்றும் உபகாரமும் ஆன சாத்திரங்கள் என்பதை யாரும் தவிர்க்க முடியாது.

மற்றும், சித்தர்களின் முதற் கோட்பாடு என்ற பகுதியில் பகர்ந்த விடயங்கள் வறட்டு வேதாந்தமா? ஆன்மா, ஈசன், உலகம் இவற்றைப் பற்றிய விளக்கங்கள் ஒரு புறமிருக்க, இப் பாகத்திலன்றோ பிரகிருதியின் விவரணையாகத் தன்மாத்திரைகள், அவற்றினிடமாகப் பஞ்சீகரண விதிப்படி உண்டாகும் பூதங்கள், இன்னும் இந்திரியங்கள், இந்திரியார்த்தங்கள், இன்று மேனாட்டினரின் ஆராய்ச்சிகளுக்கு இலக்காகிய பஞ்ச கோசங்கள், முக்குணங்கள் என்பன போன்ற அநேக அரிய விடயங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. இவ்விடயங்களன்றோ வைத்திய சாத்திரத்துக்குத் துணைச் சாத்திரமாக வல்லவை. வேதாந்த சாத்திரமென்ற பேரைக் கேட்ட மாத்திரத்தில் அதற்கும் மருத்துவ சாத்திரத்திற்கு யாது சம்பந்தம் எனல் தகுமோ? மருத்துவ சாத்திரத்திற்கு இதுவுமோர் துணைச்சாத்திரமென்பதை மறுக்கமுடியாது.

'சித்தர்களின் மற்றொரு கோட்பாடு' என்கிற இந்த இயலில் கண்டுள்ளவைகளோ எனில், ஆன்மா, ஈசன், உலகு இவற்றின் தத்துவங்களேயன்றி அறம், வினை, இன்பம், துன்பம் முதலியவைகளுக்கும் பிறவிக்கு மட்டுமன்றி, வாழ்க்கைக்குமுள்ள சம்பந்தம் என்னும் இவற்றை வகுத்துக்காட்டி ஒழுக்கம், செய்கை (சரியை, கிரியை)களின் பெருமையை விளக்க ஒரு நெறியை வகுத்துக் கடைப்பிடித்தற்கு ஏற்றதென விதித்துமுளது. அளவை நூல் போன்ற துணை நூல்களோடு கூடியுள்ளதால் சித்தாந்த சாத்திரத்தின் பயிற்சியாலுண்டாகும் பலன் கேவலம் விஞ்ஞான சாத்திரமும், மருத்துவ நூல்களும் படிப்போர்க்கு மட்டுமன்றி, நல்வழிப்பட்டு நன்னெறியைப் பற்ற விரும்பும் யாவர்க்கும் பயன் தருவதாகும்.

*ஆத்யாத்மிகாதி* (ஆதியாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தெய்வீகம் என்பவை) மூவகை துக்கங்களினின்றும் விடுபடுவதற்கு முயல்வது மனிதனின் முக்கியமான நோக்கமாகுமென்பதில் அபிப்பிராய பேதம் இருக்க முடியாதன்றோ?

முக்தி பெறுவதே துக்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்தலாகும். இதற்கு ஞான, யோக, மார்க்கங்களை வேதாந்த பாகம் வகுக்கும். சாங்கியம், தரிசனம் ஆகியவை இதற்குத் துணை சாத்திரமாகும். இது அத்துவைதத்தைப் பற்றி நிற்கும்.

சித்தாந்த சாத்திரம் சரியை, கிரியைகளை முக்கிய மார்க்கமென வகுத்தது. ஆயினும் ஞான பாகத்தை அறவே விடாது ஏற்றும் இருப்பதால் ஞான கன்ம சமுச்சயமே முக்திக்கு மார்க்கமென வகுத்துள்ளது. இதனாலும் வேறு பல காரணங்களாலும் இச்சித்தாந்த பாக அடிப்படையான தத்துவங்களில் விசிட்டாத் துவைதத்தையே விளக்குவதாகத் தோன்றுகிறது. மற்றும் நல்வழி நன்னெறிகளைப் புகட்டியும், யாவரும் அவன் மக்கள்; ஆகவே, எல்லோரும் சகோதரராவர் என்ற கொள்கையை முற்றும் ஏற்று அதற்கனு குணமாகவே சிந்தனையும் வாக்கும் செயலும் ஆற்றப் பயின்று மனித வர்க்கத்தையே தேவர் குழாமாக்கவும் மண்ணுலகையே விண்ணெனச் சிறப்பிக்க வல்லதாகிறது இந்தச் சமயவழி. அதனால் மக்களுக்குள் நிலவும் பரஸ்பர (ஒருவரோடொருவர்க்கு) பற்றுதல் வளரும். துவேஷம்

(வெறுப்பு) மறையும். ஒருவன் தனக்கில்லையென்று தவிர்த்தேனும் ஒரு பொருளைப் பிறர்க்கு உதவுவதில் பரிபூரண திருப்தி (முழு மன நிறைவு)யைக்காணும் மனநிலையைப் பெறுகின்றான். எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டுமென்னும் மனமுடையவனாய் எனக்கொன்றும் வேண்டுவதில்லை யென்றிருக்கிறான். நான், எனது, எனக்கு என்னும் பாவம் அறவே ஒழிந்து விடுகிறது. ஈசனைத் தொழும் நேரத்தும் இவன் வேண்டுவது யாது ?

"அன்பர்பணி செய்ய வென்னை
ஆளாக்கி விட்டு விட்டால்,
இன்பநிலை தானேவந்
தெய்தும் பராபரமே" - தாயுமானவர்

பேரின்பம் தானேவந் தெய்துமாம்! என்ன ஆச்சரியம்! அன்பின் பெருக்கால் அன்பருக்குத் தொண்டு செய்வதே தனது மேலான கடமை எனக் கருதும் மனோநிலைதான் என்ன? இவ்விதம் அன்பு எங்கும் பரவி நிரம்பியும் நிற்குங்கால் இவ்வுலகமே சுவர்க்கத்தினும் மேலானதாமன்றோ? அவ்வித மனோ நிலை பெற்ற மக்களே அவனியிலுளரென ஆகுங்கால் மனிதன் நோக மனிதன் வாழமாட்டான். அம்மனநிலை பெற்று சமூகத்தில்....

"இருக்குமிடந்தேடி என் பசிக்கு அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்பேன்"

என்ற பாவம் ஒருவரிடத்தில் தோன்றியதில் ஆச்சரியமில்லை யன்றோ? அஃதேயன்றி. தன்னைப்பற்றிய கவலை ஒரு தனிநபருக்கும் ஏற்பட நியாயமிராது. அப்பொழுது ....

'முட்ட முட்டப் பஞ்சமே யானாலும்
பாரமவனுக்கு...'

'அன்னாய் நெஞ்சமே அஞ்சாதே நீ'

என்ற மனநிலை தானே வந்து கூடும். அஃதெப்படி யென்றால், ஒவ்வொரு மனிதனும், எனது, உனது, யான், நீ என்பதே இல்லை. யாவும் ஈசனுடையது. யார்எதைச்செய்யினும் அது ஈசனின் அருளால் கிடைத்த வசதிகளைக் கொண்டும், ஈசனருளிய ஆற்றலாலுமே செய்யப் படுவதாகும். ஆகவே, செய்பவன், செய்விப்பவன் யாவும் ஈசனே.

மனிதன் கேவலம் ஒரு கருவியளவிலே தான் ஈசனின் செயற்கு உதவுகிறான். இவ்வண்ணஞ்செய்யும் கருமமும் ஈசனின் பணியே. அதனாலுண்டாகும் பலனும் அவனிச்சையைப் பூர்த்தி செய்யவே. ஆகவே, *நான், எனது, எனக்கு* என்பவை நேர்மையில் படா என்னும் தத்துவத்தில் ஊன்றி நிற்பன. ஒரு சமூகமே இவ்வித மனப் பண்பு பெற்றதாகும். பிறருக்கு ஈதலே தனது இன்பம் என எண்ணி (தனக்கு இல்லையேனும்) பிறருக்குத் தந்து உதவுவார்கள். அதையும் அன்புடன் ஈவர். தனது இளகிய மனத்தினால் ஏனைய மக்களின் இன்னலைப் போக்கும் வழியாய் இறைவனின் இரக்கத்துக்கு இலக்காவர். ஆகவே இங்கு வாழுங்காலத்து இவ்விதமாகவெல்லாம் அறம் ஈட்டிப்பின் ஈசனின் அளவிலா அருட்பெருக்கால் முன் சொன்னதுபோல் பந்தத்தைக் களைவர்.

ஞானயோக மார்க்கத்தைக் கடைபிடித்திடினும் சரி ஞானகன்மசமுச்சய மார்க்கத்தைக் கடைபிடித்திடினும் சரி, வாழ்நாள் முழுவதும் பல்வேறு கஷ்ட சுகங்களைப் பொறுத்தும் விரதங்கள் அநுட்டானங்கள் முதலியவற்றை அநுட்டித்து வருவதெல்லாம் இந்தச் சென்மத்துக்குப் பிறகு (இறந்தபின்) கிடைக்குமென்று சொல்லப்படும் ஒரு முக்தி பேற்றுக்காகவன்றோ?

மற்றும், ஞானயோகம் புரிவதும், ஞான கன்ம சமுச்சய மார்க்கத்தில் விதித்த அநுட்டானங்களை அநுசரிப்பதும் காயக் கிலேசத்தைத் தருபவை. இம்மையில் சகிக்க முடியாத கிலேசங்களைச் சகிக்கும்படி விதிப்பது, மறுமையில் சுகம் பெறலாமென்றால் யாருக்கேனும் உற்சாகம் பிறக்குமா? மற்றும் மேற்சொன்ன காயக்கிலேசங்களைப் பொறுத்துக்கொள்ளும் சக்தி, இச்சரீரத்துக்கு வேண்டாமா? பசி, பிணி, மூப்புத் துன்பங்கள் முதலில் நீக்கப்படுமேல் அல்லாது, நேராமல் தடுக்கப்படுமானால், *சரியை, கிரியைகளையோ இயம, நியம, ஆசன, பிராணாயாம, பிரத்தியாகார, தாரண, தியான, சமாதி*களைப் பயில இயலும், ஆகவே முதலில் இச்சரீரத்தை நோயற்றதாயும், வன்மையுற்றதாயும் செய்து கொள்ள வேண்டும். அப்போது மேற்சொன்ன வழிகளில் ஒன்றை ஏற்று அதில் விதித்துள்ள வழியைக் கைப்பற்றலாம். ஆகவே, முக்தியைத் தரவல்ல முயற்சிகளைச் செய்யவல்ல வன்மையுள்ளதாய், இவ்வுடலை மாற்றுவதெங்ஙனம் என்ற கடா(வினா) பிறக்குமன்றோ!

அதற்குத் தரமாகத்தான் *ஈசேரசுர தரிசனம்*- அஃதாவது *இரசேசுர தரிசனம்* வகுக்கப்பட்டுளளது.

## ஊ. சித்தரின் கண்மணி.

வீடுபெற அனுட்டிக்கத் தக்கவையென வகுக்கப்பட்ட வழிகளை நெறியுடன் கடைபிடித்து நடத்த, சுகமும், உடல் வன்மையும் வேண்டியது அவசியமாகும். 'சுவரின்றிச் சித்திரம் வரைய முடியுமா? உலகில் காலி, கன்று, வீடு, வாசல், கார்முகில், முடி, களத்திரம், ஆடு, மக்களென்பர்' என்னும் பல்வகைச் செல்வங்கள் உண்டு. மனிதன் இவற்றையெல்லாம் முயற்சிக்கும் இயல்பினை உடன்பிறந்ததாகப் பெற்றுள்ளான். இச்செல்வங்களெல்லாம் நீடித்தோ நிலைத்தோ இருப்பவையல்ல. இதை யாவரும் மறுக்காமல் ஏற்பர். ஆகவே இவ்விசாரணையை விட்டு மேலேயுள்ளதை ஆராய்வோம்.

குறிப்பிட்ட ஒரு மனிதன் மேற்சொன்னது போன்ற எல்லாச் செல்வங்களையும் பெற்றிருப்பினும் தான் பெற்றது போதாதென அவற்றையே மேன்மேலும் பெற ஆசைப்படுகிறான். அதற்காகப் பெருமுயற்சியும் செய்கிறான். எவ்வளவுதான் இச் செல்வங்களைப் பெற்றபோதிலும் போதுமென்ற மனம் சற்றுமுண்டாவதில்லை, தான் பெற்ற செல்வம் போதாதென்ற எண்ணம் அவன் நினைவினின்றும் நீங்குவதில்லை. ஆகவே, இச் செல்வங்கள் யாவற்றிற்கும் **'நிறைவற்ற குறைவுற்றவை'** என்ற குற்றம் உண்டென்பது தெளிவாகிறது. ஈசன் அருளோவெனில் குறைவற்றது; நிறைவுற்றது. அவ்வருள் மட்டும் ஒரு சிறிதேனும் கிடைக்கப் பெற்றவன் மேற்சொன்னவை போன்ற செல்வங்களேயன்றிப் புருடார்த்தங்கள் யாவற்றையும், மற்றும் தான் கோரினவை, கோராதவை பலவற்றையும் அளவு கடந்து பெறக்கூடும். இதற்கு உதாரணங்களும் மேற்கோள்களும் எண்ணிறந்தவையுண்டு. குறைவற்றதும், நிறைவுற்றதும் நிலைபெற்றதுமான ஓர் உண்மைச் செல்வம் ஈசனின் அருட்செல்வமாகும். இப்பெருஞ்செல்வத்தைப் பேறு என்றும் ஈசனின் அருட்பெருஞ் செல்வமென்றும், சிவனருட் செல்வமென்றும், சிவப்பேறு என்றுங் கூறுவர்.

இவ்வருளைப் பெறுதற்குற்ற உபாயமென வகுக்கப்பட்ட வழியில் நெறிபிறழாமல் கடைபிடித்து ஒழுகுவதால் நிச்சயமாக இப்பேறு கிடைக்கும் என்றுன்னியதால், இவ்வழியையும்-இந்நல்வழியையும்-இந்நெறியையும்-இந்நன்னெறியையும் கடைபிடித்தொழுகுதலே பெருஞ் செல்வமெனக் கருதியதில் குற்றமென்ன? அவ்விதம் கடைபிடித்து ஒழுகுவதற்கு இன்றியமையாத முதல் சாதனமாவது நோயின்மை. நோயற்ற வாழ்வுண்டேல் மேலே கூறப்பெற்ற உபாயங்களை அனுசரித்து ஒழுக இயலும். ஆகவே,

* **முதற்படி நோயற்ற வாழ்வு.**
* **இடைப்படி நல்வழி நன்னெறிகளைக் கடைபிடித்தல்.**
* **பிறகு கடைப்படியாக வீடு பெறல் வந்து கூடும்.**

இவற்றுள் முதற்படி எவ்வளவு முக்கியமென்பதை மிகைப்படுத்தி உரைக்கவே முடியாது. அது சித்தித்து விடுமானால் ஏனையவை சித்தித்துவிட்டதாகவே சொல்லலாம். அது சித்திக்கவில்லையேல் ஏனையவற்றைப் பற்றிச் சிந்தித்தலே அவசியமில்லை. ஆகவே, **'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'** என்றதன் பொருள் எம்மட்டும் உண்மையென்று அறியக் கூடுகின்றதன்றோ?

பிரகிருதியின் பரிணாமத்தாலாக்கப்பட்ட ***உடு, கோள்கள், மதி, ஞாயிறு, கால், தீ, திசைகள், பெரும்பொழுதுகள், சிறுபொழுதுகள்*** முதலியவற்றின் நிலை மாறுதலுக்கு இணங்க இவ்வுடலிலும் பிரகிருதியின் செய்கைகளால் மாற்றங்கள் ஏற்பட்டே தீரும். இவற்றைத் தவிர்க்கவே முடியாது.

ஆகவே, அப்பிராகிருதமான தத்துவங்கள் நிறைந்த பொருள்களால் இவ்வுடலின் அமைப்பிலுள்ள பிரகிருதியின் விளைவான பொருள்களின் தத்துவங்களை மாற்றியமைத்துப் பிராகிருதப் பொருள்களுக்கு இயல்பான தன்மையை மாற்றிடல் வேண்டும். அப்பொழுது பிராகிருத பொருள்களுக்கு ஏற்படும் பசி, பிணி, மூப்பு முதலான துன்பங்கள் இவ்வுடலையணுகா. இதற்குற்ற

மார்க்கந்தான் இரசேசுர தரிசனத்தில் கூறப்படுவது. இம்முறையின் ஈடுபாடுதான் சித்த மருத்துவத்துக்கு அடிப்படையாகும். இதுவே இம்முறையின் தனிச் சிறப்புமாகும்.

இரசம், பாதரசம், பாரதம் என்னும் பொருள் சிவ வீரியமெனச் சித்தர்கள் கருதுகின்றனர்.ஒரு பெரிய ஆலமரம் எவ்விதம்.. *'தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினும் நுண்ணிய வித்தினுட் கிடக்கின்றதோ'* அவ்வண்ணமே சிவனும் இப் பாரதத்தினுட் கிடக்கின்றான் என்பது மறையோதி யுள்ளோரின் ஒரு சாராரும், சித்த மருத்துவம் பயின்றோர் பலரும் ஒருமுகமாக ஏற்றுள்ளனர்.

அவ்வண்ணமே, அப்பிரகம் பார்வதியின் (சக்தியின்-சிவசக்தியின்-அருள் தேவியின், ஜகன் மாதாவின்-ஆன்மாக்களுக்கு மோட்சப் பேற்றை ஈட்டிடும் பராசக்தியின், திரோதாயியின்) வீரியம் என்றும் தெரிந்துள்ளனர்.

இரசம், அப்பிரகம் இவ்விரண்டையும் கைபாக செய்பாக மறிந்து தக்கபடி ஒன்றாக்கிடின் (இணைக்கின்) அதனுள் சிவசக்தி (சிவனும் அருளும்) இணைப்புண்டாமன்றோ? சிவனும் அருளும்-அவர்கள் இருவரின் வீரியமும் ஓரிடத்தில் கட்டுண்டுக் கிடக்குமல்லவா? இவ்விதம் தயாரிப்பதற்கு, கேவலம் சடப்பொருள்களின் தத்துவங்களை மட்டும் ஆய்ந்தறிந்தவரால் சாதிக்க இயலாது. கேவலம் வேத வேதங்களைப் பயின்றவர்களாலேயும் இயலாது. மருத்துவ நூல்களைப் பயின்ற வர்களாலேயும் இயலாது. இப் பல்வேறு துறைகளிலும் பரிபூரண ஞானம் பெற்றவர்களுக்கும் பிரகிருதியின், மிகமிகச் சூக்குமமான நிலைகளையும் பரிணாமத்தின் பேதங்களையும் அவ்வண்ணமே அப்பிராகிருத பொருளான சுத்த சத்துவமயமான அருளுடன் கூடிய சிவத்தின் தத்துவத்தையும் அறிந்தவரும் இவ்விரு கோடி களுக்குமுள்ள பிணைப்பின் சூக்குமங்களையும் அறிந்து அணிமாதி சித்திகளையும் சுவைத்துத் துப்பிய சித்தர்களின் சூக்கும திருட்டிக் குத்தான் மேற் சொன்ன முறைப்படி மேற்கூறிய இரு பொருள்களையும் ஒன்று சேர்த்துப் பயனளிக்கவல்ல நிலையில் வழங்க இயலும்.

இச்சித்தர்கள் யாவர்?' எவ்வித சக்தி வாய்ந்தவரென்றும் சுருக்கத்தில் அறிய வேண்டுமன்றோ?

சித்தரென்பவர் ஆன்ம வித்தையில் சித்திபெற்றவர். அகத்தியரைத் தலைவராகக் கொண்ட பதினெண்மர். தமிழ் மக்களிடையே, தமிழ் கூறும் தொல்லுலகில் தோன்றியவர்கள். பிரம்மம் முதல் கீட மீறான எல்லாச் சேதனா சேதனப் பொருள்களின் தோற்றம், நிலைபேறு, மறைப்பு முதலியவைகளையும் ஒவ்வொன்றின் இயல்பு, வினை, ஆற்றல் முதலிய பெருமைகளையும் பற்றிய நுணுக்கங்களை நன்கு அறிந்தவர். பிணிகள் யாவற்றையும் வெகு எளிதில் வேருடன் நீக்கும் உபாயங்களையும் பற்பல காய கற்ப மென்னும் ஒப்பற்ற அரிய வித்தையின் இரகசியங்களையும் திறம்பட அறிந்தும் தம் சீடர்களுக்குப் போதித்தவர்கள்.

பாகத்தினாலும்,யோகத்தினாலும் திரவியங்களிலுண்டாகும் நுண்ணிய மாற்றங்களையும் தெள்ளெனக்கண்ட திவ்விய நேத்திரம் படைத்தவர். நமது வணக்கங்கட்குரியவர். இவர் இன்றுமுளர். சிவனின் உடலினின்றும் சாராம்சமாக உற்றது இரசம் என்று சிவனே பார்வதிக்கு உபதேசித்ததாகச் சித்தர் நூல்களில் பற்பல மேற்கோள்கள் உள்ளன.

மாயாமயமான இவ்வுலகில் அணுவினுள் அணுவாகவும், உயிரினுள் உயிராகவும், பரதத்துவம் வியாபித்திருப்பது போலக் கொடிய விஷமயமான இரசத்தினுள் சிவனிடம் (அப்பிராகிருதமான) வீரியம் நிரம்பிக் கிடக்கின்றது.

மலங்களைத் துலக்கி மாயையினின்றும் வேறுபட்டு வேறுபடுத்தி திரோதாயியின் விஷமச் செயலைத் தவிர்த்து ஆதிரை நாளன்று (திரை ஒழியும் நன்னாளன்று) சித்தபொருளான ஆன்மாவை- அம்பரம் (மேற்போர்வை என அணிந்து அதனுட் கோயில் கொண்டுள்ள நாதனை-சிதம்பர நாதனைத் தரிசித்துத்) தில்லை வெளியில் கலந்துகொண்டு திரும்ப வராத நிலையைப் பெறுவது போலப் பதினெண் வகையான தோடங்களையும் நீக்கிய இரசத்தைத் தக்க முறையில் பற்பம் செய்து பிறகு அதை **அமிருதீகரணம்** செய்து சிவ வீரியத்தைக் கண்டெடுத்து,

அவ்வாறே அப்பிரகத்தையும் செய்து அருளின் முழு வீரியத்தையுந் தனித்தெடுத்துத் தக்க முறையில் இவ்விரண்டையும் ஒன்று கூட்டி சிவசக்தி மயமாக்கி அம்மாமருந்தைச் சேவிப்பதால்-அது பிரகிருதியின் பரிணாமத்தினால் ஆக்கப்பட்ட இவ்வுடலை பிராகிருத சரீரத்தைச் சாம்பவ சரீரமாக (அப்பிராகிருத சரீரமாக) மாற்றியமைக்கும். சாம்பவ சரீரம் கிடைத்திடிலோ அதற்குப் பிரகிருதியின் விபவத்தால் பசி, பிணி, மூப்புத் துன்பங்களொன்றும் பாதிக்காது.அவ்வுடலினுட்கிடக்கும் ஆன்மாவோ பரம் பொருளுடன் தாதான்மிய சம்பந்தம் பெற்றிருப்பதால்- அதுவும் சிவனாகி உள்ளும் புறமும் சிவமேயாகும் வண்ணம் செய்யும்.

துக்கம் நிறைந்த பல சாகரத்தைக் கடக்க முக்தியைப் பெறவேண்டும். அம் முக்தியோ ஞான யோகத்தாலோ- ஞான கன்ம சமுச்சயத்தாலோதான் சித்திக்கும். அவையோ- நல்வழி, நன்னெறிகளை அப்பியாசிப்பதால்தான் சாதிக்கவல்லவை. அப்பியாசமோ நோயற்றும் திடம் பெற்றும் நிலைத்த உடலினாலன்றிக் கடைபிடிக்க மாட்டாதது. இவ்வித உடல் நிலையோ, மேற்சொன்ன முறையில் தயாரித்த மருந்துக் கூட்டத்தால் எளிதில் சாதிக்கக் கூடியது. ஆகவே, ஒவ்வொருவனும் இம்மருந்தைச் சாதித்து சேவித்துப் பயன்பெற முயலவேண்டும்.

*மகேசன் முதலான சில தேவர்கள், தைத்தியர்களில் சிலரும் பாலகில்யர் முதலிய முனிவர்களும், சோமேசுரன் முதலிய அரசர்களும் கோவிந்த பகவத் பாதர்- அவர் சீடரான ஆதிசங்கர பகவத் பாதாசிரியார், சர்வட, கபிலன், வியாக்கிரபாதன், காபாலி, கந்தலாயனன் முதலானவரும் மற்றும் சித்தர்களும் இதைச் சேவித்துத் தத்தமது உடலை இரசமாக்கிக்கொண்டு சீவன் முத்தராய் வாழ்ந்தனர்.* இது சரித்திர வாயிலான சான்று.

இவ்வண்ணமாக இரச அப்பிரகங்களை மனிதர் உட்கொள்ளத் தக்க வகைக்கு மாற்றிப் பாகஞ் செய்ய முயன்றக்கால் இடையில் பற்பல பற்ப, செந்தூர, திராவக துருதிகளும் (உதகபாகம்)- இலவணம், க்ஷாரம், பாடாணங்களின் கட்டுகளும் மற்றும் பலவும் செய்முறையில் தீர்க்கப்பட்டு, மருந்துகளாய்ப் பிணிகளைப் போக்கும் குணக்குன்றுகளாய்க் கிடைக்கப்பெற்றன.

இவையாவும் மருத்துவ நூல்களில் நமக்குத் தெரிவிக்கப் பட்டிருக்கின்றன. இவ்வகையான மருந்துகளோ வெகு சிறிய அளவில் உட்கொண்டாலும் போதும். இவை வெகுட்டல், குமட்டல் முதலிய வெறுப்பூட்டுங் குணங்களின்மை, உட்கொண்ட உடனேயே குணத்தைப் பயக்கும் சக்தி வாய்ந்திருத்தல், எல்லைக்காலம் வரையில் தமது குணங்கள் நிலைக்கப் பெற்றவையாய் இருத்தல் என்னும் அரிய சிறப்புகளைப் பெற்றிருப்பவையாகும்.

இவ்விதமாக ஓர் அபூர்வ முறையை வகுத்து யாவர்க்கும் உபகரித்துள்ள தனிமுறை **சித்தரின் கண்மணி** என்பது மிகையாகாது; பொய்க்குமோ?

இவ்வியலில் கூறப்பட்ட விஷயம் மிகவும் முக்கியமானது. மந்திரமென கோப்பியமாக வைக்கத்தக்கது. எவ்வளவு விரிவாகச் சொன்னாலும் முடியாதது. இதை மிகச் சுருக்கியும் ஆயினும் விளக்கக் குறைவின்றி இயன்ற மட்டும் கூறியுள்ளேன்.

**முப்பு** என்னும் அரிய பொருளையும் சித்தர் கண்டுபிடித்து நமக்கு உவந்து அளித்துள்ளனர். சித்தர் முறையின் சிறப்பு இம் முப்பு கண்டுபிடிப்பால் திகழுவதாயிற்று. இதன் விவரம் அடுத்த இயலில் காணலாம்.

*************

# 7. சித்தரின் மணிமகுடம்

## முப்புவைப் பற்றிய குறிப்புகள்

முப்பு என்பது செயற்கைப் பொருள். சித்த மருத்துவத்தின் மணிமகுடம் போன்றது. இப்பொருளைப் பற்றிப் பலரும் விரித்துப் பேசுவரேனும் யாரோ ஒரு சிலர்தான் இதன் உண்மையை அறிவர்.

இதனைப் பிரதிபந்தகமாகப் பயன்படுத்திப் பற்பல பற்ப செந்தூரம் சுண்ணங்களை மிகமிக வீரியம் பெற்றவையாய் எளிதில் செய்யச் சாத்தியமாகும். மற்றெந்த மருத்துவத்தில் கூறாததும் சித்த மருத்துவத்தில் மட்டுமே உள்ளதுமான ஒரு தனிப் பெருஞ் செல்வமாம் இம் முப்பு. சித்த மருத்துவர்களில் சிலர் இதன் உண்மையை அறியாமல் கைவிட்டனர். ஆயினும் சில ஞானிகளிடத்தில் இன்றும் இருந்து வருகிறது. இம் மறைபொருளைக் கற்பிக்கும் முன் ஒருவன் சிவராஜ யோகமென்னும் பயிற்சியில் சித்தி பெற்றிருத்தல் அவசியமென வற்புறுத்துகின்றனர்.

சிவராஜயோகமென்பது ஞான கன்ம சமுச்சயத்தை அடிப்படையாக்கிய ஒரு நல்வழியாம். இம்முறையை ஏற்றுக் கடைபிடித்து ஒழுகிச் சித்தி பெற்றவருக்கு மட்டுமே முன்சொன்ன சாதுக்கள் முப்பின் இரகசியத்தை உபதேசிப்பர். இவ்வித நிபந்தனை ஒரு வகையில் அவசியமேயாகும்.

ஒரு வித்தையை அறிவது அதை நன்முறையில் பயன்படுத்துவதற்காகவேதான். ஆகவே, ஒரு வித்தையோ பயிற்சியோ, ஒரு குறிப்பிட்ட பயனைப் பயக்கவல்ல கருவியேயாகும். ஒரு சிறிய கத்தி ஒரு கருவிதான். இதைக் காய்கறியரிதல் போன்ற பயன்தரும் தீதற்ற காரியங்கள் பல செய்யப் பயன்படுத்தலாம். ஒருவனைக் குத்திக் கொல்லவும் அதே கருவியைத் தீய காரியத்துக்கும் பயன்படுத்தலாம். இவையாவும் அக்கருவியைப் பயன்படுத்துபவரின் மனப்போக்கை

ஒட்டியதாகும். அணுகுண்டு என்னும் ஆயுதத்தின் இரகசியத்தை ஏன் மூடுமந்திரமாக வைக்க வேண்டும்? தூயவழியில் பயன்படுத்தத் தக்கவருக்கல்லாது ஓர் அரிய வித்தையின் இரகசியத்தைப் புகட்டல் தகாது, ஆதலின் முன் சொன்னதுபோன்ற கட்டுப்பாடுகளும் நியதிகளும் மிகவும் அவசியமென்பது ஈண்டு அறியத்தக்கது.

இம்முப்பு என்னும் செயற்கைப் பொருள் மூவகைப்படும். அவை:-

1. **வயித்திய முப்பு (மருத்துவ முப்பு.)**
2. **வாத முப்பு (இரசவாதத்திற்கு முதன்மையானது).**
3. **ஜால முப்பு (மந்திர தந்திரங்கள் செய்ய உதவும்).**

இதனைச் சால வித்தை செய்ய மட்டும் பயன்படுத்தி வருவதால் மக்களினத்துக்குப் பெரும் பயன் இல்லை..

ஆசைப்பேயின் கூற்றால் ஆன்மாவுக்கு இழிவு வராமல் இருக்கவும், உலகப் பொருளாதாரச் சீர்கேடு ஏற்படாமல் இருக்கவும், வாதமுப்பையும் ஜாலமுப்பையும் கையாள்வதைக் தடுத்தல் அவசியம். ஆயினும், முப்பை முடிக்க விரும்பி முயலும் ஒருவன் இவ்வழியில் தன்புத்தியையும் ஊக்கத்தையும் நழுவ விடக்கூடும். இவ்வித விபத்துகளை உண்டாக்காமலும், உண்டாக்கிக்கொள்ளாமலும் இருக்க ஒருவனுக்குச் சீரிய மனப்பண்பு முக்கியமாகும். அதனாலேயே சிவராஜயோக சித்தியானவர்களுக்குத்தான் முப்புவின் இரகசியத்தை வெளியிடுவதென்ற கட்டுப்பாட்டைக் கடுமையாகக் கடைபிடிக்கலாயினர். இதைக் குறை கூறுதல் முறையன்றாம். சிவராஜ யோகத்தை வாசியோகமென்றுங் கூறுவர். இதில் சித்தி பெற்றவர்க்கு முப்பின் இரகசியத்தைத் தெரிவிக்குங்கால் வைத்திய முப்பைத் தவிர ஏனைய முப்புகளைக் காணமுயலல் ஆகாதென்று எவ்வளவோ வாக்குறுதிகளையும் பெறுகின்றனர். இனி இவ் வைத்திய முப்போ வென்றால் இதைப் பலரும் பலவிதத்தில் முடித்திருக்கின்றனர்.

எடுத்துக்காட்டாக-சிலர் சோற்றுப்பிலிருந்தும், சிலர் பத்துவகை அண்டங்களின் ஓடுகளிலிருந்தும் (கருடன், ஆமை, பல்லி, பாம்பு போன்றவை) சிலர் பூநீற்றிலிருந்தும், சிலர் துருசிலிருந்து இயற்கையாய்

உண்டாகிப்பூமியுள் புதைந்து கிடக்கும் அண்டப் பொருளினின்றும் வைத்திய முப்பு செய்துள்ளனர். இவ்விதமாகப் பல்வேறு முறைகளை வகுத்துள்ளனர்.

## முப்பின் அடிப்படைத் தத்துவம்

சிவன், சக்தி என்னும் பெயர்களால் அழைக்கப்படும் இருவகைச் சக்திகளின் சேர்க்கையாலேயே இவ்வுலகம் படைக்கப்பட்டுள்ளது என்று நூல்கள் கூறும். உலகப் பொருள்கள் யாவும் இவ்விரு சக்திகளின் இயக்கத்திற்கு அடங்கியவை. முழு நிலவு நாளில் சந்திரனைக் கண்டு கடல் எழுகிறதைக் காண்கிறோம். ஏனைய இரவுகளில் கடலலை எழுச்சியும் வீழ்ச்சியும் திங்களின் தோற்றத்தையும் மறைவையும் ஒட்டி நிகழ்வது கண்கூடு.

அங்ஙனமே சூரியனுடைய சக்தியாலும் சில நிகழ்ச்சிகளும் மாற்றங்களும் உலகில் ஏற்படுகின்றன. ஆகவே, வெம்மை மிகுந்த ஒரு சக்தியும் தண்மை மிகுந்த மற்றொரு சக்தியும் இணைந்தே இவ்வுலகம் நிறுவப்பட்டுள்ளது என்பது காணக்கிடக்கின்றது. இவற்றைச் சூரியனின் சக்தியென்றும். சந்திரனின் சக்தியென்றும் சிலர் கூறுவர். அவ்வாறே சிலர் சிவமென்றும் சக்தியென்றும் கூறுவர். இவற்றால் உண்டாகும் செயல்களையொட்டி இவற்றை முறையே....

* விகடன சக்தி (கூறுபடுத்தும் ஆற்றல்) என்றும்,
* சங்கடன சக்தி (பிணைக்கும் ஆற்றல்) என்றும்,

வடநூல் வல்லார் குறிப்பிடுவர். இவ்விரு சக்திகள் எங்கும் நிரம்பி உள்ளனவாயினும் சில இடங்களில் சில காலங்களில் இவற்றில் ஒன்று மற்றொன்றை விட விஞ்சுவதும் காணப்படும். சாதாரணமாக உலகை நிலப்பாகமென்றும் நீர்ப்பாகமென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். இவ்விரு பாகங்களிலும் இவ்விரு சக்திகளும் கலந்து நிரம்பி இருப்பினும் நிலபாகத்தின் மேற்புறத்தில் சக்தியே மிக்குற்றிருப்பள். ஆயினும், பூமியைத் தோண்டிக் கொண்டே உட்செல்வோமாயின் படிப்படியாகச் சிவமென்னும் சக்தி அதிகரித்துக்கொண்டே வரும். கடலில் இச்சக்திகளின் அமைப்பு எதிரான முறையில் உள்ளது. கடல் மேல்

மட்டத்தில் சிவம் என்ற சக்தி அதிகரித்தும் நீரில் மூழ்கிக் கீழே செல்லச் செல்ல சக்தியின் ஆற்றல் அதிகரித்துக்கொண்டே போய் ஓங்குவதாயும் தமது அகச் கண்களால் பொருள்களின் உண்மை நிலையை அறியக் கூடியவர்களான சித்தர்கள் கண்டறிந்து உரைத்துள்ளார்கள்.

*பூமியின் மேற்பாகத்திலிருந்து கிடைக்கும் பூநீறு போன்ற பொருள்களினின்றும் பலப்பல நுட்பம் மிக்க முறைகளால் சக்தியின் கூறு நிரம்பிய ஓர் உப்பைத் தயாரித்தல் முதல் செயலாகும். அவ்விதமே கடலினின்று கிடைக்கும் மற்றொரு பொருளிடமாகச் சிவமென்னும் சக்தி நிரம்பிய மற்றொரு உப்பைத் தயாரித்தல் இரண்டாவது செயலாகும்.*

இவ்விரண்டையும் ஒரு குறிப்பிட்ட முறையில் ஒன்று சேர்ப்பதால் மற்றுமோர் உப்பு கிடைக்கப்பெறும். இதுவே செய்யத்தக்க மூன்றாவது செயலாகும்.

பிறகு இம்மூவகை உப்புகளையும் குறிப்பிட்ட முறையிலும் அளவிலும் சேர்த்து ஒரு தனியுப்பு உண்டாக்கப்படும். இதுவே **முப்பு** எனப்படுவது.

சித்தர் நூல்களில் முதலிரண்டு உப்புகளையும் சேகரிக்கவும் முறைப்படி சேர்க்கவும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. குறிப்பிட்ட பருவங்களில் குறிப்பிட்ட நாள், நட்சத்திர, திதி, கரண யோகங்களோடு கூடிய நல்ல நாளில் குறிப்பிட்ட இலக்கணங்களையுடைய நிலப்பரப்பை விதிப்படி சுத்தம் செய்து பண்படுத்தி, தாம் தாம் வழிபடு கடவுளுக்கும் ஏற்புடைக்கடவுளுக்கும் பூசைகளைச் செவ்வனே செய்து பின் குறிப்பிட்ட வேளையில் விதிப்படி மூலப் பொருளைச் சேகரிக்கவேண்டும். இத்துறையில் ஆய்வுக்குரிய விடயங்கள் பல உண்டு.

இவ்விதமாக இருவகைச் சக்திகளையும் அவற்றின் கூட்டையும் அதனாலுண்டான உலகத்தையும் பற்றிய விவரங்களை ஓதுங்கால் இன்றைய விஞ்ஞானிகள் வகுத்துள்ளதாய மின்சாரசக்தியும் அதிலுள்ள இருவகைப் பிரிவும் அவற்றிற்கும் கூட்டல், கழித்தல் என்ற குறிகளால்

பெயரிடப்பட்டிருப்பது தாமே மனத்திலுதிக்கின்றன. இவ்விரண்டிற்கும் ஏதாவது சம்பந்தம் உண்டோ என்பது ஆராய்ச்சிக்குள்ள விடயமாகும்.

இரசவாதத்தைப் பற்றி நம் நூல்களில் காணும் விடயங்களைக் கேட்டு மேல்நாட்டு விஞ்ஞானிகளும் அன்னாரின் கைப்பொம்மைகளான இந்நாட்டு விஞ்ஞானிகளும் ஒருகாலத்தில் வெகுவாக எள்ளி நகையாடினர். இப்பொழுதோ அது சாத்திய மானதுதான் என்றும், ஆயினும், அவ்வாறு ஓர் உலோகத்தை மற்றொன்றாய் மாற்றுதல் சிக்கனமற்றதென்றும், ஆகவே ஏற்கத் தகாத தென்றுஞ் சொல்லுகின்றனர். ஆனால் முப்புவின் உபயோ கத்தால் இக்குறைபாடும் தீருமென்பது என் போன்றார் துணிபு. வாத முப்பு ஒருபுறமிருக்க வைத்திய முப்பிலோ ஒரு பொருளை முப்புவின் சேர்க்கையால் அதன் பரமாணுவரையில் பீலுபாகக் கிரமத்தால் தீட்டிப் பிறகு வேறு முறையில் வியூகங்களை வகுத்தலால் ஒன்றை மற்றொன்றாய் மாற்றுவதும் நாம் நினைக்கவுங் கூடாத சில புதிய குணங்கள் இவ்விதம் உண்டாக்கப்பட்ட செயற்கைப் பொருளில் சேர்ந்திருப்பதைக் கண்கூடாகக் காணக்கிடப்பவை. முன்சொன்னது போலப் பிரதி பந்தகமாக உபயோகிக்கப்படும். இம்முப்புவின் செயற்கையால் நெருப்புக்குக் கட்டுப்படாத பொருள்கள் கட்டுப்படும்; உப்பு முதலியவை நீரில் கரையா; நெருப்பில் வெடிக்கா. இவ்விதமாகப் பொருள்களின் தத்துவமே மாறுதற்குக் காரணம் அவற்றின் வியூகங்களை மாற்றியமைத்தலே அன்றோ? முப்புவினால் ...

* பற்பங்கள்
* சிந்தூரங்கள்
* புகை நீர்கள்

ஆகியவற்றைச் செய்யலாம்.

* உப்புகள்
* பாடாணங்கள்
* இரசம்
* உபரசம்

ஆகியவற்றைக் கட்டுப்படுத்தலாம்; நீற்றலாம்.

குறிப்பு:- பீலு பாகம் என்பது (பீலு-பரமாணு) ஒரு பொருளினுள் கிடக்கும் தனித்தனி அணுவும் செய்பாக, கைபாக முறைகளால் மாறுதல் அடையும் வண்ணம் செய்து பிறகு அப்பாக முறைகளால், அவ்வணுவின் சுய அமைப்பையே மாற்றி வேறு வித அமைப்பை அதற்களித்து, அவ்வண்ணம் மாற்றப்பட்ட புதிய வகையான அணுக்களின் சேர்க்கையால் புதியதொரு பொருளை சிருட்டித்தல். இதனால் பொதுவாக ஒரு பொருளின் ஸ்தூலத்தில் மட்டும் மாறுதலை வருவிக்கும் முறையான பிடரபாகமென்னும் கிரமம் தவிர்க்கப்பட்டது.

ஆகவே பாகம் இருவகைபபடும். *பீலுபாகமென்றும், பிடரபாகமென்றும்* இவற்றைக் கூறுவர்.

ஒரே மூலப் பொருளினால் வெவ்வேறு விதத்தில் உண்டாக்கப் பெற்ற பல்வேறு கடைப்பொருள்கள் (Finished product) வெவ்வேறு குணங்களைப் பெற்றிருத்தற்குக் காரணம் மேற்சொன்ன பீலுபாகத்தின் விளைவேயாகும்.

# 8. திரவப்பொருள்களின் தோற்றக் கிரம ஆராய்ச்சி.

தேடரு மகண்டவொளிப் பிழம்பாய் ஞானாதீதப்
பூரண மாய்த்தற் செயல்கொண் டெல்லா
மூடவிட வல்லதுமாய்த் தனித்த வொன்றுள்
மூழ்கிநின்ற முக்குண சிற்சக்தி தன்னில்
நாடனந்தம் பிறந்ததிற்கா லுதித்த திற்றீ
நாரமண் ணுண்டாய் மண்தா னல்கவந்த
ஓடதியி லனமுமதி லுலகு நிற்குமுயர்
வாய்ந்தவ் வோடதியி னுரிமை சொல்வாம்.
-தேரன் குணவாகடம்.

### பொருளென்றால் என்ன?

உலகில் பெயருடனும் உருவத்துடனும் அல்லது உருவமின்றிப் பெயருடன் வழங்கி உணரப்படுவது பொருளாம்.

### பொருள் தோற்றக் கிரமம்.

யாவரும் தேடிக் காண்பதற்கு அரியதும் ஓர் எல்லைக்குள் அடங்காத அறிவாகாரமாயும் அறிவுக்கு எட்டாத பூரணநிறைவாயும் தன் செய்கையினால் எல்லாவற்றையும் ஒடுக்கவும் தோற்றுவிக்க வல்லதாயும் தனக்குமேல் ஒருபொருள் இல்லாமல் தானே யாவற்றுக்கும் மேம்பட்டதாயும் ஒப்பற்ற பொருளாயும் விளங்கி நிற்கிறது எதுவோ அதற்குள் மறைந்து நின்ற அறிவின் விளக்கத்தில் சத்துவ, இரசோ, தமோ குணங்களாகிய முக்குணங்களும் ஒன்றிலொன்று இணைந்தே நிற்கும். ஆயினும்,எக்குணம் முக்கியமாய் மேம்பட்டு நிற்குமோ அக்குணத்தினின்றும் உடல், ஐம்பொறி, உலகம், போகம் உண்டாவதற்கு ஆதாரமாகிய பஞ்ச தன்மாத்திரா பூதங்கள் (சூக்கும பூதங்கள்) உண்டாயின. அவை .....

* சப்த (ஒலி) தன்மாத்திரை
* ஸ்பரிச (ஊறு) தன்மாத்திரை
* ரூப (ஒளி) தன்மாத்திரை
* இரச (சுவை) தன் மாத்திரை
* கந்த (நாற்றம்) தன்மாத்திரை என்பன.

**ஸ்தூல பஞ்ச பூத தோற்றம்:-** பஞ்ச தன் மாத்திரா பூதங்கள் பஞ்சீகரித்து அவற்றினின்றும் விண், கால், அனல், புனல், மண் என்னும் ஐந்து ஸ்தூல பஞ்ச பூதங்கள் தோன்றின.

**ஸ்தூல பஞ்ச பூதாம்சம்:-** இவ்வைந்து ஸ்தூல பஞ்ச பூதங்களில் ஆகாயத்திற்குச் சப்தமும் (ஒலி), வாயுவுக்கு ஸ்பரிசமும் (ஊறு), தேயுவுக்கு ரூபமும் (ஒளி) அப்புவுக்கு இரசமும் (சுவை), பிருதிவிக்குக் கந்தமும் (நாற்றம்) இயற்கைக் குணங்களாக இருக்கின்றன. இவை முக்குணப்பூதங்களென்றும் கூறப்படும்.

இவ்வாறாகத் தோன்றிய மண் தோற்றுவிக்க உலகிலுள்ள உயிர்கள் நிலைபெறுதவற்கு முக்கிய ஆதாரமாகிய பொருள்கள் தோன்றின. இதனை மேலே தேரரால் கூறப்பட்ட செய்யுளாலறிக

**பொருள் தொகை மூன்று:** தோன்றிய பொருள்கள் முப்பகுதியை அடையும். அவை, தாது, தாவர, சங்கமம் என்று மூவகையாகவும், இயங்குவன, இயங்காதன என்று இருவகையாகவும் வகுக்கப்படும். அங்ஙனம் இவற்றுள் தாது தாவரப்பொருள்கள்,

1. **இயங்கும் பொருள்:-** ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்பவை- சங்கமப்பொருளாகும்.

2. **இயங்காப்பொருள்:** இவற்றை நிலைத்திணைப் பொருள்கள் என்பர். தாது தாவரப்பொருள்களின்-நிலைத்திணைப்பொருள்களின்-இயக்கம் சாதாரணமாய்க் கண்களுக்கு புலப்படாமையாலும், கண்முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படும் இயங்குந்தன்மையுள்ள பொருள்களினின்றும் வேறுபடுத்தி

உணர்த்துவதற்காகவும் ஏற்பட்ட பெயர் இயங்காப் பொருள் நிலைத்திணைப் பொருள் என்பதே.

**மரம், செடி, கொடி, புல், பூண்டு** எனத் தாவரங்கள் (பயிர் வகை) ஐந்து வகைப்படும். இரசம், உபரசம், உப்பு, பாடாணம் எனத் தாதுப்பொருள்கள் நால்வகைப்படும். ஊர்வன, நடப்பன பறப்பன, செயல்கொண்டிருப்பன எனச் சங்கமப் பொருள்கள் நால்வகைப்படும் என்பர்.

தாவர சங்கமப் பொருள்கள் யாவும் நால்வகைப் பிறப்பு எழுவகைத் தோற்றத்துளடங்கும்.

## நால்வகைப் பிறப்பு

1. **அண்டஜம்:-** முட்டையிலிருந்து பிறப்பன; மீன். தவளை, பறவைகள், பல்லி, பாம்புகள், முதலியவை.

2. **சுவேதஜம்:-** வியர்வையிலிருந்து பிறப்பன; கண்ணுக்குப் புலப்படா நுண் கிருமிகள்; பேன்.

3. **உத்பீஜம்:-** வித்திலிருந்து பிறப்பன; தாவரங்கள் எல்லாம்.

4. **சராயுஜம்:-** பையிலிருந்து பிறப்பன; பசு, குரங்கு மனிதன் முதலானவை

**எழுவகைத் தோற்றம்**: தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகியவை,

சங்கமப்பொருள்கள் தோன்றுவதற்கும் தோன்றியபின் அவை நிலைத்திருப்பதற்கும் மண்ணாதி தாதுப்பொருள்களும் தாவரப்பொருள்களுமே ஆதாரமாய் இருக்கின்றன. இவற்றுள் உயிர் உடலுடன் இருப்பதற்கு ஓஷதியில் அன்னமாகிய உணவும் வாய்ந்திருப்பதால் அதன் உற்பத்தியாதி சிறப்புகளை ஆராந்தறிவது

முக்கியம். இவ்வாராய்ச்சியில் ஏற்படும் விடயங்கள் யாவும் மற்ற பதார்த்தங்களுக்கும் பொருந்தியதேயாகும்.

**ஓஷதியின் உற்பத்தி விளக்கம்:-** ஓஷதி முதலிய பதார்த்தங்கள் மண் தோற்றுவிக்கத் தோன்றின என்று கூறுவதால் பிருதிவி பூதமொன்றே அவற்றை உண்டாக்கினதென்றன்று; அதன் சிறப்பைநோக்கிக் கூறவந்த அவசரமெனக் கொள்ளக் கிடக்கின்றது. எந்தப்பொருளும் ஐம்பூதக் கூட்டுறவின்றித் தோன்றாவாம். ஓஷதி உற்பத்திக்குப் பிருதிவி முதலாதாரம். இது பெண் போன்றது. மற்ற பூதங்களின் சேர்க்கையால் வேற்றுமைப் பட்டு நிற்கும் நிலையில் அப்புபூதமிதனை விந்துபோல் அணைகின்றது. இவ்விரண்டும் ஒன்றோடொன்று கூடும் சமயத்தில் எஞ்சிய மற்ற தீ, காற்று, ஆகாயம், ஆகிய பூதங்களினுதவியால் உயிர்ப்பும், உருவும் பெற்று வெளிப்படுகின்றன. இதனை **"மண்தான் நல்க வந்த ஓஷதி"** என்றதனால் அறிக.

**பதார்த்தங்கள் ஐம்பூதக் கூறு உடையன:** ஐம்பூதக் கூட்டுறவால் தோற்றமான பதார்த்தங்களின் எந்தெந்த பூதத்தின் கூறு எந்தெந்தப் பதார்த்தங்களில் மற்ற பூதக் கூறுகளைக் காட்டிலும் அதிக அளவில் பொருந்தி இருக்குமோ அந்தந்தக் கூறுபாட்டுக்கு ஏற்ப பதார்த்தங்கள் ஐவகைப் பிரிவினை அடைகின்றன. அவை முறையே...

1. மட்கூறு பொருள்கள்
2. புனற்கூறு பொருள்கள்,
3. அனல் கூறு பொருள்கள்,
4. காற்றுக் கூறு பொருள்கள்,
5. விண் கூறுப் பொருள்கள்

என்பனவாம்.

**1. மண் கூறு பொருள்களின் குணம்**

பருமை, நிலைத்தல், திண்மை, நாற்றம், என்னும் நான்கு குணங்களை அடையும்,

**2. புனல் கூறு பொருள்களின் குணம்**

திண்மை, நெகிழ்ச்சி, தண்மை, நெய்ப்பு, மந்தம், இறுகல், சுவை என்னும் குணங்களை அடையும்.

**3. அனல் கூறு பொருள்களின் குணம்**

வறட்சி, கூர்மை, வெம்மை, தூய்மை, நுண்மை, ஒளி என்னுங் குணங்களை அடையும்.

**4. காற்றுக்கூறு பொருள்களின் குணம்**

நொய்மை, இலேசத்துவம், தூய்மை, வறட்சி, ஊறு, என்னும் குணங்களைப்பெறும்.

**5. விண்கூறு பொருள்களின் குணம்**

நுண்மை, தூய்மை, நொய்மை, ஓசை என்னும் குணங்களைப் பெறும்.

## ஐவகைப் பொருள்களின் செய்கை.

**1. மண்கூறு பொருள்களின் தொழில்:-**

பெரும்பாரமாக்கல், நிலைத்து நிற்றல், திரட்சி, வளர்ச்சி ஆகிய தொழில்களைச் செய்யும்.

2. **புனல் கூறு பொருள்களின் தொழில்(கர்மம்):-**

நெய்ப்பு, நீர்கொண்டு தழைத்தல், நிணச்சாறாக்கல், கட்டுப்படுத்தல், மனக்களிப்பை உண்டாக்கல் ஆகிய தொழில்களாம்.

3. **அனல் கூறு பொருள்களின் தொழில்:-**

எரித்தல் ஒளிவீசல் ஒளிப்பித்தல், நிறமுண்டாக்கல் செரிப்பித்தல் ஆகிய தொழில்களாம்.

4. **காற்றுக்கூறு பொருள்களின் தொழில்:-**

இலேசாக்குதல், உடலைவாட்டடல், இளைக்கச்செய்தல், மனக்கவலை உண்டுபண்ணல், வறட்டல் ஆகிய தொழில்களாம்.

5. **விண்கூறு பொருள்களின் தொழில்:-**

நுண்ணிய இடைவெளிகளை அமைத்தல், நொய்மையை உண்டாக்கல் ஆகிய தொழில்களைச் செய்யும்.

## ஐம்பூதக் கூறு பொருள்களின் பொதுப்புறத் தொழிற் குணம்

மண்புனல் கூறுகள் அதிகம் கலப்புள்ள பொருள்கள் பெரும்பாலும் குடலிலுள்ள தோடங்களை (மலத்தை) எருவாய் வழியாகக் கழிக்கும். அனல் கால் கூறுகளில் ஏதேனும் ஒருகூறு அல்லது இரண்டு கூறுகளும் அதிக அளவில் கலப்புற்று உண்டான பொருள்கள் பெரும்பாலும் குடலிலுள்ள தோடங்களை மேல் நோக்கி வாந்தி செய்விக்கும்.

## ஐம்பூதப் பகுப்புத் தன்மை.

மேற்கூறிய ஐம்பூதப் பெரும்பகுப்புகள் அடங்கிய பதார்த்தங்கள் யாவும் ஐந்து தன்மையை அடையும். அவை **சுவை, குணம், வீரியம், விபாகம் (பிரிவு), பிரபாவம்** எனப்படும்,

**சுவை-** இஃது இருவகைப்படும். அவை முதற்சுவை, துணைச் சுவை என்பன, இஃது எண்ணிறந்த வேற்றுமைப்பட்ட பொருள்களுள் அடங்கிய சுவைகளுள் எச்சுவை நாவின் உணர்ச்சிக்கு முதன்முதல் தெரிகிறதோ அச்சுவையே முதற்சுவை என்றும், எச்சுவை மறைபட்டுக் கடைசியில் சிறிது உணரப்படுகிறதோ அதனைத் துணைச்சுவை என்றுங் கூறுவர்.

**சுவை-** இஃது அறுவகைப்படும். அவை முறையே **இனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு** என்பனவாம்.

குறிப்பு : இவற்றுள் ஒவ்வொன்றும் பின்வருவதைவிட முன்னர்க் கூறப்படுவதே வன்மையில் சிறப்புடையதாம்.

**சுவைகளின் தோற்றம்-** இரண்டிரண்டு பூதங்களின் கூட்டுறவினால் சுவை பிறக்கின்றது.

மண்ணுடனே புனல்தீக்கால்
முறையாகச் சேர்ந்திட்டால் வருமே இனிப்பு
திண்ணமிலம் துவர்ப்பிரசம்
சதாகதியோ டார்தீயின் திடமா முறைப்பும்
எண்ணரிய கசப்புமுண்டாந்
தண்ணீரில் கனலிணைப்பா லெழுமா முவர்ப்பு
உண்ணரிய அறுசுவையின்
பிறப்பிதெனும் குருசித்த ருரைத்த மறையே.

— மருத்துவத் தனிப் பாடல்கள். (1)

என்னும் பாடலால் அறியலாம்.

* மண் பூதத்துடன் முறையே நீர், அனல், காற்று என்ற மூன்று பூதங்களும் இணைந்து இனிப்பு, புளிப்பு. துவர்ப்பு என்ற சுவைகளும்,

* வாயு பூதத்துடன் தீயும் விண்ணும் சேர்ந்தால் முறையே கார்ப்பும், கைப்பும் தோன்றும்.

* புனல் பூதத்துடன் தீ இணைந்தால் உப்புச்சுவை தோன்றும்.

| | | |
|---|---|---|
| இனிப்பு | - | மண் + நீர் |
| புளிப்பு | - | மண் + தீ |
| உப்பு | - | நீர் + தீ |
| கைப்பு | - | காற்று + விண் |
| கார்ப்பு | - | காற்று + தீ |
| துவர்ப்பு | - | மண் + காற்று |

ஆயினும் பூதாம்சங்களின் சேர்க்கை அளவின் வித்தியாசத்தால் மேற்கண்ட சுவைகள் அந்தந்தச் சுவைக்கூட்டத்திலடங்கிய பதார்த்தங்களில் ஒன்றிலுள்ளதுபோல மற்றொன்றிலிராமல் சிறிது சிறிது வேறுபட்டிருக்கும். இவ்வாறு வேற்றுமைப்பட்ட பதார்த்தங்கள் எண்ணிக்கையில் பலவாம். இம்மாறுதலாலே நோய்களும் அநேக தோடங்களை ஆதாரமாகக்கொண்டு எண்ணிக்கையில் பலவாம்.

## 1. இனிப்புச் சுவையின் தன்மை

மனத்திற்கு இன்பத்தையும் புலன்களுக்குத் தெளிவையும் உடலுக்குச் சுகத்தையும், சுவைத்தபின் வாயில் ஒருவித இன்பப் பசையையும் ஒருவாறு உண்டாக்கும் ஈ, எறும்புகளுக்கு இச்சுவையில் விருப்பமதிகம்.

## 2. புளிப்புச் சுவையின் தன்மை

உமிழ்நீரைச் சுரப்பிக்கும்; மயிர்ச்சிலிர்ப்பை உண்டாக்கும், பல் கூசும்; கண்களையும் புருவங்களையும் நெறிக்கச் செய்யும்; வாயிலுள்ள மலினங்களைப் போக்கும்.

### 3. உப்புச் சுவையின் தன்மை

வாயில் நீரொழுகச் செய்யும்; தொண்டையிலும் தாடைகளிலும் ஒருவித அழற்சியை உண்டாக்கும்.

### 4. கைப்புச் சுவையின் தன்மை

வாயிலுள்ள மலினத்தை ஒருவாறு நீக்கும்; நாவின் உருசியையறியும் சக்தியைக் குன்றச் செய்யும்; சுவைப்பதற்கு அருவருப்பைத்தரும்; முகத்தைக் கடுக்கச் செய்யும்.

### 5. கார்ப்புச் சுவையின் தன்மை

நாக்கின் நுனியையும் தாடைகளையும் எரிக்கும்; கண், மூக்கு, நா ஆகிய இவ்விடங்களின் நீரைப் பெருக்கும்; வாயிலும் முகத்திலும் ஒருவித அனலை உண்டாக்கும்.

### 6. துவர்ப்புச் சுவையின் தன்மை

நாவைத் தடிப்பிக்கும்; தொண்டை, பல், நா ஆகியவைகளிலுள்ள நுண்ணிய துவாரங்களைச் சுருங்கச் செய்து அவற்றை அடைப்பதுடன் நாவில் ஒருவித பிசுபிசுப்பை பற்றும்படிச்செய்து சுவையை உடனே அறியவொட்டாமல் மாறுபடுத்தும்.

## சுவைகளின் தொழில்கள்

### * இனிப்புச் சுவையின் நற்குணத் தொழில்.

இனிப்புச்சுவை ஒவ்வொருவருக்கும் பிறவிமுதலிறுதிவரை விருப்பத்தைத்தரும் குணமுடையதாம். இதனைத் தக்க அளவுடன் உட்கொள்ளின் உடற்கட்டுகளுக்கு வன்மையும், உடலுக்கு ஊட்டத்தையும் ஒளியையும், இந்திரிய பலத்தையும்,

வாணாட்பெருக்கத்தையும் தலைமயிர் வளர்ச்சியையும், பாலர் முதல் விருத்தர் வரைக் காசநோயால் வருந்துபவர்களுக்குச் சுகத்தையும் தரும். தொண்டையிலுள்ள தோடங்களைப் போக்கவும், வாதம் வாத பித்த தோடங்கள் தன்னிலை வளர்ச்சியடையின் அவற்றைத் தன்னிலைப்படுத்தவும், பித்தம், வாயு, விஷம் (நஞ்சு) ஆகியவற்றை நீக்கவும் இதனை உபயோகிக்கலாம். இது முலைப்பாலைப் பெருக்கும்.

## * இனிப்புச் சுவையின் தீக்குணத் தொழில்:

இனிப்பை அளவு கடந்து உண்ணில் கொழுப்பும், கோழையும் ஐயதோடமும் மிகுவதால் அவற்றின் பெருக்கத்தால் உண்டாகும், சில நோய்களையும், உடற்பெருக்கத்தையும், பசி, மந்தம், பிரமேகம், புரைக்குழல், கண்டமாலை முதலிய நோய்களையும் உண்டாக்கும்.

## * புளிப்புச் சுவையின் நற்குணத் தொழில்:

சடராக்கினி (செரிப்பழல்), நெய்ப்புத்தன்மை, செரிக்கும் தன்மை கண்களுக்குச் சுகம், இரத்தாசயத்துக்குப் பலம் ஆகியவற்றை தந்து அரோசகத்தைப் (சுவை வெறுப்பு) போக்கும். மலத்தைப் பேதிக்கச் செய்யும்; கபம், இரத்தம், பித்தம் ஆகியவற்றை வேற்றுநிலை விருத்தியடையச் செய்யும். உள்ளடங்கிய வாயுவை முறைப்படி வெளிப்படுத்தும்.

## * புளிப்புச் சுவையின் தீக்குணத் தொழில்.

உடல் தளர்ச்சி, மங்கிய பார்வை, தலைசுற்றல், பாண்டு, சோகை, வெப்பு, நாவறட்சி, அக்கி, சொறி, கொப்புளம் ஆகியவற்றை விளைவிக்கும்.

## * உப்புச் சுவையின் நற்குணத் தொழில்

வறட்சி, மலச்சிக்கல், ஐயம், அவயவச் சுருக்கம் ஆகியவற்றைப் போக்கும், நெய்ப்பு, வியர்வை, கூர்மை, சுவை, பேதி ஆகியவற்றை உண்டாக்கும்.

### * உப்புச் சுவையின் தீக்குணத் தொழில்

நரை, திரை, தலைமயிர் உதிர்தல், நாவறட்சி, அக்கி, குட்டம், வாதரத்தம், ஆகியவற்றைத் தோற்றுவிக்கும், உடல் வன்மையைக் கெடுக்கும்.

### * கைப்புச் சுவையின் நற்குணத் தொழில்

இயற்கையில் அரோசகத்தைத் தருவதாய் இருப்பினும், மற்ற காரணங்களால் அரோசகத்தை நீக்கும் குணமுடையது; புழுக்களைக் கொல்லும்; நஞ்சுகளை நீக்குவதில் சிறப்புடையது; வெப்புமூர்ச்சை, அழற்சி, பித்தம், கபம் ஆகியவற்றின் விகற்பம், வாய்நீரூறல், குட்டம் ஆகியவற்றைச் சாந்தி செய்யும். புத்தி கூர்மை, உடல் இலேசத்துவம், உடல் சுட்கம், ஆகியவற்றைத்தரும். தொண்டையையும் முலைப்பாலையும் சுத்தி செய்யும்.

### * கைப்புச்சுவையின் தீக்குணத் தொழில்:

மிக்க நாவறட்சி, சுக்கிலக்கேடு, வன்மைக் குறைவு, மூர்ச்சை, உறுப்புகளுக்குச் சோர்வு, நடுக்கம். இடுப்பு, முதுகு முதலான இடங்களில் வலியை உண்டாக்கும்.

### * கார்ப்புச் சுவையின் நற்குணத் தொழில்:

தொண்டையிலுண்டாம் பிணிகள், வீக்கத்தோடு கூடிய நமைப்படை, குட்டம், அசீரணம், வயிற்றுப் பொருமல், சோகை ஆகியவற்றைப் போக்கும். புண்களை ஆற்றும்; உடற் பசையையும், கொழுப்பையும் வயிற்றில் கபத்தினால் உண்டாகும் துர்நீரையும் வறட்டும். தீபனத்தையும், செரிப்பையும், நற்சுவையையும் உண்டாக்கும். கெட்ட மலத்தைக் கழிப்பிக்கும்; கபத்தால் உண்டான கெடுதல்களை நீக்கும்.

### * கார்ப்புச் சுவையின் தீக்குணத் தொழில்:

மிக்க நாவறட்சி, சுக்கிலக்கேடு, வன்மைக் குறைவு, மூர்ச்சை,

உறுப்புகளுக்குச் சோர்வு, நடுக்கம், இடுப்பு, முதுகு முதலான இடங்களில் வலியை உண்டாக்கும்.

### * துவர்ப்புச் சுவையின் நற்குணத் தொழில்:

பித்த கப தோடங்களைப் போக்கும்; உடலுக்கு வெப்பத்தைத் தரும்; குருதியைத் தூய்மை செய்யும்; புண்களை ஆற்றும்; கொழுப்பைக் குறைக்கும்; உறுப்புகளைச் சுருங்கச் செய்யும்; மலத்தை இறுக்கி வறட்டும்; தோலைப் பதமாக்கும்.

### * துவர்ப்புச் சுவையின் தீக்குணத் தொழில்

வயிற்றுப் பொருமல், மார்பு நோய், நாவறட்சி, சோர்வு, ஆண்மைக் குறைவு, இரத்த நாளச் சுருக்கம், மலச்சிக்கல் ஆகியவற்றை உண்டாக்கும்.

### * சுவைக்கும் - குணத்துக்குமுள்ள ஒற்றுமை.

சுவைகளுக்காதாரமாயுள்ள ஐம்பூதக் கூறுகளின் சேர்க்கையால், இனிக் கூறப்படும் குணங்களும் கூடி நிற்கும் தன்மையால் எந்தெந்த பூதாம்சங்களின் சேர்க்கையால் சுவை உண்டாகிறதோ அந்தந்தப் பூதாம்சங்களின் குணம் சுவையுடன் ஒருமிக்கக் கலந்து நிற்பதால் அக்குணம் சுவைக்குச் சம்பந்தப்பட்டதாகக் கூறப்படுகின்றது. அவ்விதம் ஐம்பூதச் சேர்க்கையால் உண்டான பொருள்களில் அறுசுவைகள் அடங்கியிருப்பது போல இருபது குணங்களும் அடங்கி இருக்கின்றன.

அவை: **திண்மை, மந்தம், தண்மை, நெய்ப்பு, கொழுமை, நொய்மை, கூர்மை, வெம்மை, வறட்சி, கரகரப்பு, இறுகல், மென்மை, நிலைத்தல், நுண்மை, தூய்மை, நெகிழ்ச்சி, வன்மை இயக்கம், பருமை, பிசுபிசுப்பு** ஆகியன.

## இக்குணங்கள் இருபதில் சிறப்பான எட்டு குணங்கள்

திண்மை, நெய்ப்பு, தண்மை, மென்மை, கூர்மை, வெம்மை, வறட்சி, நொய்மை, ஆகிய எட்டு குணங்கள் மற்றைய பன்னிரண்டு குணங்களின் சாராம்சங்களைப் பெற்றிருப்பதால், சுவைகளைப் பார்க்கிலும் இவ்வெட்டு குணங்களே பிணிகளைப் போக்கும் சிறந்த சக்தியைப் பெற்றிருப்பதால் மருத்துவத்தில் இவையே சிறப்பாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

**வீரியம்:** எக்குணத்தால் எக்காரியம் நடைபெறுமோ அதுவே வீரியமாம். வீரியமின்றி எக்குணமும் நடைபெறாது. ஆகையால் சுவை, குணம், ஆகிய இவ்விரண்டுக்கும் மேம்பட்டது வீரியமாம். வீரியம் இரு வகைப்படும்-அவை வெம்மை, தண்மை என்பனவாம். கட்புலனுக்குத் தெரியக்கூடிய பொருள்களையும், புலன்களுக்குப் புலப்படாத பொருள்களையும் தவிர்த்து வேறு பொருள்கள் உலகத்தில் காணப்படாமை போலப் பதார்த்தங்கள் பல வகைப்படினும் சூரிய சந்திர இயக்கத்தால் அவற்றிலுள்ள வீரியங்கள் வெம்மை, தண்மை என்ற இரு வகைகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

### * வெம்மை வீரியத்தின் தொழில்

வாதத்தைச் சமப்படுத்தும்; கபத்தை நீக்கும்; தலைச்சுற்றல், நாவறட்சி, தேக வாட்டம், வியர்வை, அழற்சி, விரைவில் செரிப்பித்தல் ஆகிய இக்காரியங்களைச் செய்யும்.

### * தண்மை வீரியத்தின் தொழில்.

மனக்களிப்பு, ஆயுள் விருத்தி, தம்பனம் ஆகிய இக்காரியங்களைச் செய்யும். இரத்தம், பித்தம் ஆகியவற்றைப் போக்கும்.

## விபாகம் (பிரிவு)

உண்ணும் உணவானது உட்சென்ற பின் அவ்வப் பதார்த்தங்களில் அடங்கிய சுவைகள் சடராக்கினியின் சக்தியால் அடையும் வேறுபாடே விபாகம் அல்லது பிரிவு என்று கூறப்படும். இது இனிப்பு, புளிப்பு, கார்ப்பு என்னும் மூன்று வகைகளாகக் கூறப்படும். பெரும்பாலும் இனிப்பும் உப்பும் இனிப்பாகவும், புளிப்பு-புளிப்பாகவும் கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு ஆகியவை கார்ப்பாகவும் பிரிவு படும்.
(விபாகம் அடையும்.)

## பிரபாவம் (மகிமை-தனி மாண்பு)

உட்கொண்ட பதார்த்தங்களில் சில, அவற்றிற்கு உள்ள சுவை, குணம், வீரியம், பிரிவு,என்னும் இந்நான்கு விதத்தன்மைகட்கு மாறுபட்ட செயலை உண்டாக்குவதற்கும், வேறு சில பதார்த்தங்கள் வெளிப் பிரயோகத்தினாலேயே சிறந்த பயனையளிக்கும் செயலுக்கும் பிரபாவம் என்று பெயர்.

**கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு** என்னும் இம்மூன்றும் வளியை மிகுவிக்கும்; கபத்தைச் சமப்படுத்தும்.

**இனிப்பு, புளிப்பு, உப்பு** இம்முன்றும் கபத்தை மிகுவிக்கும்; வாதத்தைச் சமப்படுத்தும்.

**கார்ப்பு, உப்பு , புளிப்பு** என்னும் இம்மூன்றும் பித்தத்தை விருத்தி செய்யும்.

**துவர்ப்பு, கைப்பு, இனிப்பு** என்னும் இம்மூன்றும் பித்தத்தைச் சமப்படுத்தும்.

**இனிப்பு** - கபத்தை விருத்தி செய்யும்; வாத பித்தத்தைச் சமப்படுத்தும்.

**புளிப்பு** - கப பித்தத்தை விருத்தி செய்யும்; வாதத்தைச் சமப்படுத்தும்.

**உப்பு** - வாதத்தைச் சமப்படுத்தும்; கப பித்தத்தை விருத்தி செய்யும்.

**கைப்பு** - வாதத்தை விருத்தி செய்யும்; கப பித்தங்களைச் சமப்படுத்தும்.

**கார்ப்பு** - கபத்தைச் சமப்படுத்தும்; வாத பித்தங்களை உண்டாக்கும்.

**துவர்ப்பு** - கப பித்தங்களைப் போக்கும்; வாதத்தை உண்டாக்கும்.

## பொருட் சிறப்பு

சுவை முதலிய ஐவகைத் தன்மைகள் பொருள்களின்றி அறியக் கூடாமையாலும், பதார்த்தங்களை ஆதாரமாகக் கொண்டிருக் கின்றமையாலும் சுவையாதிகள் சிறப்புடையனவா? பதார்த்தங்கள் சிறப்புடையனவா? என்று நோக்குங்கால் குணியின்றிக் குணத்தை யறியக் கூடாத் துணிபால் பதார்த்தங் களைக் கொண்டே சுவையாதிகளை அறியக்கூடும். ஆகையால் பிணிநீக்கத்தின் பொருட்டுச் செய்யும் மருந்துகள் யாவும் தத்தம் சுவை, குணவீரியங்களால் நோய்களைத் தீர்க்குமென்றாலும் பதார்த்தங்களின்றி மருந்துகளில்லாமையால் சுவையாதிகளைக் காட்டிலும் அவைகட்கு ஆதாரமாகிய பொருள்களே சிறப்புடையன என்பது யாவராலும் கொள்ளக்கூடிய முடிபாகும்.

## பதார்த்தங்களை ஐம்பூதச் சரக்குகளாக வகுக்கும் விதம்

போகர் எழுதிய ஏழாயிரம் என்னும் நூலிலும் பிற நூல்களிலும் முக்கியமாகத் தாதுப் பொருள்கள் ஐம்பூதச் சரக்குகளாக வகுக்கப்பெற்றிருக்கின்றன. மூலிகைகளைப் பெரும்பாலும் சுவைத்து அவற்றின் பூதச் சேர்க்கையை அறியலாம் ஆனால் இரச, உபரச , பாடாணாதிகளை அவ்வாறு சுவைத்தறிதல் கூடாதாகையினால் தாதுப் பொருள்களை அவ்வப் பிரதான பூதத்தைக் கொண்டு பஞ்ச பூத வகுப்பாக வகுத்தனர் போலும்.

இஃதன்றி இரச உபரசங்களைக் கொண்டு மருந்துகள் செய்யும் போது ஒவ்வொரு சரக்கையும் அவ்வவற்றின் பூத முறைப்படி சேர்க்கப்படாவிடின் அவை சரிவர முடியா. எவ்வாறெனின் சேர்த்தரைக்கும் போதே வெடித்தாவது, புகைந்தாவது, நீர்த்தாவது, கல்லுப்போல் கெட்டிப்பட்டாவது செய்யப்படும் மருந்து கெட்டுப் போய் விடும். அவ்வாறு கெடாது வரினும் அவற்றின் நிறம் வேறுபட்டுக் காணப்படுவதுமன்றி அவற்றின் குணமும் வேறு பட்டிருக்கும். ஒவ்வொரு மருந்தையும் செய்யும் போது அததில் சேரும் சரக்குகளைப் பஞ்ச பூதவாரியாக முறைப்படி சேர்த்தல் வேண்டும்.

*********

# 9. இரச வாதம்

சித்த மருத்துவம் பயின்றவர் யாவருக்கும் இதன் உண்மை, பெருமை, தன்மை, மதிப்பு முதலியன தெரியாமல் இராது. அண்மையில் வாழ்ந்த பெரிய சித்தராகிய தாயுமான அடிகள் இந்த இரச வாதத்தைப் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

'வெந்தழலி லிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்'

ஒரு பாடலில் குறிப்பிடும் போது அத்தகைய வித்தை மிக எளிது போல எல்லோருக்கும் தோன்றும்.

'ஆசைக்கோ ரளவில்லை'

என்னும் பாடலில் ....

'அளகேச னிகராக அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்தி ரசவாத வித்தைக் கலைந்திடுவர்'

என்று கூறும்போது அந்த இரச வாத வித்தை மிகக் கடினமானதென்றும், தோல்வி ஏற்படுதலும், ஏமாற்றம் காண்டலும் அந்த வித்தையில் இறங்குபவர்களுக்குப் பெரும்பாலும் கைகண்ட பலனென்பதும் விளங்கும்.

அத்தகைய வித்தையில் சித்தர்கள் கைவந்தவர்கள் (சித்தி பெற்றவர்கள்) என்பது அவர்கள் நூல் வாயிலாக அறியலாம். சித்தர்கள் இரசவாத வித்தையை ஒரு பிழைப்புக்காகவோ, பொன்சேர்த்து மகிழவோ செய்ததாக அவர்கள் நூல்களில் காணப்படவில்லை.

தீரா நோய் என்று கூறப் பெற்ற குட்டம், புற்று, கயநோய் நீரிழிவு, குடற்புண் போன்ற கொடிய நோய்களைத் தீர்க்கும் ஒரு கட்டோ, களங்கோ, சுண்ணமோ, பற்பமோ, செந்தூரமோ செய்முறையைக் கூறுவர். அது செம்மையுற முடிந்ததா? குறித்த பலனைத் தரவல்லதா? என அம்மருந்தைப் பரீட்சித்துப் ப்பார்க்க

தாம்பிர உருக்கு முகத்திலோ வெள்ளி உருக்கு முகத்திலோ அம்மருந்தைக் கொடுத்தால் அந்தத் தாம்பிரமோ வெள்ளியோ பொன்னாம் என்பர். அப்படி மட்டமான உலோகம் உயர்ந்த பொன்னாகுமானால் வேறு எந்த மருந்தாலும் தீராத உடற்பிணிகள் தீர்ந்து, அது உயர்ந்த நிலையை அடையும் என்பது சித்தர்களின் துணிபு. அம்முறைகளைக் கூறும் நூல்களைப் படிப்பவர்கள் யாவரும் தங்கம் செய்யும் ஆசையால் அந்த மருந்துகளை முறைப்படி செய்து அந்த மருந்துகளின் உதவியால், தீராததெனக் கூறப்படும் நோய்களை யெல்லாம் தீர்த்து மிக்க செல்வத்தையும் புகழையும் அடையட்டுமென்ற பெருநோக்கோடு அம் முறைகளைக் கூறிச் சென்றனர். அவ்வாறு கூறும் சித்தர்கள் யோக முறைகளையும் ஞான உபதேசத்தையும் இடையிடையே கூறி வற்புறுத்தியும் வந்துள்ளார்கள்.

அவ்வண்ணம் யோக ஞானத்தை ஒவ்வொரு சித்த மருத்துவனும் கற்றுப் புலமை பெறும் மருத்துவத்துக்கு முதற்படியாக மனங்கொண்டு அந்நெறிகளினின்றும் வழுவாமல் இருக்க வேண்டுமென்பது சித்தர்களின் குறிக்கோளாகும்.

யோக சித்தியும் ஞானப் பெருக்குமடைந்தவருக்கு மூவகை ஈடணையும் தோன்றாது. அத்தகையோர் பொன் முதலானவற்றை வெறுத்து **'ஒதுக்கி விடுவார்'**. ஆகவே செல்வத்துக்குத் தமிழில் **'வெறுக்கை'** என்ற பெயர் உண்டாயிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

யோக சித்தியும் ஞான சித்தியும் அடைந்த பேர்களுக்கு வாதசித்தி தானே சித்திக்கும் என்பதற்கும், பேராசைப்பட்டு இரசவாத மென்றலைபவர்க்கு, இரசவாதம் சித்தியாது என்று நம் புராணங்களில் சான்றுகள் காணப்படுகின்றன.

## சித்தர் மருந்துகள் ஆக்கும் அடிப்படை விதிகள்

**அ. வாத சித்தி-** சித்தர் எனப்பட்ட பெரியோர்கள் பற்பல விதமான மருந்துகள் செய்தனர், அவர்களுடைய மருந்து சரக்குகள்........

1. தாவர வர்க்கங்களிலிருந்து **கிழங்கு, வேர், தண்டு, காய், பழம், விதை, இலை, பூ, பால், சாறு, பட்டை** போன்றவைகளும்;

2. இயங்கும் உயிரினங்களிலிருந்து **மாமிசம், நிணம், என்பு, நகம், தோல், சிறகு, பால், கழிவுப் பொருள்கள்** முதலானவைகளும்;

3. கனிப்பொருள்களாகிய **உலோகம், இரசம், உபரசம், உப்புகள், பாடாணங்கள்** முதலானவைகளும் ஆகிய மூவகைப் பிரிவுகளிலிருந்தும் கிடைக்கின்றன.

மேற்கண்டவற்றுள் தாவரங்களிலிருந்தும், இயங்கும் உயிரினங்களிலிருந்தும் கிடைக்கக்கூடிய மருந்து சரக்குகள் விரைவில் கெட்டும், செயலிழந்தும், சக்தியின்றியும் நாளடைவில் வேறு சிறு கிருமிகள் பூச்சிகள் போன்றவைகளுக்கு உணவாய் அழிந்தும் போய் விடுகின்றன. சித்தர்கள் இவ்வுண்மையைப் பல்லாயிரம் வருடங்களுக்கு முன்னரே கண்டு பிடித்தார்கள். **உலோகங்கள், இரசம், உபரசங்கள், உப்புகள்** (முதலானவை) பல்லாண்டுக் காலம் அழியாமலும், கெடாமலும் இருப்பதைக் கண்டு அவற்றிலிருந்து மருந்துகள் செய்தால் அம் மருந்துகளும் பல்லாண்டுக்காலம் வீரியத்துடனிருந்து உடற் பிணியைத் தீர்த்து உடலைக் காக்குமென்று ஊகித்து, அவற்றைச் சீரணமாகாத நிலையிலுள்ளவற்றை அளவுப்படி உண்டால் சீரணமாகும் வகையாகவும் அவற்றின் விடத் தன்மை மாறி உடலில் புகின் அமுதம் போலத் தொழில் செய்பவைகளாகவும் மாற்ற, பற்பல வழி முறைகளைக் கையாண்டனர். அவற்றில் வெற்றியும் பெற்றனர். இவ்வகை முயற்சியையே வாதம் என்றனர்.

மானிட உடல் அழிந்தொழியும் தன்மையுடையது. ஆனால் இந்த உடலே மனிதர்களுக்கு அழியா இன்பம் என்னும் உறுதியையடைய ஒரு சாதனமாய் அமைந்துள்ளது என்பதை,

'தான் விளைக்குங் கருஞ்சேற்றைக்
கழுவி நீக்குந் தண்புனல்போல்
இருவினைக்குந் தனுவாய் நின்ற
ஊன் விளைக்கும் ஒழிக்கும் எனும்
முறையா லிந்த உடலிருந்தன்றோ
உறுதி பயக்கவேண்டும்'

என்ற பெரியோர் வாக்காலும். தம் ஞானச் சக்தியாலும் கண்டு கொண்ட சித்தர்கள் அழியுந்தன்மை வாய்ந்த மூலிகை மற்றுமுள்ள உயிரினங்களிடமிருந்து கிடைக்கக் கூடிய சரக்குகளைக் கொண்டு உலோகம், இரசம், உபரசம் ஆகியவற்றை நம் உடலுக்கு உறுதியையும், அழியாத தன்மையையும், நிலைத்திருக்கும் தன்மையையும் தரவல்லதான மருந்துகளாய்ச் செய்து அவற்றை உண்டு உடலை நெடுநாள் இருக்கச் செய்து யோகஞான நெறிகளில் முழுமையாக ஈடுபட்டுப் பிறவிப் பிணியாகிய முதற் பிணியை நீக்கிக் கொண்டால் இறத்தல் என்னும் இரண்டாம் பிணியை வராமல் தடுத்துத் தீராப் பிணிகளாகிய அவை இரண்டிலிருந்தும் விடுதலையடையலாம் எனக் கருதினார்கள், அக்கருத்து மிக்க முயற்சியைத் தூண்டியது. அதன் விளைவாகத் தாவரம் மற்றும் இயங்கும் உயிரினப் பொருள்களிலிருந்து கிடைக்கும் பொருள்களிருந்து செய்யவல்ல உள் மருந்துகள் புற மருந்துகள் ஆகியவற்றைச் செய்யத் தலைப்பட்டு அத்துடன் திருப்தியடையாமல் அப்பொருள்களின் உதவிகொண்டு உலோகம், இரசம், உபரசம், உப்பு, பாடாணம் ஆகியவற்றைத் தக்க மருந்துகளாகச் செய்து உட்கொள்ள வழிமுறைகள் கண்டுபிடித்தனர். அவற்றைத் தக்க முறையில் தாமே உட்கொண்டு பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து காட்டியும், தம்மிடம் மருத்துவத்துக்கும், மருத்துவம் பயிலுவதற்கும் அன்னியர்களுக்கும், தாம் கண்ட இன்பம் இவ்வுலகமும் கண்டு துய்த்திடல் வேண்டும் என்ற பரந்த உள்ளங் கொண்டு, தம்முடைய மருந்துகளைக் கொடுத்து உதவியும் தாம் கண்ட உண்மைகளை உபதேசித்தும் தம் கைப்படச் செய்து காண்பித்தும் தம் சீடர்களைக் கொண்டு செய்வித்தும் உலகுக்கு நற்றொண்டு செய்து வந்தனர்.

அவர்கள் முயன்று செய்த உலோக இரச, உபரச, உப்பு, பாடாண வகைகள் யாவும் பற்பங்கள், செந்தூரங்கள், சுண்ணங்கள், கட்டுகள், களங்குகள், குருகுளிகை போன்ற உயர்ந்த மருந்துகளாக மிளிர்ந்தன. அவற்றின் உதவியால் உடற் பிணிகளில் தீரா நோய் என்று கூறப்படும் பற்பல பெரு நோய்களைத் தீர்ப்பதில் வெற்றி கண்டனர். அவர்கள் முதலில் ஊகித்த படியே உடலை நீண்ட நாள்கள் நல்ல நிலையில் இயங்க வைத்துக் காய சித்தியில் வெற்றி கண்டனர். மற்றும் யோக சாதனையில் வெற்றி கண்டு அதன் பயனாக யோக சித்தி பெற்று முக்காலமும் உணரும் ஆற்றலையும், ஊன் பொறிகளின் அடக்கத்தால் நுண் பொருள்களின் இயக்கத்தைக் கையாள ஆற்றல் பெற்றனர். அந்த ஆற்றலால் இயல்பாகக் கண், காது, மூக்கு, நாக்கு, தோல் ஆகியவற்றுக்குப் புலனாகாத நுண்ணிய விடயங்களை அறிந்து அவற்றைத்தம் நூல்களில் பதிப்பித்தும், தம் சீடர்களுக்குக் காண்பித்தும் வந்தார்கள்.

மேலும் தாங்கள் செய்த மருந்துகள் யாவும் நல்ல முறையில் முடிந்துள்ளனவா என்பதைப் பரீட்சித்துப் பார்க்க அவற்றைத் தாம்பிரம், ஈயம், நாகம் போன்ற மட்டமான உலோகங்கள் உருகும்போது அவற்றின் எடைக்கு நூற்றுக்கு ஒன்று, ஆயிரத்துக்கு ஒன்று, பத்தாயிரத்துக்கு ஒன்று என்ற விகிதத்தில் கொடுத்தால் உயர்ந்த உலோகமாகிய தங்கம் அல்லது வெள்ளியாக மாற்றுமென்ற உண்மையைக் கூறியுள்ளனர். அவ்வாறு நல்ல முறையில் முடிந்ததான பற்ப, செந்தூர, சுண்ணம்யாவும் மிக்க மட்டமாகிய இவ்வுடலையும் உயர்ந்தவைகளாகவும் நெடுநாள் நிலைத்திருக்கவும் செய்யுமென்று நிலை நாட்டினார்கள்.

சித்தர்கள் காலத்தில் பொருள்களின் அணு மாற்றத்தைக் கண்டு பிடித்து, மிக்க சாந்தமான முறையில் அவற்றை இயங்கச் செய்து பல ஆக்க வேலைகள் செய்துள்ளனர். அவ்வகை ஆக்க வேலைகள் அவர்களுடைய ஆன்ம சக்தியாலும், மூலிகை, குளிகை குரு, சுண்ணம் முதலான மருந்து சக்தியாலும் நிகழ்த்தியுள்ளார்கள் என்பதை அவர்களின் நூல்கள் வாயிலாக அறியலாம்.

சித்தர்கள் நெருப்புக்குப் புகைந்து ஓடக்கூடியதாகிய சரக்குகள் இரசம், நாகம், இலிங்கம், பாடாணம் முதலியவற்றை நெருப்புக்கு ஓடவொட்டாமல் தடுத்தும், நீரில் கரைந்து போகக் கூடியதும் நெருப்புக்கு நில்லாது வெடித்துச் சிதறக் கூடியதுமாகிய உப்புவகைகளைக் கட்டி நீரில் கரையாமலும் நெருப்புக்கு வெடிக்காமல் உருகி, ஆறவிட்டவுடன் இறுகி மணியாக மாறும்படிச் செய்யவல்ல முறைகளைக் கண்டுபிடித்து அவ்வாறு கட்டுண்ட சரக்குகளைப் பற்பம், செந்தூரம் முதலான மருந்துகளாகச் செய்து தீர்த்தனர். அவ்வாறு அவர்கள் மருந்து செய்யக் கையாண்ட முறைகளில் சில. அவை...

1. **ஏக மூலிகைப் பிரயோகம்**
2. **மாரணப் பிரயோகம்**
3. **திராவகப் பிரயோகம்**
4. **செய்நீர்ப் பிரயோகம்**
5. **முப்புச் சுண்ணப் பிரயோகம்**

என்பவைகளாம்.

## 1. ஏக மூலிகைப் பிரயோகம்

சில சரக்குகளை ஐம்பூதக் கூட்டுறவின் முறைப்படி சேர்த்து மருந்தாக முடித்துப் பயன்படுத்தலாம்.

## 2. மாரணப் பிரயோகம்

இது ஒரு சரக்கின் சத்துரு (பகை) மித்துரு (நட்பு) சரக்குகளையறிந்து, அச்சரக்கைப் பகைச் சரக்கால் மடித்து நட்புச் சரக்கால் உயிர்ப்பித்தலாகும். இவ்வகைச் செய்கையால் ஒரு பொருளின் உருவத்தை (அணுக்களின் கட்டுக் கோப்பை) மாற்றிப் பின் உண்டான மருந்துக்கு முதற் பொருளின் நட்புச் சரக்கைக் கொடுத்து உரங் கொடுத்தலாம்.

## 3. திராவகப் பிரயோகம்

இது சில உப்புகளைப் பஞ்ச பூத முறையையறிந்து அளவுப்படிக் கூட்டித் திராவகப் பானை (அதற்கெனவே சிறப்பாகச் செய்வித்த

திராவகப் பானைகள்) களிலிட்டு அடுப்பின்மேல் வைத்துக் காய்ச்சித் திராவகம் இறக்கிக் கொள்ளல். இவ்வாறு இறக்கிய திராவகத்தைக் கொண்டு சரக்குகளை மடிய வைத்து பற்ப, செந்தூர, சுண்ணங்களாகச் செய்து கொள்வதாம். இதற்கு எடுத்துக்காட்டு **வெடியுப்புத் திராவகம், சங்கத் திராவகம்** முதலியன.

### 4. செயநீர்ப் பிரயோகம்

சில சரக்குகளை முறைப்படி சேர்த்து அவற்றை நீர் வடிவாக்கி அவ்வகைச் செய்நீர்களின் உதவியால் நெருப்புக்குப் புகைந்தோடும் சரக்குகளாகிய உபரச பாடாணங்களை ஓடா வண்ணம் தடுப்பதற்குப் பயன்படுத்துவதாம். இவ்வகைச் செய்நீர்க்கு உதாரணம்- வெடியுப்புச் செய்நீர், அண்ட வெருக்கன் செய்நீர் போன்றவை.

### 5. முப்புப் பிரயோகம்

இது பூநீறு எனப்படும் ஓர் உப்பைச் சுண்ண வடிவாக்கி உபயோகிக்கும் முறையாம். இதுபோல முப்பு முறைகள் பல உள. முப்புவைப் பற்றி முன் கூறியுள்ளதையும் கவனிக்கவும்.

*குறிப்பு- சிலர் குரு பற்பம், குருதாமிரம், துருசு குரு என வெவ்வேறு சுண்ணங்களைத் தாம் செய்யும் மருந்துகளில் சேர்த்துச் செய்வர். சிலர் எல்லா மருந்துகட்கும் வன்மை கொடுக்கும் பொருட்டுப் பூநீற்றைச் சுத்தி செய்து நெய்ப்புத் தன்மையைப் போக்கி உபயோகிப்பதுண்டு. இவற்றிற்கு எடுத்துக் காட்டுகளாக அனேக முறைகளை குணபாடம் (தாது வர்க்கம்) என்ற நூலில் காணலாம்.*

## ஆ. காயசித்தி (உடற்சித்தி)

சித்தர்கள் உடற்பிணிக்கு மருத்துவம் செய்யத் தேவைப்பட்ட மருந்துகளை மட்டும் கண்டு பிடிக்கவில்லை. அவர்கள் மனப் பிணிகளைக் குணப்படுத்தும் மருந்துகளாகிய யோக நெறிகளையும், ஞான நெறிகளையும் செப்பனிட்டு அதன் வழி நடந்தும் மக்களுக்கு உபதேசித்தும் வந்தனர். மேலும் இவர்கள் மீண்டும் மீண்டும் பிறந்தும்

இறந்தும் அல்லலுறாமல் அவ்விரு தீராப் பிணிக்கும் அருமருந்தாகிய முத்தி நிலையை ...

* *சிவ சீவ ஒன்றிப்பு*
* *இரண்டறக் கலத்தல்*
* *அத்துவித சித்தி*
* *தூய விடுதலை*

அடைவதைத் தம் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு ஆய்ந்தனர். தம் குறிக்கோள் முட்டின்றி வெற்றியுடன் அடைய *உளச் சித்தி, உடற் சித்தி* ( காய சித்தி) ஆகிய இரண்டும் நல்ல படியாக எய்தினால்தான் இவர்கள் அமிர்த சித்தி என்னும் இறவாத நிலையைப் (இது அருவ சித்தி, உருவ சித்தி, அருவுருவ சித்தி என மூன்று வகைத்து) பெற இயலும் என்பதைக் கண்டு கொண்டனர். இவ்வகைச் சித்திகளைப் பெற முயல வேண்டின் உடல் நன்னிலையில் காயசித்தி பெற்றிருத்தல் வேண்டும் என்பதை உணர்ந்து அதையடைய மிக முயன்று முன் கூறியது போலப் பற்பல மருந்துகள் செய்து வாத சித்தி பெற்றனர். வாத சித்திக்காகச் சித்தர்கள் மிக்க அலைய வேண்டிய நிலை ஏற்படுமென்பது கூறாமலே விளங்கும். இவ்வளவு அலைச்சலும் உடலானது அழியாது நிலைத்து நிற்கும் சாதனங்களைப் பெரிதும் தேட இன்றியமையாத சாதனமாயிற்று.

'தேகமியா தானுமொரு சித்தி பெறச் சீவன் முத்தி
யாகு நெறி நல்ல நெறி'

எனத் தாயுமான அடிகளாரும்,

"நரை மரண மூப்பறியா நல்ல வுடம்பினரே
நற்குலத்தாரென அறியீர்"

என்றும்,

'செத்திறந்து போய்க்கதியைப் பெறநினைந்தே ஏமாந்த
பேதையைப் போல் எனை நினையேல்'

என இராமலிங்க அடிகளாரும் கூறியிருப்பதை நோக்குவோர்க்குச் சித்தர்களின் குறிக்கோள் நன்கு விளங்கும். இத்தகைய காய சித்தி பெறச் சித்தர்கள் காயகற்பம் என்ற ஒரு முறையைக் கண்டுபிடித்துள்ளனர்.

காயம் என்பது உடல்; கற்பம் என்பது ஒரு கால அளவு. அதைப் பற்றிச் சிறிது ஆய்வோம்.

ஒருவர் அரசு அலுவலராகப் பணியாற்ற அவருடைய 25 ஆம் வயதிலிருந்து 55 வயது முற்றும் வரை மொத்தம் 30 ஆண்டுகள் அலுவலர் வயதாம். அதே போலப் பிரமன் என்ற படைத்தல் தொழிலர் பணிபுரிய உள்ள கால அளவு கற்பம் எனப்படும். இது கணக்கிடப்படுகிறது. நரருடைய ஓராண்டு தேவர்களுக்கு ஒரு நாள். இது போலத் தேவர்களுடைய (365 நாட்கள்) ஆண்டைக் கணித்து அத்தகைய ஆண்டுகள் (தேவ ஆண்டு) நூறு கொண்டது பிரமனுக்கு ஒரு நாளாம். அவ்வாறு நூறாண்டுக் காலம் (பிரம ஆண்டுகள்) ஒரு பிரமன் தன் பிரமப் பட்டத்தில் இருந்து படைத்தல் தொழில் செய்வார். அந்தக் காலந்தான் கற்பம் (கல்பம்) என்று கூறப்படுகிறது. இதிலிருந்து பிரம கற்பம் போல நீண்டநாள்கள் மனிதன் உடலுரத்துடன் பிணிகளின்றி வாழ வகை தரும் நோக்கத்தோடு அத்தகைய செயல்திறமுள்ள மருந்துகளைச் செய்து வைத்தால் அவை கற்ப மருந்துகள் எனப்படும்.

இவ்வகைக் கற்ப மருந்துகளைச் சித்தர்கள் மூலிகைகளாலும், உலோகங்களாலும், இரசம், உபரசம், உப்பு, பாடாணங்கள் ஆகியவற்றாலும் செய்து பலன் கண்டுள்ளார்கள்.

* **தனி மூலிகைக் கற்பம்**
* **பல மூலிகைகளைக் கொண்டு செய்த சூரணம்,இளகம் இரசாயனம் போன்ற கூட்டு மருந்துகளாலான கற்பம்**
* **தனி உலோக பற்ப செந்தூர முதலான கற்பங்கள்**
* **பல உலோகங்கள் கூடிய கற்பங்கள்**
* **தனி இரசத்தாலான மருந்து கற்பங்கள்**
* **உபரச கற்பங்கள்**
* **உப்புவகைக் கற்பங்கள்**

எனப் பலவகைக் கற்பங்கள் உள. அவற்றின் விரிவுகளைப் *'போகர் கற்பம் முந்நூறு'* போகர் ஏழாயிரத்தின் முதலாமாயிரத்தின் பின் பாதியிலும், தேரையர் யமகத்தில் முதலிலே சில பாடல்களிலும் கண்டு கொள்ளலாம்.

மேலும் அப்பெரியோர்கள் இரசத்தை மணியாகக் கட்டி உறுதி படச் சாரணை பல செய்து அந்த இரச மணியைத் தங்கள் சித்திக்கு வேண்டிய வழியில் பயன்படுத்தி வந்தனர் என்பதைப் போகர் ஏழாயிரத்தில் மூன்றாம் ஆயிரத்தில் மிக்க விரிவாகக் காணலாம். மற்றும் பல வாத காவியங்களிலும் கூறப் பெற்றுள்ளது.

*சித்த மருத்துவ நூல்களில் சிறப்பாகக் காணப்படும்* **கட்டு, களங்கு, உருக்கு, சத்து** *எனக் கூறப்படும் உள் மருந்து வகைகள் வட நாட்டு வாகடங்களில் காணப்படா என்பது குறிப்பிடத்தக்கது.*

மேலும் சித்த மருத்துவத்தில் ***சரக்கு வைப்பு*** என்னும் ஒரு கலை வழக்கிலிருந்து வருகிறது. இயற்கையாகக் காணப்படும் உப்புகள், உபரசங்கள், பாடாணங்கள் ஆகியவற்றைச் செயற்கையாகச் செய்வது தான் சரக்கு வைப்பு எனப் பெறும். இக்கலை வேறு வகை இந்திய மருத்துவ முறைகளில் காணக் கிடைக்காதது. இதனை முதன் முதலாகக் கண்டு பிடித்தவர்களும் கையாண்டு வருபவர்களும் சித்தர்களேயாவர். இத்தகைய சரக்கு வைப்பு முறைகளை...

* *போகர் ஏழாயிரம்*
* *அகத்தியர் அமுதக் கலை ஞானம்,*
* *சட்டமுனி சரக்கு வைப்பு,*
* *மச்சமுனி பெருநூல் எண்ணூறு,*
* *மச்சமுனி திருமந்திரம் எண்ணூறு,*
* *பாண்ட வைப்பு*

என்னும் நூல்களில் மிக விரிவாகக் காணலாம். சித்தர்கள் மருந்துகளாக்கிப் பயன்படுத்திய தாதுப் பொருள்கள் தொடக்கத்தில் கூறியது போல...

* இரசம்
* உலோகம்
* காரசாரம்
* பாடாணம்
* உபரசம்

என ஐவகையாகும். காரசாரங்களிலும் பாடாணங்களிலும் இயற்கை செயற்கையென இருவகை உண்டு.

1. **இரசம்**: இரசத்தில் ஐந்து விதம் உண்டு. அவை இரசம், இரசேந்திரம், பாரதம், சூதம், மிசிரகம் என்பனவாம். இதனைப் போகர் ஏழாயிரம்- இரண்டாமாயிரம் 756 ஆம் பாடலினாலும் அதன் குணங்களை 757 முதல் 764 வரையிலுள்ள பாடல்களினாலும் அறியலாம்.

2. **உலோகம்:** இதில் தனி உலோகம், கலப்பு உலோகம் என இருவகையுண்டு. அவற்றுள் தனி உலோகங்கள் சித்தர் நூலில் கண்டவாறு தங்கம், வெள்ளி, செம்பு, துத்தநாகம், இரும்பு, வெள்ளீயம், காரீயம் என ஏழாம். கலப்பு உலோகங்கள் வெண்கலம், பித்தளை, தரா என்பனவாம். உருக்கு என்பது இரும்பின் வகையேயாயினும் அதையும் ஒருவகை உலோகமாகச் சில நூல்கள் கூறும். வேறு சிலர். தண்டவாளத்தையும் ஒரு தனி உலோகமாகக் கூறுவதையும் காணலாம். மேற்கூறிய உலோகங்களின் தனி உலோகக் கூட்டாகப் பஞ்ச லோகம், சப்த லோகம் என்றுங் குறிப்பிடுவர். நவ லோகம் என்றால் அதில் ஏதாவது இரு கலப்பு உலோகங்கள் இடம் பெறுமென்றறிக.

3. **காரசாரம் (உப்பு வகைகள்):** இவை மொத்தம் இருப்பதைந்தாம், அவற்றில் இயற்கையானது பத்தும் செயற்கையாகச் செய்யப் பெறுவன பதினைந்துமாம்.

**அ. இயற்கைக் காரசாரங்கள்**

சூடன், சீனம், பூநீறு, வளையலுப்பு, பச்சைக் கற்பூரம், கல்லுப்பு, கறியுப்பு, பொன்னம்பர், மீனம்பர், கடல்நுரை என்ப் பத்தாம்.

**ஆ. செயற்கைக் காரசாரங்கள்:**

இந்துப்பு, பொட்டிலுப்பு, வெண்காரம், துருசு, யவாட்சாரம், நவாசாரம், சத்திச் சாரம், ஏகம்பச் சாரம், கெந்தியுப்பு, எள்ளுப்பு, கந்தக லவணம், காய்ச்சுப்பு, பிடாலவணம், சிந்துலவணம், காசி லவணம் எனப் பதினைந்தாம்.

4. **பாடாணங்கள்-** இவை மொத்தம் அறுபத்து நான்கு. அவை இயற்கைப் பாடாணங்கள் முப்பத்திரண்டு என்றும், செயற்கைப் பாடாணங்கள் முப்பத்திரண்டு என்றும் கூறப்படும்.

## இயற்கைப் பாடாணங்கள் (32)

* கறடக பாடாணம்,
* கோளக பாடாணம்,
* சூத பாடாணம்,
* மிருதாரம்,
* கந்தகம்,
* வீரம்,
* வைக்கிராந்தம்,
* தாலம்ப பாடாணம்,
* அமிர்த பாடாணம்
* சிரபந்த பாடாணம்,
* தொட்டிப்பாடாணம்,
* குதிரைப்பல் பாடாணம்,
* சங்க பாடாணம்,
* கௌரி பாடாணம்,
* துத்த பாடாணம்,
* பலண்டுறுகம்,
* காந்தம்,
* இலிங்க பாடாணம்,
* சரகண்ட பாடாணம்,
* தாளக பாடாணம்,
* மனோசிலை,
* ஆப்பல் பாடாணம்,
* சாலாங்கபாடாணம்,
* கற்பரி பாடாணம்,
* கற்பாடாணம்,
* அஞ்சன பாடாணம்,
* கச்சால பாடாணம்,
* சீதாங்க பாடாணம்,
* சிலாபத பாடாணம்,
* கார்முகிற் பாடாணம்,
* அப்பிரக பாடாணம்,
* வெள்ளைப் பாடாணம்.

என்னும் முப்பத்திரண்டும் இயற்கைப் பாடாணங்களாகும்.

இப் பிறப்புப் பாடாணங்களின் பெயர்களைப் போகர் ஏழாயிரம்-இரண்டாமாயிரத்தில் 870-872 ஆம் பாடல்களில் விவரித்துள்ளதைக் காணலாம் அரிதாரம் என்பதும் தாளகம் என்பதும் வெவ்வேறு என்பது இப்பாடலால் அறியக் கிடைக்கின்றது.ஆயினும் தற்போது அரிதாரம் என்பதே தாளகம் என்று கையாளப் பெறுகிறது. இதன் பேதம், அறியாமையே காரணமாக இருக்கவேண்டும்.

## செயற்கைப் பாடாணங்கள் (32)

| | | | |
|---|---|---|---|
| * | புத்தோட்டுத் தொட்டி, | * | கோடாசோரி, |
| * | பொற்றொட்டி, | * | பஞ்ச பட்சி, |
| * | செப்புத் தொட்டி, | * | குங்குமப் பாடாணம் |
| * | எருமைநாத் தொட்டி, | * | இரத்த பாடாணம், |
| * | ஏமசிங்கி, | * | துத்தம், |
| * | இரத்த சிங்கி, | * | துருசு, |
| * | மிருதார் சிங்கி, | * | இரசிதம், |
| * | சாதிலிங்கம், | * | தைல பாடாணம் |
| * | கருமுகில், | * | சூதபாடாணம், |
| * | தீமுருகல், | * | நீலம், |
| * | வெள்ளை, | * | கந்தகம், |
| * | சவ்வீரம், | * | சோரபாடாணம், |
| * | கோழித்தலைக்கெந்தி, | * | காக பாடாணம், |
| * | வாணகெந்தி, | * | இலவண பாடாணம், |
| * | அரிதாரவைப்பு, | * | நாக பாடாணம், |
| * | பவளப் புற்று, | * | இந்திர பாடாணம், |

என்னும் முப்பத்திரண்டும் செயற்கைப் பாடாணமாகும்.

இச் செயற்கைப் (வைப்பு) பாடாண வகைகளைப் போகர் ஏழாயிரம்-இரண்டாம் ஆயிரம் பாடல் 404-406 இல் காணலாம்.

5. **உபரசங்கள்** : இவை நூற்றிருபது என்று சித்தர் நூல்கள் கூறும். அதைப் போகர் ஏழாயிரம்- மூன்றாம் ஆயிரத்தில் பாடல் எண் 227-241-ல் காண்க.

* காந்தம்
* அப்பிரகம்
* துருசு
* கல்நார்
* பொன் நிமிளை
* கருங்கல்
* செங்கல்
* சுக்காங்கல்
* ஈரக்கல்
* சூடாலைக்கல்
* கருடக்கல்
* இராசவர்த்தக்கல்
* பவழம்
* வைடூரியம்
* பச்சை
* நீலம்
* நாகரவண்டு
* கருவண்டு
* ஆமை
* உவர்மண்
* கற்சுவடு
* ஓட்டின் தூள்
* கற்பூரச்சிலை
* காவிக்கல்
* சுத்தமணல்
* செம்மண்
* சொர்ண பேதி
* கல்மதம்
* வைரம்
* முத்து
* நீலாஞ்சனக்கல்
* எறும்பு
* மாக்கல்
* தேக்கல்
* பூநாகம்
* இந்திர கோபம்
* கோமேதகம்
* புட்பராகம்
* முட்டை
* மயில்
* எலும்பு
* நண்டு
* நத்தை
* மான் கொம்பு
* கலைக்கொம்பு
* மாட்டுக் கொம்பு
* ஆட்டுக்கொம்பு
* ஆனைக்கொம்பு
* கோழிக்கால்
* மாட்டுக்கால்
* குருந்தக்கல்
* பன்றிக்கொம்பு
* அஸ்திபேதி
* மஞ்சள்கல்
* தவளக்கல்
* மாங்கிசபேதி
(மாந்தபேதி என்னும் சில நூல்கள்)
* சிட்டக்கல்
* வெள்ளைக்கல்
* சுக்கான்கல்
* சிலாவங்கம்
* செவ்வட்டை
* செம்புமண்
* மீனெலும்பு
* கத்தூரி

* தேன்
* கடல்நுரை
* மயிர்
* கரடி
* மாந்தளிர்க்கல்
* படிகக்கல்
* தவளை
* கடற்பாசி
* சாலிக்கிராமம்
* கழுதை வண்டு
* நாகப்பச்சை
* கருமணல்
* வங்கமணல்
* காந்தக்கல்
* ஏமசிலை
* ஏமமண்
* நாகமணல்
* ஈயமணல்
* நாய்க்கட்டம்
* காகசிலை
* மந்தாரசிலை
* முட்சங்கு
* மாங்கிஷ சிலை
* மரகதம்
* குருவண்டு
* கெண்டசிலை
* காகசிலை
* பன்றிமுள்
* எலிமுள்
* வங்கசிலை
* ஈயசிலை
* இரசிதசிலை
* முத்துச்சிப்பி
* பல்
* உலோகமணல்
* கிளிஞ்சல்
* செம்புமலை
* உரம்
* வெண்கலமலை
* வளப்பக்கல்
* வெள்ளிமணல்
* அயச்சிலைக்கல்
* திமிங்கலம்
* பேரோசனை
* தராமலை
* பித்தளைமலை
* காண்டாமிருகக்கொம்பு
* புற்றாம் பழம்
* குளவிக் கூட்டுமண்
* நாகச்சட்டை
* புறாவெச்சம்
* மின்மினிப்பூச்சி
* மாணிக்கம்
* வைக்கிராந்தம்
* அன்னபேதி
* சாத்திரவேதி

என்பவை என அறிக. இவை ஒவ்வொன்றிலும் பல வகையுண்டு. அதனைப் பெருநூல்களில் கண்டு கொள்க.

# இயல்.10

# 1. உடம்பின் அருமையும் ஓம்பும் கடமையும்

நம் உடம்பின் வெறுப்பூட்டும் உறுப்புகளையும், உணர்ச்சியூட்டும் பகுதிகளையும் மறைப்பதற்கு நாம் பலவகையான துணிகளைப் பயன்படுத்துகிறோம். ஏழைமக்கள் எளிய உடைகளையும் செல்வர்கள் விலையுயர்ந்த ஆடைகளையும் அணிகிறார்கள். இவ் வுடம்புக்கு ஒன்பது வாயில்கள் இருக்கின்றன. தலையிலே உள்ளன ஏழு வாயில்கள். அவை:- வாய், மூக்கு, கண், செவி, என்பன. வாயைத் தவிர ஏனைய மூக்கு,கண், செவி என்பன தனித்தனி இரண்டிரண்டு ஓட்டைகளை உடையவை.

இவற்றுள் வாய் மிகவும் முதன்மையானது. இவ்வுடம்பு நிலைத்திருப்பதற்குக் காரணமாகிய உணவை உண்பதற்கு வாய்தான் பயன்படுகின்றது. நாம், சோறு, பண்டங்கள், முதலியனவற்றை உண்கிறோம். பின்பு அவை செரிப்பதற்காகத் தண்ணீர்க் குடிக்கிறோம். இங்ஙனமாகிய உணவு உடம்பு அழியாமலிருப்பதற்கு அடிப்படையான காரணமாக இருக்கிறது. இதனைச் செம்மையாக அமைத்து உண்டு வாழ்வது இன்றியமையாதது. உடம்புக்குக் கேடு வருவதெல்லாம் உணவு வழியாகவேதான். அதனாலேயே தெய்வப் புலமை திருவள்ளுவ நாயனார் தமது உலகப் பொது மறையாகிய திருக்குறளில் "உணவு" என்று தனி அதிகாரம் வகுத்திருக்கிறார்.

மேலும், உடம்பிலுள்ள ஒன்பது ஓட்டைகளிலும், இவ்வாய்தான் முதன்மையானது என்பதற்கு வேறு தகுந்த காரணங்களும் இருக்கின்றன. நாம் நெஞ்சில் எண்ணும் எண்ணங்களை நம்மைச் சேர்ந்தவர்கள் அறியும்படி சொல்வதற்கு வாயே முதன்மையான வாயாக இருக்கிறது. வாய் என்பது வழி. வாய்க்கு அடுத்து மேலே இருப்பது மூக்கு. அதில் இரண்டு ஓட்டைகள் இருக்கின்றன. அவற்றின் வழியாகவே நல்ல காற்று உடம்புக் குள்ளே போகிறது.

உள்ளேயுள்ள கெட்ட காற்று வெளியே வருகிறது. நம் உடம்பில் உயிரை இருத்துகின்ற பொருள் இருத்தம் என்று பெயரிடப் பெற்றிருக்கிறது. அந்த இருத்தம் மாசு நீங்கி நல்லபடியாக எப்போதும் இருந்தாதல் வேண்டும். அதற்குக் காற்று இன்றியமையாததாக இருக்கின்றது. காற்றில் எரிப்பகுதி (Oxygen) உள்ளது. அது பிராணவாயு என்றும் பெயர் பெறும். ஏனெனில் பிராணன் என்று சொல்லப்படும் உயிர் உடம்பில் இருப்பதற்கு இதுதான் முதற்காரணமாக இருக்கிறது. நாம் மூக்கு வழியாக உட்கொள்ளும் காற்றில் பெரும்பகுதியாக இருக்கும் இவ்வுயிர்க் காற்று நம் மார்பிலுள்ள ஈரற்குலைகளில் பாய்கிறது. பாய்ந்து உடம்பிலுள்ள அசுத்தப் பொருள்களை அடித்துக் கொண்டுவரும் இருத்தம் அங்கே வந்து பாயும் பொழுது அதிலே உள்ள அசுத்தத்தையெல்லாம் தான் எடுத்துக் கொண்டு அதனைச் சுத்தமாக்கி விடுகிறது. அங்ஙனம் சுத்தம் செய்யப்பெற்ற இருத்தம் நம்மார்பின் இடப்புறத்திலிருக்கிற ஒரு கருவியில் வந்து சேருகிறது. கருவி என்பது அயம். இங்ஙனம் சுத்தமாக்கப்பட்டு தன்னிடம் வந்துவிடுகிற இருத்தத்தை இக்கருவி நரம்புகளின் வழியாக உடம்பெங்கும் பாய்ச்சுகிறது. அதனால் இந்தக் கருவிக்கு இருத்தயம் என்று நம்முன்னோர்களால் பெயர் வழங்கப் பெற்றிருக்கிறது.

இருத்தத்தைச் சுத்தமாக்கி அதிலிருந்த கரிப் பகுதிகளைக் கவர்ந்து கொண்ட காற்று, தான், உள்ளே நுழைத்த வழியாகிய மூக்கின் வாயிலாகவே வெளியே வருகிறது. அங்ஙனம் உடம்பினுள்ளிருந்து வருகின்ற அசுத்தக்காற்றில் (Carbonic Acid Gas) உள்ள கரிப்பகுதிகளைச் செடி, கொடி, மரங்கள், உண்டு சுத்தமாக்குகின்றன. இங்ஙனமாக உடம்பில் உயிர் நிலைப்பதற்கு அடிப்படைக் காரணமாக இருக்கின்ற காற்று உடம்பினுள்ளே போகவும், வரவும் மூக்கின் ஓட்டைகள் வழியாக இருக்கின்றன. இந்தக்காற்றை ஒழுங்குபடுத்தும் பயிற்சியே யோகம். இந்த யோகப் பயிற்சி உடம்பில், உயிர் நீண்ட நாள் வாழ்வதற்கு வழி செய்கின்றது. இவ் யோகப்பயிற்சி செய்யும் முனிவர்கள் யோகிகள்; அவர்களே சித்தர்கள்.

மூக்கின் வழியாகக் காற்று ஓடிக்கொண்டிருப்பதால்தான் உடம்பில் உயிர் இருக்கிறது. உடம்பில் உயிர் இருக்கிறதா என்பதை அறிந்து கொள்வதற்குச் சாதாரண மக்கள் செத்துக் கொண்டிருக்கும் உடம்பின் மூக்கில் கை வைத்துப் பார்க்கிறார்கள். மூச்சு அடிபடுவது அறவே நின்றுவிட்டால், உடம்பைச் செத்துப் பிணமாகிவிட்டது எனக் கூறுகிறார்கள். சில வேளைகளில் மூக்கடைப்பான் முதலிய சில நோய்களின் காரணமாகக் காற்றுப்போகாமல் மூக்கு அடைத்துக்கொள்ளும். அவ்வேளைகளில் காற்று வாய் வழியாக உள்ளே போவதும் வருவதுமாக இருக்கும், ஆதலினால் உயிர் உடம்பில் நிலைப்பதற்கு முதன்மையான காரணம் வாய்தான். அதற்கு அடுத்தபடியாக உள்ளது மூக்குதான். வாய் சுவை அறிகிறது. மூக்கு மணம் அறிகிறது. மூக்குக்கும் வாய்க்கும் இயல்பாகவே தொடர்பு அமைந்துள்ளது.

இவற்றுக்கு மேலே உள்ள ஓட்டைகள் இரண்டும் கண்ணென்று பெயர் பெறுவன. நாம் பொருள்களைக் காண்பதற்கு இவையே துணையாக இருக்கின்ற காரணத்தால் கண் என்று பெயர் பெற்றன. அவரவர் கையினால் அவரவர் உடம்பு எட்டுச் சாண் உள்ளது. அந்த உடம்புக்குத் தலைமையாக இருப்பது தலை. வேறு எந்த உறுப்பு இல்லாமற் போனாலும் உடம்பு இயங்கும். ஆனால், தலையில்லாமல் உடம்பு இயங்காது. இங்ஙனமாகத் தலைமை பெற்றிருப்பதனாலேயே அந்த உறுப்பு தலை என்று பெயர் பெற்றது. இந்தத் தலைக்கும் தலைமை தாங்குவது கண். இக்கண் இல்லாமற் போனால் நம் உடம்பின் உறுப்புகளைக் காண்பதும் நாம் உண்ணும் உணவுகளைக் காண்பதும், மற்றுமுள்ள உலகப் பொருள்களைக்காண்பதும், ஓரிடம் விட்டு மற்றோரிடம் போவதற்கு வழி காண்பதும் முட்டுப்படும்.

நமக்கு நல்லறிவு ஊட்டுவன மேலோர் நூல்கள். நூல்களைக் கொண்டுதான் பண்பட்ட வாழ்க்கை அமைதல் வேண்டும். வாழ்க்கைத் துறைகள் எண்ணிறந்தன. கல்வி, இயந்திரம், அரசு முதலாக வாழ்க்கைத்துறை பலவகைப்படும். அவற்றையெல்லாம் விளக்கிக் காட்டுவன அவ்வத்துறை மேலோர் நூல்கள். சட்டத்துறையில் பணியாற்றுபவர், நீதிபதிகள், வழக்குரைஞர் முதலியோர், மின்துறை. சாலைத்துறை முதலியவற்றுள் பணியாற்றுபவர் பொறிஞர்.

அவ்வத்துறைக்கு வேண்டிய பணியாளர் அவ்வவ்வற்றிற்கு உரிய நூல்களைப் பயின்று பட்டம் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். அவ்வாறாகவே, வைத்தியத் துறையிற் பணியாற்றுகிறவர்களும், பல ஆண்டுகள் வைத்திய நூல்களைப் பயின்று பட்டம் பெற்றவராதல் இன்றிமையாதது. இங்ஙனமாகிய வாழ்க்கைத் துறைகளிலே இறங்கி நூல்களைப் பயின்று தகுதியுடையவராவதற்குக் கண்களே முதன்மைக் காரணம். அதனாலேயே திருவள்ளுவ நாயனார் தம் தெய்வத் திருக்குறளில் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்.

"கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்."

அதனாலேயே கல்விக்கு அடிப்படையான எழுத்துகளைச் சொல்லி வைக்கும் ஆசிரியரைத் தெய்வத்துக்கு ஒப்பாக நம் முன்னோர் கருதினர்.

"எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆகும்"

கண்ணின் முதன்மையைக் காட்டுவனவே பின்வரும் முதுமொழிகளும்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்."

"எண்ணென்ப ஏனை எழுத் தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு." -திருக்குறள்.

படியாதவனுடைய கண் ஊனக்கண். (ஊனம்-குறைபாடு) கற்றவனுடைய கண் ஞானக் கண். ஆண்டவனைப் பற்றி அறிந்து பக்தி செய்து அவனையடையும் பக்தி நெறியைக் காட்டும் கண் ஞானக் கண். கண் ஓடி அடையும் நுனியில் இருப்பது காது. ஒலி அறிவு இதிலேதான் உள்ளது. உலக வாழ்க்கைத் துறை நூல்களையும், இறைவன் திருவடியை அடைய வழிகாட்டும் ஞான நூல்களையும் ஆசிரியரிடம் கேட்டு நன்மை அடைவதற்குப் பெருந்துணையாக இருப்பன செவிகளே. இப்பெரும் பயனைத் தரும் காரணத்தினாலேயே தெய்வப்புலமைத் திருவள்ளுவர் பின்வருமாறு கட்டளை யிட்டருளினார்.

"கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை"

உடலில் உள்ளனவாகிய வாய்-1, மூக்கு-2, கண்-2, காது-2, ஆகிய ஏழு ஓட்டைகளைக் கண்டோம். இவை உடம்பின் பெரும் பகுதியாகிய முண்டத்தின் தலையில் இருப்பன. முண்டத்தின் அடிப்பகுதியில் இரண்டு ஓட்டைகள் உள்ளன. நாம் உண்ணும் உணவு இருத்தமாக மாறி உடம்பெங்கும் சென்று உடம்பை வளர்த்துப் பாதுகாக்கின்றது. அதில் தள்ளுபடியாகிற கட்டிப் பகுதி மலம் என்றும், நீர்ப்பகுதி சிறுநீர் என்றும் பெயர் பெற்று இருவகையாம். அவற்றுள் மலம் கழிப்பதற்கு ஒரு வழியும் நீர்க் கழிப்பதற்கு மற்றொரு வழியும் தனித்தனியாக இருக்கின்றன. அவ்விரண்டு ஓட்டைகளையும் மேலே கண்ட ஏழோடு கூட்டினால் ஒன்பதாகும். ஆதலின், மேலோர் நம் உயிர் வாழும் குடிலை "ஒன்பது வாயிற் குடில்" என்று கூறுகிறார்கள். குடியிருக்கும் இடம் குடில் (குடி-இல்) குடியிருப்பதற்கு இடமாகச் செய்யப்பட்டது குடி செய் (குடி-செய்)இது மருவிக் குடிசை என வழங்கும்.

முண்டத்தின் கீழ் உள்ள ஓட்டைகளின் வழியாக மலமும், நீரும் வெளியாவது போலவே வாய் வழியாக எச்சிலும் கோழையும் மூக்கின் வழியாகச் சளியும் கண்களின் வழியாகப் பீளையும் (கண் அழுக்கு), நீரும் காதுகளின் வழியாகக் குறும்பியும் (காது அழுக்கு) மலங்களாக வெளி வருகின்றன.

இவ்வாறு மலங் கழியும் ஒன்பது வாயில்களையுடைய குடிசையில் உயிர் குடியிருக்கிறது. அதனால் இவ்வுடம்பினைச் சிலர் மிக இழிவானதென்று கருதுவராயினர். இதில் குடியிருந்துகொண்டே இதனை இகழ்வது பொருத்தமா என்பதை ஆராய்தல் வேண்டும். இறைவனை அடைவதற்குரிய மெய்ஞானத்தைப் பெறுவதற்கு, இவ்வுடம்பே உயிருக்கு உற்ற துணையாக நிற்கின்றது. உடம்பு அழிந்துபோனால் உயிர் தனித்து நின்று மெய்ஞானம் பெறுவதோ இறைவனை அடைவதோ முடியாததாகும். ஆதலினாலே இவ்வுடம்புக்கு வருகிற கேடுகள் இவைஇவையென ஆராய்ந்து அக்கேடுகள் அனைத்தையும் நீக்கி உடம்பைப் பேணுவது மிகவும்

இன்றியமையாத கடமையாகிறது. அதனாலேயே சித்தர் பெருமானாகிய திருமூல நாயனார் தமது திருமந்திரத்தில் பின்வருமாறு கட்டளையிட்டருளுகின்றார்.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே."

மேலும் ஒவ்வோர் உயிருக்கும் வாழ்விடம் அதனதன் உடம்பே. ஆண்டவன் உடம்பிலும் இருக்கின்றான். உயிரிலும் இருக்கின்றான். உயிர் ஆண்டவனை நினைக்கின்றது. இவ்வுடம்பினால் உயிர் அடைகிற இன்பம் சிறு இன்பம். சிறிது பொழுதே இருக்கும். இச்சிற்றின்பம் பெறுவதற்குப் பலவாறு துன்ப முற்றால்தான் பெற முடியும். துன்பங்களோடு கலந்த சிற்றின்பத்தையே உடம்பில் உயிர் அடைகின்றது. துன்பங்கலந்த இச்சிற்றின்பக் கடலிலிருந்து கைகொடுத்துக் கரையேற்றி உயிரை ஆள்பவனே ஆண்டவன். அவன் உடலிலுள்ள நெஞ்சில் வந்து குடியிருந்து உயிர்களை வாழ்விக் கின்றான். அவை நினைக்கும் பொழுதெல்லாம் அவற்றின் நெஞ்சங் களைத்தான் குடியிருக்கும் கோவிலாகக்கொண்டு எழுந்தருளிக் காப்பாற்றுகிறான்; "நினைப்பவர் மனம் கோவிலாக் கொண்டவன்" என்பது தேவாரம். ஆகையினாலே இறைவனுடைய திருவருள்முற்றி "முக்தி" இன்பத்தை அடைவதற்காவும் நாம் இவ்வுடம்பினைப் பேணுவது இன்றியமையாத கடமையாகின்றது. இதனை நினைந்தே திருமூல நாயனார் பின்வரும் திருமந்திரத்தைத் திருவாய் மலர்ந்தருளினார்.

"உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்
உடம்பினுக்கு உள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோவில் கொண் டானென்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே."

உடம்பு வலிமை குறைந்து நொய்ந்து போமாறு செய்வது நோய். நோய் வந்தால், அது உடம்பிலுள்ள உறுப்புகளைப் பிணித்து அவை

சரியாக இயங்காமல் மறுக்கும். அதனால் நோய், பிணிஎன்னும் பெயரையும் அடையும், நோயை மறுப்பது மருந்து; பிணியை அவிழ்ப்பது அவிழ்தம்.

இதுகாறும் உடம்பின் அருமையும், அதனை ஓம்பும் கடமையும் எடுத்துக் காட்டப்பெற்றன. இனி, இவ்வுடம்பு வாழும் இம்மண்ணுலகத் தோற்றத்தை ஆராய்வோம்.

## 2. மண்ணுலகத் தோற்றம்.

நாம் மாட மாளிகை கூட கோபுரங்களைக் கட்டிக் கூடிக் குடியிருந்து வாழும் இம் மண்ணுலகம் எங்கிருந்து எப்படித் தோன்றியது? என்பதை நாம் ஆராய்தல் வேண்டும். சூரியன் வெப்பத்தோடு கூடிய பேரொளிப் பொருளாக விளங்குகிறான். அவன் நீரைத் தன் வெப்பக் கதிர்களால் சுர்ரென்று வற்ற வைப்பதனால் சூரியன் என்ற பெயரை அடைந்தான். அவன் தோன்றுகின்ற நேரம் காலை என்றும், மறைகிற நேரம் மாலை யென்றும் பெயர் பெறும். அவன் நமக்குத் தோன்றுகின்ற நேரம் பகல், தோன்றாத காலம் இரவு. பகலும் இரவும் சேர்ந்து ஒரு நாள். அவன் ஒரு நாளைப் பகுத்து ஒளி தந்து விளங்குகின்ற காலம் பகல். பகலைத்தானிருந்து உண்டு பண்ணுவதனால் அவன் பகலவன் என்றும் அழைக்கப் படுகிறான். அவன் இராத காலம் இரா. அதாவது இரவு; தான் இராமையினாலே இரவை உண்டாக்குகின்றான். அதனால் அவனுக்கு இரவி (இரவு+ இ) என்ற பெயரும் அமைந்தது.

நாம் ஒவ்வொரு நாளும் இரவில், விண்ணிடத்தே பல மின்னும் பொருள்களைக் காண்கிறோம். அவை மின்னுவதனால் மீன் என்று பெயர் பெறும். விண்ணிலிருந்து மின்னுவதால் தமிழ் முன்னோர் அவற்றை விண்மீன் என்று அழைப்பாராயினர். மின்னுதலாவது விட்டுவிட்டு ஒளிருதல். இவை நகுவதுபோல் காணப்படுதலினால் நக்கத்திரம் என்றும் பெயர் பெறும். *(நகுதல்-சிரித்தல்,நக்கத்திரம்-நட்சத்திரம்)*

விண்ணிற் காணப்படும் நக்கத்திரங்கள் எண்ணற்றன. கங்கை பேராற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம்; இவ்விண்மீன்களை எண்ணுவது எவருக்கும் இயலாது; அவற்றை நாம் மேலும் உற்று நோக்கினால், அவற்றின் இடையே, விட்டு விட்டு மின்னாது. ஆனால், ஒளியுடன் விளங்கும் சில கோணங்களை நாம் காண்கிறோம். அவை கோள்கள் என்று பெறும். அவற்றுக்கு விண்மீன்களுக்கு இருப்பது போல இயற்கையான ஒளி கிடையா. விண்மீன்கள் தமக்கு இயற்கையாக அமைந்துள்ள ஒளியுடன் மின்னுகின்றன. தமக்கென இயற்கையான ஒளி இல்லாமல் சூரியனுடைய ஒளியைக் கொண்டு, ஒளியுடை பொருள் போலக் காணப்பெறுவனவே கோள்கள். சூரியனுடைய ஒளியைக் கொள்ளுவதனால் அவை கோள் எனப் பெயர் பெற்றன. அவை, சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பன. இவை ஆறுக்கும் ஒளி தருகிற சூரியனோடு சேர்த்து விண்ணிற் காணப்படும் கோள்கள் ஏழு எனத் தமிழ் முன்னோர் வகுத்திருக்கிறார்கள். ஆனால் சூரியன் என்பது விண்மீன்களுள் ஒன்றுதான். நம் அருகில் உள்ள சூரியனின் பேரொளிக்கு முன்னர் நக்கத்திரங்கள் நனி மங்கி அவை பகற்போதில் நம் கண்முன் தோன்றுவதில்லை. ஆனால் சூரியனைப் போல அளவிலடங்காத பேரொளி படைத்தனவே விண்மீன்கள் ஒவ்வொன்றும்.

விண்ணிற் காணப்படும் மீன்கள் ஒவ்வொன்றும் சூரியனே அவற்றின் ஒளி, மிகமிகத் தொலைவிலிருந்து நம் கண்ணிற்படுகிற படியால் அவை மின்னுவது போலத் தோற்றமளிக்கின்றன.

சூரியன் தாங்க முடியாத, இவ்வளவென்று சொல்ல முடியாத வெப்பமும் ஒளியும் உடைய பொருள். ஒவ்வொரு காலத்தில் சூரியனிடத்திருந்து தெறித்து வந்த பொருள்களே, மேலே கூறிய சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்ற ஆறு கோள்களும்.

வியாழனுக்கும், சனிக்கும் அவற்றிலிருந்து தெறித்துப் போன சந்திரன்கள் இருக்கின்றன. அவை தாம் விடுபட்டு வந்த கோள்களைச் சுற்றிச் சுற்றி வருகின்றன. அவற்றோடு வியாழனும், சனியும் சூரியனைச் சுற்றி வருகின்றன. அவற்றைப் போலவே செவ்வாய், புதன், வெள்ளி

ஆகிய கோள்களும் தமக்குத் தாயாகிய சூரியனையே சுற்றி வருகின்றன.

* செவ்வாய், சிவந்த நிறத்தை உடையதனால் அப்பெயர் பெற்றது.

* வியாழன் பொன் நிறம் உடையது.

* வெள்ளி,வெள்ளை நிறம் உடையது.

* புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட கோள் புதன் (புதுமை+அன்)

* சனி கரிய நிறம் உடையது.

இதுதான் மிகுந்த தொலைவில் இருப்பது. அதனால், இது சூரியனைஒரு முறை சுற்றி வருவதற்கே முப்பது ஆண்டுகள் ஆகின்றன. அதனால் தமிழ்க் கவிஞர்கள் சனியை முடவன் என்று கூறுகிறார்கள்.

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட புதனை, வியாழனுடைய மனைவியாகிய தாரைக்கும் சந்திரனுக்கும் பிறந்த பிள்ளையென்று கவிகள் கதை கட்டியிருக்கிறார்கள். புதனைப் போல இரண்டு கோள்கள் சூரியனைச் சுற்றி வருவதாகவும், அவை, சனிக்கும் அப்பால் நெடுந் தொலைவில் உள்ளன என்றும், மேலை நாட்டினர் கண்டுபிடித்து அவற்றுள் ஒன்றுக்கு நெப்தியூன்(Neptune) என்றும், மற்றொன்றிற்கு யுரேனசு (Uranus) என்றும் பெயர் தந்திருக்கிறார்கள். இனிச் சந்திரனைப் பற்றி ஆராய்வோம்.

நமக்கு மிகவும் அண்மையில் இரவில் காணப்படும் கோள் சந்திரன் .ஆனால் இது மற்றைய செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனியைப் போல ஒரு தனிக் கோளன்று; வியாழனிடத்திலிருந்தும், சனியிடத்திலிருந்தும் சில சந்திரன்கள் தெறித்துச்சென்று அவற்றைச் சுற்றி வருகின்றன என்று முன்பே சொன்னோம். அவ்வாறே, நமக்கு மிக அ;ண்மையிற் காணப்படுகின்ற சந்திரனும் நாம் வாழும் மண்ணுலகத்தைச் சுற்றி வருகின்றது என்றும், மண்ணுலகமாகிய பூமி, இச் சந்திரனோடு சூரியனைச் சுற்றி வருகின்றது என்றும் கூறுகிற உண்மை வியப்பாக இருக்கும்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், சூரியனை விட்டுத் தெறித்து வந்த தீப்பொறிதான் நம் மண்ணுலகம். இது தெறித்து வந்த போது இதனைவிட்டுத் தெறித்துச் சென்ற ஒரு சிறு தீப்பொறியே சந்திரன்; பூமியிலிருந்து சந்திரன் விடுபட்டுச் சென்ற சந்துதான் இப்போதுள்ள அட்லாந்திக் மாகடல் (AtlanticOcean) இச்சந்திரனி லிருந்து வெடித்துப் போனமையாலே அதன் பெயர் சந்திரனாயிற்று. இது நாம் வாழும் பூமியைச் சுற்றிச் சுற்றி வருகிறது.

விண்ணிடத்தே சுற்றிக் கொண்டிருக்கின்ற சூரியனிடத் திலிருந்து பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஒரு தீப்பொறி விடுபட்டு, விரைவாக ஓடிவந்து, சூரியனின் இழுப்புச் சக்தியினாலே தடைபட்டு நின்றது; விண் மண்டலத்திலிருந்து இயங்குவது வாயு மண்டலம்; அதனை ஒட்டி இயங்குவது தீ மண்டலம். தீயுருவமாக இருந்த தீப்பொறி நாளடைவில் குளிரத் தொடங்கிற்று; குளிர்ந்து மேற்குப் பகுதி தண்ணீர் உருவையடைந்தது. அதுவும், நாளடைவில் குளிர்ந்து குளிர்ந்து மண் மண்டிலம் ஆயிற்று. முதன் முதலிலே மண் உருவான இடம் இப்போதுள்ள கன்னியாகுமரிக்கு பல்லாயிரம் காதம் தூரத்துக்கு அப்பாலுள்ள இடம். அப்பகுதியெல்லாம் மலைகளும் ஆறுகளும், மண்ணும் ஆயின. அந்த இடத்தில்தான் முதன் முதலாக மக்கள் தோன்றினர். அவர்கள் பேசிய மொழியே தமிழ் மொழி.

# 3. தமிழகமும் தமிழ்ச் சங்கங்களும்

## தலை, இடை, கடைச் சங்கங்கள்.

ஆதியில் மூன்று சங்கங்கள் தமிழை வளர்த்தன. அவை தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்பன. இறையனார் களவியல் உரையிலே இச்சங்கங்களின் வரலாறு விளங்குகின்றது. தெற்கே இருந்த மதுரையில் ஒரு சங்கமும், அதனைக் கடல் கொண்ட பின்னர் கபாடபுரத்தில் ஒரு சங்கமும், அதுவும் கடல் கொள்ளப்பட்ட பின்பு இப்போதுள்ள மதுரையில் ஒரு சங்கமும் கூடின என்பதும், இப்போதுள்ள மதுரையில் மூன்றாவது சங்கம் கூடிய பின்னரே தெற்கே

இருந்த மதுரை தென்மதுரை என்றும், அங்கே கூடிய சங்கம் தலைச்சங்கம் என்றும், கபாடபுரத்திற் கூடியது இடைச்சங்கம் என்றும், இப்போதுள்ள மதுரை உத்தர மதுரை, அங்கு கூடிய சங்கம் கடைச் சங்கம் எனவும் பெயர் பெற்றன.

கடல் கொள்ளப்பட்ட மதுரையிருந்த இடமே மாந்தர் தோன்றிய முதல் இடம். அதிலே குமரிக்கோடும், அக்கோட்டிலே தோன்றிய குமரியாறும் இருந்தமையினாலே அவ்விடம் குமரிக் கண்டம் எனப்பெயர் பெற்றது. (கோடு-மலை, குமரிக் கோடு-குமரி மலை) பஃறுளியாறு என்பதோர்ஆறும் அங்கே ஓடியது (பல+துளி-பஃறுளி) . வான்மீகி முனிவரால் இராமாயணத்தில் மிகப் பராட்டிப் புகழப் பெறுகின்ற மிகப் பெரிய அழகிய முத்துமணி அணிந்த பொன்னாலாகிய கபாடம் உடைமையினாலேயே கபாடபுரம் எனப் பெயர் பெற்ற நகரமே இடைச்சங்கம் கூடிய தலை நகரம் (கபாடம்-கதவு) . இவ் ஆறுகளும், மலையும், கண்டமும் இருந்தமையும், அவை கடல் கொள்ளப்பட்டமையும் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ளன.

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து'
(தொல்காப்பிய பாயிரம்- பனம்பாரனார்)

இதற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியார், " வடக்கின்கண் வேங்கடமும் தெற்கின்கண் குமரியும் ஆகிய அவ்விரண்டு எல்லைக்குள்ளிருந்து தமிழைச் சொல்லும் நல்லாசிரியரது............. குமரியாற்றின் தெற்கு நாற்பத்தொன்பது நாடுகளைக் கடல் கொண்டதாகலின்" என்று கூறுகிறார். கடல்கோள்களுக்கு முன்..... (கடல்கோள்-கடலால் கொள்ளப்பட்டது)

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"
(சிலப்பதிகாரம் காடுகாண் காதை 18-20)

கடல் கோள்களுக்குப் பின்,

"நெடியோன் குன்றமும்
தொடியோள் பெளவமும்"

(சிலப்பதிகாரம்-வேனிற் காதை)

இதற்கு உரை வகுத்த அடியார்க்கு நல்லார், அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கும் வட எல்லையாகிய பஃறுளி என்னும் ஆற்றிற்கும் இடையே எழு நூற்றுக் காவத ஆறும், இவற்றின் நீர் மலி வானென மலிந்த ....

* **ஏழ் தெங்க நாடும்**
* **ஏழ் மதுரை நாடும்**
* **ஏழ் முன்பாலை நாடும்**
* **ஏழ் பின் பாலை நாடும்**
* **ஏழ் குன்ற நாடும்**
* **ஏழ் குணக் கரை நாடும்**
* **ஏழ் குறும்பனை நாடும்**

என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும், காடும், நதியும், பதியும், தடநீர்க்குமரி வட பெருங்கோட்டின் காறும் கடல் கொண்டொழிதலால் குமரிப் பெளவம் என்றார், என்று உரை கூறுகின்றார் (பெளவம்-கடல்).

தலைச் சங்கம் 4400 யாண்டுகளும், இடைச்சங்கம் 3700 யாண்டுகளும், கடைச்சங்கம் 1850 யாண்டுகளும் இருந்தமை களவியல் உரையிற் கண்ட உண்மை. ஆக முச் சங்கங்களும் இருந்த ஆண்டுகள் 9990 என்பது பெறப்படும். இரண்டு கடல் கோள்கள் நிகழ்ந்தமையினாலே அவற்றின் இடையீடாகப் பலப்பல ஆண்டுகளும் கழிந்திருத்தல் கூடும்.

# 4. தமிழகமே மாந்தர் முதலில் தோன்றிய இடம்

பேராசிரியர் திரு. M.S. பூர்ணலிங்கம் பிள்ளை, தமிழ் இலக்கியம் (Tamil Literature) என்ற நூலில் தமிழகம் பற்றி ஆராய்ந்து குறிப்பிட்டிருக்கின்றார் (பக்கம்6-9). அதன் சுருக்கம் வருமாறு:

பூமியின் நடுக்கோட்டின் (Equator) இரு புறமாக இந்துமாக் கடலில், கடலுள் மூழ்கி போயிருக்கும் கண்டமே தமிழகம். பேராசிரியர் எக்கல் (Prof Hackal) என்பார்,

* தம் படைப்பு வரலாறு (History of creation Vol.II -p 325-326, Vol -I p 361) என்ற நூலிலும்,

* 'மனிதன் தோன்றிய வரலாறு' (Pedigree of man- p 173,180, 181) என்ற நூலிலும்....

'இப்போதுள்ள இந்து மாக்கடல் ஒரு பெரிய நிலப்பரப்பாக இருந்தது என்றும், சுந்தரத் தீவுகளிலிருந்து ஆசியக் கடற்கரையும், ஆப்பிரிக்கக் கிழக்குக் கரையும் சேர அது பரந்திருந்தது என்றும், அதுவே மனித இனம் தோன்றி வளர்ந்த தொட்டில் (Lemuria is the cradle of mankind) என்ற முதன்மையுடையது' என்றும் கூறுகிறார்.

சர் வாலுட்டர் இராலே 'உலக வரலாறு', பக்கம் 99-ல் இவ்வுண்மையை ஆதரிப்பதுடன் கடல் கோளின் பின் இந்தியாதான் முதன்முதலாக மாந்தர் குடியேறிய இடம் என நிலை நாட்டுகிறார்.

ஆஸ்த்திரேலியாவில் வெளிவரும் மாந்தரைப் பற்றி கலை அறிவு (Science of man) என்ற தாள் 1900 டிசம்பர் வெளியீட்டில் அண்மையில் நடைபெற்றுள்ள ஆராய்ச்சிகளின் பலனாக *இந்துமாக்கடலில் மூழ்கியுள்ள இடமே மாந்தர் முதலில் தோன்றிய இடம்* என்பது நிலைபெறுகின்றது' என்ற உண்மை காணப்படுகிறது.

'தென்னிந்தியா' முற்காலத்தில் இப்போதுள்ள ஆசியாக் கண்டத்துடன் தொடர்புடையது அன்று' என்று அறிஞர் தொப்பி னார்டு கூறுகிறார்.

1897-ல் ஆங்கிலச் சங்க ஆண்டு விழாத் தலைமைப் பேருரையில் சர் சான் ஈவான்சு என்ற பெரியார் 'தென்னிந்தியாவே' 'மக்கள் இனம் தோன்றிய இடமாக இருந்திருத்தல் வேண்டும்' என்று கூறுகிறார். (மாந்தரைப் பற்றிய கலை அறிவு 1901, ஆகஸ்டு வெளியீடு)

சென்னை மாநில வரலாறு எழுதிய டாக்டர் மாக்லீன் இங்ஙனமே கூறியுள்ளார்.

சுகாட்டு எலியட்டு எழுதியுள்ள 'இழந்த மூழ்கிய நாடு'(Lost Lemuria) என்ற நூலின் பக்கம் 23, 30, 38 ல் மேலே கண்ட உண்மையை நிலை நாட்டுகிற ஆராய்ச்சிக் குறிப்புகள் காணப்படுகின்றன.

சர் T.W ஓல்டர் நசு என்ற பெரியார் இந்திய மாந்தரும் அவர் நிலை ஆய்வும்' (Peoples and Problems of India Chapter I Page 23) என்ற நூலில் பின் வருமாறு குறிப்பிடுகின்றார்:

"சிந்து கங்கைச் சமவெளி, இமய மலை இவற்றினின்றும் மாறுபட்ட நிலை அமைப்பினையுடையது தென்னிந்தியா. இங்கிருந்து ஆப்பிரிக்கா வரை பரந்திருந்து, இப்போது இந்துமாக் கடலாக இருக்கும் கண்டத்தின் அழிந்த பகுதியே இது. இதிலுள்ள பாறைகளே, உலகத்திலுள்ள மற்ற பாறைகளுக்கு முன்னால் தோன்றியவை. இந்த நிலப்பரப்பு முன் காலத்தில் கடலுக்குள் இருந்தது என்பதற்கு ஆதாரமே இல்லை. இப்பாறைகள் முன்னால் நில நடுக்கத்தினால் உருகி ஓடிய பாறைக் குழம்புகளினால் ஆன அடுக்குப் பாறைகளே. உலகில் உயிர்கள் தோன்றுவதற்கு முன் இருந்த நிலைமையிலேயே தென்னிந்தியா இன்றும் இருக்கிறது. சிந்து, கங்கைச் சமவெளி தங்கு தடையில்லாமல் மேற்கே சிந்துப் பேராறு தொடங்கிக் கிழக்கே கங்கை கடலோடு கலக்கும் இடமே ஆகப் பன்னீராயிரம் மைல் நீளம் பரவி இருக்கிறது. பூமி, உருவாகிக் கொண்டிருக்கும் போது, இமயமலை தோன்றுவதற்கு முன் இச் சமவெளி கடலாக இருந்தது. இப்போதுள்ள

தென்னிந்தியாவே அக்கடலின் தென்கரையாக இருந்தது. இமயமலை மேலே கிளம்பியதும் இக்கடல் மறைந்தது."

மேலே கண்ட குறிப்புகளால் விந்திய மலையின் தென்பகுதி நாவலந் தீவு என்று சொல்லப் பெறும் தீவாக இருந்தது என்பதும் மேற்கே ஆப்பிரிக்காவும், தெற்கே ஆஸ்திரேலியாவும், ஆகக் கிழக்கே தொலைவில் காமட்சட்காவைத் தொட்டுக் கொண்டு ஒரு பெரிய கண்டமாகத் தமிழகம் இருந்தது என்பதும் உறுதியாகின்றன. இன்றைக்குப் பதினையாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகம் இருந்தது. பழைய மதுரையும் முத்தூர் எனப்பெறும் கபாடபுரமும் பாண்டிய நாட்டின் தலைநகரங்களாக இருந்தன. அந்தக் கண்டத்தின் ஒரு பகுதியே இலங்கை. முதற் பெருவெள்ளம் தோன்றிய போது அது, இக் கண்டத்திலிருந்து பிரிந்தது. வால்மீகியார் கபாடபுரத்தையும் இலங்கையையும் பற்றிக் கூறும் செய்திகள் பழைய உரோமாபுரியையும் எகிப்து நாட்டுப் பிரமிட்டுக் கோபுரங்களையும் பற்றிக் கூறப்பட்டுள்ள விவரங்களை நினைப்பூட்டுகின்றன.

குமரியாறும், பஃறுளியாறும் தமிழகத்திலிருந்து மறைந்த செய்தியைச் சிறந்த உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்திலும் (பக்கம் 256-6,197-8), நச்சினார்க்கினியார் தொல்காப்பியம் பொருளதிகாரத்திலும் (பக்கம் 809), இளம் பூரணர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்திலும் (பக்கம் 4) நக்கீரனார் இறையனார் அகப்பொருள் உரையிலும் (பக்கம் 5) கூறுகின்றனர். தொலைவிலுள்ள இடங்களிற் பேசப்பெறும் மொழிகளிலே தமிழ் கலந்துள்ள செல்வாக்கினைப் பழம் பொருள் ஆய்வாளர் (Archaeologists) குறிப்பிடுகின்றனர். ஆசியாக் கண்டத்தின் வடகிழக்குக் கோடியிலுள்ள காமட்சட்கா என்னும் நிலப்பகுதியிற் பேசப்படும் மொழி தமிழின் கிளை மொழியே என்று ஆராய்ச்சிப் பேராசிரியர்கள் கூறுகின்றனர் என்பது இந்திய வரலாறு என்ற நூல் (பக்கம் 8-ல்). அதன் ஆசிரியர் அன்டர் (Sir. W. Huntar) பெரு மகனார் கூறும் உண்மை மிகவும் தூரத்திலுள்ள நியூசிலாந்திலிருக்கும் மோரீசு இனத்தார் பேசும் மொழியும், கன்னியாகுமரிக் முனைக்குத் தெற்கே எழுநூறு காவதம், பரவியிருந்த குமரிக்கண்டத்தின் சிதைவுகளாகவுள்ள பலப்பல தீவுகளில் வாழும் மக்கள் பேசும் மொழியும் தமிழோடு இசைந்தனவாக இருக்கின்றன.

தமிழகம் என்னும் குமரிக் கண்டம் மறைந்து இமயமலை தோன்றியதும், இமயமலைக்கும், கன்னியாகுமரி முனைக்கும் இடையிலுள்ள நாடு இந்தியா என்று பெயர் பெற்றது. பின்னர் தமிழ் வீரர்கள், இமயமலை வரை படையெடுத்துச் சென்று, வென்று, தம் ஆட்சியை நாட்டினர், கடல் பொங்கி எழுந்த வெள்ளத்திலே தப்பிய தமிழ் வீரர் படகுகளிலே சென்று ஆப்பிரிக்காவிலும், ஐரோப்பாவிலும் தங்கிவிட்டதோடு, மேலைக் கோடியிலுள்ள அமெரிக்காவினுக்கும் சென்று தங்கினர். இத்தாலி நாட்டிலுள்ள தசுக்கனிப் பகுதியில் பேசப்பெறும் மொழி தமிழோடு தொடர்புடையது என்று அறிஞர்கள் கண்டுபிடித்திருக்கின்றனர். உலகப் பழம் பெரு மொழிகளாகிய சமஸ்கிருதம், எபிரேயம், கிரேக்கம் என்பன பல தமிழ்ச் சொற்களையுடையன. கிருத்துவக் கல்லூரி வெளியீட்டில் பல தொடர் கட்டுரைகளால் திரு. இராமகிருட்டிணப் பிள்ளை என்னும் அறிஞர் தமிழ் மக்களுக்கும் ஸ்காட் (Scotts) மக்களுக்கும் மொழி நடை, பண்பாடு, வழக்கங்கள் ஆகியவற்றிலுள்ள பொருத்தங்களை விளக்கிக் காட்டியுள்ளார். ஸ்காண்டிநேவியா முதலிய ஐரோப்பிய நாடுகளிலும் தமிழ் நாட்டிலும் வழங்கும் பழக்கங்களுக்கு உள்ள பொருத்தத்தை ஆராய்ச்சியாளர் ஆராய்ந்து கூறுகின்றனர், இத்தகைய ஆராய்ச்சி முடிவுகள் 'தமிழகமே மாந்தர் இனம் தோன்றி வளர்ந்த தொட்டில்' என்ற உண்மையினை நிலை நாட்டுகின்றன.

# 5. தமிழ் மக்களும் தமிழ் மொழியும்

## இமய மலை

கடலை ஆடையாக உடுத்த இம் மண்ணுலகத்தில் முதன்மை பெற்று விளங்கும் மலைகள் நம் இந்தியாவில்தான் இருக்கின்றன. கங்கை, சிந்து முதலிய பெரிய ஆறுகளுக்குப் பிறப்பிடமாக மன்னும் இமயமலையைப் போலும் பெரிய மலை இவ்வுலகத்தில் வேறு எங்கே இருக்கிறது, அதன் உச்சியைக் காண அறிஞர் பலர் வீர உணர்ச்சியுடன் விடாது முயன்றும் அஃது இன்றும் செம்மையுறக் காண முடியாத செயலாக அன்றோ உள்ளது.

பார்ப்பவர், அச்சத்தாலும் வியப்பாலும் இமையாது பார்த்து நிற்குமாறு செய்யும் பெருமையுடைமையினாலேதான் புலவர் இதனை இமயம் எனப் பெயரிட்டு வழங்கினர் போலும்! இமம் என்பது பனி. பனிக்க அதாவது நடுங்கச் செய்தலினாலே பனி என்ற பெயர் ஆயிற்று. பனித்தலின் முதிர்ந்த நிலையே இமையாது நிற்கும் நிலை. அதனைச் செய்தலினாலே பனி இமம் எனப்பட்டது போலும்! இமை, இமைப்பு என்பன ஒரு பொருட் சொற்கள். இமைப்பு என்பது பேரொளி; கதிரவன் பேரொளி படும்போது இமத்தால் மூடியிருத்தலினாலே கண்களைப் பறிக்கும் பேரொளியுடன் இம்மலை விளங்கும்; அதனால் பேரொளி விளக்கம் உடையது என்னும் பொருளில் இமயம் என்ற சொல் ஆயிற்று என்று கொள்வாரும் உளர். இதனை எவ்வாறு தாண்டப் போகிறோம் எனப் பார்ப்போரை மலைக்கச் செய்வதே மலை.

இமயமலை தோன்றிய பின்னரே அதில் கைலாயம் என்ற முடியில் கங்கையாறு தோன்றி ஓடி வருகின்றது, அதனாலேதான் முன்னர் அப்பேராறு ஆகாயத்தில் ஓடிக்கொண்டிருந்ததென்றும், சிவபெருமான் அதனைத் தம்து சடாமுடியில் தாங்கி மண்ணிலே விடுகின்றார் என்றும் மாந்தர் கருதுவாராயினர். பனி மூடிய கைலாயம் என்ற இமய முடி ஒரு பெரிய சிவலிங்கமாக விளங்குகிறது.

இமயமலை இவ்வளவு பெருமையுடையதாக இருந்தாலும் அது சிறிது காலத்திற்கு முன்பே தான் தோன்றியது எனக் கல்நூல் ஆராய்ச்சிக் கலைஞர் கூறுகின்றனர். அவர்கள் அம் மலையின் கல்லை ஆராய்ந்து பார்த்தபோது, அது சில காலத்திற்கு முன்னரே தான் அமைந்திருக்க வேண்டும் என்ற உண்மை வெளியாயீற்று, அது பல நூற்றாண்டுகளுக்கு முன் கடலினுள்ளே மூழ்கி யிருந்தமையை, அம்மலையிலே இன்று காணப்ப்டும் கடல் வாழ் உயிர்களின் உடற் கூடுகள் முதலிய சான்றுகளைக் கொண்டு அறிஞர்கள் நிலை நாட்டுகின்றனர்.

# 6. மலய மாமலையே உலக முதன்மலை

ஒப்புயர்வுற்ற ஓங்கலாகிய இமய மலையின் நிலைமையே இவ்வாறாயின் வேறு எம்மலைதான் முதலில் தோன்றிய முதுமைப் பெருமையுடையது என வினாவின், அஃது இற்றைத் தண்டமிழ் நாட்டின்கண் உயர்ந்து விளங்குகின்ற பொதிகை மலையே. கல்நூல் ஆராய்ச்சியாளர், இம் மலையின் கல்லை ஆராய்ந்து, இம்மலைதான் உலகத்திலேயே மிக முதியது என்று அறுதியிட்டுக் கூறுகின்றனர். மாந்தர் முதலில் தோன்றிய இடம் என உயிர் நூற் புலவர் கூறும் தமிழகத்தின் ஒரு பகுதியாக இம்மலை அமைந்திருக்கிறது. ஆதலின் இமய மலையினும் தொன்மையில் முதன்மை பெற்றுப் புலவர்களால் பெரிதும் புகழப் பெற்றது பொதிகை மலையே என்பது வெள்ளிடை மலைபோல் விளங்குவதாயிற்று.

பொதிகைமலை மலையம் என்னும் பெயர் பெறும். மலை என்ற சொல் அம் சாரியை பெற்று மலையம் என்று ஆயிற்று. மலை என்ற சொல்லே பொதிகை மலையைக் குறிக்கும் என்றால் இதுவே; மற்றைய மலைகள் எல்லாவற்றிலும் மிகமுதியது என்பதில் ஐயமே இல்லை. 'சந்தனப் பொதியத் தடவரை' என்றார் ஒரு புலவர். சந்தனம் முதலிய மரங்களினாலே பொதிந்துவைக்கப் பெற்றது பொதிகைமலை. இது பொதியம் என்று பெயர் பெறும்; அம்சாரியை பொதி என்ற சொல்லுக்குப் பிணிப்பு, தொகுதி, முளை அரும்பு என்ற பொருள்கள் இருக்கின்றன. தீப் பிழம்பாகச் சுழன்று கொண்டிருந்த பூமியில், பல அணுக்கள் ஒன்றாகத் தொக்குப் பிணிக்கப் பெற்று இறுகிய முதல் இடம் இது என்பதும் செடி, கொடிகள் முளைப்பதற்கும் உயிர்கள் அரும்புதற்கும் தகுந்த முதல் இடம் ஆனது. இது என்பதும், அறிஞர்கள் ஆராய்ச்சியில் தோன்றுவன.

# ள. 7. தமிழ் மக்கள்.

கடல் வெள்ளத்தால் அழிந்துபோன குமரிக் கண்டத்தில் தோன்றி வாழ்ந்திருந்த மாந்தரே தமிழ் மக்கள். தென் மதுரை கடல் வெள்ளத்தில் அழிந்தவுடன் , பாண்டியரின் தலைநகரமாக முத்தூர் என்ற கபாடபுரம் இருந்தது. அக் காலமே இராமாயணக் காலம் என அறிஞர் கூறுவர். அவ் வெள்ளத்தில் தலைச்சங்க நூல்கள் பல அழிந்தன. இரண்டாவது வெள்ளத்தில் கபாடபுரமும் அழிந்தது. அதனுடன், எஞ்சிய தலைச் சங்க நூல்கள் அனைத்தும் இடைச் சங்க நூல்களுடன் அழிந்தன.

கபாடபுரம் அழியும் போது அரசாண்டிருந்த முடத்திருமாறன் என்ற பாண்டியனே இப்போதுள்ள மதுரைக்குத் தோணியில் வந்து கடைச் சங்கத்தைத் தொடங்கினான் என்பர்.

குமரிக் கண்டம் அழிந்த பின்பு மீதமுள்ள இன்றைய தமிழ் நாட்டினைக் கடல் அழிக்காதிருக்கும் பொருட்டுக் குமரித் தெய்வத்தைத் தென்கோடி முனையில் திருக்கோவிலில் எழுந்தருளச் செய்து தமிழ் மாந்தர் வழிபடுவாராயினர். அதனால் அத் தெய்வம் எழுந்தருளிய இடம் குமரிமுனை என்று பெயர்பெறுவதாயிற்று.

சூரியனிடத்திலிருந்து தீப்பிழம்பாகத் தெரித்து வந்து சுற்றுவதால் படிப்படியாகக் குளிர்ந்து கொண்டிருந்த இம்மண்ணுலகத்தில் அடிக்கடி நிலநடுக்கம் தோன்றியமைதான் முன் கூறிய இரண்டு வெள்ளப் பெருக்கினுக்கும் காரணம் என்று அறிஞர் கூறுவர். இமயமலைப் பகுதியும் ஜப்பான் பகுதியும் இன்னும் நன்றாகக் குளிராத காரணத்தினாலேதான் இன்றும் அடிக்கடி நில நடுக்கமும் அதனால் பேரிடரும் விளைந்து துன்புறுத்துகின்றன, இமயமலை அண்மையிலேதான் கடலின் மேல் எழுந்தது என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகிறது.

பண்டு முதலில் மாந்தர் தோன்றிய நாடு பண்டைய நாடு பாண்டியர் நாடு, பாண்டி நாடு, அதன் மன்னன் பண்டையன் பாண்டியன்.

'பாண்டிய நாடே பழம்பதியாகவும்' என்பது மணிவாசகர் திருவாக்கு, பாண்டிய நாடாகிய தென்னாட்டிலே தோன்றிய மாந்தருக்குத் தெய்வம் சிவபெருமான். அந் நாட்டிலிருந்து பிற நாடுகளுக்குச் சென்று குடியேறி வாழும் உலக மக்கள் அனைவருக்கும் அவனே தெய்வம். இவ்வுண்மையை விளக்குவனவே பின்வரும் திருவாசக அடிகள்.

**"தென்னாடுடைய சிவனே போற்றி**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி."**

## 8. சங்கப் புலவர்.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள், தலைச் சங்கப் புலவராக இருந்து தமிழாராய்ந்த செய்தியைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் பின்வரும் செய்யுளில் வலியுறுத்துகின்றார்.

நீல மாமிடற்று ஆலவா யான்என நிலவும்
மூல மாகியதிரு விருக்குக் குறள் மொ ழிந்து
சீல மாதவத் திருத்தொண்டர் தம்மோடு திளைத்தார்
சா லு மேன்மையில் தலைச்சங்கப் புலவனார் தம்முன்!

சேக்கிழார் பெருமானுக்கு முந்திய நூலாகிய திருத்தொண்டர் திருவந்தாதியில், கடைச் சங்கத்தைப் பற்றிய உண்மையினை நம்பியாண்டார் நம்பிகள் பின்வருமாறு கூறி வலியுறுத்துகின்றார்.

தரணியில் பொய்மை யில்லாத் தமிழ்ச்சங்கம் அதிற்கபிலர்
பரணர்நக் கீரர்முதல் நாற்பத் தொன்பது பல்புலவோர்
அருள்நமக் கீயும் திரு வாலவாய் அரன்சே வடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே!

மதுரையிலே கூடிய கடைச் சங்கத்தில் இருந்த புலவர் நாற்பத்தொன்பதின்மர்; அவரோடு கவியரங்கேறினார் பல்லோர்;

நாற்பத்தொன்பதின்மரில் தலைமையாயினார் கபிலரும், பரணரும், நக்கீரரும், அவர்கள் மதுரைப்பெருமான் திருவடிக்கே புகழ் மாலைபாடி இன்புற்றனர் என்ற உண்மையை இப்பாடல் தெளிவுறுத்துகின்றது.

பதினோராம் திருமுறையில் முதற் பாடலாக இருப்பது திருவாலவாய் அரன் பாடிய திருமுகப் பாடலே. கபிலர் பரணர் நக்கீரர் ஆகிய புலவர்தம் பாடல்களும் பதினோராம் திருமுறையில் அமைந்துள்ளன. இதுகாறும் ஆராய்ந்தவற்றால்.............

* விண்ணில் இயங்கும் சூரியனிடத்திலிருந்து தெறித்து வந்த செவ்வாய், புதன், வியாழன் வெள்ளி, சனி ஆகிய கோள்களைப் போலவே நாம் வாழும் மண்ணுலகமும் ஒரு கோள்தான் என்பதும்,

* மண்ணுலகம் தீப்பொறியாகச் சூரியனை விட்டுப் பிரிந்து வந்தபோது அதிலிருந்து விலகிச் சென்றதொரு சிறுபொரிதான் சந்திரன் என்பதும்,

* பூமியில் முதன் முதலாக உயிர்கள் தோன்றி வாழ்வதற்கு இடமாகியது கன்னியகுமரியிலிருந்து வெகு தூரம் தெற்கே பரவியிருந்த தமிழகமே என்பதும், தென்கோடியிலிருந்த பகுதியிலே தான் தென் மதுரையில் தலைச் சங்கம் இருந்தது என்பதும்,

* அப்பகுதி கடலாற் கொள்ளப்பட்ட பின் தமிழர்களுக்கு அரசனாகிய பாண்டியனால் தென் மதுரைக்கும், இப்போதுள்ள மதுரைக்கும் இடையிலிருந்த கபாடபுரம் தலைநகரமாக இருந்தது என்பதும்,

* கபாடபுரம் கடலாற் கொள்ளப்பட்ட போது இப்போதுள்ள மதுரை எஞ்சிய தமிழ் நாட்டிற்குத் தலைநகராயிற்று என்பதும்,

* அங்குக் கூடிய சங்கமே கடைச்சங்கம் என்பதும்,

* கன்னியாகுமாரிக்குத் தெற்கே வாழ்ந்திருந்த மக்கள் பேசிய முதன் மொழிக்குத் தமிழ் என்பது பெயர் என்பதும், தமிழைப் பேசிய மக்கள் தமிழ்மக்கள் என்பதும்,

* அவர்கள் வாழ்ந்த நாடு தமிழகம் என்பதும்

பெறப் பெற்றன. ***ஆதலின், உலக முதன் மக்கள் தமிழரே; அவர்கள் பேசிய தமிழ் மொழியே உலக முதன் மொழி!***

உலக முதன் மலை பொதிகை என்று புகழப்பெறுவது மேற்குத் தொடர்ச்சி மலையே, இந்தியாவின் நடுப்பகுதியின் கீழ்மேலாக விளங்குகின்ற விந்திய மலைக்கு வடக்கேயுள்ள வட இந்தியாவும், அதற்கு வட எல்லையாக விளங்குகின்ற இமயமலையும் ஒரு காலத்தில் கடலினுள் இருந்தனவே. தெற்கேயிருந்த தமிழகம் கடலினுள் மறைந்த காலத்திலேதான் வட இந்தியாவும், இமயமலையும் , அதற்கு வடக்கேயுள்ள சீனம் முதலிய ஆசிய நிலப்பகுதிகளும் ஐரோப்பாவும், அமெரிக்காவும் தோன்றியனவாதல் வேண்டும். அந்த நாடுகளில் இன்று வாழும் மக்கள் தமிழகத்திலிருந்து பரந்து சென்று வாழ்பவர்களே. அவர்கள் பேசும் மொழியும் பலவாறு சிதைந்து வேற்றுருக்கொண்டு விளங்குகின்ற தமிழ் மொழியே!

ஆராய்ச்சியாளர், கடலுள் அமிழ்ந்து போன தமிழகத்தை 'இலெமூரியா' (Lemuria) என வழங்குகிறார்கள். இலெமூரியா என்பது இலத்தீன் மொழிச்சொல். அம்மொழியில் இது 'அமிழ்ந்து போன நாடு' (Submerged Land) எனப் பொருள்படும்.

இங்ஙனமாக உலக மக்களுக்கும், மொழிகளுக்கும் பிறப்பிடமாகிய தமிழகத்தை மேன்மக்கள் திரு இடம் என்று வழங்குவாராயினர் திரு என்பது செல்வம், மேன்மை, புகழ், அழகு என்றெலாம் பொருள்படும். *திரு இடம் என்பது திராவிடம் எனச் சந்தி சேர்ந்து மருவி வழங்குவதாயிற்று. அதனால் தமிழ், திராவிடம் எனவும், தமிழ் மக்கள் திராவிடர் என்றும் பெயர் பெறுவாராயினர்.*

தமிழ் மக்கள் தம் நுண்ணறிவால், நம் மண்ணுலகம் சிறிது சரிந்த கோளம் என்பதையும், அதனைச் சந்திரன், சுற்றி வருகின்றது என்பதையும், பூமி சந்திரனோடு சூரியனைச்சுற்றி வருகிறதென் பதையும் கண்டறிந்தார்கள். சூரியன் பூமியைச் சுற்றி வருவது போலக் காணப்பட்டாலும் அது தோற்றமே என்பதையும் மெய்யாகப் பூமிதான்

சூரியனைச் சுற்றுகிறதென்பதையும் அவ்வாறு ஒரு முறை சுற்றி வருகின்ற காலம் 365 1/4 நாளாகிய ஓராண்டு என்பதையும் அவர்கள் அறிந்தார்கள்.

காலையில் கிழக்கே சூரியன் எழுகின்றான்; மாலையில் மேற்கே மறைகின்றான்; இடைப்பட்ட நேரமே பகல்; அவன் மேற்கே மறைந்து கிழக்கே மறுபடி எழுகிற இடைப்பட்ட காலமே இரவு; இவ்வாறு சூரியன் தோன்றுவதும் மறைவதும் பூமியைச் சுற்றி வருவது போலக் காணப்படுவது வெறும் தோற்றமே; மெய்யன்று. சூரியனைச் சுற்றி வருகிற பூமி தன்னையும் சுழற்றிக் கொள்கிறது என்பதுதான் மெய். இம் மெய்யுரையை மேனாட்டார் சில நூற்றாண்டுகளின் முன்னரே தம் ஆராய்ச்சியாற் கண்டறிந்தனர். ஆனால், தமிழ் முன்னோர், எண்ணற்ற நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே பூமி தன்னையும் சுழற்றிக்கொள்கின்றது என்பதை அறிந்தார்கள்; அது எம்முறையில் சுழலுகிறது என்பதையும் கண்டறிந்தார்கள்.

சூரியன் ஒரே இடத்தில் இருக்கிறது. அதனைச் சுற்றிவரும் பூமியாகிய உருண்டை தன்னைச் சுழற்றுகிறது. சுழற்றும்போது அதன் ஒரு பகுதி கீழே போகப் போக, கீழே போகிற பகுதியின் பின்புறமுள்ள பகுதி மேலே வந்து கொண்டே இருக்கிறது. கீழே போகிற பகுதி கீழே போகும் பகுதி என்றும், மேலே வரும் பகுதி, மேலே வரும் பகுதி என்றும் கண்ட அவர்கள், கீழே போகிற பகுதியைக் கிழக்கு என்றும், மேலே வருகிற பகுதியை மேற்கு என்றும் பெயரிட்டழைத்தார்கள். ஒரு குறிப்பிட்ட இடத்தை உதாரணமாக, ஒரு மாளிகையை எடுத்துக் கொள்வோமேயானால், அந்த மாளிகையை கிழக்கா, மேற்கா என்று வரம்பு கட்டிச் சொல்வதற்கு முடியாதவாறு திகைப்பு உண்டாகிறது. எப்படியென்றால் அந்த மாளிகைக்கு முன் கீழே போனதொரு மாளிகையைப் பார்க்கும்போது இந்த மாளிகை மேலே வந்துகொண்டு மேற்கில் இருக்கிறது. இதற்குக் கீழே போன, இதற்குப் பின்னால் மேலே வந்துகொண்டிருக்கிற மாளிகைக்கு இது கிழக்கே இருக்கிறது. அதனால் திகைப்பு உண்டாகிறது. ஆதலின் கீழ்த்திசை, மேல் திசை என்ற பெயர்கள் ஏற்பட்டன. திகை என்ற சொல் மருவி திசை என வழங்கி வருகிறது. திசை, திக்கு என்றும் சொல்லப்பெறும். அதனால் பூமியின் சுழற்சியினால், கீழே போய்க் கொண்டிருக்கிற திசை கீழ்த் திசை

(கிழக்குத் திக்கு) என்றும், மேலே வந்துகொண்டிருக்கிற திசை மேல்திசை (மேற்குத் திக்கு) என்றும் பெயர்களைப் பெற்றன. (திகைப்பு-திக்கு).

ஏனைய இரண்டு திசைகள் வடக்கு, தெற்கு என்பன. வடக்கிலிருந்து வாடைக்காற்று, மிகவும் குளிர்ச்சியோடு பாய்ந்து வந்து, உடம்பில் நடுக்கத்தைத் தந்து வடுப்படச் செய்கிறது. அதனால், அக்காற்று வாடை என்றும், அது வரும் திசை வடதிசை என்றும் பெயர் பெற்றன. தெற்கிலிருந்து வீசுங் காற்றோ தேன் போல மிகவும் இனிமையானது; உடம்பிலுள்ள சலிப்பையெல்லாம் போக்குவது. சிவபெருமான் இத் திசையை அடுத்து வந்து உவந்து ஆடுகின்றான். இப்போது அப்பெருமான் ஆடுகின்ற இடங்களில் மிகவும் சிறப்பாகக் கூறப் பெறுவன ஐந்து. அவற்றுள்....

* முதலாவது திருவாலங்காடு; அஃது அரதன அம்பலம்- (இரத்தின சபை) என்று பெயர் பெறும்.

* இரண்டாவது சிதம்பரம்; இது பொன்னம்பலம்.

* மூன்றாவது மதுரை; இது வெள்ளியம்பலம்.

* நான்காவது திருநெல்வேலி; இது தாமிர அம்பலம் (தாமிரசபை).

* ஐந்தாவது சித்திர சபை. இது திருக்குற்றாலத்தில் இருப்பது.

சிதம்பரத்தில் உள்ள பொன்னம்பலவாணரை அமைத்த சிற்பி அதே போன்று வேறு நான்கு அம்பலவாணர் திருமேனிகளை ஆக்கினான் என்பர். அவை திருநெல்வெலி மாவட்டத்தில் கருவேலங் குளத்திலும், கரி சூழ்ந்த மங்கலத்திலும், செம்பறையிலும், கட்டாரி மங்கலத்திலும் எழுந்தருளியிருந்து காட்சியருளுகின்றன. இவ்விடங் களிலெல்லாம் மார்கழி மாதம் திருவாதிரைத் திருநாள் மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. இவ்வாறு கூத்துடைக் கடவுள் தென்திசையில்...

'அடுக்கவந்து உவந்து ஆடுவது'

ஆடலினால் தமக்கு ஏற்படும் இளைப்பை விடுக்க,

'ஆரம் மென்கால் (ஆரம்- சந்தனம், சந்தன மரங்களில் படிந்து வருகிற மெல்லிய காற்று) திருமுகத்திடை வீசி மடுக்கவும், தமிழ்த் திருச் செவி மாந்தவும் அன்றோ'

என்று திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் கற்பனைக் கவி பாடியிருக்கிறார். தேன் போன்ற இனிமையான இந்தக் காற்று தென்றல் என்று பெயர் பெறும்.

'தென்றல் வந்துலவும் திருநெல்வேலி'

என திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், தேவாரம் திருநெல்வேலிப் பதிகத்தில் பாடி இதனைப் பாராட்டுகின்றார்.

தென் என்ற சொல் அழகு, இனிமை, தெற்கு எனப் பொருள்படும்.

# 9. பழந்தமிழ் நூற்களில் தமிழகம்

தமிழகம் இருந்ததும், பஃறுளி யாறும் மலைகளும் இருந்ததும், அவை கடலாற் கொள்ளப்பட்டதும் பழைய தமிழ் நூல்களிற் காணப்படுகின்றன. அவை வருமாறு.

'அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி
வடிவேல் எரிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள'

(சிலப்பதிகாரம்)

மன்னு மாமலை மகேந்திர மதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன் (திருவாசகம்)

எங்கோ வாழிய குடுமி தங்கோ
சென்னீர்ப் பசும்பொன் வறியர்க்கீந்த
முன்னீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே
(புறநானூறு)

நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு
(சிலப்பதிகாரம்)

வேங்கடம் குமரி தீம்புனல் பௌவமென்று
இந்நாட் கெல்லை தமிழது வழக்கே. (சிகண்டியார்)

# 10. கடல்கோள்

சில ஆண்டுகளுக்கு முன்னாலே கடல் கொந்தளித்து எழுந்து இராமேசுவரத்தின் சில பகுதியையும், தனுக்கோடி முழுமையையும் அழித்துப் பாழாக்கியதை நாம் அறிவோம். மேற்கே கேரளத்திலும், கடல், நிலப்பகுதிகளை அழிப்பதனை அடிக்கடி கேட்கிறோம். இவ்வாறே தமிழகத்திலிருந்த தென்மதுரையும், கபாடபுரமும் கடல் கோளால் அழிந்தன.

இவ்வாறு நிகழும் கடல்கோளுக்குக் காரணமென்னை? நாம் வாழும் பூமி சூரியனிடத்திலிருந்து தெறித்து வந்த தீப்பொறிதான் என்பதை நாம் அறிவோம் அதன் மேற்பகுதியில் மூன்றில் ஒரு பகுதி குளிர்ந்து மலை, காடு நிலங்களாக, நாம் வாழும் மண்ணுலகமாக மாறிற்று. மூன்றில் இரண்டு பகுதி கடலாகவே இருக்கிறது. பூமியின்

மேற்பகுதிதான் குளிர்ந்து மண்ணாகவும், கடலாகவும் இருக்கிறதே யல்லாமல், அதன் உட்பகுதி, இன்னும் அணையாத தீயாக எரிந்துகொண்டேயிருக்கிறது. இத் தீ அடிக்கடி கொதித்துப் புடைக்கும் போதுதான் நில நடுக்கம் உண்டாகின்றது. இந்நடுக்கம் ஜப்பானிலும், இமயமலைப் பகுதிகளிலும் அடிக்கடி நிகழ்வதைக் கேட்கிறோம்.

சில ஆண்டுகளுக்கு முன்னால், பீகார் மாகாணத்தில் ஏற்பட்ட நில நடுக்கத்தினால் பூமி வெடித்துத் தீப் பிழம்புகள் உருகிக் கிளம்பிப் பல இடங்களை அழித்தமையை அறிந்தோம். இத்தாலி நாட்டிலுள்ள 'எட்ணா' என்ற மலைப்பகுதியில் அடிக்கடி பூமிக்குள்ளிருந்து புகையுடன் தீப்பிழம்பு வேகமாக எறியப்படுவதை=க் கேட்கின்றோம். இத்தகைய நில நடுக்கத்தினாலேயே கடல் கோள் நிகழ்ந்தது.

# 11. அசுரர்

சுரைக்கொடியிலிருந்து சாறு இறக்கி (Wine) அதைக் குடிப்பது வழக்கம். சுரைக்கொடிச் சாறு குடிப்பவர்கள் சுரர் எனப்பெறுவர். அவர்கள் தேவர்கள் என்றும்சொல்லப்பெறுவார்கள். பூமியில் இருக்கும் சுரர்கள் (பார்ப்பனர்) அவர்கள் வேள்விகள் செய்யும்போது சுராபானம் பண்ணுவார்கள் எனத் தெரிய வருகிறது. அவ்வாறு வேள்வி செய்வதைத் தடுத்துச் சுரைக்கொடிச்சாறு குடிப்பதையும் தடுத்தவர்கள் அசுரர் (அல்+ சுரர்= சுரர் அல்லாதவர்) எனப்பெறுவர். அவர்களின் தலைவரே சூரபதுமன், இராவணேசுவரன் எனத் தெரிய வருகிறது. சூரபதுமனுக்குத் தலைமையிடம் கடலுள் அழிந்துபோன தமிழகத்தில் இருந்ததென்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சூரபதுமன் தவம் செய்து அழியாத உடம்பையும் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகங்களாக அரசாளும் பெருவாழ்வினையும் பெற்றிருந்தான்.

ஓர் அண்டம் என்பதனைக் கோள்களோடு கூடிய ஒரு சூரியன் என்று சொல்லலாம். அண்டம் என்பது சூரியனிடத்திலிருந்து தெறித்து வந்து சூரியனையே அண்டிக்கொண்டிருப்பது பூமி என்றும், அதற்குப்

பிறப்பிடமாகிய சூரியன் அண்டயோனி என்றும், (யோனி- பிறப்பிடம்) பெயர் பெறும். 1008 அண்டங்களை அரசாண்ட சூரன், அந்த அண்டங்களையெல்லாம் போய் மேற்பார்ப்பதற்கு ஆண்டவன் அருளால் ஓர் இந்திர ஞாலத் தேரைப் பெற்று வைத்திருந்தான் என்று வரலாறு கூறுகிறது. சிறிது காலத்திற்கு முன்பு வரை மக்கள் இதனை நம்பாமலிருந்தனர். இன்றோ உருசியரும் (Russians) அமெரிக்கரும் (Americans) விசைத் தேரில் கிளம்பிச் சந்திர மண்டலத்திற் சென்று திரும்பி வந்து கொண்டிருக்கிறார்கள் என்பது உலகம் அறிந்த உண்மையாயிற்று. அதனால் சூரபதுமன், அந்நாளில் இந்திரஞாலத் தேரில் ஏறித் தன் ஆட்சியின் கீழிருந்த அண்டங்களைச் சுற்றிப் பார்த்து வந்தான் என்பதை உண்மை வரலாறாக இன்று எவரும் நம்பாமலிருக்க முடியாது. சூரபதுமனை வென்று அடிமையாக்கிக் கொண்ட முருகப் பெருமானுக்கு, அப்போர்க்களத்தில், தங்கிடமாக இருந்த பாசறை திருச்செந்தூர்.

இவ்வாறே, இலங்கையில் அரசாண்டவன் இராவணேசுவரன். அவனிடத்தில் ஒரு பூந்தேர் (புட்பக விமானம்) இருந்தது. அதிலே ஏறிக்கொண்டு அவன் ஒருமுறை செல்லும் போது அவ்விமானம் இமயமலையின் சிகரங்களுள் ஒன்றாகிய கைலாயத்தின் மீது போகமாட்டாமல் தடைப்பட்டு நின்றதாகவும், இராவணன், தேரை விடுவிடு என்று தேர்ப்பாகனுக்குக் கட்டளையிட்டதாகவும், அதற்குப் பாகன், சிவபெருமான் எழுந்தருளியிருக்கிற காரணத்தினால், தேர் இம்மலை மீது செல்லாது என்று மறுமொழி கூறியதாகவும் உடனே இராவணன் பூத்தேரிலிருந்து கீழே குதித்துக் கைலாயமலையைப் பெயர்த்து எடுத்ததாகவும், அதுகண்ட சிவபெருமான், தன் கால் விரல் ஒன்றால் அழுத்தியதாகவும் அதனால் இராவணன் அந்த மலையின் கீழ் அகப்பட்டு அலறிச் சாம வேதம் பாடிச் சிவபெருமானைத் துதித்ததாகவும், அதனால் சிவபெருமான் மனமிரங்கி அவனுக்கு அருள் புரிந்தார் என்பதும் புராண வரலாறுகள்.

இந்நிகழ்ச்சியைத் திருநாவுக்கரசு நாயனார் தாம் பாடியருளிய தேவாரத்தின் ஒவ்வொரு பதிகத்தின் ஈற்றிலும் பாடித் துதித்தார் என்பது வரலாறு. அவற்றுள் பின் வருவது ஓர் அருமைப் பாடல்:

'கடுகிய தேர்செலாது கயிலாய மீது
கருதேல் உன்வீரம் ஒழிநீ
முடுகுவ தன்றுதன்மம் என நின்றுபாகன்
மொழிவானை நன்று முனியா
விடுவிடு என்றுசென்று விரைவுற்றுஅரக்கன்
வரையுற்றெடுக்க முடிதோள்
நெடுநெடு இற்றுவீழ விரலுற்ற பாதம்
நினைவுற்ற தென்றன் மனமே'

இராவணேசுவரனை வென்ற இராமபிரான், இந்த விமானத்தில் ஏறித்தான் அயோத்தி மாநகருக்கு மீண்டும் வந்தான் என்று கூறுகிறது. இராமாயணம். ஆதியில் இவ்விமானத்தை வைத்திருந்தவன் குபேரன். அவனை வென்றுதான் இராவணன் இவ் விமானத்தைக் கைப்பற்றினான் என்பதும் புராண வரலாறு.

கடல் கோளுக்குப்பின் எஞ்சியிருப்பன இலங்கையும் அதனைச் சேர்ந்த சில தீவுகளும், இராவணன் கைலாய மலையைத் தூக்குகின்ற காட்சி சிவன்கோவில்களில் 'எட்டாம்' திருநாளில் சிவபெருமானுடைய வாகனமாகக் காட்டப்படுகிறது. அது கைலாய பர்வதம் எனப்பெயர் பெறும். திரிபுர அசுரர்களும் தமிழ்நாட்டில் இருந்தவர்கள் என்றும், அவர்களுடைய மூன்று கோட்டைகளையும் எரித்து அழித்துச் சிவபெருமான் தம்மை வணங்கி நின்ற அவர்களில் இருவரைத் தம் வாயில் காவலராக இருக்கச் செய்து, மூன்றாமவனை, அவன் இசை வல்லவன் ஆனதினாலே, தாம் கூத்தாடும் போது பக்கத்தில் நின்று குடமுழா முழக்க அருள் செய்தான் என்று புராணமும், தேவாரமும் கூறுகின்றன. இவ்வாறே மயிலாகவும், சேவலாகவும் உருவங்கொண்டு, தன்னோடு போரிட்ட சூரபதுமனைத் தனது தேரை அணி செய்யும் கொடியாகச் சேவலை உயர்த்தி அமைத்து, மயிலினைத் தம் ஊர்தியாக (ஊர்தி-வாகனம்) அமைத்து ஏறி வந்து காட்சியருளி அடியார்களைக் காத்தருளி நின்றான் திருமுருகப் பெருமான்.

# 12. ஒரு விந்தை.

நாம் வாழும் இம்மண்ணுலகின் கீழே இன்னும் தீ அணையாது எரிந்து குமுறுகிறது அதனாலேயே எரிமலைகளும், நில நடுக்கங்களும் அடிக்கடி நிகழ்கின்றன. இவை இயற்கைப் பெருவிந்தை.

<u>27.1.1954 இந்தியன் எக்ஸ்பிரஸ் தாளில் பின் வரும் செய்தி காணப்பட்டது.</u>

* *இத்தாலி நாட்டிலுள்ள மோடினா என்ற இடத்தில் ஒரு மலை முன்னால் நகர்ந்து சென்றது. அஃது ஒரு மணி நேரத்தில் மூன்றடி சென்றது, இந்நிகழ்ச்சி அம்மோடினா பள்ளத்தாக்கிலுள்ள குடிகளை நடுநடுங்கச் செய்தது. மோடினா நகரம் வட இத்தாலியில் உள்ளது. பொறிவல்லார்கள் (Engineers) கூடி ஒன்றும் செய்ய இயலாது பரக்க பரக்க விழித்து நின்றார்கள். 72 மணி நேரங்கள் நகர்ந்து சென்ற இம்மலை மூன்று வீடுகளை அழித்து விட்டது. நான்காவது வீட்டின்மேலே பாயும் போது ஆண்டவன் அருளால் மலையின் நகர்ச்சி நின்றது.*

* *பழங்காலத்தில் சென்னை திருமயிலாப்பூரில் கபாலீச்சுரர்* கோவிலை ஒட்டிக் கடல் இருந்தது என்ற செய்தி காணப்படுகிறது. இப்போதோ அக்கடல் கோவிலிலிருந்து இரண்டு மைல்களுக்கு அப்பால் கிழக்கே விலகி நிற்கின்றது.

* நியூசிலாந்து என்ற வட தீவின் நடுப்பகுதியில் மூன்று எரிமலைகள் இருக்கின்றன. அந்த மலைச் சிகரத்துள் ஒன்று நாகர்கூ (Mount Naguruhoe) என்பது. அண்மையில் இதில் 6,000 அடி உயரத்துக்குப் புகைப் படலங்கள் கருப்புச் சாம்பலோடு எறியப்பட்டன. அங்கே அடிக்கடி தரைக்குள் குமுறல்கள் கேட்கின்றன. இதற்கு இரண்டு மைல்களுக்குப் பக்கத்திலுள்ள சிறு ஏரியின் தண்ணீர் எட்டடி வரை அடிக்கடி உயருகின்றது.

**2. 8. 1968. தினமணியில் இரண்டு விந்தையான செய்திகள் காணப்பட்டன.**

1. கடந்த சில நாட்களாக விசாகப்பட்டிணத்தை நிமிடத்திற்கு ஒரு மில்லி மீட்டர் வீதம் கடல் அரித்து வருகிறது. பாலம் ஒன்றைக் கடல் கொண்டுவிட்டது. ஆந்திர முதலமைச்சர் இரண்டு மந்திரிகளுடன் சென்று நேற்றுக் காலையில் இடத்தை நேரிற் சென்று பார்வையிட்டார். கடல் அரிப்பு ஆபத்தானது என அதிகாரிகள் கூறினர்.

2. மத்திய அமெரிக்காவில் கோசுட்டாரிகா அருகிலுள்ள சான்சோசிலிருந்து 110 மைல் தூரத்திலுள்ள 'எல் ஏரினால்' எரிமலை திங்கட்கிழமை 29.7.1968-ல் திடீரென்று குமுறி வெடித்ததில் இதுவரை நூறுபேர் மடிந்திருப்பதாக உத்தியோக பூர்வ மதிப்பீடு கூறுகிறது. இன்னும் பலரைக் காணவில்லை. எரிமலைக் குழம்புக்கடியிற் சிக்கி 200 பேருக்கு மேற்பட்டவர்கள் மடிந்திருக்கலாம் என அஞ்சப்படுகிறது.

**3. 8. 1968 தினமலரில் பின் வரும் செய்தி வந்துள்ளது.**

பிலிப்பைன்ஸ் தீவின் தலை நகரமான மணிலாவில் 2. 8. 1968 அன்று விடியுமுன்னர் பூமி அதிர்ச்சியின் விளைவால் முந்நூறுக்கு மேற்பட்டவர்கள் பலியாகியிருப்பதாகச் செய்தி வந்துள்ளது. ஐந்து மாடிக் கட்டடம் இடிந்து விழுந்ததன் விளைவாகக் குறைந்தது 200 பேர் மடிந்து போயினர்.

**3. 9. 1968 தினமணியிற் கண்ட செய்தி:**

ஆப்கானிஸ் தானத்துக்குக் கிழக்கேயுள்ள ஈரான் நாட்டின் கீழ்ப் பகுதியில் 31.8.1968 சனி இரவிலும் 1.9.1968 ஞாயிறு நண் பகலிலும் நில நடுக்கம் கொடுமையாகி நூறு நகரங்கள் தவிடு பொடியாகிவிட்டன. 'பிர்சண்டு கான்பாத்', 'கக்கக்கு' முதலிய நகரங்கள், மலைப் பகுதிச் சாலைகள் பிளந்துவிட்டன. முப்பதினாயிரம் பேர் பலியாயினர், ஓர் இலக்கம் பேர் படுகாயமுற்றனர். 'கோரச்சசன்' மாகாணத்தில் 750 சதுரமைல் பகுதிகள் பெருஞ் சேதமுற்றன. 'கோனாபாத்' நகர்முழுவதும் நாசமாயிற்று. பல இலக்கம் பேர் தங்க நிழலின்றித் தவிக்கின்றனர்.

அண்மைக் காலத்தில் சீன நாட்டில் ஏற்பட்ட நில நடுக்கம் குறித்தும் பல ஆயிரம் பேர் மடிந்த செய்தி குறித்தும் நாம் அறிவோம்.

## 13. குமரிக் கண்டம்.

இற்றைக்குப் பன்னீராயிரம் ஆண்டுகளுக்குமுன் குமரிக் கண்டத்தின் தென்கோடியில் பஃறுளியாற்றின் கரையிலிருந்த தென் மதுரையில் தலைச் சங்கம் கூடியிருந்தது. அதன் தொடக்கம் கி.மு. 1200 என்று சொல்லலாம். பஃறுளியாற்றினால் வளம் படுத்தப்பெற்ற நாடு, பெருவள நாடு. அதனை ஒட்டி இருந்தவை ஒளி நாடு, குமரி நாடு, பாண்டிய நாடு முதலியன. அங்கே முதலாவது சங்கத்தை நிலை நாட்டியவன் நிலந்தரு திருவிற் பாண்டியன் மாகீர்த்தி என்பவன். பாண்டியன் காய்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பது பாண்டியர்கள் தலைச் சங்க காலத்தில் அரசாண்டார்கள், அதில் 4,449 புலவர்கள் கவியரங்கேறினார்கள். கி.மு 12000-ல் தொடங்கிய தலைச் சங்கம் முடிந்தது. கி.மு.5560-ல் இடைச்சங்கம் கபாட புரத்தில் இருந்தது. கி.மு. 5560 முதல் கி.மு. 1860 வரை அதிலிருந்து கடைச் சங்கம் கி.பி. முதல் நூற்றாண்டு வரை இருந்ததென்று சொல்லலாம். தெற்கிலிருந்து குமரிக் கண்டம் அழிய அழியத் தமிழ் மக்கள் மேலே ஏறி ஏறி இப்போதுள்ள தமிழகத்தில் வந்து குடியேறினார்கள். அவர்களே பல்கிப் பெருகிச் சிந்து, வங்காளம் முதலிய வடநாடுகளிலும் சென்று தங்கி வாழ்ந்து வருவாராயினர்.

## 14. தமிழர் நாகரிகம்.

சங்க நூல்கள் தமிழர் நாகரிகத்தை விளக்குகின்றன. அவை தமிழ் நாட்டினை **'நாவலந்தீவு'**, நாவலந் தண்பொழில் எனக் கூறுகின்றன.

நாட்டினைக் **குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை** என ஐந்து வகையாகப் பிரித்திருந்தார்கள்.

* **மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி** எனப்படும். அங்கு வாழ்ந்த மக்கள் **குறவர்** எனப்பட்டனர்.

* **மலைக்கும் நகரத்துக்கும் இடையிலுள்ள காடுகள் முல்லை** நிலம் எனப்படும். அங்கு வாழ்ந்த மக்கள் **இடையர்** எனப்பட்டனர்.

* **வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம்** எனப்படும். அதில் வாழும் மக்கள் **உழவர்** எனப்பட்டனர். உழவர்கள் நிலத்தை உழுதுப் பயிரிட்டு வாழும் மக்கள். இந்த நிலத்தில் மருத மரங்கள் செழித்தோங்கி வளர்ந்தன. அதனாலேயே இது **மருதநிலம்** எனப் பெயர் பெற்றது. மருத நிலத்தின் தலை நகரம் மருதை என்பது. அது மருவி மதுரை ஆயிற்று. இப்போதுள்ள மதுரை மாநகரம் மருதநிலத்தின் முதன்மை நகரமாகவுள்ளது என்பது வெளிப்படை. குறிஞ்சி நிலமாகிய மலைகளில் தோன்றிய ஆறுகள் அதற்கும் மருதத்துக்கும் இடையிலுள்ள காடுகளில் புகுந்து மருத நிலத்திலுள்ள பண்பட்ட வயல்களைச் செழிப்பாக விளையச் செய்து, கடைசியாகக் கடலிற் போய் விழுகிறது.

* கடலும் கடல் சார்ந்த இடங்களும் **நெய்தல்** எனப்படும். அதில் வாழும் மக்கள் **பரதவர்** எனப்பட்டனர். அவர்கள் கடலுள் தோணிகளிற் சென்று மீன் பிடிக்கும் தொழிலினர். இவ்வாறு மண்ணுலகத்திலுள்ள நிலம் நான்கு வகையாக வகுக்கப்பட்டிருத்தலினால் அது **நானிலம்** என்று பெயர் பெறும்.

* இந்த நான்கு வகை நிலங்களிலும் சிற்சில இடங்களில் மணற்காடுகள் இருப்பன. அப்பகுதி **பாலை** எனப்படும். பாலை மலையிலுமிருக்கும், காடுகளிலுமிருக்கும், மருதத்திலுமிருக்கும், கடலை ஒட்டியுமிருக்கும். பாலை நிலத்தில் வாழும் மக்கள் **மறவர்** எனப் பெறுவர்.

மக்கள் தொழில் பற்றி **அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்** என நான்கு வகையாக பகுத்துக் கூறப் பெற்றனர். உயிர்கள் அனைத்தின்மீதும் அம் + தண்மை, அதாவது இரக்கம் உடையோர்

**அந்தணர்** எனப்பட்டனர். இவர்களைப் பற்றித் திருவள்ளுவ நாயனார் பின்வருமாறு கூறுகின்றார்.

'அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்'

இவ் அந்தணர்களே நாட்டில் தெய்வப் பற்றும் நல்லொழுக்கமும் தவறாது நடைபெறுமாறு பார்ப்பவர்கள். அதனால் அவர்கள் பார்ப்பார் எனவும் பெயர் பெற்றனர். ஒழுக்கமே அவர்களை உயர் குடித் தன்மை பெறச் செய்தது. ஓதப்படுவது ஒத்து. அது சிறப்பாக மறை மறை-வேதம் என்று சொல்லப்படும் மறை ஓதுதலை மறந்து போனாலும் திரும்பத்தெரிந்து ஓதிக் கொள்ளுதல் இயலும்; ஆனால் ஒழுக்கம் அழிந்து போனால் பார்ப்பானுடைய பிறப்புப் பெருமை அழிந்துவிடும்.

'மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்'

என வள்ளுவப் பெருந்தகையார் கூறுகிறார்.

நாட்டை ஆளுபவர் அரசர். அவர்கள் பெரியகோட்டை, கொத்தளங்களில் வாழ்ந்தனர். கோட்டைகள் உயரமான மதில்களைச் சூழ உடையன. பகைவர் கோட்டை மதில்களை அணுக முடியாதவாறு ஆழமாகத் தோண்டப்பெற்ற அகழிகள் நீர் நிரம்பிச் சூழ இருந்தன. அதன் உள்ளே அரண்மனைகளில் அரசர் குடி இருந்தனர். அம்மாளிகை அரண்மனை என்றும், கோவில் என்றும் பெயர் பெறும் . அரண்-பாதுகாவல், அதனை உடைய மாளிகை அரண்மனை. கோ-அரசன்; இல்-வீடு; அரண்மனை கோவில் எனவும் படும். பிற்காலத்தில் கோவில் என்பது கடவுளுக்குரிய இடத்தை மட்டும் உணர்த்துவதாயிற்று. இக்காலப் பெரு நகரங்களிலுள்ள கோவில்கள் அரண்மனைகளாகவே காட்சி தருகின்றன. அவற்றின் தலை வாசலிலுள்ள கோபுரங்கள் மிக்குயர்ந்து நெடுந்தொலைவில் வரும் பகைவர்களைக் கூடக் காண்பதற்குத் துணைபுரிகின்றன. கோ + புரம், அரசனுடைய

குடியிருப்பு. புரம், பாதுகாவலையுடைய ஊர். இதனால் அக்காலங்களில் இக் கோவில்களில் அரசர் வாழ்ந்து வந்திருத்தல் வேண்டும். நம் தென்னாட்டில் பிற்காலத்தில் நடந்த போர்களில் திருவில்லிபுத்தூர்க்கோயிலும், திருவைகுந்தக் கோயிலும் படை வீடுகளாகப் பயன்பட்டன என்பது வரலாறு.

வாணிகம் செய்பவர் வாணிகர். வாணிகம்- வியாபாரம். அது நாட்டுக்கு வண்மையைத் தருதலினாலே வணிகம் எனப்பெயர் பெற்றது. இவர்களே நாட்டின் பல பகுதிகளில் விளையும் விளைபொருள்களைத் தேவையான இடங்களுக்குக் கொண்டுபோய் விற்று நாட்டை வளம் பெறச் செய்தனர், நாட்டின் பல பகுதிகளை உழுது, பல வகைப்பட்ட பொருள்களை விளைவித்து நாட்டுக்குப் பேருதவியாக விளங்குபவர்கள் வேளாளர். வேளாண்மை-பிறருக்கு உதவி செய்தல். இதனால் வேளாளர் **'வேளிர்'** எனவும் புகழ்ப் பெயர் பெறுவர். 'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்' என்பது பழமொழி. பின்வருவது திருக்குறள்:-

'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று'

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்கு வகுப்பினர் இருந்தாலும், இவர்களுக்குள் பணியாளர் என்ற தொகுதியும் இருந்து வந்திருக்கிறது. நம் நாட்டில் சிலர் கூறுகின்றவாறு பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற நான்கு வகுப்புகள் தமிழ் மக்களிடம் இருந்ததில்லை. அந்தணர் வகுப்போடு பிராமணர் வகுப்பும், அரசர் வகுப்போடு சத்திரியர் வகுப்பும், வணிகர் வகுப்புடன் வைசிய வகுப்பும் ஒருவாறு பொருந்துமேனும் வேளாள வகுப்போடு சூத்திர வகுப்புப் பொருந்தாது. ஏனெனில் சூத்திரன் என்பவன் இழிவான பிறப்புடையவன் எனப் பேசப்படுகிறான்.

## 15. தமிழின் தனிப்பெருமை.

உலகத்தில் முதன் முதலாகத் தோன்றிய மொழி தமிழ் என்றும், அதனைப் பேசி வந்த தமிழ் மக்கள் பூமியின் பல பகுதிகளுக்குக் கடல்கோள் காரணமாக வெளியேறி உணவு தேடி, நாடோடிகளாக அலைந்து திரிந்து தத்தமக்கு வாய்ப்பானது எனக் கண்ட கண்ட இடங்களில் தங்கி வாழ்வாராயினர் என்றும், அவர்கள் பேசி வந்த தமிழ் மொழியே அவர்கள் அலைந்து திரிந்து வரும் தட்ப வெப்ப நிலைகளுக்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்ப திரிந்து பற்பல பெயர்களுடன் வழங்கி வருவதாயிற்று என்றும் கூறினோம். இலத்தீன், கிரேக்கம் முதலிய மொழிகளுக்கெல்லாம் தாய் மொழியாக இன்று கருதப்படும் சம்சுக்கிருதமும் தமிழ்மொழியால் படைக்கப்பட்டதொரு மொழியே என்பது தான் உண்மை. இதற்கு மாறாக சம்சுக்கிருதத்திலிருந்துதான் தமிழ் தோன்றியது என்று கூறும் சில ஆராய்ச்சியாளர்கள் கூற்றுப் பெரிதும் தவறு. இதனை விளங்க எடுத்துக் காட்டுவாம்.

## 16. சம்சுக்கிருதம்.

ஆரியர் என்ற மக்கள் தொகுதியினர் நடு ஆசியாவில் வாழ்ந்திருந்தவர் என்றும், அவர்கள் பேசிய மொழி சம்சுக்கிருதம் என்றும், அவர்களில் சிலர் வயிற்றுப் பிழைப்புக்காக ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டு தெற்கு நோக்கி வந்து, இமயமலையின் வடமேற்கில் உள்ள கைபர் கணவாய் வழியாக இந்தியாவுக்குள் நுழைந்து வட இந்தியாவிலிருந்த திராவிடர்களை வென்று துரத்தித் தென்னிந்தியாவிலும் பரவி வாழ்ந்து வருவாராயினர் என்றும் பண்டைய வரலாற்றாசிரியர்கள் சிலர் எழுதி வைத்திருக்கிறார்கள். இது முற்றிலும் தவறான செய்தி என்பதைத் திருச்சிராப்பள்ளி நேசனல் கல்லூரி (National college)யிலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், வரலாற்றுப் பேராசிரியராக இருந்த P. T. சீனிவாச ஐயங்கார் என்ற

பெரியார் பல ஏதுக்களால் நிலை நாட்டியிருக்கின்றார். ஆரியர்கள் பேசி வந்த மொழி சமஸ்கிருதம் என்பது உண்மையானால், அவர்கள் வந்து குடியேறிய நம் இந்திய நாட்டில் அம்மொழியைப் பேசியவர் இன்றும் இல்லை, அன்றுமில்லை, என்றும் இல்லை. மேலும் அவர்கள் முன்பு வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லப்படுகிற நடு ஆசியாவிலும் அம் மொழி வழக்கு என்றும் இருந்ததில்லை என்று கூறும் வரலாறு. உலகில் எங்குமே இம் மொழி பேச்சு மொழியாக இருந்திருப்பதே இல்லை. அவ்வாறானால், ஆரியர் என்று கூறப்படும் மக்கள் யாவர்? சம்சுக்ண்கிருதம் எவ்வாறு தோன்றியது? என்பனவற்றை ஆராய்ந்து நிலை நாட்டுவோம்.

பண்டைத் தமிழ் மக்களில் ஒப்பற்ற ஒழுக்கமும், கரைகண்ட கல்வியறிவும் உடைய மேலோர்கள் பலர் இருந்து வந்தார்கள். அவர்கள் அருமையானவர். அதனால் அரியர் எனப்பட்டனர். அரியர் என்ற அச்சொல் அவர்களைச் சிறப்பாகக் குறிப்பதன் பொருட்டு 'ஆரியர்' என வழங்குவராயினர். ஆரியன்- பெரியவன். இது வட மொழியில் பெருவழக்காக வழங்கப்பட்டு வருகின்றது. (ஆரிய- பெரியவரே!)

தமிழ் முன்னோர்களுள் ஒரு பகுதியினராகிய ஆரியரே சம்சுக் கிருதத்தை ஆக்கினார்கள் என்பதற்கு அம்மொழிக்குரிய கிரந்த எழுத்துகள் தமிழுருவாக இருப்பதே போதிய சான்றாகும். தமிழ் மெய் எழுத்துகள் ஒவ்வொன்றும் வரும் இடம் நோக்கித் தமிழில் வலித்தும், மெலித்தும், உரத்தும், படுத்தும் ஒலிக்கப் பெறுகின்றன. அந் நால்வகை வேறுபாடுகளை உன்னித் தனித்தனி உருவம் வகுத்தனர் சம்சுக் கிருதத்தில்.

**சம்சுக்கிருதம்** (சம்சு- நன்றாக கிருதம்- செய்யப்பெற்றது) நன்றாகச் செய்யப் பெற்ற மொழியே சம்சுக்கிருதம். இதில் காளிதாசன் முதலிய பெரியோர் (பிராமணரல்லாதவர்) அரிய நூல்கள் யாத்திருக்கின்றனர். சிவபெருமான்மீது அரிய தேவாரப் பண்களைப் பாடிய சமயக் குரவர்கள், சிவபெருமானை.....

'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்'

'வடமொழியும் தென்மொழியும் ஆயினான் காண்'

என்றும் பாடியருளினமையை நெஞ்சிற் கொள்க.

# 17. தமிழர் திருமணம்.

ஆண்களும், பெண்களும் ஒருவரையொருவர் காதலித்துப் பிறர் அறியாமல் சில காலம் வாழ்ந்து வருவர். அது **களவு** எனப்படும். பின்பு அவர்கள் பலர் அறிய மணம் செய்து கொண்டு இல்லறம் நடத்துவர். அது **கற்பு** எனப்படும். இக்காதல் ஒழுக்கத்தில் *கைக்கிளை, பெருந்திணை* என்ற இரண்டு பகுதிகள் கூறப்படுகின்றன.

கைக்கிளை என்பது ஒருதலைக் காமம். கைக்கிளை மணம், **அசுரம், இராக்கதம், பைசாசம்** என மூன்று வகைப்படும். பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்.

இக்காலத்தில் திருமண வாழ்க்கை இன்பந்தருவது என்பது நூற்றில் ஒருவருக்கே. தொண்ணூற்றொன்பதின்மர் துன்ப வாழ்க்கையே வாழ்கின்றனர், காதல் மண வாழ்க்கை இல்லாமல், தாய்தந்தையர் ஏற்பாட்டினாலேதான் திருமணம் நடைபெறுகிறது. அதனால் கணவரும், மனைவியரும் ஒத்த குணம் அற்றவராகித் 'தவளை தண்ணீருக்கிழுக்க, ஓணான் வேலிக்கிழுத்த கதையாக' துன்புறுகின்றனர். குலம் பேசிக், குணம் பேசி மணமக்களைத் தேர்ந்தெடுக்கும் தன்மை கூட மறைந்து பணம் பேசி மணமக்களை அமைக்கும் காலம் இது. ஆனால் அண்மைக் காலமாக, பள்ளி வாழ்க்கையில் ஆண்மகன் மனைவியையும், பெண்மகள் கணவனையும் தேடி அடைகின்றனர். சாதிப் பாகுபாடு கூட இவர்முன் நிற்பதில்லை. அருகிக் காணப்படும் இது பெருகுவதற்குப் பெற்றோரும், உற்றோரும் இந்த நற்போக்கிற்கு முழு ஆதரவு தருதல் வேண்டும். ஆதரவு அற்றவர்களாய் அவர்களைத் தன்னந் தனியாக வாழ்க்கையில் தவிக்க விட்டு விடுதல் கூடாது.

# 18. தெய்வம்.

தமிழ் மக்களுள் கல்வி கேள்விகளால் அரியராகிய ஆரியர்கள், தங்கள் செயலுக்கு அப்பாற்பட்டதாகிய ஒரு பொருள் இருப்பதை அறிந்தார்கள். தாம் ஒன்று நினைத்தால் வேறு ஒன்று நினைக்கப்

படுகிறது. ஒன்றைப்பெற விரும்பினால் அது கிடைக்காமல் வேறொரு பொருள் நமக்கு கிடைக்கிறது. சில வேளைகளில் பெற நினைத்த பொருளே கை கூடுவதும் உண்டு. மேலும், எப்போதுமே நினைத்திராத ஒரு பொருள் எதிர்பாராமல் கைக்குக் கிட்டுவதையும் அவர்கள் கண்டார்கள். அதனால் *'தம்மால் இன்னதென்றே உணரமுடியாத ஒரு பொருள் இருக்கின்றது'* என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். பின்வரும் ஒளவையார் பாடல் இவ் ஆராய்ச்சியின் முடிவே.

'ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்- ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்'.

அந்த ஈசனை இத்தன்மையன் என்று காண்பது யாவருக்கும் முடியாத தொன்றாகும். தேவர்களில் சிறந்தவராகிய திருமாலும், நான்முகனும் தாம் தாம் பெரியவர் என்று அகந்தை கொண்டு போரிடத் தொடங்க அவ்விருவரும் இன்ன தன்மையது என்று அறியாததொரு சோதி தம் முன்னே தோன்றக் கண்டு, அதன் அடியைத் திருமாலும், முடியை நான்முகனும் காண முயன்று, எவர் முதலிற் காணுகின்றனரோ அவரே தம்முள் பெரியவரென்று முடிவு செய்து கொண்டு காணத் தொடங்கினர். அவர்களால் அடியோ, முடியோ காண்பதரிதாயிற்று. நூல்களை ஆராய்வதாலோ காட்டிற்குச் சென்று அருந்தவம் முயல்வதாலோ அப்பொருள் இன்ன தன்மையது என்று காண்பது முடியாது.

'இத்தந் திரத்தில் காண்டும்என் றிருந்தோர்க்கு
அத்தந் திரத்தில் அவ்வயின் ஒளித்தும்'

என்பது திருவாசகம். மனம், வாக்கு, உடல் அனைத்தையும் கடந்து நிற்கும் பொருள் அது. அதனால் அது கடவுள் எனப் பெயரிடப் பெற்றது.

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலால் பிறிது மற்றின்மை

சென்றுசென் றணுவாய், தேய்ந்துதேய்ந்தொன்றாய்
திருப் பெருந்துறையுறை சிவனே
ஒன்றுநீ அல்லை அன்றிஒன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே. (திருவாசகம்)

இதனையே தாயுமானவப் பெருந்தகையார்,

'சென்றுசென் றணுவாய்த்
தேய்ந்துதேய்ந் தொன்றாகி
நின்றுவிடும் என்ற நெறி
நிற்கும்நாள் எந்நாளோ',

என்றருளிச் செய்தார். ஆராய்ச்சியைக் கடந்து கடந்து செல்வதனால் கடவுள் என்ற பெயர் பெற்றமைபோல, ஆராய்ச்சியில் அகப்படாமல் அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாகி நின்று விடுவதனால் கடவுள் 'தெய்வம்' என்றும் பெயர் பெற்றார். 'தேய்வம்' என்ற சொல்லே, 'தெய்வம்' என்று மருவி நின்று வழங்கி வருகின்றது.

## 19. கடவுள் வாழ்த்து.

எத்தொழிலைத் தொடங்கினாலும், தொடங்குவதற்குமுன் தெய்வத்தை வழிப்பட்டே தொடங்குதல் வேண்டும் என்பது அறிஞர் கண்ட முடிவு. தேவேந்திரனும், தேவர்களும், நான்முகனும், திருமாலும் அமுதம் பெறும் பொருட்டு திருப்பாற் கடலைக் கடையத் தொடங்கியபோது, தெய்வத்தை வழிபடாமல், அச் செயலைத் தொடங்கினார்கள். ஆதலின், கடலிலிருந்து ஆலால நஞ்சு தோன்றித் தொல்லை விளைத்தது என்றும், அவர்கள் நல்லறிவு பெற்றுச் சிவபெருமானை வழிபட்டார்கள் என்றும், அதனால் அத்தொல்லை நீங்கித் திருவருளால் அவர்களுக்கு அமுதம் கிடைத்தது என்றும் புராணங்கள் கூறுகின்றன.

நூலாசிரியர்கள் அனைவரும் தத்தம் நூலைத் தொடங்கும் முன்னர் அந்நூலுக்கு ஏற்புடைக் கடவுளையாவது, வழிபடு

கடவுளையாவது தொழுத பின்னரே அந்நூலைத் தொடங்குகின்றனர். சங்கத் தொகை நூல்களுக்கும் கடவுள் வாழ்த்து அமைத்திருக்கின்றார் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற பெரும்புலவர். 'உலகெலாம்' என அம்பலவாணரே அடியெடுத்துக் கொடுக்க, சேக்கிழார் பெருமான் தாம் பாடியருளிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்துக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியருளினார்.

# 20. தமிழ்த்தெய்வம்.

புலவர்கள் தமது தாய்மொழியாகிய தமிழ்மொழியையும் தெய்வமாகக் கொண்டு வாழ்த்துக் கூறுகின்றார்கள். வடமொழி தோன்றிய காலத்தில், சிலர், அதனைத் தமிழ்மொழியை விட ஏற்றமுடையதாகக் கருதினர். அதனால் அக்காலப் புலவோர் சிலர் தக்க காரணங்காட்டித் தமிழும், ஆரியமும் நிகர் என்று வாழ்த்துக் கூறினார்கள்.

சிவபெருமானே தமிழ்மொழிக்கு அகப்பொருள் இலக்கணம் ஆக்கினார். அதுவே இறையனார் அகப்பொருள் என்பது. இத்தகைய பெருமையுடைய தமிழ்மொழி, உலக மொழிகளையெல்லாம் வென்று, ஆரியத்தோடு சீரொப்ப விளங்குகிறது. அத்தகைய தமிழ்த் தெய்வத்தை வணங்குவோம் என்று பொருள் அமைத்து ஒரு பெரும் புலவர் பின்வரும் கவியைப் பாடினார்.

மறைமுதற் கிளந்த வாயான்
மதிமுகிழ் முடித்த வேணீ
இறைவர்தம் பெயரை நாட்டி
இலக்கணம் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை
அனைத்தும்வென் றாரியத்தோடு
உறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
உள்நினைந் தேத்தல் செய்வாம்!

(இறைவர்-சிவபெருமான், பாடை-மொழி, பாடப்படுவது பாடை. முற்காலம் உரைநடை நூல்கள் இல்லாமல் அனைத்தும் பாடல்களாகவே எழுந்தமை குறிப்பிடத்தக்கது. பாடுதல், இசைபாடுதல், கவிபாடுதல், பேசுதல், அதனால் பாடை எனப்பட்டது. வடமொழியில் பாஷிக்கப் பயன்படுவது, அதனால் பாஷை என்றாகி, அது தமிழாக்கத்தில் பாடை என்றாயிற்று எனக் கூறுவாரும் உளர். உறழ்தரு- ஒத்திருக்கும் அல்லது போக்கில் மாறுபடும்.)

'வடமொழி, தென்மொழியாகிய இரண்டு மொழிகளையும் ஆக்கிய முதல் ஆசிரியர் சிவபெருமான். அவருடைய திருவருளைப் பெற்று பாணினிமுனிவர் வடமொழிக்கும் அகத்திய முனிவர் தென்மொழிக்கும் இலக்கணம் வகுத்தனர். அறிவிற் சிறந்த பெரியோர்கள் இவ்விருமொழிகளையும் தழுவி நூல் இயற்றியுள்ளனர். ஆகையால், இவ்விருமொழிகளும் ஒன்றையொன்று ஒத்திருப்பனவாகும் என்பதற்கு ஐயமும் உண்டோ' என்ற கருத்துடையது பின்வரும் கச்சியப்ப முனிவர் பாடல்.

இருமொழிக்கும் கண்ணுதலார்
முதற்குரவர் இயல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார்
முனிவேந்தர் இசை பரப்பும்
இருமொழியும் ஆன்றவரே
தழீஇயினார் என்றாலிவ்
இருமொழியும் நிகர்என்னும்
இதற்கையம் உளதேயோ?

இக் கருத்தையே பரஞ்சோதி முனிவர் தம் திருவிளையாடற் புராணத்தில் பின்வருமாறு பாடினார்.

விடையு கைத்தவன் பாணிநிக் கிலக்கணம் மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியல் மலையமா முனிக்கு
திடமு றுத்தியம் மொழிக்கெதிர் ஆக்கிய தென்சொல்
மடம கட்குஅரங் கென்பது வழுதி நாடன்றோ'

(விடை-காளை, விடை உகைத்தவன்- சிவபெருமான், மலைய மாமுனி- அகத்தியர், வழுதி- பாண்டியர்)

இவ்விரு பாடல்களால் 'தமிழும் வடமொழியும் ஒத்திருப்பன, அவை தம்முள் ஏற்றத் தாழ்வு இல்லை' என்ற கருத்து விளங்குகின்றதல்லா?

இடைக்காலத்தில் வடமொழியாகிய சம்ஸ்க்கிருதமே தெய்வமொழி, தமிழ் திராவிடமொழி, வடமொழியினும் குறைந்த பெருமையினது என்று பலர் பலவாறு பேசி வருவாராயினர். அக் கருத்து முற்றிலும் தவறானது என்பதை எடுத்துக் காட்டி இருமொழியும் நிகர் என்று அறிஞர் பலர் கூறுவாராயினர்.

அதன் மேலும் ஒரு படி ஏறி நின்றனர் ஆராய்ச்சி வல்லுநர். தமிழ்மொழி ஒன்றே இலக்கண வரம்புடையது; ஏனைய மொழிகள் எல்லாம் இலக்கண வரம்பற்றன; ஒலி வரம்பற்றன. ஒலி வரம்பு சிறிதும் இல்லாதது, உலகிற் பல நாடுகளில் வழங்கும் புகழ்பெற்ற ஆங்கிலம், வடமொழியுங் கூட இலக்கண வரம்பற்றதே. எங்ஙனமெனில் பெண்பாற் சொல் ஒன்று சில இடங்களில் ஆண்பாலாகவும், வேறு சில இடங்களில் அலிப்பாலாகவும் வரும். இராமன் என்ற ஆண்பாற் சொல் சில இடங்களில் உச்சரிப்பு வேறுபாட்டால் பெண்பாலாகவும் வரும். ஆதலின், தமிழ் மொழிக்கு ஈடாக வேறு எந்த மொழியையும் சொல்வதற்கு முடியாது. இலக்கண வரம்புடைய தமிழ் ஒன்றுதான் தெய்வமொழி என்று அவ் அறிஞர்கள் நிலைநாட்டுவாராயினர். அக்கருத்துடைய பாடல் திருவிளையாடற் புராணத்தில் வருகின்றது.

'கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந் தமிழேனை
மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப்பட கிடந்ததா எண்ணவும் படுமோ'

(கடவுள்-சிவபெருமான்; கழகம்-தமிழ்ச்சங்கமும் சங்கப் புலவர்களும்)

இச் சிறந்த கருத்துக்களை ஆசாக இலக்காக வைத்துக் கொண்டு தம் சீரிய ஆராய்ச்சியிற் கண்ட உண்மைகளையும் சேர்த்துத் தமிழ்த் தெய்வ வணக்கத்தைப் பாடுகின்றார் மனோன்மணியத்தில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை. தமிழ், சமஸ்கிருதம் ஆகிய இரண்டு

மொழிகளும் தமிழ்நாட்டிலே தோன்றின. அவை தமிழ் மக்களுக்கு இரண்டு கண் போன்றவை, இருந்தாலும் தமிழ்தான் இயல்பாக எழுந்த முதல் மொழி. சமஸ்-நன்றாக, கிருதம்- செய்யப்பட்டது என்கிற காரணப் பெயர் பெற்றது. தென்னாட்டில் பிறந்த இம்மொழி வடநாட்டில் பரவியபின் வடமொழி என்று பெயர் பெறுவதாயிற்று. சமஸ்க்கிருதம் செய்யப்படுவதற்கு முன்னர் உலகமெல்லாம் பரவியிருந்த மொழி தமிழே. இவ் ஆராய்ச்சிக் கருத்தினில் உடன்பட்ட திரு. சுந்தரம் பிள்ளை அவர்கள் பின்வரும் அடிகளைப் பாடுகின்றார்.

'சதுர்மறை ஆரியம் வருமுன்
சகமுழுதும் நினதாயின்
முதுமொழிநீ அநாதி என
மொழிகுவதும் வியப்பாமே!'

மறை-மக்களிலும் சில வகுப்பினர் படித்தல் கூடாது என மறுக்கப் பட்டமையால் மறை எனப்பட்டது. வேதம். ஆரியம் வடமொழி. இதனை, ஆரியர் இமயமலைக் கணவாய்களின் வழியே இந்தியாவுக்குக் கொண்டு வந்தனர் என்பது தவறு என்பதும், ஆரியர் இந்நாட்டினரே, இந் நாட்டினரே ஆரியமொழியைப் படைத்தனர் என்பதும், பேராசிரியர் சீனிவாச ஐயங்கார் முதலிய வரலாற்றுப் பேராசிரியர்கள் கருத்து. அதுதான் உண்மை.

தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்து தமிழையே பேசி வாழும் மக்களிற் சிலர் 'ஆரிய மொழி தமக்கே யுரியது ' என்று தவறாகக் கருதி 'கலைமகளுக்கு வலக்கண் வடமொழி, இடக்கண் தமிழ் ஆதலின் தமிழ் தாழ்ந்தது. வலக் கண்ணாகிய வடமொழியே மேலானது' என்று கூறி மகிழும் பேதைமைக்கு மறுப்பாகப் பின்வரும் மூன்று தாழிசைகளையும் பேராசிரியர் திரு. சுந்தரம் பிள்ளை பாடுகிறார்:-

'வடமொழிதென் மொழி எனவே
வந்தவிரு விழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே
கிழக்கொடுமேற் குணராரே!

'வீறுடைய கலைமகட்கு
விழியிரண்டும் மொழியானால்
கூறுபட மொழிவலமாக்
கொள்வர்குண திசையறியார்'

'கலைமகள்தன் பூர்வதிசை
காணுங்கால் அவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா
மதியாரோ மதியுடையார்'

பூர்வ திசை- கிழக்கு. கண்களுள் எது சிறந்தது என்ற ஆராய்ச்சி அறிஞர்பாற்பட்டதன்று; இரு கண்களும் இன்றியமை யாதனவே. பொருளுக்கு இசையும் இலக்கணம் இல்லாத கற்பனை நிரம்பியது வடமொழி என்பது இவர் கருத்து. அதனால் பொருளுக்கு இசையும் இலக்கணம் உள்ள இயற்கைக் கருத்து நலன்களையுடைய தமிழ்மொழியே சிறந்தது என்று இவர் கூறுகிறார்.

'பத்துப்பாட் டாதிமனம்
பற்றினார் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும்
இலக்கணமில் கற்பனையே!'

வடமொழியில் உள்ள மனுநீதி நூல் ஒரு குலத்துக்கு ஒரு நீதி கூறுவது. ஆதலின், தமிழ் மொழியிலுள்ள திருக்குறள் ஒன்றுதான் உலக நீதி நூல் என்றும் கூறுகிறார் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள்.

'வள்ளுவர்செய் திருக்குறளை
மறுவற நன்குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி
ஒருகுலத்துக் கொருநீதி'

சுந்தரனாருக்குத் திருவாசகத்தில் அளவிலா மதிப்பு இருந்தது. அதனால் இவர் திருவாசகத்தினை வேதத்தினும் மிகமிகச் சிறந்தது என்று கூறுகின்றார். வேதம் ஓதினால் இறைவனை அடைதல் முடியாது.

*திருவாசகத்தை ஓதினால் மனம் கரைந்து ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் கெடும். அதனால்,அயல் மாண்டு, அருவினைச் சுற்றமும் மாண்டு, மயல் மாண்டு, வாசகம் மாண்டு, செயலும் மாண்டு, முக்திப் பெரும்பேறும் சித்திக்கும்.*

இவ்வாறு, திருவாசகம் ஓதி மாண்டவர்கள், 'கனம், சடை' என்ற முறைகளைப் பின்பற்றி, ஓதிக் கண்மூடிக் கதறுவார்களா? என்ற அளவுக்கு ஆழ்ந்து இவர் பாடுகிறார்.

# 21. பண்டைத்தமிழ் நாடு

**அரசு:**

அரசன் அரண்மனையில் வாழ்ந்தான் என்று கூறினோம். அவனுக்கு வருவாய் அவன் நிலங்களினின்று வந்தது. மேலும், வரிப்பணமும், சுங்கப் பணமும், திறைப் பணமும் அவனுடைய வருவாய். அவனிடத்தில்....

* தேர்ப்படை
* யானைப்படை
* குதிரைப்படை
* காலாட்படை

என நான்கு வகைப்படைகள் இருந்தன. போர்க்காலங்களில் அவற்றை ஊக்குவிப்பதற்காகப் பல வாத்தியங்கள் முழங்கின. அவை *தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, மிடற்றுக்கருவி* என நான்கு வகைப்படும். *இசை ஏழு வகைப்படும்.* அவை **குரல், துத்தம், கைக்கிளை, உளை, இளி, விளரி, தாரம்** என்பன.

**பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி** என்பன அக்காலத்தில் வழங்கிய பண்களாகும். *பேரிசை, சிற்றிசை, இசை நுணுக்கம்* முதலிய இசை நூல்கள் அக்காலத்தில் இருந்தன.

அரசனுடைய அரண்மனையைச் சுற்றித் தொழில் புரிபவர்களுக்கு ஏற்ற பேட்டைகள் தனித்தனியாக அமைந்திருந்தன.

பெரிய தெருக்கள் மன்றம் என்றும், சிறிய தெருக்கள் கோணம் என்றும் கூறப்பெற்றன.

* **குறிஞ்சி நிலச் சிற்றூர்கள் சிறுகுடி என்றும்,**
* **முல்லை நில ஊர்கள் பாடி, சேரி என்றும்,**
* **மருத நிலச் சிற்றூர்கள் ஊர் என்றும்,**
* **நெய்தல் நிலச் சிற்றூர்கள் பாக்கம்**

என்றும் பெயரிடப் பெற்றன.

தமிழ் மக்கள் தங்கள் வீடுகளையும், ஊர்களையும் கோவில் களையும் மிக அழகாக அமைத்துக் கொண்டார்கள். பட்டு, பருத்தி, மயிர் முதலியனவற்றால் ஆக்கப்பெற்ற மெல்லிய ஆடைகளை அணிந்துவந்தார்கள். பெண்கள் தங்களை நல்ல முறையில் அணி செய்து கொண்டார்கள். திருக்கோவில்களை முன்னிட்டுப் பல திருவிழாக்கள் கொண்டாடப்பெற்றன. **மற்போர், சிலம்பம் , வாட்போர், நடனம், கூத்து** முதலியன பொழுதுபோக்குக்காக விழாக்களில் நிகழ்ந்தன.

அக்காலத்தில் இருந்த...

* **குறிஞ்சிப்பண்** இன்று **குறிஞ்சி இராகமாகவும்,**
* **மருதப் பண் கேதார இராகமாகவும்,**
* **நெய்தற் பண் புன்னாகவராளி இராகமாகவும்**

வழங்கப் பெறுகின்றன.

# 22. போக்கு வரவு

பெரிய காளைகள் பூட்டிய வண்டிகளில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மக்கள் போய் வந்தனர். அரசரும், பெரும் பணக்காரர்களும் பல்லக்கிற் சென்றார்கள். குதிரைகள் பூட்டிய பெரிய வண்டிகளே தேர் எனப்பட்டன. ஆறுகளைக் கடப்பதற்கு ஓடங்களும், தோணிகளும் பயன்பட்டன. அவை பல உருவங்களில் அமைந்தன.

# 23. வாணிகம்.

எகிப்து, சுமேரியா, சாவகம், உரோம், கிரேக்கம், முதலிய பிற நாடுகளுடன் தமிழ் மக்கள் வாணிகம் செய்து வந்தார்கள். தமிழ் நாட்டிலிருந்து முத்து, பவளம், சந்தனம், மயில்தோகை, அகில், மிளகு முதலியன பிற நாடுகளுக்குக் கொண்டு போய் விற்கப்பெற்றன. இப்பொருள்கள் தமிழ்நாட்டிற்கே உரிய பொருள்கள். மிகப்பெரிய உருவினவாகிய தோணிகள், கப்பல்கள் என்று பெயர் பெற்றன. பெருங்காற்றுகளினால் பேரலைகள், மோதுகின்ற கடலிலே, கப்பல்களிற் சென்று, வாணிகம்செய்து தமிழ் மக்கள் பெரும் பொருள் திரட்டி வந்ததனால்தான் ***'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு'*** என்ற பழமொழி உருவாயிற்று.

# 24. மருத்துவர்கள்

மனிதனின் உடல் அமைப்பைக் குறித்து ஆராய்ந்து, உணவு முறையால், நோய்களை மாற்றி வந்தனர், தமிழ் மருத்துவர். மருந்தினை மிகமிக அறிதாகவே பயன்படுத்தினர் இத்தகைய மேன்மையான முறையைத் திருக்குறளில் **'மருந்து'** என்ற அதிகாரத்திலிருந்து தெளிவாக அறிந்து கொள்ளலாம். தமிழ்நாட்டில் சித்தர்கள் பலர் தோன்றி மருத்துவத்தை வளர்த்து மருத்துவ நூல்கள் படைத்த தனால்தான் தமிழர் மருத்துவம், சித்த வைத்தியம் என்று பெயர் பெற்றது. ***சித்தர்களின் சமயம் சைவ சமயம்.*** இலிங்க வழிபாடே தமிழர் வழிபாட்டு முறை என்பது மொகஞ்சாதாரோ முதலிய இடங்களிற் காணப்படும் பல இலிங்க உருவங்களால் விளங்குகின்றது.

# 25. தமிழ் மக்களின் கலைகள்

தமிழ்நாடு பண்டைய நாடு. அதனால் பாண்டியநாடு, பாண்டி நாடு எனப் பெயர் பெற்றது. அதை ஆண்டவன் பண்டையன் பாண்டியன் என்று கூறினோம். தென் மதுரையும், கபாடபுரமும் அழிந்து இப்போதுள்ள மதுரையைப் பாண்டியன் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான் என்றும் கூறினோம். மதுரைக்கு வடபால் வைகையாறு ஓடுகிறது. அதற்கு நூறு மைல்களுக்கு அப்பால் வடக்கே காவிரியாறு பல கிளைகளோடும், கால்களோடும் பாய்ந்து நாட்டை வளம் பெறச் செய்கின்றது. இரு கரைகளிலும் காக்கள் (சோலைகள்) வளர்ந்து விரிந்திருந்ததினால் இப்பேராறு காவிரி எனப்பெயர் பெற்றது. பிள்ளையார் காக்கை உருவெடுத்து அகத்தியர் கமண்டலத்தில் ஏறிக் கவிழ்த்ததனாலே காவேரி எனப் பெயர் பெற்றது என்பது புராணிகர் கூற்று. தஞ்சமென வந்தோர்க்கு உணவூட்டி ஆதரிக்கும் புகழ் படைத்த தஞ்சை மாநகரில் தமிழ் மன்னன் சோழன் அரசாண்டான்; 'சோழ வளநாடு சோறுடைத்து' என்ற முதுமொழி வழங்குவதாயிற்று. இவ்விரு நாடுகளுக்கும் மேற்கெல்லை மேற்குத் தொடர்ச்சிமலை, கிழக்கெல்லை வங்காளக் குடாக்கடல், மேற்கு தொடர்ச்சிமலைக்கும் மேற்கே அரபிக்கடல் வரையுள்ள நிலப்பகுதியில் சேர்ந்து வாழ்ந்திருந்த தமிழர் சேரர். சேரமக்களுக்கு தலைவனானான் சேரமன்னன், இங்ஙனமாகச் சேர, சோழ, பாண்டியர் என்ற மூன்று முடியுடைத் தமிழ் வேந்தார்கள் தமிழ் நாட்டை ஆண்டு வந்தார்கள்.

தமிழ் இயல், இசை, நாடகம் என மூன்று பகுதிகளாக வளர்ந்து வந்தது. இயல்பாக மக்கள் பேசுவனவும், கவிஞர்கள் பாடுவனவும் இயல் தமிழ் என்று பெயர் பெற்றது. தமிழ் இலக்கண நூல்களும் இப் பகுதியையே சேரும். பண்டைக்கால இலக்கண நூலாக இன்று சொல்லப்படுவது தொல்காப்பியம் என்பது. இதில் தமிழ் எழுத்துகளின் இலக்கணமும், எழுத்துகள் சேர்ந்து ஆகும் சொல்லின் இலக்கணமும் சொற்கள் காட்டும் பொருளின் இலக்கணமும் அமைந்திருக்கின்றன. பொருள், அகப்பொருள், புறப்பொருள் என இரண்டு வகையாகப்

பகுக்கப்பட்டுள்ளது. இவ்வாறான பொருட் பாகுபாடு தமிழ் இலக்கணத்திற்கே சிறப்பாக அமைந்திருக்கிறது. உலகில் வேறு எந்த மொழியிலும் இப் பொருட் பாகுபாடு இல்லை.

இனிய ஒலிகளை இசைத்து, உயிர்களின் உள்ளத்தை இசைவித்து மகிழச் செய்யும் கலை இசைக்கலை என்பது. குழலும், யாழும் மிக இனியன. அவ் வொலிகளைக் கேட்டுப் பறவைகளும் மிருகங்களும் மெய்மறந்து நின்ற கதைகள் பல உள்ளன. குழல் என்பது மூங்கிலால் ஆகிய புல்லாங்குழல்; யாழ் என்பது நரம்புகளால் ஆக்கிய வீணை. இவ்வொலிகளைக் காட்டிலும் மிக இனிமை தருவது தம்மக்கள் மழலைச் சொல். திருவள்ளுவ நாயனார் பின்வருமாறு அருள்கின்றார்:-

'குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்'.

இயலும், இசையும் சேர்ந்து வழங்குவது நாடகக்லை. இதனைக் கருவியாகக் கொண்டு நாட்டில் இன்பமும், நல்லொழுக்கமும் வளருமாறு கண்டனர் தமிழ்ப் பெரியார். இது கூத்தென்றும் பெயர் பெறும். இக்கூத்து அரசவையிலும், திருக்கோவில்களிலும் சிறப்பாகத் திருமணங்களிலும் நடைபெறும். அண்மையில் திருநெல்வேலியில் நடந்த ஒரு திருமணத்தில் கூத்தியர் இருவர் நடனமாடினர். நுண்மணல் விரித்திருந்த நடனமேடையில், அவ்விருவரும் இன்னிசைபாடி, அவ்விசைக்கேற்ப அபிநயங்கள் காட்டி ஒருமணிநேரம் ஆடி இறங்கினர். அப்போது அந்த நடன அரங்கில் இரண்டு சிங்க உருவங்கள், எத்தும் எதிருமாக நிற்பதுபோல அழகியதொரு சித்திரம் அம்மணலில், அப்பெண்களின் கூத்தாட்டத்தின் விளைவாக வரைந்து திகழ்வது காணப்பெற்றது என்றால் சித்திரக் கலையிலும் தமிழ் மக்கள் எவ்வளவு முன்னேறியிருந்தார்கள் என்பது விளங்குகின்றது அல்லவா?

திருக்கோவில்கள், கடவுள் வழிபாட்டுக்கே முதன்மையான இடமாக இருந்தன என்பதோடு, கண்கவரும் பேரழகு சித்திரங்களுக்கு அவை இடமாய் இருந்தன. அஜந்தாக் குகையில் காணப்படும் நிறச் சித்திரங்கள், பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்டன எனினும், இன்று

எழுதியது போலக் காணப்படுகின்றனவே. அந்நிற அமைப்பு எம்முறை பற்றியது என்று கூட அறியமுடியாத தகுதியை உடையனவாக விளங்குகின்றது. தஞ்சை, புதுக்கோட்டை, சித்தன்னவாசல் முதலிய இடங்களிற் காணப்படும் சிற்பங்கள் உயிருள்ள உருவங்கள் போல நம் கண்முன் நிற்கின்றனவே. நெல்லை மாநகரத்துக்குக் கிழக்கே ஏழுமைல் தூரத்திலுள்ள கிருஷ்ணாபுரத்தில் காணப்படும் கல்லோவியங்கள் ஈடும் எடுப்பும் மிக்கன. பல்லவ மன்னன் நரசிம்ம வர்மன், மாமல்லபுரத்தில் அமைத்துள்ள ஏழு கல்தேர்களும், இராச இராச சோழன் தஞ்சையிற் கட்டியுள்ள பெருங்கோவிலும், ஈடு இணை இல்லாத உலகப் புகழ்பெற்ற பொருள்கள். நம் நாட்டில் காணப்படும் மிக உயர்ந்தனவாகிய திருக்கோபுரங்களும், மிகப்பெரிய தேர்களும் உலகில் வேறு எங்கும் காண முடியாத வியப்புப் பொருள்கள். அவைகளில் அருமையான சித்திரங்கள், சிற்பிகளால் அமைக்கப்பெற்றுத் திகழ்கின்றன. கோவில்களிற் காணப்படும் கல்வெட்டுகள் பண்டைக்கால வரலாறு கூறும் சான்றுகளாகும்.

# 26. தமிழர் விழா

இற்றைக்குப் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன், அதாவது கி.மு. பதினாயிரத்துக்கு முன் தென்மதுரையில் தலைச்சங்கம் கூடி இருந்தது என்று கூறினோம். அக்காலத்தில் உரோமர், சீனர்கள், கப்பல்களில் சீனி, சீனக்காரம், பட்டாடைகள் முதலியனவற்றை ஏற்றிக்கொண்டு தமிழ்நாட்டுக்குக் கொண்டுவந்தார்கள். அவர்கள் தமிழ்நாட்டிலிருந்து மிளகு முதலிய உணவுப் பண்டங்களையும், மருந்து வகைகளையும், முத்து மணி முதலியவற்றையும் தங்கள் நாட்டிற்கு ஏற்றிக்கொண்டு சென்றார்கள்.

தமிழர் தங்களுடைய வாழ்க்கைக்குத் தண்ணீரே முதன்மையானதால் நீரைத் தெய்வமாக வணங்கினர். 'தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழியாதே' என்ற பழமொழியால், தமிழர்கள் தண்ணீரை எவ்வளவு தூரம் மதித்து வந்தார்கள் என்பது விளங்குகின்றது. ஒவ்வோர் ஆடி மாதமும் 18 ஆம் நாள் பதினெட்டாம் பெருக்கு என்று

அவர்கள் நீர் விழாக் கொண்டாடினர். உழவுத்தொழிலே தமிழ் மக்களுக்கு முதன்மையானது. ஆதலின் மாரியை (மழையை), அவர்கள் எப்போதும் எதிர்பார்த்தார்கள். 'மாரியல்லது காரியமில்லை' என்றுணர்ந்த தமிழ் மக்கள் மாரியைப் பெண் தெய்வமாகக் கொண்டு, தங்கள் ஊர்களில் எல்லாம் மாரி அம்மைக்குக் கோவில்கள் கட்டி வழிபட்டு விழாக்களும் கொண்டாடினர். மாரிக்காலத்தில் மழையினால் வீடுகள் சிதைவடைந்திருக்கும். மாரிக் காலத் தொடக்கமாகிய ஆடி, ஆவணியில் விதைத்த விதைகள் மார்கழி, தையில் விளைந்து பயன் தரும். ஆதலின், அக்காலத்தில் வீடு வாசல்களையெல்லாம் புதுப்பித்துத் தைமாதப் பிறப்பன்று தங்கள் வாசல்களில் பொங்கலிடத் தொடங்கினார்கள். அப் பொங்கலை மாரிக்கும், மாரிக்கு முதற்காரணமாகிய சூரியனுக்கும் ஆக ஆக்கி வழிபாடு செய்வார்கள். உழவுத்தொழிலுக்கு முதன்மையான பொருளாகிய மாடுகளைக் குளிப்பாட்டி, அணி செய்து, தைமாதம் இரண்டாம் நாள் மாட்டுப் பொங்கலிட்டு விழாக் கொண்டாடி மகிழ்வார்கள்.

தமிழ்த் தெய்வமாகிய முருகப் பெருமானுக்கு, மலைகள்தோறும் திருக்கோவில்கள் கட்டி, நாள் தோறும் பூசனை செய்வதோடு *தைப்பூசம், மாசி மகம், பங்குனி உத்திரம், வைகாசி விசாகம்* முதலிய நிறைமதி நாட்களில் எடுப்பாகத் திருவிழாக்கள் நடத்தி இன்புற்றார்கள். மலைகளில் ஏறி, இறங்குவதனாலே குறிஞ்சித் தெய்வமாகிய முருகப் பெருமான் திருவருளோடு உடல் உரமும், மனநலமும் பெற்று அவர்கள் உயர்ந்தார்கள்.

## 27. அகத்தியர்

தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்தார் அகத்தியர். இவர் சித்தர்கள் வரிசையில் முதலாமவர். அவர் வடக்கேயுள்ள இமயமலையிலே நடைபெற்ற பார்வதி திருமணத்திற்குச் சென்றிருந்ததாகவும், அப்போது விண்ணவர் அனைவரும் அங்கே கூடி

பருவத மன்னன் மகளாகிய அப்பார்வதியம்மையைச் சிவபெருமான் திருமணஞ் செய்து கொள்ளுகின்ற காட்சியைக் காண்பதற்கு நின்றார்கள் என்றும், அக்கூட்ட மிகுதியால் பூமியின் வடதலை சிறிது சாய்ந்ததாகவும், அதனை ஈடு செய்யும் பொருட்டுச் சிவபெருமானுடைய திரு ஆணையால் அகத்தியர் பூமியின் தென் பகுதியாகிய பொதிகை மலைக்கு வந்தார் என்றும் புராணம் கூறும். இது பூமி உருண்டையானது என்பதை அறியாத மக்கள் கூற்றென்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.

தென்மதுரையிலே, கூடியது தலைச் சங்கம். அச் சங்கத்திலிருந்தார் சிவபெருமானாகிய இறையனார், முருகவேள், அகத்தியனார் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அகத்தியம் என்ற சொல்லுக்குப் பொருள் இன்றியமையாமை என்பது. அக்காலத் தமிழின் இலக்கணத்தை முதன் முதலாக வகுத்த பெருமை அகத்தியனாருடையது. அக்காலத் தமிழிலக்கணத்தை அறிந்து கொள்ளுதற்கு இன்றியமையாதது (அகத்தியம்) குறித்து அக்காலப் பெரியார் அந் நூலுக்கு அகத்தியம் என்றும் அதனை ஆக்கியவர் அகத்தியர் என்றும் பெயரிட்டு அழைப்பாராயினர். இவ்வகத்தியரே இடைச்சங்க காலத்திலும் இருந்தவராவர்.

அகத்தியருடைய மாணாக்கர் இடைச்சங்கத்திலிருந்த தொல்காப்பியர் என்பவர். தொல்காப்பியரும் தமிழுக்கு இலக்கணம் வகுத்துள்ளார்.அகத்தியத்திலுள்ள சில சூத்திரங்கள் தாம், உரையாசிரியர் மேற்கோளாகக் காட்டியதனால் இன்றுவரை வழங்கி வருகின்றனவேயல்லாமல் அகத்தியம் அழிந்துபட்டது. தொல்காப்பியம் என்பது பழைமையான காவியம் (தொல்- பழைமையான, காப்பியம்- நூல்). தொல்காப்பியம் என்ற பெயரும், அதனை ஆக்கிய பெருமையுடைய தொல்காப்பியர் என்ற பெயரும் தமிழ் மூதாதையரால் இடப் பெற்றனவே. இன்றும் தமிழுக்கு இலக்கணமாக அமைந்து விளங்குவது தொல்காப்பியமே! எழுத் திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம் ஆகிய தமிழிலக்கணத்தை முதல் நூலாகக் கொண்டுதான் இப்போது நாம் படிக்கிற எழுத்தையும் சொல்லையும் மட்டும் கூறும் நன்னூலும், அகப்பொருள் விளக்கமும், செய்யுள் இலக்கணம் கூறும் யாப்பருங்கலமும் ஆகும்.

சித்தர் திலகராகிய அகத்தியனார் பொதிகை மலைக்கு வந்து முருகப்பெருமானுக்குத் திருக்கோவில் கண்டுவழிபட்டு, இன்றும் அடியார்களுக்குத் திருவருள் பாலித்து வருகிறார் என்று ஆராய்ச்சி பெரியோர்கள் கூறுகின்றார்கள். பொதிகை மலையின் உயர்ந்த சிகரம் *அகத்தியர் மொட்டை* (மொட்டை-முடி, சிகரம் - Peak) என்ற பெயருடன் திகழ்கிறது. அகத்தியர் மொட்டையில் தோன்றுகின்ற தண் பொருந்தப் பேராறு, பொதிகை மலையின் நடுவே விளங்குகின்ற *வான தீர்த்தம்* என்ற் இடத்தில் அருவியாக விழுந்து, மேலும் இறங்கி ஓடிவந்து பழைய பாவநாசம் என்ற இடத்திலும் அருவியாக இறங்கிப் பின்னும் ஓடிவந்து மலையின் அடிவாரத்தில் இறங்குகிறது. அவ்வடிவாரமே பாவநாசம். பழைய பாவநாசத்தில் முருகன் கோவிலும், அகத்தியர் கோவிலும், பாவ நாசத்தில் மிகப்பெரிய சிவன்கோவிலும் விளங்குகின்றன. அங்கிருந்து ஐந்து மைல் தாண்டி வந்தால் அம்பாசமுத்திரம் என்ற பேரூர் உள்ளது. அங்கும் அகத்தியனாருக்கு ஒரு பெரிய கோவில் இருக்கிறது. பாவநாசத்திலுள்ள சிவபெருமான் *முக்களா லிங்கர்* எனப் பெயர் பெறுவர்; முக்களா மரத்தின் அடியில் தோன்றிய காரணத்தினால் அப்பெருமான் பேரருளாலும், அகத்தியனார் திருவருளாலும் விக்கிரமசிங்கபுரத்திற் பிறந்த முக்களாலிங்கர் எனப்பெயரிடப் பெற்று, சைவ சமைய முதல் நூலாகிய சிவஞான போதத்துக்கு, மாபாடியம் என்னும் பேருரை வகுத்தருளித் திருவாவடுதுறை ஆதீனத்தின் குலதெய்வமாக விளங்குகின்றார் சிவஞான முனிவர் பெருமான். இவருக்கு இவர் பிறந்து வளர்ந்து விளையாடிய வீட்டின் முற்றத்திலே ஒரு திருக்கோயில் உள்ளது. இவருக்குச் சித்திரை மாதந்தோறும் இவர் இறைவனடி சேர்ந்த ஆயிலிய நாளில் திருவிழா நடைபெற்று வருகின்றது. ஆடி அமாவாசை தோறும் தமிழ்ப்பெருமக்கள் பொதிகை மலை சென்று, வானதீர்த்தத்தில் நீராடி, பழைய பாவநாசத்தில் அகத்தியனாரையும் வழிபட்டுப் பெருவிழாக் கொண்டாடி வருகின்றனர்.

சிவபெருமானுடைய திருமணவிழா பாவநாசத்திலும், நெல்லை மாவட்டத்திலுள்ள திருநெல்வேலி, அம்பாசமுத்திரம் முதலிய பேரூர்களிலும் நடை பெறுகின்றது. தண் பொருந்தம் என்ற பெயரே தாமிரவருணி என மருவி வழங்குவதாயிற்று. தண்-குளிர்ச்சி. குளிர்ச்சி பொருந்திய நீரையுடைய ஆறு. தண் பொருந்தம் தாமிர வருணி என்ற

பெயர் வந்தபின், இவ்வாற்று நீரில் தாமிரம் இருப்பதாக அறிஞர் பலர் கூறுவாராயினர். இப்பேராறு அம்பாசமுத்திரம், திருநெல்வேலி, திருவைகுந்தம், ஆழ்வார் திருநகரி முதலிய பேரூர்களின் வழியே ஓடி, ஆற்றூருக்கு அருகில் கடலில் கலக்கிறது. அந்த இடத்திலேதான் பாண்டியர்களுடைய இளவரசர்களுக்குத் தலைநகரமாக விளங்கிய கொற்கை மாநகரம் அழிந்து இன்று சிறு ஊராகக் காட்சியளிக்கின்றது. கொற்கைப் பாண்டியன் அமைத்த கற்புத் தெய்வம் கண்ணகி திருக்கோவில் கொற்கையில் இருக்கிறது.

இராவணேசுவரன் கைலாய மலையின் கீழ் அகப்பட்டுத் தன் தலையொன்றையும் வீணையாக அமைத்துச் சிவபெருமானுடைய பெருமைகளை ஓதும் சாம வேதப் பாடல்களைப் பாடி, அப்பெருமானைப் புகழ்ந்து மகிழ்வித்துத் திருவருள் பெற்று உய்ந்த வரலாறு முன்னர் கூறினோம்.

இராவணன் மிகப் புகழ்பெற்ற இசைப் புலவனும் ஆவான். அவன் ஒரு சமயம் பொதிகை மலைக்கு வந்து அகத்தியனாரோடு இசை பாடிப் போட்டி போட்டான். இசைத் தமிழிலும் வல்லவராகிய முனிவர் பெருமான் இராவணன் கையிலிருந்த வீணையை வாங்கி இன்னிசை பாடினார். அதனைக் கேட்டு மெய்மறந்து நின்றான் இராவணன். இசை ஒலி கேட்ட பறவைகளும், விலங்குகளும் மரஞ்செடி கொடிகளும் கூடத் தம்மை மறந்து இசையில் ஈடுபட்டு அசையாது நின்றன. அப்போது பொதிகை மலையும் உருகிவிட்டது . முனிவர் பெருமான் அந்த வீணையை உருகிநின்ற பாறையினுள்ளே புகுத்தி அவனை நோக்கி, இசைபாடிப் பாறையை யுருகச் செய்து அவ்வீணையை எடுத்துக்கொள்ளுமாறு கட்டளையிட்டார். இராவணேசுவரன் மிகுந்த அச்சத்தோடு அவருடைய திருவடிகளிலே விழுந்து கும்பிட்டுத் தன்னுடைய சிறுமையை மன்னித்தருளுமாறு வேண்டி நின்றான். அகத்தீசுவரர் மீண்டும் தம் வீணையை மீட்டிப்பாடி அதனால் இளகி நின்ற மலையிலிருந்து இராவணனுடைய வீணையை எடுத்துத் தந்து அவனை வாழ்த்தியருளினார். இராவணன் அவருடைய திருவடிகளில் பலமுறை விழுந்து விழுந்து கும்பிட்டுத் தப்பினோம், பிழைத்தோம் என்று இலங்கை சென்றடைந்தான்.

இசைப் பெரு வேந்தருமாகிய அகத்திய முனிவர் பெரிய சித்தர் என்றும் கூறினோம். அவர் ஞான பண்டிதனார் முருகப் பெருமானுடைய திருவருளால் வைத்திய நுல்கள் பல பாடியருளியிருக்கின்றார்.

# 28. எழுத்தும் சொல்லும்

தமிழ் தெய்வமொழி, இயற்கை மொழி, உலக முதன் மொழி அதன் ஒலி இலக்கணமும், எழுத்திலக்கணமும் ஒப்பற்றவை. தொல்காப்பியமே இப்போதுள்ள மிகப் பழைய தமிழ் நூல். அதில் கூறப்பெறும் ஒலி இலக்கணம் போல் வேறு எம்மொழியிலும் இல்லை. எந்த ஒலியையும் தொல்காப்பிய ஒலி அமைப்பின் வண்ணம் ஒலித்துக் காட்டலாம். ஒலிகளுக்கு ஏற்ற எழுத்தமைவு மிகப்பெரிய முனிவரால் அமைக்கப்பெற்றது.

தொல்காப்பியர் 'எழுத்து எனப்படுவ' என்று கூறுகிறார். அதற்குச் சிவஞான மாமுனிவர் எழுத்து என்று ஒழியாது எனப்படுவ என்ப என்றார். 'இது முதல் நூல் ஆசிரியனால் விதிக்கப்பட்டுத் தொன்று தொட்டு வரும் குறி என்பது அறிவித்தற்கு' என்று பொருள் ஓதினார்.

பல்லவர்களால் கல்வெட்டுக்கள் எட்டுமுதல் பதினோராம் நூற்றாண்டுவரை கல்லிற் பொறிக்கப்பட்டன. அவை வட்டெழுத்துகள் எனப் பெறுவன. இவை முதலில் பெரும்பகுதி கிரந்த (சமஸ்கிருத) எழுத்துகளினாலும், பல்லவ மன்னர்கள் தமிழ் எழுத்துக்களை கற்கத் தொடங்கிய பின்னர் தமிழ் எழுத்துக் கலப்பிலும், அதன் பின்னர், பெரும் பகுதி தமிழ் எழுத்துகளிலும் எழுதப்பட்டுள்ளன. இவ்வுண்மையை அறியாதார், 'வட்டெழுத்துகளே நாளடைவில் தமிழ் எழுத்துகளாக அமைந்தன' என எண்ணுகின்றனர். இது மிகப்பெருந் தவறு.

தொல்காப்பியம் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே முதல் நூலாசிரியானால் விதிக்கப்பெற்ற எழுத்து களினாலே தொல்காப்பியம் ஏடுகளில் எழுதப்பெற்றது. அவற்றாலேயே சங்க நூல்களும் திருக்குறளும், சிலப்பதிகாரமும் எழுதப்பெற்றன. அந்நூல்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் வந்தனவே பல்லவர் வட்டெழுத்துகள். பல்லவர் காலத்திலே தோன்றிய தேவாரம் முதலிய எல்லா நூல்களும் வட்டெழுத்துகளால் எழுதப் பெறாமல், பண்டைத் தமிழ் எழுத்துகளாலேயே எழுதப் பெற்றன. சோழ மன்னர் காலத்திலே தோன்றிய பெரியபுராணம், கந்தபுராணம், கம்ப இராமாயணம் யாவும் தமிழ் எழுத்துகளாலேயே எழுதப் பெற்றன. எழுத்தின் உருவம் கூறவந்த நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவரும்...

'தொல்லை வடிவின் எல்லா எழுத்தும்'

என்று கூறுகின்றார். (தொல்லை-பழைய) பின்னர் எழுந்த நளவெண்பா, நைடதம் முதலிய எல்லா நூல்களும் இன்றுவரை அதே எழுத்துகளாலேதான் ஏடுகளிலும், தாள்களிலும் எழுதப்படுகின்றன.

மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையில்
எகர ஒகரத்து இயற்கையும் அற்றே'

(தொல்காப்பியம்)

'எய்தும் எகரஒகரம் மெய்ப்புள்ளி' (நன்னூல்)

மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி வைப்பது போல எகரத்துக்கும் ஒகரத்துக்கும் அக்காலத்தில் புள்ளிவைத்து எழுதினர். எ,ஏ,ஒ,ஓ, என ஏடுகளில் எழுதும் போது தொல்லையாக இருந்தமையால் புள்ளிவைத்தல் கைவிடப்பட்டு 'எ' குறில் 'ஏ' நெடில் 'ஒ' குறில் 'ஓ' நெடில் என உருவம் வழங்குவதாயிற்று. 'இ' என்ற உருவம் 'ஈ' என இன்று முறை மாறி வழங்குவதாயிற்று. ஏடுகளில் இருந்த எழுத்துகளை 1739 ல் தரங்கம்பாடியின் வீரமாமுனிவர் முதன் முதலாக அச்சு வடிவில் ஆக்கி அச்சிட்டு உதவினார். அம்முறையே பின்வந்த ஆறுமுக நாவலர் முதலிய பெரியோர்களாலும் பின்பற்றப்பட்டது.

உலக மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி தமிழ். சமஸ்கிருதத்திற்கும் தாய்மொழி தமிழே என்று சில ஆராய்ச்சி அறிஞர் கூறுவர். பல சொற்கள் தமிழிலிருந்து சமஸ்கிருதத்துக்குச் சென்றிருக்கின்றன. அவை வட சொற்போல காணப்பட்டாலும் உண்மையில் தமிழ்ச் சொற்களே. இதனையே முதல் உரையாசிரியராகிய இளம்பூரணர் 'வடசொல்லோடு ஒக்கும் தமிழ்ச்சொல்' என்று கூறுகிறார். தொல்காப்பியம் சூத்திரம் 401 வருமாறு.

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.
(கிளவி-சொல்; ஒரீஇ- நீங்கி)

இன்னின்ன வடவெழுத்தை இன்னின்ன தமிழ் எழுத்தால் எழுதவேண்டும் என்று சூத்திரம் அமைத்தார் நன்னூல் ஆசிரியர் பவணந்தியார்.

தமிழ் மொழியும் வடமொழியும் தமிழ் மக்களுக்கு இரு கண் போன்றவை. வடமொழி எழுத்துகளாகிய கிரந்த எழுத்துகளை அமைத்தவர்கள் தமிழ் முன்னோர்களே! தமிழே பேசித் தமிழாலே வாழும் சிலர், அறிஞர்களாக இருந்தும், எக்காரணத்தாலோ வடமொழியே தம்மொழியென்று எண்ணித் தமிழோடு வடசொற்களை மிகுதியாகக் கலந்து, கிரந்த எழுத்துகளையும் புகுத்தி எழுதித் தமிழை உருக்குலையச் செய்தனர்.

இம் முயற்சியின் விளைவாகவே ....

* தமிழ்நாட்டின் வடபகுதியில் வழங்கும் மொழி தெலுங்கு என்றும்,
* வடமேற்குப் பகுதி மொழி கன்னடம் என்றும்,
* மேற்குப் பகுதிமொழி மலையாளம் என்றும்

பிரிந்து நாட்டில் மொழிப் பகைமை யுணர்ச்சியும் தலையெடுப்ப

தாயிற்று. இதன் விளைவாக வேறு சில தமிழ் அறிஞர்கள். வட மொழியைப் புறமொழி என்று பகை கொள்கின்றனர். எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் உள்ள தெலுங்கு, கன்னட இலக்கியங்களை ஆராய்பவர் அவை, தனித் தமிழே என்ற பேருண்மையை அறிவர்.

தமிழை உருக்குலைக்கும் கருத்துடைய செல்வாக்கினர் சிலர் நாற்பது ஆண்டுகளுக்கு முன் பாடநூற் கழகத்தில் (Text Book) இடம் பெற்றுத் தம் செல்வாக்கினால் 'க்ஷ, ஷ, ஸ, ஜ, ஹ, ஸ்ரீ என்ற எழுத்துக்களைச் சேர்த்துப் பாடங்களும் எழுதி அச்சிட்டால் மட்டும் அவற்றைப் பாடப் புத்தகங்களாக ஏற்போம் என்று மறைமுகமாக விதி அமைத்து வற்புறுத்தி வந்தனர். கலப்பில்லாத தமிழ் எழுத்துகளால் எழுதப்பெற்ற நூல்கள் புறக்கணிக்கப்பட்டன.

மேலே கண்ட ஆறு எழுத்துகளும் தனித்தனி ஒலியையுடைய எழுத்துகள் அல்ல. இவற்றை ஒலித்துப் பார்த்தால் பல கூட்டு ஒலிகள் காணப்படுகின்றன. முதலாவதாக க்ஷ என்ற எழுத்து எடுத்துக் கொள்வோம். இதில் க்+ட்+ச ஆகிய மூன்று எழுத்துகள் காணப்பெறுகின்றன. கண்கொண்டு க்ஷ என்ற எழுத்தின் வடிவத்தைப் பார்ப்பவர் யாவரும் இவ்வுண்மையை எளிதில் அறிவர். மேலே கண்ட க் + ட்+ ச என்ற மூன்றில் பின்னிரண்டும் சேர்ந்த வரிவடிவமே ஷ என்பது. ஃ ச இரண்டும் சேர்ந்த ஒலியே ஸ என்பது வ ஃ அ என்னும் மூன்றும் சேர்ந்த உருவமே ஹ என்பது. ச் ச இரண்டும் சேர்ந்தது ஜ என்பது. ஃ ச் ரீ என்ற மூன்றும் சேர்ந்ததே ஸ்ரீ என்பது. ஆதலின் மேலே கண்ட கூட்டெழுத்துகளைத் தனித்தனியாகப் பிரித்து எழுதுவதுதான் முறை.

**ஐ, ஔ** என்ற எழுத்துகளை எடுத்துவிடலாம் என எண்ணுகின்றனர் சிலர். இது தவறு. **ஐ, ஔ** என்ற **அய், அவ்** என்னும் கூட்டொலி போல இருந்தாலும், **ஐ என்பது அரசன், அழகு, கடுகு, கடவுள், இருமல்** முதலிய இருபதுக்கு மேற்பட்ட பொருள்களையுடைய ஓரெழுத்து ஒரு மொழியாகப் பண்டைய நூல்களில் வழங்கப் பெற்றிருப்பதோடு இரண்டாம் வேற்றுமை உருபாகவும், இடைச் சொல்லாகவும், சாரியையாகவும், முன்னிலை ஒருமை வினை விகுதியாகவும், தொழிற் பெயர் விகுதியாகவும் இன்னம் பல திறப்பட வழங்கப் பெற்றுள்ளது. **ஔ என்பதும் கடித்தல், பூமி** முதலிய பொருள்களையுடைய ஓரெழுத்து ஒரு மொழியாகும். எழுத்துப் போலியைப்

பற்றிக் கூறும்போது தொல்காப்பியனார்,

**'அகரம் இகரம் ஐகாரம் ஆகும்'** எனவும்,
**'அகர உகரம் ஔகாரம் ஆகும்'** எனவும்,

சூத்திரம் வகுத்தார். இவற்றுக்கு உதாரணமாக உரையாசிரியர் நச்சினார்க்கினியர் 'ஐவனம்' என்பதை 'அஇவனம்' எனவும், 'ஔவை' என்பதை அவ்வை எனவும் எழுதலாம் எனக் கூறுவது பொருந்தாது என்று எழுதுகிறார். இவ்வாறு ஓரெழுத்தைப் போல மற்றோர் எழுத்து வரும் போலி, நிலைமொழி முதலிலேயே ஆகும்.

மேலும் பனை என்பதை 'பனய்' என்று எழுதினால் பனை என்பது போல உச்சரித்துக் காட்டுவது இயலாது. 'னை' என்பது நெடிலாக இருந்தாலும் சொல்லின் ஈற்றில் வரும்போது குறில் போல ஒரு மாத்திரையளவே ஒலிக்கும்.

# 29. எண்பெருஞ் சித்திகள்

இறைவனுடைய திருவடிக்கு மெய்யன்பு பூண்டொழுகும் பெரியார்பால் பல செயற்கருஞ் செயல்கள் நிகழ்கின்றன. அவர்கள் இறைவனருளால் விண்ணிற் பறப்பார்கள், கனல் மேல் இருப்பார்கள், நீர் மேல் நடப்பார்கள், கரடி வெம்புலி வாயையும் கட்டுவார்கள். மாண்டவர்களையும் மீண்டுவரச் செய்வார்கள் என்றால் அவர்களுக்கு அருமையான தொன்றுண்டோ சிவனெறி செல்வராகிய நம் தாயுமான அடிகள்,

"கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்
கரடி வெம் புலிவாயையும்
கட்டலாம் ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
கட்செவி எடுத்தாட்டலாம்

வெந்தழலின் இரதம்வைத்து ஐந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத் துலாவலாம்
விண்ணவரை ஏவல் கொளலாம்
சந்ததமும் இளமையோ டிருக்கலாம் மற்றொரு
சரீரத்தினும் புகுதலாம்
சலமேல் நடக்கலாம் கனல்மேல் இருக்கலாம்
தன்னிகரில் சித்தி பெறலாம்"

என்று திருவாய் மலர்ந்தருளினார். இந்த அருமைத் திருவாக்கில் காணும் பெருஞ்செயல்களும், இவை போல்வனவும் எண்பெருஞ் சித்திகளுள் அடங்கும். சித்திகளாவன:

1. அணிமா
2. மகிமா
3. இலகிமா
4. கரிமா
5. பிராப்தி
6. பிராகாமியம்,
7. வசித்துவம்,
8. ஈசத்துவம்

என்பன.

1. அணிமா(அணுமா): அணு என்ற அடியாகப் பிறந்தது. அணிமாவாவது அணுவாகும் தன்மை. அணுவைக் காட்டிலும் நுண்ணிய பொருள்களை ஆராய்வதற்கு இது உதவியாகும். தன்னை மிக நுணுகிய உருவாக்கி வேறொருவர் காணாமல் உலகத் துலாவுதற்குச் செய்யும் சித்தி இதுவே. தன் உயிரும் உடலும் அணுவிலும் குறுகவே அணுக்களெல்லாம் பெரிய உருவொடு நன்கு புலனாம். ஒருகால் விண்ணவர் பலரும் கயிலையை அடைந்து சிவபெருமானைக் காணத் தேடினர். அவர்கள் தங்கள் முன்னாலே அப்பரம்பொருள் நின்றிருந்தும் காணாமல் திகைத்தனர். இங்ஙனம் இறைவன் அவர்களுக்கு முன்னர்

இருந்தும் கட்புலனாகா திருந்தது அணுமாவாம். இதுபற்றியே மாணிக்கவாசகனார்,

அணு அணுவில் இறந்தாய் என்று அங்கு
எண்ணந்தான் தடுமாறும்
இமையோர் கூட்டம்
எய்துமாறு அறியாத எந்தாய்!

என்று அருளியதும், இது கருதியே! பிறரும் இறைவனுடைய தன்மையைச் சுட்டுமிடத்து,

அண்டங்க ளெல்லாம் அணுக்களாக அணுக்களெல்லாம்
அண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினானும்' என்றனர்.

இதனையே மணிமொழித் தேவர் பிறிதோரிடத்து,

சித்தர் திறத்திற் காண்டும் என்பவர்க்கு
அத்தர் திரத்தில் அவ்வயின் ஒளித்தும்' என்றருளினார்.

முன்னொருகால் நம் அகத்திய முனிவர், தேவர்கோமகன் வேண்டுதலுக்கு இணங்கிக் கடலை உழுந்தளவாக்கி உண்டருளினார் என்ற செய்தி உலகறிந்த தன்றோ? இதுவும் அணிமா என்ற சித்திக்குத் தக்க சான்று பகருவதாகும். இனி, மகிமா என்ற சித்தியை ஆராய்வாம்.

2. மகிமா: மா என்ற சொல்லே மகிமை என்று திரிந்தது அஃதாவது பெரிய உருவாதல். மகிமையாகும் தன்மை மகிமா.

அணுக்களெல்லாம் அண்டங்களாக விரியுமாறு காண்பது மகிமாவாம். அஃதாவது தன்னுருவை மிகப் பெரிதாக விரித்து ஏனைய உருவங்களெல்லாம் தன்னைக்காட்டிலும் சிறியனவாகத் தோன்றுமாறு நிற்றல். இதனால் உலகடங்கலும் தன் உடலாம் படி விரிந்து அதனைத் தன்வழி நடத்துதலும் இயலும். அருட் கடலாகிய முருகக் கடவுள் சூரனை வெல்லுமாறு படையெடுத்துச் சென்றபோது, சூரன் தம்பி

சிங்கமுகன் என்பான் ஆயிரம் தலைகளோடு அண்ட முகட்டை அளாவி வளர்ந்து பூதக் கூட்டங்களை விழுங்கப் புகுந்தது இம்மகிமா என்ற சித்தியாலேயே. அவனை வேலால் வென்ற முருகக் கடவுள் அவனுக்கு முன் பிறந்தானாகிய சூரபதுமனை வெல்லப் புகுந்தபோது அவர் ஆற்றல் கண்டு அஞ்சிய வெஞ்சூரனும் கடல் நடுவண் ஓடி மாமரமாகித் தலைகீழாக மேலும் கீழும், ஓங்கி அண்டங்களெல்லாம் கலங்கிடுமாறு கொண்ட கோலமும் அவன் வெருக்கொள்ளும்படி அப்போது அப்பிரான் காட்டிய பேருருக் காட்சியும் இம்மகிமாவை விளக்கும் வழியில் தக்க சான்றுகளாம். ஒவ்வோருயிரும் முதலிற் காட்டிய அணிமாவையும் இம் மகிமாவையும் இயல்பிற் கொண்டுள்ளனவே. எவ்வாறெனின், கரு உருவடையும்போது மிகச் சிறிதாயிருந்து பெரிதாகிப் பிறந்து, வளர்ந்து, இவ்வரிய உருவடைவது மகிமாவாம்: பின்னர் உயிர் உடலைவிட்டுப் பிரியும்போது அணுவுருவாவது அணிமாவாம் இனி இலகிமாவை ஆராய்வோம்.

3. இலகிமா: இலகு என்பது கனம் இன்மை; இலகுவாக்குவது இலகுமா; அஃது இலகிமா என்று திரிந்தது.

தன் உடலிலும் பிறபொருள்களிலும் உள்ள கீழுழுத்தும் வலியை அவ்வாறு செய்யாதபடி கெடுப்பதே இலகிமாவாம் (இலகு ஆக்குவது) மேல்நோக்கும் வலிமை மிகுவிப்பதும் இச் சித்தியே. சைவ சமய குரவராகிய திருநாவுக்கரசு அடிகள் தம்மைப் பல்லவ மன்னன் கற்றூணினிடைக் கட்டிக் கடலிற் பாய்ச்சியபோது இறைவனருளால் ஐந்தெழுத்து ஓதி அக்கற்றூணை மிதக்கும்படிச் செய்து கரையேறியது இச்சித்தியே. நீர் மேல் நடத்தற்கும், விண்ணில் உலாவுதற்கும் இச்சித்தி கைவருதல் வேண்டும்.

4. கரிமா: கரு என்பது கனம்; உடையதாக்கும் தன்மை கருமை; அது கரிமாவெனத் திரிந்து நின்றது.

கடுகை மலையளவு கனமுடையதாகக் காட்டும் சித்தியே கரிமாவாம். இது கீழுழுத்தும் வலியை மிகுவித்தலே. திருநல்லூரிலே அமர்நீதி நாயனார் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர்

அடியார்களுக்கு உணவும் கோவணமும் தரும் பெருமை உடையவர். அவருடைய அன்பினை உலகினருக்கு காட்டியருளத் திருவுளங்கொண்டு சிவபெருமான் அவர் முன் தோன்றி ஒரு கோவணத்தைத் தந்து அதனை மறையுமாறு செய்து, பின், அவரிடத்து வந்து தாம் தந்த கோவணத்தைத் தரும்படி கேட்டார். அடியவரோ அதனைக் காணாது திகைக்க, தாம் அவரிடத்துத் தந்தருளிய கோவணம் போன்ற வேறொன்றை ஒரு தராசிலிட்டு அதற்கு ஒத்த நிறைவுள்ள கோவணம் தருமாறு ஆணையிட்டார். அமர்நீதியாரோ மற்றைத் தட்டில் தம்மிடமுள்ள கணக்கிறந்த கோவணங்களையும், பட்டாடைகளையும், மணியையும், பொன்னையும் வைத்தும் கோவணத் தட்டோடும் ஒத்தநிலை யுறாதது கண்டு, தாமும் தம்முடைய மனைவியாரும் மகனாரும் அத்தட்டிலே ஏறி நின்றனர். அப்போது சிவனருளால் இரு தட்டும் ஒத்தநிலையுற்றன. இங்ஙனம் சிவனார் ஒரு சிறு கோவணத்தெடை மேருவினும் பெரும்பாரம் வரும்படிச்செய்த சித்தி இக்கரிமாவாம். இனி, பிராப்தியை ஆராய்வோம்.

5. **பிராப்தி:** பெறுதி என்பது பொறுத்தி, அஃதாவது பெறும் தன்மை; இது பிராப்தி என மருவி நின்றது.

தாம் நினைத்த எப்பொருளையும் நினைத்தபொழுதே பெறுவது பிராப்தியாம். எம்பெருமானாலேயே 'அம்மே வருக!' என வரவேற்கப்பெற்ற காரைக்காலம்மையார் தம் கணவனார் தந்த இரு மாம்பழங்களில் ஒன்றை அடியார் ஒருவருக்கு அளித்தனராக, மற்றொன்றைத் தம் கணவனார் உண்ணும்போது அவர்க்கிட்டார். அதன் சுவைகண்ட அக்கணவனார் மற்றொன்றையும் உண்ணக் கருதி அதனை அடியார் ஒருவர் உண்டுபோனதை அறியாதவராகையால் தம் மனைவியாரை நோக்கி 'மற்றொன்றையும் கொணர்க! என்றார். அவ்வம்மையாரோ கணவர் ஆணையைக் கடத்தற்கஞ்சி உட்சென்று 'எம்பெருமானே, என் செய்வேன்? என்று வேண்டி நின்ற வேளையிலே இறைவனருளால் ஒரு தெய்வமாங்கனி அவர் கரத்து வந்திருந்தது. அதனைக் கணவனார் கைக் கொடுப்ப அவர் அதை உண்டு அதன் தெய்வச் சுவை கண்டு ஐயுற்று இது நான் தந்ததன்றே, இதன் வரலாறு என்ன? எனக் கேட்ப, அம்மையார் தாம் அடியார்க்கிட்டதும்,

இப்பொழுது இறைவனருளால் அம்மாங்கனி கிடைத்ததும் கூறினார். ஆனால் கணவனாரோ அதனை நம்பாமல், 'இஃது உனக்கு இறைவனருளாற் கிடைத்ததாயின், இன்னும் ஒரு கனி அவருடைய திருவருளினாலே வரவழைத்துத் தா!' என்றார். அவ்வம்மையார் மீண்டும் உட்சென்று சிவபெருமானை நினைந்து 'இன்னும் ஒரு கனி ஈந்தருளீ ராகில் அடியேனுடைய சொல் பொய்யாய் விடும்' என்று தெரிவித்து நின்ற அளவிலே சிவனார் அருளால் ஒரு மாங்கனி அவர்கையில் வந்திருந்தது. அதனைக் கணவனார் கையிற் கொடுப்ப, அவர் ஆச்சிரியத்தோடும் அதைப் பெற்று உற்று நோக்குமளவில் அது திடீரென்று மறைந்தது. இங்ஙனம் காரைக்காலம்மையார் தெய்வ மாம்பழத்தை இறைவனருளால் இருமுறை பெற்றது பிராப்தியாம்.

மதுரையில் சோமசுந்தர பாண்டியனார் தமது மாமியாருக்காக ஏழுகடல் அழைத்ததும், இறந்துபோன மலையத்துவசனை அழைத்ததும், இதே சித்தியாம். கைலைமலை காணச் சென்ற திருநாவுக்கரசு நாயனார் இறைவனருளால் அக்காட்சியைத் திருவையாற்றிற் கண்டு மகிழ்ந்தமை இப் பிராப்தியின் பயனே. இனி, பிராகாமியத்தை ஆராய்வோம்.

6. **பிராகாமியம்:** காமம் என்பது விருப்பம்; காமியம் என்பது விரும்பிய பொருள். பெறுகாமியம் என்பது விரும்பி பொருளைப் பெறுவது; பெறுகாமியம் என்பதே பிராகாமியம் எனத் திரிக்கப்பட்டது. தான் விரும்பிய எத்தொழிலையும் இடையூறின்றி முடித்தலே பிராகாமியமாம். பலவகைப்பட்ட சித்திவேறுபாடுகளும் இதனுள் அடங்கும். நாம் முன்னர் ஆராய்ந்த காரைக்காலம்மையார் தாம் விரும்பியபடி உடலிலுள்ள தசை முதலியவற்றை உதறியெறிந்து எலும்புருப் பெற்றுத் தலையாலே நடந்து கைலையடைந்தமை பிராகாமியமே. பெருமிழலைக் குறும்ப நாயனார் என்ற பெரியார் சுந்தரமூர்த்தி நாயனாருடைய திருவடிகளை வணங்குதலே பரமசிவனுடைய திருவடிகளை அடைவதற்குரிய நெறி என்று கண்டு அவ்வாறு ஒழுகுதலினாலே எண்பெருஞ் சித்திகளையும் அடைந்தார். அதன்பயனாக, சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கைலாயத்தை வெள்ளை யானை மீது ஏறி அடைவதற்கு முந்தின நாளிலே அவ்வாறு அவர் அடையப்போவதைத்தம் ஊரிலிருந்தே உணர்ந்து 'சுந்தரர் நாளைக்குக்

கைலை போதலினாலே இன்றைக்கு யோகத்தினாலே சிவபெருமானுடைய திருவடிகளை அடைவேன்; அவரைப் பிரிந்த பின் இம்மண்ணுலகில் வாழேன்' என்று விரும்பி அங்ஙனமே உடலினின்றும் பிரிந்து இறைவன் பொன்னடிக் கமலங்களில் சென்று பொருந்தினார். இச்செய்கையும் பிராகாமியத்தின் பயனேயாம். முருகக் கடவுளோடு போர் தொடங்கிய சூரபதுமன் காட்டிய பல்கூறானவிந்தைச் செயல்களெல்லாம் இப்பிராகாமியத்திலேயே அடங்குவன. இனி வசித்துவத்தை ஆராய்வோம்.

7. **வசித்துவம்:** வசம் என்பது கீழ்ப்படிதல்; வசத்துவம் என்பது கீழ்ப்படியும்படி செய்தல். வசியம்- கைவசப்படுத்தல். இதுவே வசித்துவம் எனக் குறிக்கப்பட்டது.

பிறர் உள்ளத்தைத் தன் உள்ளத்தாற் கட்டிக் கவர்ந்து அவர்களைத் தன் எண்ணப்படி நடத்துதலே வசித்துவமாம். நம்பியாரூரரோடும் திருவெண்ணெய் நல்லூர் சென்ற பித்தனார் தம்மை அவ்வூராரெனவும், நம்பியாரூரருடைய பேரனால் தமக்கு வழித் தொண்டு செய்தற்கு ஆளோலை தந்தார் என்றும் பலபேசி அவர்களுக்கிருந்த இயற்கை உணர்வைத் தம் உள்ளவலியாற் கவர்ந்து அவர்கள் யாவரும் தம் மனம்போல் முடிவு செய்யும்படி செய்தருளிய விந்தை இவ்வசித்துவமே. சிதம்பரத்திலே வாதாடிய புத்தரை நம் மணிவாசகனார் மூங்கைகளாக்கி வென்று அருள் செய்த திருவிளையாடலும் இவ்வசித்துவமேயாம்.

8. **ஈசத்துவம்:** ஈசன் கடவுள், ஈசத்தன்மை- கடவுள் தன்மை; ஈசத் தன்மை அடைவது ஈசத்துவம்.

கடவுள் தன்மை பெற்று ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐம்பெருஞ் செயல்களைப் புரிதலே ஈசத்துவமாம். எம்பெருமான் எவ்வாறு உயிர்களை உடலிற் புகுத்தி, அவரவர் இருவினையை அவரவர்க்கு ஊட்டி , வினைநீக்கி அடியவராக்கி, அவற்றை முத்திக் கரையிற் சேர்ப்பானோ, அவ்வாறே அவனருள் பெற்ற சிவயோகிகளும் அவனுக்குரிய ஐந்தொழிலையும் அவனருளால் இயற்றவல்லவராவர். மூன்றாண்டிலே ஞானப்பாலுண்டு

அருள்பெற்ற பெரியாராகிய திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருமயிலாப்பூரிலே பூம்பாவை என்ற பெண்ணாரணங்கின் எலும்புக்கு மீட்டும் உயிர் கொடுத்தருளினாரன்றோ? அவ்வாறு உயிர் கொடுத்ததோடு நில்லாமல் அவர் சிவபெருமான் திருவருளால் அப்பெண்ணைச் சின்னாளளவும் அவ்வுடலோடு வாழச் செய்தனரல்லவா? இத்திருச் செயல்களே ஆக்கலும், அளித்தலும் ஆம். மற்றுமோர்கால் அப்பிரானார் எழுந்தருளி வரும்போது அவரது விருதுகளையும் சின்னங்களையும் தடுத்த புத்தன் தலையில் இடியேற்றிக் கெடுத்த அவர் திருவிளையாடலே அழித்தலாம். தம்பிரான் தோழராகிய சுந்தரனார் முதலையுண்ட பாலனை அழைத்து அவன் நெடுநாள் உலகில் வாழும்படிச் செய்த திருவிளையாடலும் படைத்தலுக்கும் காத்தலுக்கும் போதிய சான்றாம்.

இனி, மறைத்தலாவது ஞானத்தை மறக்கும்படிச் செய்து இருவினைப் பயனை நுகர்விப்பது. நம் மணிமொழித் தேவர் திருப்பெருந்துறையை நண்ணி அருட்கடலாகிய ஐயன் திருவருள் நாடி, கோயிலை வலம்வரும்போது குருந்த மரத்தடியிலே சிவனார் தமது அடியாரோடும் ஞானாசிரியராக எழுந்தருளியிருந்து அவருக்கு அருள்மொழிகாட்டி ஆட்கொண்டு 'மாணிக்கவாசகர்' என்று திருவாய் மலர்ந்தருளினாரன்றோ? அப்போது மணிமொழிப் பிரானார் இறைவனிடத்து ஈடுபட்டு அன்புமயமாகித் தானென்றும் இறைவனென்றும் வேறுபாடு உணராது வீட்டின்ப நுகர்ச்சியில் திளைத்தனராக, கறைமிடற்றண்ணல் அந்நுகர்ச்சியினின்றும் நீக்கி அவரைத் தக்க காலம் வருமளவும் இருவினைப்பயன் அடையுமாறு உலகத்திற் புகுத்தினரன்றோ? இதுவே மறைத்தலாம். அருளலாவது பாசத்தில் அகப்பட்டு இடருற்று இறைவன் அருளை நாடி நிற்கும் உயிர்களை அவனடியின்பம் பெறச் செய்தலே. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தமது திருமணம் காணவந்த அனைவரையும் திருப்பெருமணமாகிய கோவிலிலே தோன்றிய ஒளியினுள்ளே செலுத்தி அவர்களனைவரும் வீட்டின்பம் பெறும்படி அருள்செய்த திருவிளையாடலே அருளலாம்.

மேலே ஆராய்ந்த எண்பெருஞ் சித்திகளும் இறைவன் அடிக்கு மெய்யன்பு செலுத்துகின்ற உண்மை அடியவர்கள்பால் தாமே

தோன்றித் திகழும்; அவ்வடியாரும் அவற்றை விரும்புபவர் அல்லர். ஆயின் அவர்கள் வருந்தும் ஏனைய உயிர்களிடத்துக் கொண்டுள்ள அருள் திறத்தாலே அவ்வப்போது அவ்வுயிர்களைக் காக்கும்படி இச்சித்திகள் பிறர்காண அவர்களிடம் விளையும். நாம் நம் செயலால் விளைவது ஒன்றும் இல்லை என்றும், எல்லாம் இறைவன் திருவருளே என்றும், திருவருளை நாடி அவன் அடிக்கு உண்மை செய்தலே அறிவுக்கு அடுப்பதாம் திரும் பணி என்றும், நன்கறிந்து அவன் அருள்பெற அவன் அடிமலரை நம் உள்ளத்தில் இடைவிடாது எண்ணி வாழுதல் வேண்டும்.

மேலே கூறிய அட்டமா சித்திகளைப் பற்றி, பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் அட்டமாசித்தி உபதேசித்த படலத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

அணிமா மகிமா இலகிமா
அரிய கரிமா பிராத்திமலப்
பிணிமா சுடையோர்க் கடைவரிய
பிராகாமி யமீசத் துவமெய்
துணிமா யோகர்க்கு எளிய
வசித்துவமென் றெட்டாம் இவைஉளக்கண்
மணிமா சறுத்தோன் விளையாட்டின்
வகையாம் அவற்றின் மரபுரைப்பாம். (22)

அறவும் சிறிய உயிர்தொறும்தான்
பரமகாட்டை அணுவாய்ச் சென்று
உறையும் சிறுமை **அணிமா**வாம்
உவரிஞாலமுதல் மேலென்று
அறையும் சிவாந்தம் ஆறாலும்
உள்ளும் புறனும் அகலாதே
நிறையும் பெருமை அதனையன்றோ
**மகிமா** என்னும் நிரம்பியநூல் (23)

இலகு மேரு பாரம்போல்
இருக்கும்சோதி தனை எடுத்தால்
இலகு வான பரஅணுப்போல்
இருப்பது **இலகிமா** வாகும்

இலகு வான பரஅணுப்போல்
இருக்கும் யோகிதனை எடுத்தால்
இலகு மேரு பாரமென
இருப்பது அன்றோ **கரிமா**வாம். (24)

பிலத்தில் இருந்தோன் அயன்உலகிற்
புகுதன் மீண்டும் பிலம் அடைதல்
பலத்தின் மிகுந்த **பிராத்தியதாம்**
பரகாயத்தின் நண்ணுதல் வான்
புலத்தின் இயங்கல் இச்சித்த
போகம் அனைத்தும் தானிருக்கும்
தலத்தின் நினைந்த படிவருதல்
**பிரகாமியமாம்** தவக் கொடியீர். (25)

விண்ணில் இரவி தன்னுடம்பின்
வெயிலால் அனைத்தும் விளக்குதல்போல்
மண்ணில் உளவாம் பொருள்பலவும்
காமம் மூன்றும் வானத்தின்
கண்ணில் உளவாம் பொருளும்தன்
காயத்து ஒளியால் இருந்து அறிதல்
எண்ணில் இதுவும் மறையொருசார்
**பிரகாமியம்** என்று இயம்பு மால்! (26)

ஈசன் எனமுத் தொழிலுந்தன்
இச்சை வழிசெய் தெழுபுரவித்
தேசன் முதற்கோள் பணிகேட்பத்
திகழ்வது ஈசத்துவ மாகும்
பூசல் உணர்புள் விலங்குகளும்
பூத மனிதர் முதல் உலகும்
வாசவாதி எண்மருந்தின்
வசமாக் கொள்கை **வசித்துவம்** ஆம்!
(27)

எம்மை உணர்ந்த யோகியர்கள்
இவற்றை விரும்பார் எனினும் அவர்
தம்மை நிழல்போல் அடைந்து உலகர்க்கு
அணையார் பெருமைதனை உணர்த்தும்

செம்மை உடைய இவைஎன்னச்
சித்தி எட்டும் தெளிவுஎய்த
அம்மை அடியார் அலுவலுக்கும்
கொளுத்தி னான்எண் குணச்செல்வன்! (28)

சிவபெருமானுடைய திருவடிகளையே சிந்திக்கும் சித்தர்கள் மேலேகண்ட எண் பெரும் சித்திகளை விரும்ப மாட்டார்கள்; என்றாலும் அவை அவர்களை விடாது சேர்ந்து அவர்களுடைய புகழை நிலைநாட்டும்.

## 30. அஷ்டாங்க யோகம்

பதஞ்சலி முனிவரும் புலிக்கால் முனிவரும், அகத்திய முனிவருடைய முறைகளை நன்றாகக் கற்றார்கள். சித்தத்தை அடக்கி ஆளும் எட்டுவகையான சித்திகளை உணர்த்தியமையால் அகத்தியர் முதற்சித்தர் எனப் புகழ்பெற்றார்.

சித்தர்கள் நன்கு பயின்று சித்தி பெறவேண்டிய *எண்வகைச் சித்திகள்* பின்வருமாறு:-

1. **இயமம்:** இயல் என்பது ஒழுங்கு; நடை ஒழுங்கு பயிலுதல் இயல்மம்; அது இயமம் என்று நின்றது.

2. **நியமம் :** நயம் என்பது நன்மை; நயமான வழிகளைக் கடைப்பிடித்தல் நியமம்.

3. **ஆசனம்:** ஆசரித்தல் இருக்கும் முறை.

4. **பிராணாயாமம்:** பிராணன் உயிர்மூச்சு அதனை அடக்கி ஒழுங்கு செய்தல்.

5. பிரத்தியாகாரம்
6. தாரணை
7. தியானம்
8. சமாதி

இவற்றை விளக்குவோம்.

1. ***இயமம் :*** இது பிறருக்குத் துன்பம் செய்யாமலும் நன்மையையே பேசியும் திருடாமலும், தன் மனைவியைத் தவிர மற்றைய பெண்களைத் தாயாகவும், உடன் பிறப்பாகவும் எண்ணுதல், பயனில்லாத பேச்சுகளைப் பேசாமலும் செய்யாமலும் விட்டுவிடுதல் ஆகிய இன்றியமையாது கைக்கொள்ளவேண்டிய இயமங்கள். இவை சித்த வைத்தியருக்குச் சித்தியாக வேண்டிய முதற்பொருள்.

2. ***நியமம் :*** புறத்தூய்மை, அகத் தூய்மை, போது மென்ற மனம், கல்வி, கடவுள் வணக்கம் ஆகியவைகளே நியமங்களாம். புறத் தூய்மை என்பது உடலைச் சுத்தமாக வைத்துக் கொள்வது. அது தண்ணீரில் முழுகுவதால் அமையும். அகத் தூய்மை வாய்மையால் விளையும். திருவள்ளுவர் இதைப் பற்றி,

புறந்தூய்மை நீரான் அமையும்; அகத் தூய்மை
வாய்மையாற் காணப்படும்

என்று கூறுகிறார். '*போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து*' என்பது பழமொழி

3. ***ஆசனம்:*** அசையாது அமர்ந்திருந்து உள்ளத்தை ஒருவழிப்படுத்தும் நிலை. இந்தச் சித்தியில் கைவந்தவனே எதையும் ஆழ்ந்து ஆராயும் தன்மையுடையவனாவான்.

4. ***பிராணாயாமம்:*** பிராணன் உயிர்க்கு நிலைக்களமான மூச்சு. அதனை அடக்கி ஒருவழிப்படுத்துவதே பிராணாயமம்.

5. ***பிரத்தியாகாரம்:*** ஐம்புலன்களையும் அடக்கி ஒருநிலைப்படுத்தி உள்ளம் வேறொன்றையும் எண்ணாதிருக்கும்படி செய்வது. இதனால்தான் நோயாளியினுடைய பிணியை இன்னதென்று திட்டமாக ஆராய்ந்தறிதல் முடியும்.

6. ***தாரணை:*** அதாவது ஒரே எண்ணம், மனத்தைத் தன்வசப்படுத்திக் குறித்த பொருள் ஒன்றினையே எண்ணும்படிச் செய்தல். இதனால், தான்ஆராயும் ஒரு நோயாளியைப் பற்றி, நிலையைப் பற்றியும் அறிந்திருத்தல் முடியும்.

7. ***தியானம்:*** குறித்த ஒரு பொருளைப்பற்றி இடைவிடாமல் சிந்திப்பது.

8. ***சமாதி:*** சமமான நிலையில் இருப்பதுவே சமாதி. நோயாளியின் நிலையில் தன்னை வைத்து, நோயாளியின் நிலையை ஆராய்தல். கடவுளைச் சேர்ந்து 'கடவுள் வேறு தான் வேறு' என்ற வேறுபாடில்லாமல் இருக்கும் நிலையே சமாதி.

***தாரணை, தியானம், சமாதி*** ஆகிய இம்மூன்று நிலைகளும் ஒரு பொருளைப்பற்றி விரைந்து ஒன்றன்பின் ஒன்றாக விளைந்து அந்த விரைவால் மூன்றும் ஒன்றாகவே தோன்றும் நிலை ஏற்படுமானால் அப்பொழுது அவன் மனம் அவனுக்கு வசமாயிற்று என்பது உறுதியாம். குழல் என்பது ஓர் இசைக்கருவி; அது எட்டுத் துளைகளையுடையது. அதில் இனிய இசையை எழுப்புவது இயலாததாக இருக்கும். குழல் பயிலும் மாணவன் விடாப்பிடியாகப் பயின்று இனிய இசையை எழுப்புகின்றான். அங்ஙனமே இந்த எட்டுவகைச் சித்திகளையும் பயின்று வெற்றிபெற்ற மருத்துவனே, மேலான சித்தனாகிறான். இவ்விதம் சித்தத்தை அது சென்ற இடங்களிலெல்லாம் செல்ல விடாமல் தடுத்து ஒருவழிப்படுத்தி சித்தியடைந்த ஒருவனேதான் சித்தத்தால் இயக்கப்படும் உடம்பையுடைய மக்களுக்கு வரும் நோயை அறிந்து தீர்க்க முடியும். இந்தச் சித்திகளில் கைதேர்ந்த சித்தர் பெருமான் அகத்திய முனிவர். அவர் ஒழுங்குபடுத்திய மருத்துவ முறையே சித்த மருத்துவம் எனப் பெயர் பெற்றது. இந்தச் சித்தியை...

* யோக சித்தி,
* ஞான சித்தி
* மந்திர சித்தி,
* வைத்திய சித்தி,
* சிவஞான சித்தி

என்பனவாக உயர்ந்தோர் பகுத்திருக்கின்றனர்.

# 31. ஐம்பூத இயக்கம்

அறிவினால் ஆராய்ந்து ஆராய்ந்து பார்த்தும் எவ்வித ஆராய்ச்சிக்கும் எட்டாது எங்கும் பரந்து நிற்பதே தெய்வம் என்று கூறினோம். அக்கடவுளிடம் ஊன்றி நிற்கும் - *ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல்* என்ற ஐந்தொழில்களினால் ...

* முதல் முதலாக விண் தோன்றிற்று. (விண்- ஆகாயம்)
* அதிலிருந்து வளி (வளி-காற்று) தோன்றிற்று.
* காற்றிலிருந்து தீயும்,
* தீயிலிருந்து நீரும்,
* நீரிலிருந்து மண்ணும்

முறையே தோன்றின. மண்ணுலகத்தில் உயிர் உள்ளன, உயிர் இல்லாதன ஆகிய எல்லாப் பொருள்களும் ஐம்பூதக்கூறு உள்ளனவாகித் தோன்றி விளங்குகின்றன. இவ்வைம்பூதங்களைப் பிரித்துப் பிரித்து ஆராய்ந்து கொண்டே போனால் அவ்வப் பொருள்களின் அணுக்களும் சிற்றணுக்களும் தோன்றும். இங்ஙனமாகிய ஐம்பூதங்களின் கூட்டுறவால் உண்டாயிருக்கின்ற பொருள்கள் உயிருள்ளன, உயிரில்லன என இருவகையாகும் என்று கூறினோம். இப்பொருள்களின் மிக நுண்மையான அணுக்களின் நடிப்பாகிய இயக்கத்தை நமது உள்ளத்தாலும், ஐம்புலன்களாலும் நன்றாக நாடி ஆராய்ந்து அறியக் கூடியதுதான் நாடியின் துடிப்பு. இந்த இயக்கத்தைப் பற்றி சதகநாடி

பின்வருமாறு கூறும்:

“நாடியென்றால் நாடியல்ல நரம்பில் தானே
நலமாகத் துடிக்கின்ற துடிதான் அல்ல
நாடியென்றால் வளி, தீ, நீர் மூன்றும் அல்ல
நாடி எழுபத்தீ ராயிரம்தான் அல்ல
நாடியென்றால் அண்ட பகி ரண்டமெல்லாம் நாடி
எழுவகைத் தோற்றத் துள்ளாய் நின்ற
நாடியது ஆராய்ந்து பார்த்தா ரானால்
நாடிஉறும் பொருள்தெரிந்து நாடு வாரே”

நாடி என்பது கையில் தோன்றும் நாடி அல்ல; இரத்தம் பாய்ந்தோடும் நரம்புகளில் உடல் நலத்திற்காகத் துடிக்கின்ற துடிப்பும் அல்ல; அது **வாதம் (வளி), பித்தம் (தீ), சிலேற்பனம் (நீர்)** ஆகிய இவை மூன்றும் அல்ல; உடற் கூற்று நூலில் எழுபத்தீராயிரம் எனக் கணக்கிடப்பெறும் நரம்புகளும் அல்ல; ஐம்பூதங்கள் அனைத்திலும் நாடி அவ்வைம் பூதங்களினால் தோன்றிய பலவகைத் தோற்றங்களிடத்திலும் உள்ளே அமைந்துள்ளவற்றை நாடி ஆராய்ந்து பார்ப்பாராகில் நாடி என்ற சொல்லுக்கு மெய்ப்பொருளை அறிவார்கள்.

பூத நாடி கண்ணுக்குத் தோன்றாது. ஆனால் ஆராய்ந்து அறியத்தக்கது. அவ்வாறே குருநாடியும் ஆராய்ந்தறியக் கூடியவொன்றாம்.

ஐம்பூதங்களில் முதலாவதாக விண்ணின் இயக்கத்தை ஆராய்வோம்.

**விண் இயக்கம் :** காற்றியக்கம் இல்லாதபடி பலகணிகளை யெல்லாம் அடைத்து அந்த அறையில் மல்லிகை மலரை ஒரு பக்கத்தில் வைத்துக் கதவை மூடிவிட்டால் கொஞ்ச நேரத்திற்குப் பின் அவ்வறைக்குள் கதவைத் திறந்து கொண்டு புகுவோமேயானால் நாம் அம்மல்லிகையின் மணத்தை நுகர்வோம். இம்மணம் விண்ணின் இயக்கத்தால் அவ்வறையில் பரவியதாகும். நாம் அவ்வறையில் ஓட்டைகள் வழியாகப் புகுகின்ற சூரியனுடைய ஒளியிலே தூசுகள்

ஆடுவதைக் காணலாம். இந்தத் தூசுகளை ஆடச் செய்வதும் விண் இயக்கமே.

**காற்று இயக்கம் :** பலகணிகள், கதவுகள் வழியாகக் காற்று வீட்டினுள் நுழைவதை நாம் காண்கிறோம். இக் காற்றியக்கம் அடுப்பில் எரிந்துகொண்டிருக்கிற தீயின் வெப்பம் அறை முழுவதும் பரவுகிறது. தீயின் வெப்பத்தால் தண்ணீர் தன் தன்மை மாறி வெந்நீராகவோ கொதிநீராகவோ, பின் ஆவியாகவோ மாறுவதை நாம் காண்கிறோம். பொருள்களை இயக்குவதில் தீயே முதன்மையானது. அதன் வேகத்தால் இரும்பு முதலிய கனிப் பொருள்கள் முதலில் நீராக உருகிப் பின் நீறாகின்றன. (நீறு-சாம்பல்)

**தீ இயக்கம்:** பொருள்களின் அணுக்கள் தம் செயலாகவே ஒடுங்கவும் தோன்றவுமாக இடைவிடாது இயங்குகின்றன. அத்தீயின் துணையால் இவ்வியக்கத்தின் அளவு மாறுபடுகின்றது. வெண்ணெயை உருக்குகின்றவர்கள் நெய்யைச் சூடுள்ளபோதே அளந்து விற்கிறார்கள். ஏனெனில் குளிர்ச்சியினால் நெய் அளவு குறையும். ஏனெனில் சூட்டினால் விரிந்து நின்ற அணுத்திரள்கள் சூடு குறையக் குறையச் சுருங்கி உறைந்து விடுகின்றன. இதுவரை கூறியது தீ இயக்கம்.

**நீர் இயக்கம்:** நீர் அணுக்களும் ஒன்றையொன்று நெருங்கிக் கொண்டே இருக்கின்றன. ஒரு குடத்திலுள்ள தண்ணீரை அக்குட அணுக்கள் வெளியிடுவதில்லை. அக்குடத்தில் ஓர் ஓட்டையிருந்தால் அந்த ஓட்டையின் வழியாகத் தண்ணீர் வெளியே வருகின்றது. ஈரத்துணியிலிருந்து நீரணுக்கள் வெளியே போய்விடுகின்றன; அதனால் துணி காய்ந்து விடுகிறது.

**மண் இயக்கம் :** இருப்புப்பாதைக் கம்பிகள் சூட்டினால் விரிந்து ஒன்றையொன்று இடைவெளியில்லாமல் நெருங்குவதையும் பின், சூடு தணியத் தணிய இடைவெளி தோன்றுவதையும் பார்த்தால் மண்ணிலுள்ள கட்டிப் பொருள்களின் அணுக்களும் ஒன்றையொன்று நெருங்கிப் பற்றிக் கொண்டேயிருக்கின்றன என்பது விளங்கும்.

* **மண்ணின் இயக்கம்** *மிகவும் மெதுவாகவும்*
* **நீரின் இயக்கம்** அதனினும் *சிறிது மிகுதியாகவும்,*
* நீர் இயக்கத்தினும் **தீ இயக்கம்** *சிறிது மிகுதியாகவும்,*
* அதனினும் **காற்றியக்கம்** *மிகுந்தும்,*
* காற்றியக்கத்தினும் **விண் இயக்கம்** *சிறிது மிகுந்ததாகவும்* இருக்கின்றன.

நம் உடலில் .....

**அ. விண் கூறானது உள்ளம்;**
**ஆ. வளிக் கூறானது மூச்சும், உடற்காற்றும்;**
**இ. தீக்கூறானது உடலிலுள்ள தீ;**
**ஈ. நீர்க் கூறானது உடம்பிலுள்ள நீர்;**
**உ. மண்கூறானது எலும்பும், தசையும், நரம்பும்**

ஆக உள்ளன.

# 32. பதி பசு பாசம்

சித்தர்கள் மேலே சொன்ன சித்திகளில் கைவந்தவர்கள். அவர்கள் கண்ட சமையமே சித்தாந்தம் என்பது. அஃதாவது சைவ சித்தாந்தம். அறிவாராய்ச்சியினால் சமைந்ததே சமையம்.

'சீவனார் சிவனாரை அறிந்தபின்
சீவனார் சிவ னாயிட் டிருப்பரே'

இது திருமூலர் திருமந்திரம்.

மாணிக்க வாசகப் பெருமான் திருவாசகத்தில் பின்வருமாறு அருளியிருக்கிறார்.

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடும் முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு யார்பெறுவார் அச்சோவே"

முத்தியை அடைய வேண்டுமானால் பக்தி வேண்டும். முற்றி என்ற சொல்லே முத்தி என வழங்கப்படுகிறது. அதைப் போலவே பற்றி என்ற சொல்லே பக்தி என வழங்குவதாயிற்று உயிர்கள் பல; அவை பசு என்று பெயர் பெறும். அவை பதியாகிய சிவபெருமானை அடைவதே வீடு. அவை சிவபெருமானை அடையவிடாமல் தடுப்பதே உலக பாசம். அது ஆணவம், கன்மம், மாயை என்று மூன்று வகையாகும். ஆணவம், கன்மம், மாயை என்ற இம் மும்மலங்களிலிருந்தும் விடுபடுவதே வீடு. வீடடைவதற்கு வழி இறைவனுடைய திருவடிகளைப் பற்றி நிற்பதே. பற்றி நின்றால் உலகப்பற்று நீங்கச் சிவரெுமானைச் சேருதல் முற்றும். திருவள்ளுவ நாயனாரும் தமது தெய்வத் திருக்குறளில் இது பற்றிப் பின்வருமாறு அருள்கின்றார்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

பற்று விடுதலாவது உலகப்பற்றை விடுவது. அதற்கு வழியாவது பற்றற்றவனாகிய ஆண்டவனுடைய திருவடிகளையே துணையென்று பற்றுதல், பற்றியே பற்றி என்று தமிழில் வழங்குகிறது. அதனை வடமொழியார் பக்தி எனத் திரித்துக் கூறுவர். பற்றியின் முற்றிய நிலையே முற்றியாம். அதுவே வீடு. அதனையே வடமொழியார் முக்தி என்பர். உடுப்பது, உடுப்பு, உடை, உடல் உடம்பு என்ற சொற்களால் வழங்கப்படுகிறது. உடுப்பு, உடை என்பன உடம்புக்கு அணிகள். உடல் உடம்பு என்பன உயிருக்கு அணிகள். இந்த உடலும், இந்த உடலோடு தொடர்பு கொண்டுள்ள மனைவி, மக்களும்தாம் தமக்கு உறுதியான பொருள் என்று நம்பி ஏமாந்து உயிர் பலவாறு உலக இன்பங்கள் ஈடுபட்டு அழிந்து போகின்றது. உயிர் உடம்போடு அடையும் உலக இன்பங்கள் நிலையற்ற சிற்றின்பங்கள். அவற்றையே நிலையானவை என்று எண்ணி மயங்கி உயிர் உலகத்தில் திரிகிறது. அப்போது நல்வினை வந்துசேர, சிவபெருமான் பற்றிநெறியை

அவற்றிற்கு அறிவிக்கிறான். அதனால் நான் என் உடல், என் பொருள், என் மனைவி,மக்கள் என்று உணரும் ஆணவமலமும், கன்மமும் மாயையும் அழிந்து போகின்றன. அந்நிலையில் சிவபெருமான் சீவனை என்றும் குன்றாப் பேரின்பத்தில் ஆழ்த்தி ஆட்கொள்கிறான். அப்போது சிற்றின்பத்தில் ஈடுபட்டுக் கலந்திருந்த உயிர்கள் சிவமாகித் தம்மைச் சிவமே என உணர்ந்து பேரின்பத்தை நுகர்கின்றன. இதனால் பதி என்ற சிவபெருமானும், பசு என்ற உயிர்களும், அவற்றைக் கட்டி நிற்கின்ற மும்மலங்களும் என்றும் உள்ள மெய்ப் பொருள்கள் என்பது விளங்குகின்றது. பசு பாசத்திற்கு கட்டுப்பட்டுக் கிடக்கும்போது தன்னைப் பாசமென்றே உணர்ந்தாலும், பசு பாசமாகாது; அதேபோலப் பசு திருவருளால் பாசத்தினின்றும் விடுபட்டுச் சிவமாகி வீடு அடைதலாகிய பேரின்பத்தில் முழுகியிருந்தாலும் பசு பதியாகாது.

# 10. சித்தர்கள்

மானிடராய்ப் பிறந்த யாவர்க்கும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் நான்கு உண்டு என்பது யாவரும் அறிந்த உண்மை.

மனத்தையுடையவன் மனிதன் என்பது யாவர்க்கும் தெரிந்ததே. மனத்தின் தொழில் சிந்திப்பது; அஃதாவது எண்ணுவது மனத்திலெழும் எண்ணத்துக்கு அளவே இல்லை என்பதை.

'உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன்'

என்ற ஆன்றோர் வாக்காலறியலாம். அப்படி எழும் எண்ணங்களில் நல்லவை தீயவை ஆகியவை விரவி இருப்பது இயல்பு, நன்று தீது என்னும் பாகுபாட்டை அறிவது புத்தியின் செயலாகும். பலப்பல எண்ணங்களையும் புத்தியின் அளவுக்கு ஏற்ப நன்மை தீமையை ஒருவாறு அறிந்து செயல்படத் தொடங்குவது சித்தத்தின் பணியாகும்.

ஒருவகைப்பட்ட நல்ல எண்ணங்களின் வழிப் பிறந்த குறிக்கோளைப் புத்தி வகுத்துத்தர அதன்பால் சித்தத்தைச் செலுத்தி முயன்று முயன்று வெற்றி காண்பதுவே **'சித்தி'** என்று கூறப்பெறும். இவ்வகையில் வெற்றிகண்ட மகான்களே சித்தர்கள் (சித்தி பெற்றவர் சித்தர், சித்தியுடையவர் சித்தர்) என்று கூறப்பெறுபவர் ஆவர். ஆகவே **மனம், புத்தி, சித்தம்** என்ற அந்தக்கரணங்களை ஒன்றிக்கவல்ல திறமையுடையவர்கள் சித்தர்கள் என்பதாயிற்று.

ஒரு பொருளோடு ஒரு பொருளையோ, பல பொருள்களையோ இரண்டற ஒன்ற வைப்பது யோகம் எனப்படும். உதாரணமாகத் **'திரிகடுகு சூரணம்'** என்ற மருந்து ஒரு யோகமெனப் பெறும். மூன்றும் சார்புப் பொருளேயானாலும் தனித்தனிச்சரக்காய் இருக்கும்போது **நிறம், வடிவம், குணம்** முதலியவற்றில் வேறுபாடுள்ளவையே; ஆனாலும் அவற்றைத் தக்க அளவோடு பக்குவப்படுத்தி ஒன்றித்து ஒரே தூளாகச் செய்து நாம் கொண்ட குறிக்கோளுக்குத் தக்க மருந்தாகச் செய்வதால் அதனை ஒருயோகம் என்பர், பெரியோர். அதே போலச் சித்தர்கள் எனப்பட்ட பெரியோர்கள் தம்முடைய **மனம், புத்தி, சித்தம்** என்ற மூன்று அந்தக்கரணங்களையும் ஒன்றித்து வெற்றிகண்டு தம் குறிக்கோளை அடைந்தவர்கள் என அவர்களுடைய நூல்கள் வாயிலாக அறியக்கிடக்கின்றது. இத்தகைய பெரியோர்கள் அகங்காரத்தை அறவே நீத்தவர்கள். அவர்களிடம் அகங்காரம் இல்லாத தன்மையே தன்னை யாரென்றும் தன்னுடைய சதுரப்பாடு எத்திறத்தது என்றும் தன் பிறப்பு, வாழ்க்கை வரலாறு எத்தகைத்த தென்றும் கூறாமல் மறைந்தனர்.

ஆயினும், உலகுக்கு உபகாரமாக அவர்கள் எழுதியும் பயிற்றுவித்தும் சென்ற நூல்களும் சீடர்களும் அவர்களுடைய பெருமையையும் சேவையின் உயர்வையும் உலகுக்கு உணர்த்தி வருவதை யாவரும் அறிவர். அத்தகைய சித்தர்களின் சித்தின் வெற்றியானது அவர்களுடைய ஆன்ம சக்தியின் ஒப்பற்ற உயர்வில் பயனாக விளைந்ததாகும் என்ற உண்மையையும் அவர்களுடை நூல்கள் வாயிலாக அறியலாம்.

சித்தத்தில் சிந்தித்தபடியே உடலும், உண்பனவும் அடைந்து, அனுபவிக்கின்றவர்களே சித்தர்கள். இவர்கள் சிவநெறியைப் பூண்டு

ஒழுகிய சித்த சமயத்தைச் சேர்ந்த தமிழ் மக்கள், மேற்கண்ட சமயத்திற் சொல்லியுள்ள அனுஷ்டிக்க வேண்டிய கிரியைக் குறித்த விஷயங்களையும், விதிகளையும் விலக்கி விட்டு, ஆத்ம ஞானம் ஒன்றையே கடைப்பிடித்தவர்கள். இவர்கள் காரணகாரிய வகைகளால் உடம்பைச் சோதித்து, எவ்வெவ்வகைப் பொருள்களால் உடல் வளர்ந்து அழிகின்றதென்பதை ஊக்கத்தாலும், முயற்சியாலும் கண்டறிந்து உடம்பை பொய்யென்று சொல்லுவதற்கு மாறாக, மெய்யென்ற சொல்லுக்குப் பொருள் கண்டு, சிலப்பதிகாரத்திற் கூறியபடி, ***அணிமா, மகிமா, லகிமா*** முதலிய அட்டமா சித்திகளை அடைந்தவர்கள். மேலும், தங்களுடைய உடம்பை மாத்திரம் தகுந்தபடி பலப்படுத்திக் கொண்டால், பிறப்பு இறப்பினின்று நீங்கிவிடலாம் என்று உணர்ந்து, அனேக காலம் உயிருடனிருக் கக்கூடிய நித்திய வாழ்வைப் பெற்ற பெரிய மகான்களாவர். இவர்கள் காய கற்ப வழியாலும், யோக சாதனையாலும், தங்களிடத்தில் அபார சக்தி வாய்ந்தவர்கள். அழியக் கூடிய உடம்பைக் கொண்டே, ஞான சக்தியான மோட்ச சாதன வழியைத் தேடக் கூடியவர்கள்.

மேலும் இவர்கள் மூச்சை அடக்கிப் பிடித்து மூலக்கனலாகிய குண்டலினி சக்தியை எழுப்பி, மணி மந்திர மருந்துகளின் உதவியால் மாறாத மதியமிர்தமுண்டு **நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு** ஆகிய இவைகளை அறியாது நித்திய உடம்பைப் பெற்றவர்கள். உலோகங்களாலும், மந்திர சக்தியாலும் ககன குளிகை கொண்டு அனேக அண்டங்களைச் சுற்றி ஆங்காங்குள்ள அதிசயங்களைக் கண்டு ஆனந்தித்தவர்கள்.

ஆகவே, இவர்கள் அளவற்ற சக்தியுடையவர்கள். தங்களுடைய மாமிச தேகத்தை இலிங்க வடிவமாக மாற்றக் கூடிய சக்தி வாய்ந்தவர்கள். இவர்கள் மகத்துவத்தைப் பற்றி யோக நூற்களில் அனேக திஷ்டாந்தங்கள் காணலாம். இவர்கள் மனோசக்தியால், மருந்து கொள்ளாமலே உடம்பின் அணுவாதி தத்துவங்களை மாற்றி, பிணி சாக்காட்டை அகற்றவல்லவர்கள், அன்றியும், மனோ சங்கற்பத்தினால் ஏற்ப ட மனோ சக்தியை, நினைத்தபடி நாடி வழியாக செலுத்தாமலே, மின்சார சக்தியைப் போல் உலகத்தில் அண்ட முழுவதிலும்,

பல திசைகளின் விஷயங்களை உட்கார்ந்திருந்த படியே தெரிந்து கொள்ளவும், எங்கேனும் யாருடனேனும் சம்பாஷிக்கக் கூடிய வல்லமை பெற்றவர்கள்.

Siddhars are those who lived and maintained their bodies as they desired best. They were mostly of a Tamil Saiva sect which maintained Siva for its God, and rejected everything else in Saiva system which was inconsistent with the pure Theism. They had investigated that the body, though transient was the one and only instrument for attaining success in the Spiritual development and growth; and so worked out to attain the eight supernatural powers, as *Anima, Magima, Lagima,* etc., essential for their goal, as mentioned in Silappathigaram. They further realised that, if the body could only be made strong and perfect, they could get rid of birth and death and live for ages together. They are the greatest men holding tremendous powers in themselves by way of Yoga practice and rejuvenation. They are capable of enjoying spiritual success in their immortal bodies.

They further attained spiritual awakening by rousing, with their suppressed breathing, the *Kundalini* (Serpent power as it is termed) lying dormant at the base of the spinal coloumn in the region of the sacral plexus; and with the help of remedies of high potencies and virtues, consisting of all kinds of drugs, minerals, metallic preparations and poisons, they sought for Elixir of life, thus conquering all infirmities against grey hairs, wrinkles of the skin, old age and death. They could fly through the aerial regions with the aid of animated mercurial pills and even visited all the planets and stars and enjoyed the pleasures and wonders found therein.

So, they are men holding tremendous and extraordinary powers superhuman in nature, and can even in this life, change their bodies (physical) into god bodies (etheric). There are several such cases mentioned by Siddhars in their books; they can change the very material of their bodies and re-arrange the molecules in such a fashion that they may have no more sick or death. They can send mental electricity without the aid of nerve channels, thus holding communion by remaining in their own places, with anybody and anywhere in the Universe.

Dawson in his Classical Dictionary of Hindu Mythology mentions them to be 88,000 in number.

மருவவே வா சிவைத்து மூலத்தூணு
வழியோடே யாறுதல மேறிப் பாரு
தருவவே சதாதா ரகத்தில் நில்லு
சகத்திரமா மரவந்தப் பூவைக் கொய்வாய்
அருவவே ஆயிபதந் தனையர்ச் சித்தே
அடுக்கிநின்ற கங்கையிலே நானம் பண்ணி
உருவவே பஞ்சதசாட் சரமா மத்தை
உச்சரிப்பாய் மாதாவின் பதத்தில் தானே.

பதத்திலே அர்ச்சனைக ளெல்லாம் பண்ணிப்
பாங்கான வெளிதனிலே வத்து வைத்து
மதத்திலே பூசைபண்ணி பாவ கித்து
மயங்காமல் வத்துவைத்தான் பானம் பண்ணி
இதத்திலே வாசியைத்தான் இழுத்தே யேற்றி
ஏகமாய் மனதொன்றி இருந்து கொண்டு
விதத்திலே ஆடினதோ ராட்டைப் பார்த்து
மேன்மேலும் மீறியதோர் விளக்கம் பாரே.
-போகர் 7000- இரண்டாமாயிரம் பாடல் எண் 97 98.

போமென்ற ஓங்கார மஞ்செழுத்தோ டாறும்
பேரான பஞ்சகர்த்த ரிருந்திடந்தான் பாரு
ஆமென்ற ஆங்கார ஆணவமும் போனால்
அப்பவல்லோ அகாரமுத லுகாரந் தோன்றும்
வேமென்ற மகாரமொடு விந்து நாதம்
விளங்கியதன் மேல்நிற்கும் பராபரந்தான் மைந்தா
வாமென்ற மகாரத்தைப் பற்றி யேறு
மனமொன்றி லாகிரியா லொத்துக் காணே.
-போகர் 7000-இரண்டாமாயிரம் பா. எண்.346.

மேலே கூறப்பெற்ற பாடல்கள் வாயிலாக மனம் ஒன்றுபடும் வழிகளையும் அதன் சிறப்பையும் பயனையும் அறியலாம். அதையே திருவாதவூர. கள் ***'ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி'*** என்றமை, சித்தத்தைச் சிவன்பால் வைத்துச் சிவ சிந்தனையில் மூழ்க மூழ்க சித்த விகாரம் ஒடுங்கி அதன் பயனாக ஆன்ம சக்தி ஓங்குமென்றும் அதுவே செம்பொருட்சோதி என்ற உண்மையைக்

கரவாது கூறியதல்லவா? சித்தர்கள் கூறியதும் வாதவூரடிகளார் கூறியதும் கருத்தொருமித்தவை யாகும்.

இவ்வண்ணம் மனம் அடங்கப்பெற்ற ஆன்றோர்க்கு இயற்கையும் பணிந்து ஏவல் செய்யும். ஆகவே சித்தர்கள் செயற்கரிய செயல்களைச் செய்ய வல்லவராவார்கள், இத்தகைய சித்தர்களின் ஆற்றலைத் தாயுமான அடிகளார் ***'வித்தகச் சித்தர் கணம்'*** என்னும் பகுதியில் பல பாக்களால் விவரித்துள்ளார். அதில் ஒரு பாடலை எடுத்துக்காட்டாக இங்குக் காணலாம்.

பாட்டளி துதைந்துவளர் கற்பக நன் நீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பதுமநிதி சங்கநிதி இருபா ரிசத்திலும்
பணிசெயுந் தொழிலாளர் போல்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்!
ஓட்டினை யெடுத்தாயிரத் தெட்டுமாற்றாக
ஒளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனு மிளைப்பாற யோகதண்டத்திலே
உலகுசுமையாக வருளான்
மீட்டிடவும் வல்லநீரென் மனக்கல்லை யனன்
மெழுகாக்கி வைப்பதரிதோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே!

*- தாயுமானவர்.*

கணம் என்றால் கூட்டம் என்றும், **சித்தர் கணம்** என்பது பதினெண் வகைக் கணத்தவர்களின் ஒருசாரார் என்றும் கூறப்பெறும். பதினெண் கணத்தவர்.....

1. அசுரர்
2. அந்தணர்
3. அமரர் (தேவர்)
4. ஆகாயவாசி (விண்ணவர்)
5. இயக்கர்
6. உரகர்(உரகம்-பாம்பு);(மனிதன் பாதி பாம்பு பாதியான உடலுள்ளவை)
7. கருடர்
8. கந்தருவர்
9. கிம்புருடர் (மனிதன் தலை குதிரை உடல்)
10. கின்னரர் (மனிதன் உடல் குதிரைத் தலை )
11. சித்தர்கள் (சூரியனுக்கும் பூமிக்கும் இடையிலுள்ள வெளியில் பூரண அருளைப் பெற்று வசிப்பவர்கள்)
12. நிருதர்
13. பூதர்
14. பைசாசர்
15. போக பூமியர்
16. முனிவர்
17. விந்தயர்
18. வித்தியாதரர்

என்பவராவர்.

தற்காலத் தமிழ் வைத்தியத்திற்கே இவர்கள் காரணகர்த்தர்களாகி, உலகோர்க்குத் தெளிவான எளிய நடைத் தமிழ்ச் செய்யுட்களால் பாடிவைத்த நூல்கள் பலவாம். உலக மக்களுக்குப் பயன்தரும் நோக்கத்துடன் இயற்றப்பெற்றவை. அவ்வாறு சித்தர்கள் எழுபதாயிரம், எண்பதாயிரம், ஏழு லட்சம் எனப் பலவாறாகக் கூறப்படும். இவர்களைப் பிற நாட்டவர் அனேக விதமான பெயரிட்டு வழங்குவர். இவர்களது வல்லமையைப் பற்றி அடியிற் காணும் செய்யுள் விளக்கும்.

காரப்பா சித்தன் கற்பத்தோ டொன்றிக்
கைலாசப் பாசமதாய்க் கருதி வாழ்வான்
நேரப்பா கற்பமதை யுண்டு தேறி
நிசமான வாசியிற்சென் றிருப்பான் றானே!

என்றும்,

தானான தானவனாய் நின்று வாழ்வான்
சதாகோடி நாளுமொரு நாளாய் நிற்பான்
ஊனான காயாதி கற்ப மெல்லாம்
உண்டுகரை யேறியவ னுறுதி யாவான்
வானான அண்டபகி ரண்ட மெல்லாம்
வரைகடந்து திரையகற்றி வந்து சேர்வான்
தேனான மொழியுடையா னமுது பானம்
தினந்தோறுங் கொள்பவனே சித்த னாமே!

என்றும், கடைப்பிள்ளைக் கலைஞானம் 1201 என்னும் நூலில் கூறியுள்ளதையும் காண்க.

இரசவாதமுறையில் தங்கம் செய்ய முடியும் என்னும் நம்பிக்கை மக்களிடையே இன்னும் இருந்து வருகிறது. தங்கம் விரும்பத்தக்க பொருளாக இருப்பினும் அது முயற்சியின்றிக் கிடைப்பதாயின் அதை ஒருவரும் மதித்து விரும்பமாட்டார்கள். இரசவாதவித்தை பலித்து அதனால் தங்கம் அளவு கடந்து கிடைக்குமாயினும் உலகம் ஒரு காசு பொறுமான செல்வம் அடைய விடாது. சுரங்கத்தில் அதிகமாகத் தங்கம் பெறுபவர்கள் கூட, இப்போதைய உலகக் கட்டுப் பாட்டிற்கிணங்க பொதுமக்கள் உழைப்பைக் கொண்டு ஒருசிலர் செல்வந்தராவார்கள். இரசவாதத்தை உண்மையாய் இருந்து மிகுந்த தங்கம் கிடைக்குமாயின் அது நாணயமாக இருக்காது. ஆகவே சித்தர்கள் தங்கள் நூலில் கூறியுள்ளதுபோல மிகவும் முயன்று ஆன்மசித்தியும், ஆன்ம சுத்தியும் பெற்று காயசுத்தியும், காயசித்தியும் கைகூடி வாதத்தில் முனைந்தால்தான் வெற்றி காணமுடியும். அவ்வண்ணமின்றி எல்லோரும் வெகுசுளுவாகத் தங்கம் செய்ய எண்ணி

முனைந்தார்களேயாமாகில் கீழ்க் காணும் சித்தர் வாக்கின்படி கெட்டலைவர் என்பது திண்ணம். அப்பாடல்...

ஆமேதா னிவ்வையத்தே மடையர் கூடி
அலைந்தலைந்து சுட்டதனா லாவ தென்ன?
போமேதான் புகையெழும்பி மேகம் போல
பொருமியே கண்கெட்டுப் போவ்ார் பாரில்
வாமேதான் வாய்புலம்பி மடைய ரெல்லாம்
வாதமது பலிக்குமென்றே பொருளைத் தோற்றுத்
தாமேதான் கடைச்சரக்கைச் சுட்டுச்சுட்டுக்
கருவறிந்த யோகியைப்போல் கண்கெட் டாரே.

- அகத்தியர் பரிபாஷைத் திரட்டு.

ஆகவே, சித்தர் கூறிய முன்னிரண்டு (*யோகம், ஞானம்*) துறைகளில் சித்தி பெறாதவர் வாதத்தில் வெற்றி காணார் என்பதை அறியவைத்துள்ளமை காண்க.

ஆகவே, சித்தர் எந்த அறிவுத்துறையிலாவது சித்தி அடைந்தவராவார். உலகிலுள்ள அறிவாளிகளும், ஞானிகளும் கூறியவற்றைக் கேட்டு ஆய்ந்து அதில் உண்மையெனக் கண்டவற்றைத் தமதாக்கி அதை விளக்கி வளர்ப்பதுவே சித்தியடைபவர்களின் இயல்பாம்.

சித்தர் சிவத்தை நினைந்து, நினைந்து சிவமானவராதலால் அவர் *நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு* முதலியவற்றைப் பெறாது என்றும் இளமையோடும் வனப்புடனும் விளங்குவர் என்பதை,

நீல நிறனுடை நேரிழை யாளொடும்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞால மறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவார் பராநந்தி யாணையே - திருமந்திரம்.

என்ற திருமூலர் வாக்கால் அறியலாம்.

ஆயினும், சித்தரென்போர் பொதியமலை, இமயமலை, சதுரகிரி (கொல்லிமலை), கஞ்சமலை முதலிய மலைகளின் குகைகளில் தங்கித் துறவறம்தாங்கி யோகப் பயிற்சி செய்துகொண்டும், தம் மாணவர்களுக்கு யோகம் பயிற்றுவித்தும், ஞானம் போதித்தும், ***உலோகம், பாடாணம், உப்புகள்*** ஆகியவற்றைப் ***பச்சிலை, செய்நீர், திராவகம், துருதி*** ஆகியவற்றின் உதவிகொண்டு ***கட்டு, களங்கு, சுண்ணம், செந்தூரம், பற்பம்*** என்னும் உயர்ந்த மருந்துகளைச் செய்து மன்பதை மக்கள்களின் தீராப்பிணி என்று ஒதுக்கப்பட்ட நோய்களைத் தீர்த்து வருபவர்கள் என்றும், தாமே காய **கற்பமுண்டு *நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு*** நீங்கியவராய் வலுத்த உடலையும், நிலைத்த உள்ளத்தையும் கொண்டவரென்றும், இரசவாதக்கலை வல்லவரென்பதும் பொது மக்களின் நம்பிக்கையாகும். ஆனால்,

குரைகடல் வறுமையும் குறத்தி உண்மையும்
நரையற மருந்தையுண் டிளமை நண்ணலும்
விரைசெறி குழலினாள் வேசையர் ஆசையும்
அரையரன் பமைவது மைந்தும் இல்லையே.

- விவேக சிந்தாமணி.

கடல் முற்றும் சுவறுதலும், குறத்தியினிடம் உண்மையைக் காணலும், நரை நீங்க மருந்துண்டதால் இளமை எய்துதலும், விலைமாதர்பால் ஆசையுற்ற நிலையும், மன்னன் அன்புடையன் ஆகிவிடுவதும் ஆகிய இவ்வைந்தும் உலகில் இல்லாத பொருள்களாம் என்று கூறுதலால் நரை நீங்க மருந்துண்டு இளமை எய்துதல் இல்லை என்று வலிந்து உரைத்துள்ள விதிக்கு மாறாகச் **'சந்ததமும் இளமையோடு' வாழ்பவர்கள் சித்தர்கள் என்பது அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.**

இவ்வுடல் உரியகாலத்தில் வீழ்வது நிச்சயம் என்றும், அகத்தியர் பரிபூரணத்தில் விளக்குகிறார். ஆகவே காயகற்பம் என்றமுறை உடல் நீண்டகாலம் நிலைத்து இருக்கச் செய்யும் படியான சாதனை எனக் கொள்ள வேண்டும்.

***கபிலர், கௌதமர், வசிட்டர், விசுவாமித்திரர்*** முதலானவர்களும் சித்தர்களே. வடமொழியில் இவர்களை இரசாயன

சாத்திரிகள் என்று கூறப்பட்டிருப்பது ஒவ்வாது. எவ்வாறெனில் இரசாயன சாத்திரிகள் எனப்படுபவர்கள் வாதத்தில் மாத்திரம் ஈடுபாடுடையவர்கள், தேக தத்துவத்தில் மட்டும் நாட்ட முடையவர்கள். ஆன்ம ஞான சித்தி பெற்றவர்கள் அல்லர். சித்தர்களோ அத்தகையர் அல்லர்.

சித்தர்கள் யோகப் பயிற்சியின் முதிர்ச்சியால் ஞானம் பெற்று அதன் துணையால் வாதம் செய்து மக்களின் உடற்பிணிகளையும், உளப்பிணிகளையும் தீர்க்க முனைந்து வெற்றி கண்டவர்கள். வாத முறையாலும் ஒரு சிறிது ஞானம் அடைய வழியுண்டென்பதும் சித்தர்களின் உடன்பாடாம். ஆகவே சித்தர்கள் யாவரும்....

* யோகம்,
* ஞானம்,
* வாதம்,
* வத்தியம்

எனப்படும் நான்கிலும் சித்தி பெற்றவர்கள் என்றும், உடல் அழியும் முன்னதாகவே முக்திநிலை பெறுதற்கு ஏதுவான சித்திகளைப் பெற வேண்டுவது இன்றியமையாதது என்றும், உடலழிந்தால் பிறகு முக்தி சாதனத்துக்கு அனேக பிறவிகளை அடைய வேண்டிவரும் என்பதையறிந்து முக்திக்கு முதற்படியாக யோக சாதனத்தைக் கடைப்பிடித்தும் வற்புறுத்தியும் உள்ளனர். அவ்வகை யோகப் பயிற்சிக்குக் காய கல்பமுறை உதவியாக இருக்குமென்பதை உளங்கொண்டு வாத வைத்தியத் துறையில் உழைத்து வெற்றிகண்டும் உள்ளனர்.

சித்தர்கள் மேற்படி நான்கு துறைகளிலும் மிகவும் முனைந்து யோகம், ஞானம், என்ற துறையின் சித்தியால் தாம் கண்ட அனுபவங்களையும் ஆன்மலாப விடயங்களையும், அதனால் நிகழும் அற்புதங்களையும் தங்கள் நூல்களில் விவரித்ததோடல்லாமல், தாங்கள் அடைந்த யோக ஞான அடிப்படையால் வாதம் நிகழ்த்தும்போது தாம் கண்ட உண்மைகளையும் இரகசியங்களையும் விவரித்தும் தம் ஆன்ம சக்தி இல்லையேல் எந்தப் பொருளின் ஒரு அணுமாத்திரமும்

மாற்றமடையாது என்ற உண்மையை வெளிப்படையாகவும் ஆன்மசித்தி பெற்றவர்களுக்குச் செய்ய இயலாத காரியம் யாதும் இல்லை என்றும், தீராது என்று நூல்களும் சாதாரண அனுபவமும் காட்டும் பெரிய பெரிய நோய்களும் தம்மால் தவறாமல் தீர்க்க முடியும் என்பதையும் தம் நூலில் மிக்க தெளிவாகக் கூறியுள்ளனர். இத்தகைய சித்தர்களின் செயலால் தான் உலகம் நல்லவண்ணம் இயங்குகிறது என்பதையும் அறிவித்துள்ளனர். சித்தர்கள்...

* நவநாதசித்தர்,
* பதினெண்சித்தர்,
* நவகோடி சித்தர்,
* நவசித்தர்

எனப் பலவகைகளாகப் பற்பல நூல்களில் குறிக்கப்படுகிறார்கள்.

**நவநாத சித்தர்கள்:** *சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அனாதிநாதர், வெகுளிநாதர் (வகுளிநாதர் என்னும் சதுரகராதி) மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர்* ஆகிய இவ்வொன்பதின்மரை **நவநாதசித்தர்** என்பர்.

**பதினெண் சித்தர்:** தொகையாகக் கூறப்பெறும் இவர்களின் பட்டியல் ஒவ்வொரு நூலில் ஒவ்வொருபெயர் கூடியும் ஒவ்வொரு பெயர் விடுபட்டும் காணப்படுகிறது. மருத்துவ வாதயோக ஞான சாத்திரம் என்னும் நூலில் நான்காம் தந்திரத்தில் கீழ்வரும் பாடலில் பதினெண் சித்தர்களின் சமாதித் தலங்கள் கூறப்பட்டுள்ளன.

ஆதிகா லத்திலே தில்லையில் திருமூலர்
அழகர்மலை இராம தேவர்
அனந்த சயனம் கும்பமுனி திருப்பதி
கொங்கணவர் கமலமுனி யாரூர்
சோதிரங்கஞ் சட்டமுனி கருவை கருவூரார்
சுந்தரா னந்தர் கூடல்
சொல்லுமெட் டுக்குடியில் வான்மீக ரோடுநற்
றொல்காசியில் நந்தி தேவர்

பாதியரிச் சங்கரன் கோவில்பாம் பாட்டி
பழநிமலை போக நாதர்
பரங்குன்ற மதில்மச்ச முனிபேரூர் கோரக்கர்
பதஞ்சலி இராமேச் சுவரம்
சோதிவைத் தீசுவரன் கோயிலில் தன்வந்திரி
திகழ்மயூரங்குதம்பை
சித்தருணை யோரிடைக் காடர் சமாதியிற்
சேர்ந்தன ரெமைக்காக்கவே.

மேற்கண்ட பாடலில் ...

1. திருமூலர்
2. இராமதேவர்
3. கும்ப முனி
4. கொங்கணர்
5. கமல முனி
6. சட்ட முனி
7. கருவூரார்
8. சுந்தரானந்தர்
9. வான்மீகர்
10. நந்தி தேவர்
11. பாம்பாட்டி
12. போக நாதர்
13. மச்ச முனி
14. கோரக்கர்
15. பதஞ்சலி
16. தன்வந்தரி
17. குதம்பை
18. இடைக்காடர்

என்று பதினெண் சித்தர்களின் பெயர்கள் கூறப்பெற்றுள்ளன.

இதைப்போலவே தமிழ் மருத்துவநூல் எதை எடுத்தாலும் '*மகா மகத்துவம் பொருந்திய பதினெண் சித்தர்களில் ஒருவராகிய*' என்று

தலைப்பிட்டுப் பதிப்பித்துள்ளார்கள்.

* *பதினெண் சித்தர் நாடிசாத்திரம்,*
* *பதினெண் சித்தர் வாதகோவை,*
* *பதினெண் சித்தர் ஞானக்கோவை,*
* *பதினெண் சித்தர் சில்லரைக் கோவை,*
* *பதினெண் சித்தர் மூலிகை அகராதி*

முதலிய தொகை நூல்களைத் தொகுத்து வெளியிட்டவர்களும் ஒரே பதினெட்டைக் கூறவில்லை. பதினெண் சித்தர் என்பது சாதாரண பழக்கத்தில் வந்துவிட்டது. ஆனால், அப்பதினெண் சித்தர்களிலொருவர் இயற்றியதென்று கூறப்படும் ஒவ்வொரு நூலிலும் வேறு பதினெண் சித்தர்களைப் பற்றியும் கூறப் பெற்றிருப்பதால் அந்நூலை எழுதியதாகக் கூறப்படும் சித்தர் அப் பதினெண்மரில் ஒருவரல்லர் என்பது தெரியவரும். இப்படியாக எதற்கெடுத்தாலும் எல்லாப் பொருளிலும் பதினெண் சித்தர்களின் பெயர்கள் பொறிக்கப்படலாயின. ஆகவே *உண்மையாகப் பதினெண் சித்தர்கள் யாவரென அறுதியிட்டுக் கூற இயலவில்லை.*

அண்மையில் தொகுக்கப்பெற்ற சென்னைப் பல்கலைக்கழக அகராதியில்:-

1. **திருமூலர்**
2. **இராமதேவர்**
3. **கும்பமுனி (அகத்தியர்)**
4. **இடைக்காடர்**
5. **தன்வந்திரி**
6. **வால்மீகி**
7. **கமலமுனி**
8. **போகநாதர்**
9. **மச்சமுனி**
10. **கொங்கணர்**
11. **பதஞ்சலி**
12. **நந்திதேவர்**
13 **போதகுரு**

14. பாம்பாட்டி
15. சட்டைநாதர்
16. சுந்தரானந்த தேவர்
17. குதம்பைச்சித்தர்
18. கோரக்கர்

எனப் பதினெண் சித்தர்கள் பெயர் கூறப்பெற்றுள்ளது. கருவூரார் பலதிரட்டு என்னும் நூலில் காணப்பெறும் கீழ்வரும் பாடல் பதினென் சித்தர்களின் காப்பு கூறுகிறது.

பார்த்திடவே நந்தீசர் மூலத் தீசர்
பண்பான அகத்தீசர் சட்டை நாதர்
போர்த்திடவே பதஞ்சலியும் ஊனர் கண்ணர்
கோரக்கர் கமலமுனி சண்டி கேசர்
கூர்த்திடவே இடைக்காடர் சிவாய சித்தர்
கொங்கணவர் தந்தை போக நாதர்
காத்திடவே மச்சமுனி பிண்ணாக் கீசர்
காலாங்கி சுந்தரரும் காப்புத் தானே.

முன்வரிசையில் கூறப் பெறாத ஊனர், கண்ணர், சிவாய சித்தர், சண்டி கேசர், காலாங்கி என்ற ஐவர் பெயர்கள் கூறப்பெற்றிருப்பதை இப்பாடலில் காணலாம். வேறு சில நூல்களில்.....

1. அகப்பேய்ச் சித்தர்
2. அழுகண்ணிச் சித்தர்
3. காலாங்கி நாதர்
4. தேரையர்
5. புண்ணாக்கீசர்
6. புலத்தியர்
7. பூனைக் கண்ணர்
8. வாமதேவர்

என்ற சித்தர்களின் பெயர்களும்,

1. நாரதர்
2. மார்க்கண்டர்
3. காசிபர்
4. வரதர்
5. கன்னி சித்தர்
6. விசுவாமித்திரர்
7. கௌதமர்
8. கடுவெளிச்சித்தர்
9. சேது
10. சுந்தரர்
11. வாரிட்சா
12. கைலாச நாதர்
13. கூன்கண்ணர்
14. உரோமரிஷி
15. பிரமமுனி
16. கூர்மமுனி
17. வாசமுனி
18. சண்டிகேசர்
19. ஊனர்
20. கண்ணர்
21. சிவாய சித்தர்
22. போதகுரு
23. புலிப்பாணி
24. தட்சிணாமூர்த்தி
25. சுப்பிரமணியர்

என்ற சித்தர்களின் பெயர்களும் காணப்படுகின்றன.

# சித்தர்களின் மரபு சமாதி முதலியன.

| எண் | சித்தர்பெயர் | மரபு | சமாதி அடைந்த இடம் | | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| | | | அரு.இராமநாதன் பதிப்பு | நிஜானந்தபோதம் பதிப்பு | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1. | அகத்தியர் | வேளாளர் | அனந்தசயனம் | ......... | ......... |
| 2. | அகப்பேய்ச்சித்தர் | வேளாளர் | அழகர்மலை | எட்டுக்குடி, திருவையாறு | ......... |
| 3. | அழுகண்ணி சித்தர் | சீனத்து ஆசாரி | அழகர்மலை | நாகப்பட்டினம் | ......... |
| 4. | இடைக்காடர் | இடையர் | திருவண்ணாமலை | திருவருணை | ......... |
| 5. | இராமதேவர் | ................ | ............... | அழகர்மலை | ......... |
| 6. | உரோம ரிஷி | ................. | ................. | ................. | ......... |
| 7. | கடுவெளிச் சித்தர் | ............. | ............ | திருக்காஞ்சிபுரம் | ......... |
| 8. | கமலமுனி | உவச்சர் | திருவாரூர் | மதுரை | ......... |
| 9. | கருவூரார் | கன்னார் | கருவூர் | திருக்காளத்தி | ......... |
| 10. | கன்னி சித்தர் | ........... | ............... | பெருங்காவூர் | ......... |
| 11. | காகபுசுண்டர் | ......... | .......... | ............ | ......... |
| 12. | காசிபர் | ......... | ......... | உருத்திரகிரி | ......... |
| 13. | காலாங்கி நாதர் | சீனத்துஆசாரி | காஞ்சிபுரம் | திருக்கடையூர், திருப்பனந்தாள் | ......... |
| 14. | குதம்பைச் சித்தர் | இடையர் | மாயூரம் | .......... | ......... |
| 15. | கும்பமுனி | ........... | ............ | கும்பகோணம் | ......... |
| 16. | கூர்மமுனி | ........... | ......... | .......... | ......... |
| 17. | கூன் கண்ணர் | .......... | ......... | ........ | ......... |

| எண் | சித்தர்பெயர் | மரபு | சமாதி அடைந்த இடம்<br>அரு.இராமநாதன் பதிப்பு | நிஜானந்தபோதம் பதிப்பு | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 18. | கைலாச நாதர் | ........... | ........ | ....... | ......... |
| 19. | கொங்கணவர் | கன்னட இடையர் | திருப்பதி | கோடித்துறை, திருக்கண்ணங்குடி | ......... |
| 20. | கோரக்கர் | கள்ளர் | பேரூர் (கோவை) | திருக்கோணமலை (சிங்களம்) | ......... |
| 21. | கௌதமர் | ....... | ............ | திருவருணை | ......... |
| 22. | சட்டநாதர் (சட்டமுனி) | சிங்களவர் | திருவரங்கம் | சீர்காழி, ஸ்ரீரங்கம், ஆரூர் | ......... |
| 23. | சிவவாக்கியர் | ...... | .......... | ......... | ......... |
| 24. | சுந்தரர் | ........ | ....... | ஆரூர் | ......... |
| 25. | சுந்தரானந்தர் | வேளாளர் | மதுரை | மதுரை | ........ |
| 26. | சேது | ......... | ....... | திருவிடை மருதூர் | ......... |
| 27. | தன்வந்திரி | குருக்கள் | வைத்தீசுவரன் கோயில் | வைத்தீசுவரன் கோயில் | ....... |
| 28 | திருமூலர் | வேளாளர் | தில்லை | சிதம்பரம் | ........ |
| 29. | திருமூலர் நோக்கம் | ........ | ........ | மேலைச்சிதம்பரம் | ....... |
| 30. | திருமூலவர்க்கம் | ........ | ........ | நெடுங்குன்றம் | ......... |
| 31. | திருவள்ளுவர் | ....... | ........ | ......... | ......... |
| 32. | தேரையர் | பிராமணர் | பொதிகை மலை | ......... | ....... |
| 33. | நந்திதேவர் | பிராமணர் | காசி | காசி, திருவாவடுதுறை | |
| 34. | நாரதர் | ........ | ........ | திருவிடை மருதூர் | ....... |
| 35. | பதஞ்சலி | கள்ளர் | இராமேச்சுவரம் | இராமேச்சுவரம் | ...... |

| எண் 1 | சித்தர்பெயர் 2 | மரபு 3 | சமாதி அடைந்த இடம் அரு.இராமநாதன் பதிப்பு 4 | சமாதி அடைந்த இடம் நிஜானந்தபோதம் பதிப்பு 5 | குறிப்பு 6 |
|---|---|---|---|---|---|
| 36. | பாம்பாட்டி | கோசாயி | விருத்தாசலம் | திருஞாலம் துவாரகை | * |
| 37. | பிரமமுனி | ......... | ......... | ......... | ...... |
| 38. | புண்ணாக்கீசர் | கன்னட இடையர் | நாங்குநேரி | நன்னாசேரம் | ...... |
| 39. | புலத்தியர் | சிங்களர் | யாழ்ப்பாணம் | பாபநாசம் ஆவுடையார்கோயில் | ...... |
| 40. | பூனைக்கண்ணர் | எகிப்தியர் | எகிப்து | ......... | ....... |
| 41. | போகர் | சீனதேயத்தவர் | பழநி | திருக்கழுக் குன்றம். | ........ |
| 42. | போகநாதர் | ......... | ........ | பழநி, கதிர்காமம், தணிகை, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம் | ** |
| 43. | மச்சமுனி | செம்படவர் | திருப்பரங் குன்றம் | பரங்குன்றம் மயிரேசகம், திருவானைக்கோயில் | *** |
| 44. | மார்க்கண்டேயர் | ........ | ....... | குருவை நல்லூர் | ..... |
| 45. | வசிட்டர் | ....... | ..... | வைத்தீசுவரன்கோயில் | |
| 46. | வரதர் | ........ | ......... | தென்மலை | ..... |
| 47. | வாச முனி | ....... | ....... | ........... | ..... |
| 48. | வாமதேவர் | ஓதுவார் | அழகர்மலை | ........... | ........ |
| 49. | வாரிட்சா | ....... | ..... | திருவாஞ்சி | ........ |
| 50. | வான்மீகி | வேடர் | எட்டுக்குடி | எட்டுக்குடி திருவையாறு | ......... |

* சங்கர நாராயணன் கோயில் என்பாரும் உண்டு

** போகர் என்பவரும், போக நாதரும் வேறு வேறு சித்தர் போலும்.

*** மச்சதேயத்து அந்தணரென்று அவருடைய ஒரு பெருநூலில் காணப்படுகிறது.

சித்தர்கள் யாவரும் பாடல்கள் பாடினோரல்லர். இவர்களுடைய பாடல்கள் யோகம், ஞானம்,வாதம், வைத்தியம், என்ற நால்வகைத் தலைப்புகளில் அடங்கும்.

சித்தர்கள் பாடல்கள் அனைத்தும் இலக்கண இலக்கியச் சிறப்புடையவை யல்லவாயினும் சிவவாக்கியர், திருமூலர்,மச்சமுனி. அகத்தியர் முதலியவர்களின் சிற்சில நூல்களிலுள்ள பாடல்கள் இலக்கியச் சிறப்புடையவனாக உள. ஞானம், பூசாவிதி என்ற பெயரால் வழங்கும் பாடல்களில் பெரும்பாலானவை 'கேளப்பா, வாளப்பா, ஆளப்பா, கூளப்பா என்ற பொருள் பயவா எதுகை நயமுடையவையாக இருப்பது யாவரும் அறிந்ததே. இவ்வகை எதுகையைச் சிறப்பாகச் 'சித்தர் எதுகை' எனக்கூறி (அசைச்சொல் எனக்கூறி விடுவது போல) விடத்தக்கதாம். ஆயினும் எல்லாமே சித்தர் பாடல்களுக்குரிய பொருட்சிறப்புடையவை. பெரும்பாலான பாடல்கள் பரிபாஷை (குழூஉக் குறி)ச் சொற்கள் மலிந்தும் இலக்கியச் சிறப்பின்றியும் இருப்பதால் இந்நூல்கள் நல்ல பதிப்புகளாகத் தோன்றவில்லை. இலக்கிய உலகில் ஒரு சிறப்பான இடத்தையும் பெறவில்லை.

இத்தகைய ஞான நூல்களின் தொகுப்பைப் *பதினெண் சித்தர் ஞானக் கோவை* என்று வழங்குகின்றனர். அக்கோவையில்...

1. **பட்டினத்தார்**
2. **பத்திரகிரியார்**
3. **சிவவாக்கியர்**
4. **பாம்பாட்டிச் சித்தர்**
5. **இடைக்காட்டுச் சித்தர்**
6. **அகப் பேய்ச் சித்தர்**
7. **குதம்பைச் சித்தர்**
8. **கடுவெளிச் சித்தர்**
9. **அழுகண்ணிச் சித்தர்**
10. **கொங்கண நாயனார்**
11. **பீர் முகம்மது**
12. **மதுரை வாலை சுவாமி**
13. **சேஷயோகியர்**

14. சட்டை முனி
15. திருவள்ளுவர்
16. கணபதி தாசர்
17. அகத்தியர்
18. உரோம ரிஷி
19. திருமூல நாயனார்
20. சுப்பிரமணியர்
21. வால்மீகர்
22. நந்தீச்சுரர்
23. இராம தேவர்
24. கருவூரார்
25. கைலாயக் கம்பளிச் சட்டமுனி நாயனார்
26. காக புசண்டர்
27. சூரியானந்தர்
28. பூரணானந்தர்
29. இராமலிங்க சுவாமிகள்
30. குருஞான சம்பந்த சுவாமிகள்
31. அருணாசல குரு
32. பட்டினத்தார் II (வேறு)

ஆகிய இம் முப்பத்திரண்டு பேர்களும் இயற்றிய பாடல்களும் பெயர் தெரியாத சித்தர்கள் இயற்றிய பாடல்கள் பலவும் இருக்கின்றன. ஆகவே இந்தக் கோவை நூலுக்குச் *சித்தர் ஞானக் கோவை* என்று எண் குறிப்பிடாமல் பெயர் அமைப்பின் சாலப் பொருந்துமன்றோ?

இத்தகைய சித்தர் ஞான நூல்களைக் *காலம், பொருட் சிறப்பு* முதலியவற்றைத் தெளிவாக ஆய்ந்து ...

* *பெரிய சித்தர்களின் பாடல்களை முன் வைத்தும்,*
* *ஞானம், பூசா விதிகளைப் பின்வைத்தும்,*
* *சிவயோக சாரம், சிவானந்த போதம், நிசானந்த போதம் ஆகியவற்றை ஒரு சார் வைத்தும்*
* *திருவருட் பாவை இறுதியில் வைத்தும்*

ஒரு நல்ல ஆராய்ச்சிப் பதிப்பு வெளிவர வேண்டுமென்பது என் கருத்து. நிசானந்த போதம், சிவானந்த போதம், சிவயோக சாரம் போன்ற நூல்கள் தனித்தனியே விரிவுரையுடனும் எடுத்துக் காட்டுகளுடனும்

சாத்திர, தோத்திர உட்கோள்களைச் செவ்விதின் விளக்கியும் நூல் ஆக்குதல் வேண்டும். அவ்வாறு செய்தால் மிக்க பயனுடைத்தாகும்.

மற்றும், மேலே குறிப்பிட்ட சித்தர்கள் பலரின் பெயரால் பற்பல வைத்திய நூல்களும் வெளியாகியுள்ளன. அவற்றுள்...

* **வைத்தியம்,**
* **வாதம்,**
* **மந்திரம்,**
* **யந்திரம்,**
* **தந்திரம் ,**
* **யோகம்,**
* **ஞானம்**

ஆகிய பல விடயங்களும் இடம் பெற்றுள்ளவை குறிப்பிடத்தக்கதாம். ஞானப்பாடல்களை மட்டும் தொகுத்துள்ளதாக உள்ள நூல்களிலும் **வைத்தியம், யோகம், வாதம், மந்திரம், யந்திரம்** முதலிய விடயங்கள் விரவி வந்துள்ளதைக் காணலாம். ஆகவே சித்தர்கள் எனப்பட்ட பெரியோர்கள்...

* **வாதம்,**
* **வைத்தியம்,**
* **யோகம்,**
* **ஞானம்,**
* **மந்திரம்,**
* **தந்திரம்,**
* **பூசை,**
* **யந்திரம்,**
* **சோதிடம்,**
* **கன்ம சாந்தி,**
* **சாப நிவர்த்தி,**
* **காரியங்கள்,**
* **கற்பவிதி**

முதலான எல்லாக் கலைகளிலும் வல்லுநர் என்பது அறியக் கிடக்கிறது. மேலும் அவர்களிடம் கற்கும் சீடர்கள் மேற்படி பலகலைகளையும் ஒரே சமயத்தில் கற்று வந்தார்கள் என்றும் அறியக்கிடக்கின்றது.

மேற் கூறியவற்றிலிருந்து சித்தர்கள் பதினெண்மருக்கும் மேற்பட்ட எண்ணிக்கையினர் என்பதும், ***யோகம், ஞானம், வாதம், வைத்தியம் பூசை, சபம், மந்திரம், தந்திரம், வேள்வி*** முதலான சகல கலைகளிலும் வல்லவர்களென்றும் அறிந்தோம். மற்றும், முன்காட்டிய அட்டவணையிலிருந்து சித்தர்கள் யாவரும் குறிப்பாகத் தமிழகத்தையோ, பொதுவாகப் பாரத நாட்டையோ மட்டும் சேர்ந்தவரல்லர். அவர்கள் உலகின் பலநாடுகளிலிருந்தும் நம் தமிழகத்துக்கு வந்து தங்கிச் சித்தர்களின் கலைகள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்து உலகின் பல நாடுகளுக்கும் சென்று தாம் பெற்ற புலமையால் சென்ற இடமெல்லாம் பயனுறச் செய்து சேவை செய்ததாகக் கருதப்படுகிறது.

***அழுகண்ணி, காலாங்கி, போகர்*** என்ற மூன்று சித்தர்களும் சீன தேயத்தவர் என்றும், பூனைக்கண்ணர் எகிப்தியர் என்றும், சட்டநாதர் சிங்களர் என்றும் மேற்கண்ட அட்டவணையின் மூலம் அறியக்கிடக்கின்றது. மற்றும் உரோம ரிஷி என்னும் சித்தர் உரோமாபுரியிலிருந்து இங்கு வந்தவராக ஊகிக்கப்படுகிறது. தமிழகத்தாரின் கண்கள் கருங்கண் என்பது யாவரும் அறிந்ததே. அவ்வாறின்றிப் பூனைக்கண் போன்று கண் படைத்த சித்தரை இயற்பெயர் தெரியாத காரணத்தால் பூனைக்கண்ணர் என்றனர் போலும். அத்தகையக் கண் படைத்தவர் எகிப்தியராய் இருக்கலாம். என்பதும், உரோம ரிஷி என்ற பெயரைக் கொண்டு அந்தச் சித்தர் உரோமாபுரியைச் சேர்ந்தவராக இருக்கலாம் என்றும் ஊகிக்க இடமுண்டு. ஆயினும் இது சரிவர தக்க சரித்திர ஆதாரங்களைக் கொண்டு ஆய்வு செய்ய வேண்டிய விடயமாகும்.

மேலே கூறப்பட்ட சித்தர்களைத் தவிர சித்த மருத்துவத்துக்கு ஆக்கந்தரும் வகையில் மருத்துவ இலக்கியம் எழுதித் தந்த ***யாகோபு*** என்னும் ஒரு பெரியாரும், ***வீரமாமுனிவர்*** என்னும் ஒரு பெரியாரும் குறிப்பிடத்தக்கவர்களாவார்கள்.

நிற்க, மேலே குறிப்பிடப்பட்ட சித்தர்கள் வரலாற்றைச் செவிவழியானும் சிற்சில நூல் வழியானும் கிடைத்துள்ளபடி தற்போதைக்குக் குறிப்பிட்டு வைத்துக்கொண்டு பின் தக்க ஆதாரங்கள் கிடைத்த காலத்தில் அவற்றை ஆராய்ந்து சித்தர் ஒவ்வொருவரின் சரித்திரத்தில் கூட்டிக் கொள்வோமாக.

ஆதியந்தமற்ற காலத்திலும் இடத்திலும் தோன்றிய சித்தர் பலராவர். ஆராய்ச்சியாளருக்குத் தெரிந்தவரை எல்லோருக்கும் முந்தியவர் அகத்தியராவர். சித்தர் நூல்களை ஆராய்ந்து அவர்களுடைய கொள்கையைக் கண்டவர்கள் .......

1. **மூலன் மரபு சித்தர்கள்**
2. **நந்தி மரபு சித்தர்கள்**

என இருவகையான சித்தர்கள் உண்டு என்பர். அவர்களும் மூலன் மரபு சித்தர்கள் மூலப்பிரகிருதியைக் கொள்பவர்கள் என்பர். மற்றையவர் சித்தாந்திகள் என்பது கூறாமலே விளங்கும். ஆகவே இவ்விருவகைச் சித்தர்கள் என்று குறிப்பிடவந்த தாயுமான அடிகளார் சித்தர்களைக் குறிப்பிடும் போது ...

" வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற
வித்தகச் சித்தர் கணமே'

என்று கூறியுள்ளது கருதத் தக்கதாம்.

## 1. அகத்தியர்

அகத்தியரைப்பற்றிக் குறிப்பிடாத புராணங்களே இல்லை எனலாம். இவர் கும்பத்திலிருந்து தோன்றியவர் என்பதால் கும்ப முனியென்றும், குறுகிய வடிவுடையவராதலால் குறுமுனியென்றும் வழங்கப்படுவது யாவரும் அறிந்ததே.

தமிழ் நூல்களில் காணப்படும் இவருடைய வேறு பெயர்கள்: ***வண்டமிழ் மாமுனி, கும்ப மாமுனி, சந்தநூல் தமிழ்தந்தவர், குறியோன், பைந்தமிழ் முனிவன், அறிவன், முத்தண்டமிழ் தேர்முனி, தமிழ்நர் கோமான், ஆதிமுனி*** என்பன அகத்தியரின் பெயர்களில் சில . இன்னும் வேறு பெயர்கள் கண்டால் கொள்க.

இவரை வேளாண் வகுப்பினராகச் சிலர் கருதுவர். பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்தவராகக் கொண்டால் அக்காலத்தில் சாதி பாகுபாடுகள் தோன்றியிருந்ததாகச் சரித்திர ஆதாரமில்லையாதல் பற்றி அத்தகைய கருத்துக்குத் தக்க சான்றின்மையை அறிக.

ஆதியநதமற்ற காலத்திலும் இடத்திலும் தோன்றிய பல சித்தர்களுக்கும், காலத்தால் முற்பட்டவர் அகத்தியரே என்பது ஆராய்ச்சியாளர் பலருடைய கூற்றாகும். அவர் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்தவராகக் கருதப்படுகிறது.

இவர் கடலைக் குடித்து வற்றச் செய்தவரென்றும், விந்தத்தின் இறுமாப்பை அடக்கியவரென்றும், பார்வதி பரமேசுவரர் திருமணத்தின் போது குழுமிய கூட்டங் காரணமாக உலகின் வடபாகம் தாழாது சமமாக இருக்கச் செய்யத் தென்திசை நோக்கிச் சிவனால் அனுப்பப்பட்டுத் தமிழ் நாட்டுக்கு வந்தவரென்றும், திருக்குற்றாலத்து மால் வடிவைக் குழைவித்து இலிங்கமாக்கி அன்று முதல் அத்தலத்தைச் சிவத்தலமாக்கியவரென்றும், முருகப்பெருமானிடம் தமிழ் கற்றவரென்றும், தென்பொதிகையில் இன்றும் என்றும் தங்கி வருபவரென்றும் நூல்கள் கூறுகின்றதை யாவரும் அறிவர்.

கந்தபுராண அசுர காண்டத்தில்....

1. **அகத்தியப் படலம்**
2. **கிரவுஞ்சப் படலம்**
3. **விந்தம் பிலம்புகு படலம்**
4. **வில்வலன் வாதாபி வதைப்படலம்**
5. **காவிரி நீங்கு படலம்**
6. **திருக்குற்றாலப்படலம்**

என்னும் ஆறு படலங்களில் அகத்தியர் வரலாறும், செயல்களும் பெருமைகளும் விவரிக்கப் பெற்றுள.

இவர் விதர்ப்ப நாட்டு மன்னனின் மகளாகிய உலோபா முத்திரை என்னும் கற்பரசியை மணந்து இல்லறத்திருந்தவராகக் கூறுவர். இவருடைய தவப்புதல்வரே புலத்தியராவார். புலத்தியரைத் 'திண்மை சான்ற சித்தன்' என்று சிறப்பித்துண்மையால் 'மகனுரைக்கும் தந்தை நலத்தை' என்பதற்கிணங்க தந்தையைப் போல மகனும் பெருஞ்சித்தனாய்த் திகழ்ந்தான்.

'திரிபில் சிந்தையன், தீதுநன் கிற்படா
ஒருமை கொண்ட வுளத்தன்நம் மன்பருள் பெரியன்'

எ எச் சிவபெருமானால் புகழப்பெற்றவர் அகத்தியர் என நூல்கள் கூறும். மேலே குறிப்பிட்ட வரிகளில் உண்மையான சித்தரின் இலக்கணமும் விவரிக்கப்பெற்றுள்ளதையும் காண்க.

*'நீண்ட தமிழால் உலகை நேமியி லளந்தான்'* என்றும்,

*'ஈசன் நிகராய் உலகு சீர்பெற இருந்தான்'* என்றும்,

*'என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டான்'*

என்றும் கம்பர் அகத்தியரைப் புக ழ்ந்து பாராட்டியுள்ளார். தமிழைச் சிறப்பிக்கும் விருப்புடைய கம்பர்....

"உழக்குமறை நாலினும் உயர்ந்துலக மோதும்
வழக்கினும் மதிக்கவியினும் மரபில் நாடி
நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ்ச் செங்கண்
தழற்புரைச் சுடர்க்கடவுள் தந்தமிழ் தந்தான்"

என்ற பாடலில் வேதத்தினும் சிறந்தது தமிழ் என்று கூறவிரும்பிக் கலக்கம் தரும் வேதம் என்று கூறி முருகக் கடவுளால் அருளப்பெற்ற தெள்ளிய தமிழ் என்று கூறாமற் கூறியுள்ள நயம் காண்கிறது.

அகத்தியர் தம்மைத் தேடிவந்து வணங்கி இராமபிரானுக்கு (திருமால்) மனமுவந்து பல மந்திரங்களை அருளிச் செய்து தம்மிட மிருந்த தெய்வீகம் பொருந்திய வில்லையும், கணைகள் நிறைந்த அம்பறாத் தூணியையும் தந்தருளி, இராவணனை வெற்றி கொள்ள ஆசியும் வழங்கினார் என்பது இராமாயணம் கூறும் அகத்தியருடைய பெருமையாகும்.

இவர் யோகப்பயிற்சியில் இறுதிப்படியாகக் கூறப்பெறும் சமாதி நிலையை அனந்தசயனம் என்னும் தலத்தில் எய்தியிருந்ததாக நூல்கள் கூறும். சில நூல்களில் கும்ப முனிவர் என்று தனிப்படக்கூறி அவர் சமாதி எய்திய இடம் திருக்குடந்தை என்னும் கும்பகோணம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் கும்பமுனி என்ற வேறொரு சித்தர் இருந்திருக்கலாமெஃறு எண்ண இடந்தருகிறது.

இவரியற்றியுள்ளதாகக் கூறப்படும் நூல்கள்:

*அகத்தியர் இருபத்தோராயிரம், அகத்தியர் பன்னீராயிரம், அகத்தியர் பரிபூரணம், அகத்தியர் ஆயுள் வேதம் (சித்தமறை) அகத்தியர் நயனவிதி, அகத்தியர் குணபாடம், அகத்தியர் இலக்கசௌமிய சாகரம், அகத்தியர் அமுதகலைஞானம், அகத்தியர் செந்தூரம் 300, அகத்தியர் வைத்திய காவியம் 1500* முதலியன.

இவர் இயற்றியதாகக் கூறப்படும் ஞான நூல்கள் பல. இவர் பெயரால் இயற்றப்பட்டுள்ள நூல்கள் அகத்தியர் கும்மி, அகத்தியர் பள்ளு, அகத்தியர் பிள்ளைத்தமிழ் போன்றவைகளாம்.

## 2. போகர்

போகர் சீன நாட்டைச் சேர்ந்தவர் என்பர். மண்பானை முதலியவை செய்யும் தொழிலர். (வேட்கோவர் குலத்தவர் என்னும் மற்றை நூல்கள். இவர் வாழ்ந்த காலத்தில் குலம், சாதி, மரபு என்ற பிரிவுகள் வேறூன்றாத காலம் என்பதை உணர்க) இவரை புத்த சமயத் துறவி, சீன யாத்திரீகராக நம்நாட்டுக்கு 1600 ஆண்டுகளுக்கு

முன்வந்து புத்தகயா, பாடலிபுத்திரம் முதலான இடங்களைத் தரிசித்துத் தமிழ்நாட்டுக்கு வந்தவர் என்றும் சிலர் கூறுவர். ஆனால் இவரது நூல்களின் வாயிலாக இவர் பலநாடுகளைச் சுற்றி பலப்பல மொழிகளைப் பயின்றும் அந்தந்த நாட்டின் சிறந்த கலைகளைப் பயின்று தேர்ச்சி பெற்றவர் என்பதை அறியலாம். இவர் தென் தமிழ் நாட்டில் பலகாலம் தங்கித் தாம் அறிந்தவற்றைப்பல சீடர்களுக்குக் கற்பித்தும் தாம் அறியாதனவற்றைத் தக்க ஆசான்களிடம் பயின்றும் வந்துள்ளவராகத் தெரிகிறது.

இவரிடம் மருத்துவம் முதலான கலைகளைக் கற்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பாடலாக இயற்றிப் போகர்நூல் என்றுபெயர் சூட்டி வழிவழியாகப் பற்பல அனுபவ முறைகளை அவற்றுடன் கூட்டி நூலைப் பெருக்கி வந்தனர். பின்னர் அச்சிடப் புகுந்தோர் அவை யாவற்றையும் திருத்தியும், மாற்றியும், கூட்டியும், குறைத்தும், அப்பழைய நூல்களை அடியோடு மாற்றிவிட்டனர் என்பர் பேரகராதி தொகுத்தோர்.

ஆனால் இவர் பதினெண் சித்தரில் ஒருவர் என்பது சித்தர் நூல்களில் கண்ட உண்மை. இவர் *போகர் நிகண்டு, போகர் கற்பம் முந்நூறு, போகர் ஏழாயிரம், போகர் வர்ம சூத்திரம், போகர் சரக்கு வைப்பு எண்ணூறு, போகர் வாசியோகம்* என்பன போன்ற பல நூல்கள் இயற்றியுள்ளார் என்பது தெரிகிறது. அந்த நூல்களின் வாயிலாக இவருடைய பாட்டனார் திருமூலனார் என்றும் இவருடைய ஆசான் காலாங்கி ாதர் என்றும் அறியக் கிடக்கின்றது. இவருடைய ஆசான் எனப்பட்ட காலாங்கிநாதரும் சீன நாட்டைச் சேர்ந்தவர் என்பது சிலநூல் கருத்து. இவருடைய புதல்வரே கொங்கண சித்தர் என்பதும் (*'கொங்கணர் த தை போகநாதர்' என்பதால் அறியலாம். கருவூரார் பலதிரட்டுக் காப்புச் செய்யுளைக் காண்க.*) இவருடைய சீடர் புலிப்பாணி என்பதும் பலநூல்கள் வாயிலாக நாம் அறியலாம்.

இவர் பல ஆண்டுகாலம் தம் சீடருடன் பழநியில் தங்கியிருந்து பல சித்து விளையாடல்கள் புரிந்துள்ளதாகவும் அக்காரணம் பற்றியே பழநிக்குச் *'சித்தன் வாழ்வு'* என்னும் பெயர் உண்டாயிற்றென்பதும் செவிவழி வரலாறு. இவருடைய மருத்துவ வல்லமையைக்காட்ட

வேண்டி பல பாடாணங்களையும் ஒருங்கு கூட்டி நீர் நெருப்பு முதலியவைகளுக்குக் கரைந்தும், புகைந்தும், உருகியும், ஆவியாகியும் போகாதவாறு திண்மையுறக்கட்டி, அக்கட்டைக்கொண்டே ஒரு பால தண்டாயுதபாணி சுவாமி திருவுருவச்சிலை செய்து வைத்தார் என்றும், அந்தப் படிவமே தற்போது பழநிமூலவராய்ப் பிரதிட்டை செய்யப்பெற்று இன்றும் நிலைத்து ஆன்ம கோடிகளுக்கு அருட்சுரந்து வருவதாகவும் கூறப்படுகிறது.

தஞ்சை பிரகதீச்சுவரர் கோயிலின் விமானத்திலுள்ள கபாலக் கல்லை ஏற்ற வகையறியாது தயங்கிய சிற்பிகளுக்குப் போகர் பஞ்சு மூட்டைகளை உபயோகித்து மேலே ஏற்றும் உபாயத்தை கூறினார் என்பது செவிவழி வரலாறாகும். ஆனால், பிரகதீச்சுவரர் கோயில் கட்டப்பட்ட காலம் பத்தாம் நூற்றாண்டாகும். அப்போது போகர் இருந்தார் என்பது பொருந்தாது.

போகர் உலகிலுள்ள பலநாடுகளுக்கும் சென்றுள்ளது போலச் சீன நாட்டுக்குப் பலமுறை சென்றிருந்தாரேயன்றி அவர் அந்நாட்டவர் என்பது முற்றிலும் தவறானதாகும். ஏனெனில் போகருடைய சமாதி பழநியில் இருப்பதனாலும் அச்சமாதிக்கு இன்றும் பூசை நடந்து வருவதாலும் இவரைச் சீன தேயத்தவர் என்று எண்ணல் பொருந்தாது. போகர் சமாதிநிலையில் பழநியில் இருப்பதாக இன்றும் கருதப்படுகிறது. சிலர் போகர் கதிர்காமம், திருச்செந்தூர், திருத்தணிகை, திருப்பரங்குன்றம் என்னும் இடங்களிலும் சமாதி நிலையில் இருந்தார் என்பதும் சிலநூல்களின் கருத்தாம். இதனால் மேற்கூறிய இடங்களில் போகர் சமாதி நிலையில் சிலகாலம் இருந்து இறுதியில் நிலைபெற்ற சமாதித்தலமாகப் பழநியைக்கொண்டுள்ளார் என்று கருத இடந்தருகிறது.

இவருடைய சமாதிக்கு இன்றும் *'புலிப்பாணி சாமியார்'* என்னும் ஒருவர் வழிவழியாக வழிபாடும், தொண்டும் செய்து வருவது - இவருடைய சீடரே புலிப்பாணி என்பது வலியுறுத்தப்பெறுகிறது.

இவருடைய நூல் எனப் போகர் சத்த காண்டம் என்ற 7000 பாடல் கொண்ட ஒரு நூல் அச்சாகியுள்ளது. ஆனால் அது உண்மையில்

போகர் இயற்றியதாக ஒரு சிலர் ஏற்பதில்லை. மேலே கூறப்பட்ட ஏழாயிரம் அன்றி வேறு ஓர் ஏழாயிரம் உளது. அதில் தற்போது முதல் மூன்றாயிரம் அச்சிடப்பட்டுள்ளது. 'போகர் சரக்குவைப்பு 800ல்' -நந்தி, காலாங்கி, சனகர், வியாக்கிரபாதர், பதஞ்சலி ஆகியவர்கட்கு வணக்கம் சொல்கிறார்.

போகர் இயற்றியதாகக் கூறப்பெறும் போகர் எழுநூறும், போகர் ஜனன சாகரம் என்ற நூலும் உண்மையில் போகர் இயற்றியன அல்ல, போகர் எழுநூற்றில் அந்நூலாசிரியர் 'விதமுற்ற போகரிஷி எனக்குச் சொன்னார்' என்றமையால் அதை இயற்றியவர் போகர் அல்லர் என்பதும் சித்தர்கள் மொத்தம் 18 பேர்கள் என்பதனால் இவர் சித்தர்களில் ஒருவர் 'அல்லர் என்பதும் தெரிகிறது. அடுத்ததாகக் கூறப்பெற்ற *போகர் ஜனன சாகரம்* என்ற நூலில்...

'விதமான துருக்கர் மதமொன்றுண்டாக்கி
நபி ரூபமாய் உலகுள் எங்குமானேன்'

என்று ஒரு பாடலில் வருவதால் அந்நூலை எழுதியவர் ஏழாம் நூற்றாண்டிலோ அதன் பின்னரோ வாழ்ந்தவராக இருத்தல் வேண்டும் என்பது தேற்றம்.

## 3. புலிப்பாணி

புலிப்பாணி போகரின் சீடர்களில் ஒருவர். இவர் பழநிமலை மீதுள்ள முருகனுக்கு ஒரு புலியின் மீதேறி ஒரு குடம் நீர் எடுத்துச் சென்று நீராட்டுவித்த காரணத்தால் '*புலிப்பாணி* என்ற காரணப் பெயர் அமைந்ததாக இவருடைய நூல் வாயிலாக அறியலாம். பழநிமலையிலுள்ள போகர் சமாதிக்கும், போகர் வைத்துப் பூசித், ாகக் கூறப்படும் சிவலிங்கத்துக்கும் பூசை செய்து வருபவருக்குப் 'புலிப்பாணி சாமியார்' என்ற பெயர் இப்போதும் வழங்கி வருகிறது. புலிப்பாணி இயற்றியதாகக் கூறப்படும் நூல்கள் யாவும் திரட்டு நூல்களே என்பதும்,

புலிப்பாணி சீனநாட்டவர் என்பதும், போகருடன் இவர் சீனநாட்டுக்கு மீளாமல் இங்கேயே தங்கிவிட்டார் என்பதும் பேரகராதியைத் தொகுத்தவரின் கருத்தாகும்.

*புலிப்பாணி ஐந்நூறு, புலிப்பாணி வன்மவிதி, புலிப்பாணி சாந்திமுறை, புலிப்பாணி சிதம்பர பூசா விதி, புலிப்பாணி பலதிரட்டு, புலிப்பாணி மாந்திரீக வைத்தியம்* என்பவை இவரியற்றிய நூல்களாம். இவரைப் பதினெண் சித்தரில் ஒருவராக எந்த நூலிலும் கூறப்படவில்லை. ஆதலால் இவர் நவசித்தரில் ஒருவராகக் கருதவேண்டுமென்றோ? *(நவசித்தர்-புதிய சித்தர்- பிற்காலத்தவர்)*

## 4. கொங்கணர்

கொங்கணர் போகருடைய திருமகனார். இவர் சேர நாட்டுக்கு வடபாலுள்ள கொங்கண நாட்டின் மாதரசிக்குப் போகருடைய அருளால் தோன்றியவர் என்பதும் கர்ண பரம்பரைக் கதை. இதைக் கருவூரார் தம் பாடலில் 'கொங்கணர் தந்தை போக நாதர்' என்று கூறுவதால் அறியலாம்.

கொங்கணர் பெயரால் வழங்கும் செவிவழி வரலாறு ஒன்று வருமாறு:

கொங்கணர் ஒருசமயம் தம்மீது எச்சமிட்ட கொக்கினைச் சினந்து நோக்க அக்கொக்கு உடனே எரிந்து நீறாகிவிட்டது. அவர் தம்முடைய வித்தையைத் தாமே வியந்து தருக்கிக் கொண்டிருந்தார். தருக்கால் சித்தின் திறம் அழியும் என்பதைத் தம் ஆணவத்தால் மறந்தார் போலும்! சிலநாள் சென்றபின் வழக்கம் போல ஒரு வீட்டின் முன் நின்று பிச்சைகேட்டார். அவ்வீடு திருவள்ளுவருடையது என்பதை அவர் அறியவில்லை. கொழுநன் பணிவிடையில் ஈடுபட்டிருந்த வாசுகியம்மையார் சிறிது காலந்தாழ்த்திப் பிச்சையிட்டார். வந்த கொங்கணர் பிச்சையைக் காலந் தாழ்த்தியிட்டமை காரணமாக

அவ்வம்மையைச் சினந்து நோக்கினார். ஆனால் அவருடைய கற்புத் தீயை இவரது பார்வை ஒன்றும் செய்யவில்லை.

தம்மை உறுத்துப் பார்த்த ஆடவனை எள்ளிப் பார்த்துக் குறுநகையுடன் *'கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா'* என்று கேட்டார். இதனைச் செவியுற்ற கொங்கணர் தம்மை விட சித்தியில் மேம்பட்ட நங்கையின் திறம் கண்டு நாணித் தாங்கொண்ட செருக்கினைக் கண்டு வருந்தினார்.

இவ்வரலாற்றில் கூறப்பட்ட கொங்கணர் திருவள்ளுவர் காலத்திலிருந்த முதலாம் நுற்றாண்டுக்கு முற்பட்டவராக இருக்க வேண்டுமென்றும், போகரின் மைந்தரான கொங்கணர் மிகவும் பிற்காலத்தவராக இருக்கவேண்டுமென்றுந் தெரிகிறது.

இவரியற்றிய நூல்கள்: *கொங்கணர் முக்காண்டம் (3000 பாடல்கள்), முக்காண்ட சூத்திரம், வைப்பு நூல், பட்சிணி, சரக்கு வைப்பு நூறு, நவக்கிரக சுக்கிஷம், கொங்கணர் வாக்கியம் பத்து, சூத்திரம் பதின்மூன்று, கொங்கணர் நாற்பது, கொங்கணர் எட்டு, கொங்கணர் தீட்சாவிதி* என்பன.

## 5. இடைக்காடர்

திருமால் இடைக்காடராகவும், நாமகள், ஔவையாராகவும், நான்முகன் திருவள்ளுவராகவும் அவதரித்தனர் என்பது புராணம் கூறும் செய்தியாகும்.

இடைக்காடர் மருத்துவ வல்லுநராக இருந்து காக்குங் கடவுளாகிய திருமாலைப் போலப் பல நோயாளிகளைக் காத்த இவரைத் திருமாலின் அவதாரமெனக் கூறினர்.

திருவிளையாடற் புராணத்தில் இடைக்காடன் பிணக்கு தீர்த்த படலம் என்னும் பகுதியில் இவர் பெருமையை உலகுக்குக் காண்பிக்க

ஒரு திருவிளையாடலே இயற்றினார் என்றால் இவர் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ?

இவர் சங்கத்துச் சான்றோருள் ஒருவராவர். குலசேகர பாண்டியன் தமிழிலக்கிய இலக்கணத்தில் வல்லவன் என்ற காரணத்தால் சங்கப் பலகை அவனுக்கு ஏற இடங்கொடுத்தது. அவன், கல்வியிற் சிறந்தவனென்று கேள்வியுற்ற இடைக்காடர் தம் நண்பராகிய கபிலருடன் சென்று தாம் இயற்றிய தமிழ்ச் செய்யுளை அம்மன்னன் எதிர் சென்று படித்துக்காட்டினார். பாண்டியன் பொறாமை கொண்டவனாய் அச் செய்யுளைக் கேட்டு வியவாமல் வாளா இருந்துவிட்டான். அவமதிப்புக்கு ஆற்றாத இடைக்காடர் சோமசுந்தரக் கடவுளிடம் *'சொல்வடிவாகிய அங்கயற் கண்ணியையும், சொற் பொருள் வடிவாகிய சோமசுந்தரக் கடவுளாகிய தங்களையும் இகழ்ந்தனன் அம்மன்னன்; எனக்கென்ன?'* என்று பிணக்குரை பகர்ந்தார். மற்ற வரலாற்றைப் புராணத்தைப் பார்த்து அறியலாம்.

## 6. கோரக்கர்

கோரக்கர் பதினெண் சித்தருள் தனிச் சிறப்பு வாய்ந்தவர். முதன் முதலாக உலகத்தவர்க்குப் பிணி தீர்க்கும் மருந்தாகக் *கஞ்சா*வை உபயோகிக்கும் முறையைக் கண்டு பிடித்து நஞ்சுக் குறிகள் தோன்றாவண்ணம் மன்பதைகளில் நோயைப் போக்கடிக்க வழிகண்டவர் என்பதும், தாம் கண்டு பிடித்த மூலிகைக்குக் 'கோரக்கர் மூலி' என்ற பெயர் வரக் காரணராய் இருந்தவராவர் என்பதும் இவருடைய பெருமையைப் பறைசாற்றுவதாகும். மற்றையச் சித்தர்களைப்போல இவரும் யோகம், ஞானம், வாதம், வைத்தியம் என்னும் பொருள்பற்றிப் பல நூல்கள் இயற்றியுள்ளார். இவரைக் கள்ளரினத்தவர் என்று சில நூல்கள் கூறும். இவர் பேரூர் என்னும் (தற்போது கோவை மாவட்டத்திலுள்ளது) கொங்குநாட்டுத்தலத்தில் யோகசித்தியாகிய சமாதி நிலையை அடைந்து அருவுருவாய் மக்களைக் காத்து வருகிறார் என்பது சிலநூல் காட்டும் சான்றுகளாகும்.

இவரியற்றிய நூல்கள்: *சந்திரரேகை இருநூறு, நமநாசத் திறவுகோல் நூறு, இரவிமேகலை எழுபானைந்து, முத்தாரம் தொண்ணூற்றொன்று, நாதபேதம் இருபானைந்து, தனித் தொகுப்புகள் ஒன்பது பாடல்கள், கோரக்கர் அட்ட கன்மம் நூறு, கோரக்கர் சுண்ண சூத்திரம்* என்பவை இவர் இயற்றிய சில நூல்களாம்.

## 7. பாம்பாட்டிச் சித்தர்.

இவர் அணிமாதி அட்ட சித்திபெற்று அதனால் யாதொரு ஆன்ம லாபமும் கிட்டாமை கண்டு ஞான மார்க்கத்தில் ஈடுபாடு கொண்டு சீவன் முத்தராகத் திகழ்ந்தவர். இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இவர் பெரும்பாலும் ஞான நூல்களையே இயற்றியுள்ளார். இவர் தவவலிமையால் தம் மனக்கண்முன் கூத்தப் பெருமானின் ஆட்டத்தையே அனவரதமும் காண்பவர். ஆதலால் இவர் கூறும் பாடல் யாவற்றிலும் *'ஆடு பாம்பே ஆடு பாம்பே'* என்று ஆடுகின்ற பாம்பை முன்னிலைப்படுத்தியே இசைப்பர். இக்காரணம் பற்றியே இவரைப் பாம்பாட்டிச் சித்தர் என்றனர் போலும்!

இவர் நஞ்சு முறிவு மருத்துவத்திலும், மந்திரத்திலும் மிக்க வல்லவர் என்று புகழ்ந்து கூறப்பெற்றுள்ளாரேனும் அதற்கு இலக்கியம் இவர் இயற்றியது யாதொன்றும் கிடைக்கவில்லை.

இவரைச் சிலர் ***பதஞ்சலி*** என்றும் ***நாகமுனி*** என்றும் கூறுவர்.

இவர் கோசாயி மரபினர் என்று சில நூல்களில் காண்கிறது. இவர் திருமுதுகுன்றத்தில் சமாதி கூடி இருக்கிறார் என்பது சித்தர் நூலின் முடிபு. இவர் திருஞாலம் என்னும் தலத்திலும், தண்டுவரை என்னும் துவாரகையில் சதாதி கூடி இருந்தார் என்பதும் சிலநூல் வாயிலாய் அறியப்படுகின்றது.

நாகமுனி இயற்றியதாக *சிரோரோக விதி*யென்றும், நயன ரோக விதி யென்றும் நூல்கள் கிடைத்துள.

## 8. அகப்பேய்ச் சித்தர்

இவரும் பாம்பாட்டிச் சித்தரைப் போல ஞான மார்க்கத்தில் மிக்க ஈடுபாடுடையவராவார் என்பதை இவருடைய நூலால் அறியலாம்.

இவர் தம் மனத்தைப் பேய் என விளித்து அறிவுரை யாற்றுவது போலத் தம் பாடல்களில் 'அகப்பேய்' எனக் கூறுவர். அக்காரணம் பற்றி இவர் இயற்பெயரை அறியாமல் அகப்பேய்ச் சித்தரென்று அழைக்கப்பட்டுள்ளார் எனத் தெரிகிறது.

இவர் வேளாள மரபினரென்றும் அழகர்மலையில் சமாதி நிலை பெற்றார் என்றும் சில நூல்கள் கூறும். சில நூல்கள் இவர் எட்டுக்குடியிலும், திருவையாற்றிலும் சமாதியில் இருந்ததாகவும் கூறும்.

## 9. குதம்பைச் சித்தர்

குதம்பைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர் ஆகிய இருவரைப் போல யோக சித்தி பெற்றவரேனும் ஞான மார்க்கத்தில் மிக்க ஈடுபாடுடையவர். இவர் தம் பாடலில் 'குதம்பாய்' என்று ஒரு மகடூஉ முன்னிலையைப் பலமுறை கூறுவர். குதம்பை என்பது பனையோலைச் சுருளுக்குப் பெயர். அதைப் பெண்கள் காதுகளில் அணிவது மரபு. அதை அணிந்தவளான பெண்ணே என்று பொருள் பயக்கும் வண்ணம் 'குதம்பாய்' என்று விளித்துப் பாடல் இசைத்தமையே இந்தச் சித்தருக்குக் குதம்பைச் சித்தரெனப் பெயரைத் தந்ததாகக் கருதப்படுகிறது.

இவர் பல்லாண்டு இல்லறத் துறவியாக இருந்து பின் அழகர்மலை என்னும் திருப்பதியில் சமாதி கொண்டுள்ளார் எனச் சில நூல்களில் காணப்படுகின்றன.

# 10. சிவ வாக்கியர்

சிவ வாக்கியர் ஒரு சித்தர் எனினும் பதினெண்மர் என்ற பட்டியல் கூறும் எந்த நூலும் இவர் பெயரைக் கூறுவதில்லை. ஆகவே இவரை நவகோடிச் சித்தருள் ஒருவராகக் கருதுகின்றனர். இவர் பாடல்களுக்குச் 'சிவ வாக்கியம்' என்று பெயராம். இவர் பாடல்கள் யாவும் மெய்ஞ்ஞான போதமாகிய உயரிய வேதாந்த கருத்துக்கள் மலிந்தவையாம். கீழ்வரும் பாடலொன்றே அதை விளக்கும் எடுத்துக்காட்டாம்.

நட்ட கல்லைத் தெய்வமென்று
நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணமுணென்று
சொல்லு மந்திரம் ஏதடா?
நட்ட கல்லும் பேசுமோ
நாதனுள் ளிருக்கையில்?
சுட்ட சட்டி சட்டுவம்
கறிச்சுவை யறியுமோ?

தத்துவம் அறியாப் பேதையர் மேற்படி பாடலை வைத்துக் கொண்டு சிவவாக்கியர் உருவ வழிபாட்டை வெறுத்து ஒதுக்கியவரென்றும், கடவுளுண்டென்னும்நம்பிக்கை இல்லாதவரென்றும் பலவாறாகக் கூறுவர்.

இப்பாடலில் ஆண்டவன் அல்லது கடவுள் ஆன்ம வடிவாக உன்னுள்ளேயே வீற்றிருக்கும்போது கல்சிலையை மந்திரங்கள் ஓதி நிறுத்தி பூ முதலியன சாத்தி உபசரித்து வழிபாடியற்றுவது ஏன்? அது தன்னை அறியாதவன் செய்கை யல்லவா? கறி சுட்ட சட்டியும் சட்டுவமும் கறிச்சுவை யறியாததுபோல நீயும் உன்னுள்ளே இலங்கும் ஆண்டவனையறியாது திகைத்து வேண்டாத வேலையெல்லாம் செய்து காலத்தை வீணாக்குகிறாயே. அதனால் நீயடையும் பயன்யாது? என்று வினவித் தெளிவுறுத்துகிறார்.

மேலே கூறிய பாடலுடன் கீழ்வரும் தாயுமான அடிகளார் பாடலின் அடிகளை ஒப்பு நோக்கின் இருவரும் ஒரே கொள்கையர் என்பது தெள்ளிதின் விளங்கும்.

"பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணே னலாமல் இருகைதான் குவிக்கவெனி
னாணுமென் னுளநிற்றி நீ
நான்கும் பிடும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யன் முறையோ!"

-தாயுமான அடிகள்

இவர் பாடல்களெல்லாம் கருத்தூன்றிக் கற்றுப் பயன்பெற வேண்டியவையேயாம். ஆனால் இவர் பாடலில் மெய்மருத்துவம் பற்றிய கருத்து யாண்டும் காண்டலரிது.

இவர் வரலாறு குறித்த சான்றுகள் ஒன்றும் இவர் பாடலில் கிடைத்திலது. ஆகவே இவருடைய வரலாற்றையறிதலரிது.

## 11. யூகி முனி.

பைந்தமிழில் இலங்கும் ஐந்து சிறு காப்பியங்களில் ஒன்றான பெருங்கதை என்ற நூலில் வத்சல மன்னனாகிய உதயணன் என்பவனுடைய முதலமைச்சனாக இருந்த யூகி என்பவரே முறைப்படி உபதேசங்கள் பெற்று துறவறம் பூண்டு யூகி முனிவர் என்ற பெயருடன் இருந்தார் என்பது சில நூலாசிரியர்களின் கருத்தாகும். இவர் அமைச்சராகப் பணியாற்றிய காலத்தில் இவருடைய இராஜ தந்திரத்துக்கு ஈடிணை இன்றித் திகழ்ந்தமை கொங்குவேள் இயற்றிய நூலாகிய பெருங்கதையைப் படிப்பவர் நன்குணரலாம். இவர் மருத்துவத்தில் பெரிய மேதை என்பதை இவரால் இயற்றப்

பெற்றதெனக் கூறப்படும் யூகி சிந்தாமணி என்னும் நூலைப் படிப்போர் நன்குணரலாம்.

இவர் யூகி வாதகாவியம் என்ற 3000 பாடல் கொண்ட ஒரு பெருநூலை இயற்றியுள்ளார். மேலும் *யூகி கரிசல், யூகி வைத்திய உலா, பூரணம் நூறு, மதிவெண்பா 120, வாத வைத்திய விளக்கம், வாதாங்க தீட்சை விதி 300* என்னும் ஆறு சிறு நூல்களும் இயற்றியுள்ளார்.

இவர் புலிப்பாணி சிவ வாக்கியர் போல நவகோடிச் சித்தர் வரிசையில் வைத்து எண்ணத்தக்கவராவர்.

## 12. அழுகணி சித்தர்.

அழுகணி சித்தர் பதினெண் சித்தர் வரிசையில் தப்பாது கூறப்படும் ஒருவராவர். இவருடைய இயற்பெயர் முதலிய வாழ்க்கை வரலாறுகள் ஏற்புடைவகையில் எந்த நூலிலும் காணக் கிடைக்கவில்லை. பாம்பாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர், குதம்பைச் சித்தர், ஆகியவர்களைப் போல எல்லாச் சித்தும் வல்லாராயினும் அவற்றால் ஆன்ம லாபம் இல்லாமையை அறிந்து ஞானமார்க்கத்தில் தன் வாழ்நாள்களைச் கழித்தவராகத் தெரிகிறது. இவர் பாடல்கள் யாவும் அழுகணி சித்தர் பாடல் என்னும் பெயருடன் விளங்குவன.

இவர் மக்களின் அறியாமை, மிடி, முனைப்பு, கீழ்த்தர வேட்கை, உயிரினங்களுக்குத் தீரா நோய்களான பிறப்பு - இறப்பு ஆகியவற்றைக் கண்டு மனம் புழுங்கித் தம் மனத்தில் எழுந்த உணர்ச்சி ததும்பும் சொற்களால் பாடல்கள் இயற்றியுள்ளார். அப்பாடல்களின் சந்த அமைப்பு பாடுபவரையும் தம்மை மறந்து அழவைத்துவிடும் ஆற்றலுடையவை. ஆகவே அத்தகைப் பாடல்களை இயற்றிய இவரை அழுகண்ணி சித்தர் என்று மக்கள் அழைத்தனர்.

இவரைச் சீன நாட்டினர் என்றும், மரவேலை, தங்கம், வெள்ளி, இரும்பு ஆகிய உலோக வேலை செய்யும் வகுப்பினர் என்று சில நூல்கள்

கூறும். இவர் அழகர் மலையில் சமாதி நிலை எய்தினார் என்று சில நூல்களும், நாகப்பட்டினத்தில் சமாதியடைந்தார் எனச் சில நூல்களும் கூறும்.

இவர் அழுகண்ணி என்ற அரிய மூலிகையின் பயன்களை முதல் முதலாகக் கண்டறிந்தவர் என்பது செவிவழி வரலாறாகும். இவர் எப்போதும் அடிக்கடி அழுங் கண்ணோடு இருக்கும் சித்தர்.

## 13. வால்மீகர்

வால்மீகர் வடமொழியில் இராமாயணம் இயற்றியவர் வேறு. இவர் வேடர் குலத்தவர். *வால்மீகர் நாடி சாத்திரம், வால்மீகர் பூதநாடி* என்ற இரு நூல்களை இயற்றியவர் வேறு.

## 14. காலாங்கி நாதர்

காலாங்கி நாதர் பதினெண் சித்தருள் ஒருவர். இவர் திருமூலரின் சீடர் என்றும், போகரின் குருவென்றும் சித்தர் நூல்கள் கூறும். இவரைச் சீன தேயத்தவர் என்றும், உலோகம், மரம் முதலியவற்றிலிருந்து சாமான்கள் செய்யும் விசுவ கன்ம வகுப்பைச் சேர்ந்தவர் என்று சில நூல்கள் கூறும்.

இவரே பாரசீகத்தில் சென்று தங்கி மிகவும் புகழ்பெற்ற கலே (Galae) ஆக இருக்கலாம் என்று கருதுகின்றனர். இவரை இடைச் சங்க காலத்தில் வாழ்ந்தவராகச் சில நூல்கள் வாயிலாக அறியக் கிடக்கின்றது.

நான்மறைகளுள் யசுர் வேதத்தின் இடையே காலாக்கினி உருத்திரம் என ஒரு மகாமந்திரம் உண்டு. அதனைக் கண்டவர் ஒரு காலாக்கினி என்ற பெயருடைய சித்தராய் இருக்கவேண்டு மென்பது

சிலர் கருத்து. உருத்திரக் கடவுளுக்குப் (சிவனுக்கு) பிரளய காலத்தில் காலாக்கினி என்ற பெயரோடு சோதிப் பிழம் பான தீவ வடிவம் ஒன்றுண்டென்பது வேதங்கள் நான்கும் கூறும் கருத்தாகும். ஆகவே அத்தகைத் தோற்றத்தைத் துதித்த மறையின் பகுதியே காலாங்கி உருத்திரம் எனப் பெயர் பெற்றது என்றும் அத்துதியை இயற்றியவர் பெயரும் காலாங்கியாக இருக்கலாமெனச் சிலர் கருதுகின்றனர்.

ஆகவே, காலாங்கிநாதர் என்ற சித்தர் இருவர் இருந்திருக்கலாம் என்று தெரிகிறது.

காலாங்கி நாதர் காஞ்சிபுரம் என்னும் திருக்கச்சிபுரத்தில் சமாதி எய்தியிருந்ததாகச் சில நூல்களும், திருக்கடவூர், திருப்பனந்தாள் ஆகிய தலங்களில் சமாதியானார் எனச் சில நூல்களும் கூறும். இவர் இயற்றியதாக யாதொரு மருத்துவ நூலும் இதுவரை கிடைத்திலது.

## 15. தன்வந்திரி.

திருமாலே பாற்கடலிலிருந்து சங்கு, சக்கரம், ஜலூகம் (அட்டை) அமிர்த கலசம் ஆகிய நான்கையும் தம் நான்கு கைகளில் ஏந்தியவராய் சர்வலோக ரட்சகனாக, சர்வ வியாதி போக்கும் தன்வந்திரி பகவானாகத் தோன்றினார் என்பது ஒரு புராண வரலாறு. இவர் சூரியனின் குமாரர்களான தேவ மருத்துவர் என்னும் அசுவனி தேவர்களுக்கு மருத்துவ மறையை உபதேசித்ததாகப் புராணங்களின் வாயிலாக அறியலாம். மொழிப்புலமை உள்ளோரைத் தெய்வப் புலவர் என்று சிறப்பிப்பது போலவும், கற்பிக்கும் ஆற்றலுள்ளவரை வியாழ பகவான் (பிருகஸ்பதி) என்று சிறப்பிப்பது போலவும், மருத்துவத்தில் மிக்க ஆற்றலுள்ளவரைத் **'தன்வந்திரி'** என்று கூறிச் சிறப்பிப்பது கண்டு, இவர் மருத்துவக் கலைக்கு ஒப்புயர்வற்ற மருத்துவக் கருவூலமென்று கருத இடமுண்டு. இவர் பன்மொழிப் புலவராக இருத்தல் வேண்டும். இவர் தமிழில் பல நூல்கள் இயற்றியுள்ளது போலவே வடமொழியிலும் பலநூல்கள் இயற்றியுள்ளார். இவர் தமிழில் இயற்றியதாகக் கூறப்படும்

பல நூல்கள் காலப்போக்கில் ஒழிந்து போயின. வடமொழி நூல்கள் பலவும் சேமமுற்றுள்ளன. இவர் இயற்றியதாகக் கூறப்படும் தமிழ் நூல்களில் தன்வந்திரி கருக்கிடை நிகண்டு என்ற நூல் குறிப்பிடத்தக்க தொன்றாகும். அந்நூலில் இவர் வடநாட்டவர் என்றும், இவருடைய வடமொழி நூல்களுள் சிலவற்றை இவரே தமிழிலும் இயற்றியுள்ளதாகக் கூறப்படும். அதன் ஆதாரப் பாடல்.

"என் தேயம் உத்திரதேயம்
நலம் புரிய என்னுடைய
கிரந்தம் சொன்னேன்
உள்ளிடா அதைப் பிரித்துத்
தமிழால் சொன்னேன் நாரணன்
என்போன் தட்சிணாயன்
நாமான ஆயிரத் திருநூ றென்றே!"

இதுவரை கிடைத்துள்ளதான தமிழில் இவர் இயற்றிய நூல்களாவன:

*தன்வந்திரி தைலம் 500, தன்வந்திரி சிமிட்டு ரத்தினச் சுருக்கம் 360, தன்வந்திரி நிகண்டு, தன்வந்திரி வைத்திய காவியம், தன்வந்திரி கலைஞானம், தன்வந்திரி ஆயிரத்திருநூறு, தன்வந்திரி வைத்திய கருக்கிடைச் சூத்திரம் 200, தன்வந்திரி வைத்தியம் 200, தன்வந்திரி நாடி 72* என்பவைகளாம்.

இவரை ஆதி சைவ அந்தண குலத்தவர் என்றும் (குருக்கள்) இவர் வைத்தீசுவரன் கோயிலில் சமாதியோகம் பெற்றவர் என்றும் சில நூல்கள் கூறும்.

## 16. தட்சிணா மூர்த்தி.

எல்லாம் வல்ல சித்தராகிய சிவபெருமான் தென்றிசைக் கடவுளாகத் தோன்றி மிக்க இளைஞர் திருக்கோலத்தில் மிக முதிர்ந்த நால்வருக்கும் வாய்ப்பேச்சின்றி மோன உபதேசம் செய்தார் என்பது யாவரும் அறிந்த புராணக் கதை.

அத்தென்றிசைக் கடவுளின் பெயராகிய தட்சிணாமூர்த்தி என்ற பெயருடன் சித்த மருத்துவத்துக்கும் சித்தர்களின் யோகம், ஞானம், வாதம் என்னும் கலைகளுக்கு ஆக்கந்தரும் பனுவல் பல இயற்றியவர் ஒருவர் உண்டு. அவரைத் தன்வந்திரியின் பேரன் என்றும் பதினெண் சித்தர்களில் ஒருவரென்றும் மெய்ஞானத் திருமந்திரம் 1500-என்னும் நூல் கூறும். ஆனால் அதே நூலில்...

'வாலையடா சித்தருக்குத் தெய்வந்தானே'

என்று ஒரு பாடலிலும்,

'வான்மீகருக் குபதேசம் சொன்னதும் நானேயாகும்'

என்று ஒரு பாடலிலும், 'பதினெண்பேர் சித்தருக்கும் பார்க்கையிலே பாக்கியங்கள் வந்ததெல்லாம் வாலையாலே' என்று ஒரு பாடலிலும் கூறியிருப்பதைக் காண்போர் இவர் பதினெண் சித்தரில் ஒருவரல்லர் என்பதையும், இவர் வான்மீகிக்கு உபதேசித்தவர் அல்லர் என்பதையும் நன்கு அறியலாம். அகத்தியரையே தட்சிணாமூர்த்தியென்று சிலர் கருதுவாருமுண்டு.

இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூல்கள் - தட்சிணாமூர்த்தி நிகண்டு, தட்சிணாமூர்த்தி வைத்தியம் 600, வைத்திய காண்டம் 175, கற்பம், சுருக்கம், பெரு-அகவல், மெய்ச் சுருக்கம், வைத்திய சூத்திரம், காவியம் நாலு காண்டம், கரும காண்டம், நூற்றுப் பதினாறு, தீட்சை 50, பூசாவிதி, தட்சிணாமூர்த்தி பதினைந்து, தட்சிணாமூர்த்தி சகல கருமானத் திரட்டு என்னும் நூல்கள் இதுவரை கிடைத்துள்ள இவரியற்றிய நூல்களாம்.

## 17. பிண்ணாக்கீசர்

பிண்ணாக்கீசரைக் கன்னட இடையர் மரபினரென்றும், நாங்குனேரி என்னும் இடத்தில் சமாதியடைந்தார் என்றும் சில நூல்கள் கூறும். புண்ணாக்கீசர் என்பது உலக வழக்குப் பெயராகும்.

மச்சமுனி தம்முடைய நூல்களில்காப்புச் செய்யுட்களில் பிண்ணாக்கீசருக்கு வணக்கம் தெரிவிப்பதைக் காணும்போது, காலாங்கிநாதர் போகருக்குக் குருவாவதுபோல் இவர் மச்சமுனிக்குக் குருவாய் இருந்திருக்கலாம் என்று சிலர் கருதுவர்.

பிண்ணாக்கு என்பதைப் பிளவுபட்ட நாக்கு என்று கொண்டு அதனைச் சிறப்பாக உடையது பாம்பு; ஆகவே பிண்ணாக்கீசர் என்பது பதஞ்சலியாரையே குறிக்குமென்று கூறுவாரும் உளர். தற்போது இவரால் இயற்றப்பட்ட நூல்கள் எதுவும் கிடைக்கவில்லை.

எதிர்காலத்திற்கு ஈசர் என்பது ஒரு பொருள். இவர் மருந்து கொடுத்து நோயை நிச்சயமாகத் தீர்க்கக்கூடிய, அளவு, நேரம் முதலியவற்றை நன்கறிந்தவர் எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

## 18. ஊனர், கண்ணர்.

ஊனர், கண்ணர் ஆகியவர்களைப் பற்றிய வரலாற்று விபரம் யாதும் கிடைத்திலது. சில நூல்களில் ஊனக் கண்ணர் என்ற ஒருவராகவும், சில நூல்களில் ஊனர், கண்ணர், எனப் பிரித்து இருவராகவும் கூறப் பெற்றுள்ளது. இவர்கள் இயற்றிய நூல்கள் உள என்பர். ஆயினும் இதுவரை ஒன்றும் கிடைத்தில.

## 19. பூனைக் கண்ணர்.

பூனைக் கண்ணருடைய கருவிழியின் வண்ணம் இந்நாட்டினதுபோல் இல்லாமல் பூனைக்கண் போன்று இருந்த காரணம் பற்றி இவ்வரைப் பூனைக் கண்ணர் என்றனர் போலும். இவர் கண்ணைப் போலவே மேலை நாட்டவர் கண் இருக்கும் காரணத்தால்

இவரை மேலை நாட்டவர் எனக் கருதுவர். சில நூல்கள் இவரை எகிப்து நாட்டைச் சேர்ந்தவர் என்றும் அவர் தமிழகம் போந்து சித்தர்ஒருவரிடம் முறையாக யோகம், ஞானம், வாதம், வைத்தியம் என்னும் நான்கு பகுதிகளையும் முறையே ஓதிப் பின்னர் தம்முடைய நாட்டுக்குத் திரும்பி அங்கு வாழ்ந்துவரும் மக்களுக்கு உளப்பிணி, உடற்பிணி ஆகியவற்றை தீர்த்து, தொண்டு செய்து எகிப்திலேயே சமாதியுற்றார் என்று நூல்கள் கூறும். இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூல் யாதும் நம் நாட்டில் கிடைக்கவில்லை; எகிப்து நாட்டில் எங்காவது இருக்கலாம்.

## 20. மச்சமுனி

மச்சமுனி நவநாதசித்தரில் ஒருவரென்றும், பதினெண்மரில் ஒருவர் என்றும் சித்தர் நூல்களில் காணலாம். இவர் மச்சதேயத்தைச் சேர்ந்தவர். அத்தேயத்தை விராடபுரம் என்பாரும் உண்டு. இவர் பரதவர் குலத்தவர் (செம்படவர்) என்று சிலர் கூறுவர். இவர் திருப்பரங்குன்றில் சமாதி கூடியுள்ளார் என்றும் திருவானைக்கா, மயிரேசகம் என்னும் தலங்களில் சமாதி பெற்றார் என்றும் நூல்களில் காணப்படுகிறது.

சிலர் மச்சக் கொடியை உடையவனாகிய ஒரு பாண்டிய மன்னன் சித்திகள் கைவரப்பெற்று முனிவ்ராய்த் திகழ்ந்திருக்கக் கூடுமென்றுங் கருதுகின்றனர்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் பெருநூல் எண்ணூறு என்ற தலைப்புடன் எட்டு நூல்கள் உண்டு என்பர். அவற்றுள் ஒரு நூல் திருமந்திரம் எண்ணூறாம். இது சரக்கு வைப்பைக் கூறும். தற்போது ஓலைச் சுவடியாக மூன்று பெரு நூல்கள் கிடைத்துள. அவற்றுள் ஒன்று சரக்குவைப்பை விவரிக்கும் நூலாகவும், மற்றது மைவித்தை, ஜாலவசிய மந்திர நூலாகவும், மூன்றாவது வாதம், மந்திரம், யோகம், வரலாறு ஆகியவற்றைக் கூறுவதாகவும் அமைந்துள்ளது. இவையாவும் இன்னும் அச்சேறவில்லை.

இவர் இயற்றிய பெருநூல் ஒன்றில் தாம் மச்சத்தேயத்து அந்தணர் வகுப்பில் தோன்றியவராகக் கூறியுள்ளார். ஆகையால் இந்த அகச் சான்றால் இவர் பரதவர் குலத்தவரல்லர் என்பது தெளிவாகிறது.

மச்சமுனி எட்டு, மச்சமுனி பாடல்கள் , மச்சமுனி நிகண்டு, என்னும் நூல்களும் இவரியற்றினவாக அறியக் கிடக்கின்றது.

## 21. பிரம முனி.

பிரமமுனிவரைப் பதினெண் சித்தரில் ஒருவராகப் பலர் கருதுவர். ஆனால் அவரியற்றிய கருக்கிடைச் சூத்திரம் என்னும் நூலில் அவர் பதினெண் சித்தர் வணக்கம் கூறுவதால் இவர் பதினெண் சித்தரில் ஒருவராக இருக்க முடியாதென்று துணிந்து கூறலாம். ஆகவே இவரும் புலிப்பாணி, சிவவாக்கியர், யூகிமுனி என்பவர்களைப் போல நவகோடி சித்தர் வரிசையில் வைத்து எண்ணத் தக்கவராவார். இவரைச் சில நூல்களில் பிரமரிஷி என்பர். இவரே கமலமுனி என்பாரும் உளர்.

இவரியற்றிய நூல்கள் பிரமமுனி கருக்கிடைச் சூத்திரம், பிரமமுனி 800, பிரமமுனி வைத்தியம் 800, பிரமமுனி வைத்தியம் 360, பிரமமுனி சாத்திரம், பிரமமுனி ஐம்பது, பிரமமுனி 350, பிரமமுனி ஊழிக்காற்று, பிரமமுனி, சூத்திரம் என்னும் நூல்கள் இவரியற்றியவற்றுள் கிடைத்துள்ளனவாகும்.

## 22. திருவள்ளுவர்.

திருவள்ளுவருடைய உண்மையான வரலாறு நமக்குக் கிடைத்திலது. இவரைப்பற்றி வழங்கும் கதைகள் பல உள.

இவர் இயற்றிய நூல் தமிழ் மறையாகிய திருக்குறள் எனப்படும். அதிலுள்ள 'மருந்து' என்னும் அதிகாரத்தில் இவர் இயற்றியுள்ள பத்துத் குறட்பாக்களே மருத்துவத்தின் பெரிய விளக்கமாக அமைந்துள்ளது.

இவர் நெசவுத் தொழில் செய்து வாழ்ந்தார் என்பர். இவருடைய இல்லத்தரசியார் வாசுகி அம்மையார் என்னும் கற்பரசியாராவர். தம் கணவரைப் போலவே இவரும் முக்காலமும் உணர்ந்த பெரிய சித்தராவார். இவ்வுண்மையைக் கொங்கணர் பற்றிய கர்ண பரம்பரைக் கதையால் உணரலாகும். இவருடைய நண்பர் ஏலேல சிங்கர் என்ற கப்பல் வணிகர்.

அத்தகைய பெருந்தகையார் பெயரால் **'ஞான வெட்டியான்'** என்ற நூல் ஒன்று வெளிவந்துள்ளது. அந்நூல் பதினெட்டுச் சித்தர்கள் என்ற தொகைப் பெயர் பல இடங்களில் காணப்படுகிறது. ஆனால் பதினெண்மரின் பெயர்கள் விரிவாக யாண்டும் காணப்படவில்லை.

ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தேவாரங்களும், ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய மாணிக்க வாசகருடை திருவாசகமும், பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய கம்பர் பனுவலும், பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த அதிவீரராம பாண்டியன் நூல்களும் மேற்படி ஞான வெட்டியான் பாடல்களில் குறிப்பிடப் பெற்றுள்ளன. உதாரணமாக 579 ஆம் பாடலைக் காண்போர்க்கு இது நன்கு விளங்கும். ஆகவே இந்நூலின் ஆசிரியராகிய திருவள்ளுவர் 16 ஆம் நூற்றாண்டுக்கு மிகமிகப் பின் தோன்றியவராக இருக்க வேண்டுமென்பது ஆராய்ச்சியாளர் துணிபு.

பதினேழாம் நூற்றாண்டில் பிராமணர்களுக்குப் பலர் ஆதரவு கிடைத்து அவர்கள் யாவரும் செல்வந்தர்களானார்கள். அதனால் அவ்வினத்தார் முயற்சியற்றவர்களானார்கள், அவர்கள் நலம்குன்றி வீண் பெருமை பேணி வந்தார்கள். ஆகவே மற்ற இனத்தவர் யாவரும் அவர்களுக்கு எதிரிகளாயினர். அனேக நூல்கள் பிராமணீயம் என்னும் வறட்டு ஜம்பத்தைக் கண்டித்து எதிர்ப்பு நூல்கள் தமிழ் நாட்டில் கிளம்பின. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை ஞான வெட்டியான் என்ற நூலும் கபிலரகவல் என்ற நூலுமாகும். மேற்படி இருநூல்களின் ஆசிரியர்களாகிய திருவள்ளுவரும், கபிலரும் சங்க காலத்தவரல்லர். 17 ஆம் நூற்றாண்டவர் என்பது தேற்றம். வேமன்னா என்ற கவிவாணரும தெலுங்கு மொழியில் பிராமணர்களின் வறட்டு ஜம்பத்தைக் கண்டித்துத் தம் நூலில் எழுதியுள்ளார். அவரும் 17 ஆம் நூற்றாண்டுப்

புலவரேயாவார். திருக்குறள் இயற்றிய திருவள்ளுவரைக் கூட எந்த நூலும் பதினெண் சித்தர் வரிசையில் குறிப்பிடவில்லை. ஆகவே இவரும் நவகோடி சித்தர் வரிசையில் ஒருவராகக் கொள்ளலாம் என்பது சிலர் கருத்து.

## 23. உரோம ரிஷி.

உரோமரிஷி, உரோம் நாட்டிலிருந்து நம் நாட்டுக்கு வந்து தங்கி சித்தர்களின் உபதேசம் பெற்றுச் சித்திபெற்றவராக இருக்கலாம் என்று கருதப்படுகின்றது. இவருடைய குரு புசண்டர் என்று இவர் நூலில் கூறியுள்ளார். அந்த உண்மைகளைத் தம்பரத்திலெனையாண்ட புசுண்டர் பாதம் சதாநிதம் பூசைபண்ணி, என்றும், 'என்குருவாம் புசுண்டரது கிருபையாலே', உண்மையென்ற சூதமது கிடைக்காவிட்டால், உத்தமனே பறங்கிவைப்புலிங்கமாகும் என்றமையால் அறியலாம். இவர்பெயர் 'உரோமசன்' என்றும் சிலர் கூறுவர்.

இவரியற்றிய நூல்கள் உரோமரிஷி வைத்தியம் 500 இந்நூலில் வாதமுறைகள் பல காணப்படுகின்றன. உரோமரிஷி பதினாறு, முப்பது, ஐம்பத்தொன்று எனச்சிறு நூல்களும், ஞானம் 16, காவிய சூத்திரம் 16, சூத்திரம் 21, உரோமரிஷி சுருக்கம், உரோமரிஷி ஊழிக்காற்று, உரோமரிஷி குறுநூல் ஐம்பது என்பவை இவரியற்றிய நூல்களிற் சில.

இவர் பெயரால் '**உரோமரிஷி மருந்துமுறைகள்**' என்ற தொகைநூல் உள்ளது.

## 24. கருவூரார்.

கருவூரார் திரிசிரபுரம் மாவட்டத்திலுள்ள கரூரைச் சேர்ந்தவராவார். வெண்கலம், தாரா, பித்தளை, தாம்பிர வேலை செய்யும் விசுவகன்மா மரபினர் என்று சில நூல்கள் கூறும். இவர்தாம் தோன்றிய கருவூரிலேயே சமாதி கூடியுள்ளார் என்பது சில நூலாசிரியர் கருத்தாகும். சிலர் இவர் **சீகாளத்தியில்** சமாதி பெற்றார் என்றும்

கூறுவர். இவர் பக்தி பாடல்கள் பல இயற்றியுள்ளார். இவர் பல தல தரிசனம் செய்துள்ளார். ஒருசமயம் இவர் திருநெல்வேலி சென்று நெல்லையப்பரையும் காந்திமதி அம்மையாரையும் தரிசித்து மானூரில் தங்கியிருந்தார். அங்கு இவர் தங்கியிருந்த போது நெல்லையப்பரும் காந்திமதியம்மையாரும் இவருக்கு நடனக் காட்சியைக் காட்டிருளினார் என்று நெல்லைத் தலபுராணம் கூறும். அதற்கிணங்க அந்த நிகழ்ச்சியை ஆண்டுதோறும் ஆவணி மூலத் திருவிழாவாக மேற்படி திருக்கோயிலில் கொண்டாடப்பெற்று வருகிறது.

இவர் திருவிசைப்பா ஆசிரியருள் ஒருவராவார். இவர் ஆதித்த சோழன் காலத்தவர். அவர் மகன் பராந்தக சோழன் மதுரையும் ஈழமும் கொண்டனாவான். இவர் போகரது சீடர் என்றமையால் போகரும் 9 ஆம் நூற்றாண்டில் பழநியில் இருந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

இவருடைய பாடல்களில்,

'நாடுகின்ற காவுதன்னில் வாசம் செய்யும்
நல்லபதி னெண்மர்தம் பாதம் போற்றி'

'என்குரு போகநாதர் முன்னம்
இனிமையுடன் சொன்னதிது'

'சிகரங்கள் பொருந்திய ஆள்போக நாதர்மகன்
கொங்கனோடு வரையில் இருக்கிறார்'

'கூறுவேன் குருபோகர்தன் பாதமே
சட்டமுனி தானிருந்த கைலாயர்நாடு'

'அந்தரோமன் பொன்னெடுத்து சிரசில்
அன்பான நகைபோலவே பொதிய'

என்னும் அடிகளால் இவர் பதினெண் சித்தர் ஒருவரல்லர் என்பதும் இவரது குரு போகர் என்றும், போகர் மகன் கொங்கணர் என்றும், சட்ட முனி கைலாச நாட்டைச் சேர்ந்தவரென்றும், அவர் காலத்தில் உரோமன் பொன் நாணயங்கள் வழங்கி வந்தனவென்றும்

விளங்குகின்றது. ***கருவூரார் பலதிரட்டு, கருவூரார், அட்டகன்மம் நூறு, கருவூரார் வாத காவியம், கருவூரார் பூசாவிதி*** என்னும் நூல்கள் இவர் இயற்றிய நூல்களாம்.

## 25. தேரையர்

தேரையர் பதினெண் சித்தரில் ஒருவரல்லர். இவர் பெயரைப் பற்றிப் பற்பலவிதமான கருத்துகள் மக்களிடையே உலவிவருகிறது.

ஓயாத மண்டையிடி உடையவன் மண்டை ஓட்டைத் தகர்த்து உள்ளேயிருந்த தேரையை நீக்கினதால் *தேரையர்* என்ற பெயர் சூட்டப் பெற்றதாகக் கூறப்படும். இப்பெயரை வடமொழில் *'மண்டூக மகரிஷி'* என்று மொழி பெயர்த்து அதை மிக்க உயர்வாகக் கருதி வழங்கியும் உள்ளனர்.

இவர் நூலில் தாம் தருமசௌமியரின் சீடரெனக் கூறிக்கொள்ளும் காரணத்தால் இவரும், இவருடைய குருவைப்போல ஒரு சமணத் துறவியென்பது சிலர் கருத்தாகும். இவர் மருத்துவக் கலையிலும் பலமொழிகளிலும் கற்றுத் தேர்ச்சி பெற்றவர் என்ற காரணம் பற்றித் தேரர் என்று பெயர் வந்ததென்பதும் சிலர் கருத்தாகும்.

பாலி மொழியில் தேரன் என்ற சொல் பௌத்த துறவிகளைக் குறிக்கும். ஆதலால், இவர் ஒரு பௌத்த துறவி என்றும் சிலர் கருதுகின்றனர். இவர் வாழ்ந்த காலத்தில் தேரன் என்ற பெயருடைய பலர் இருந்ததாகவும் தெரிகிறது. இவரால் இயற்றப்பெற்றவை எனக் கூறப்படும் நூல்கள் இருதரத்தனவாக உள்ளன.

* ஒருவகை நூல்கள்:

தேரையர் கரிசல்,
தேரையர் காப்பியம்,
தேரையர் யமகம்,
சிகாமணி வெண்பா

போன்றவை உயர்ந்த இலக்கிய இலக்கண நயம் பொருந்தியனவாக உள.

* அதற்கு மாறாக மற்றொரு வகை நூல்கள்:

தேரையர் வைத்திய காவியம் 1001,
தேரையர் வாகடம்,

என்பவை இலக்கண வரம்புக்கடங்காத பாடல்கள்போல இருக்கின்றன. ஆகவே மேற்படி நூல்களை ஒருவரே இயற்றினார் எனக் கூறற்கு இடந்தரவில்லை என்று சிலர் கருதுவர். நளவெண்பா இயற்றிய புகழேந்தியார், அல்லியரசானி மாலை இயற்றவில்லையா! அதுபோல யமகமும், சிகாமணி வெண்பாவும் இயற்றிய அதே தேரையரே தேரையர் வைத்திய காவியம் 1001, தேரையர் வாகடம் ஆகிய நூல்களையும் இயற்றியிருக்கலாம் என்று கருதுகின்றனர் சிலர். இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூல்கள்

சிகாமணி வெண்பா நிகண்டு சேகரப்பா
தேரையர் காப்பியந்தரு நாடக மந்தாதி
மிகாவண்ணம் நாண்மாலை யமக வெண்பா
விளங்கெதுகைப் பாவிவை யெல்லோரு மெச்சும்
மகாமகிமைக் கரிசலெனு முறையீ ராறும்
வேதாந்த சித்தாந்த வைத்ய வாத
முகாதியினு மசையாத விரிவுள் வேத
முத்தமுமாய் விளங்குமிஃ துண்மை தானே

மேலே கூறப்பட்ட பாடலின்படி தேரையர் இயற்றியவை யாகக் கூறப்படும் நூல்கள்:

1. சிகாமணி வெண்பா
2. நிகண்டு
3. சேகரப்பா
4. காப்பியம்
5. தரு
6. நாடகம்
7. அந்தாதி

8. மிகாவண்ணம்
9. நாண்மாலை
10. யமக வெண்பா
11. எதுகைப் பா
12. மகா கரிசல்

என்ற பன்னிரண்டு நூல்களேயாம் ஆயினும்....

1. நீர்நிறக்குறி நெய்க்குறி
2. தைல வர்க்கச் சுருக்கம்
3. தினக்கிரமாலங்காரம்
4. சிகிச்சைக் கிரமம்
5. நோய் மருந்தளவை
6. பிரதான குணமூலித் தரு
7. வைத்தியப் பள்ளு
8. மருத்துப் பாரதம்
9. குணபாட வெண்பா

என்னும் ஒன்பது நூல்களையும் சேர்த்து மொத்தம் 21 நூல்கள் செய்துள்ளார் என்பர். இவற்றைக் குறிக்கும் தொகைப்பாடல் இல்லை. மேலே கூறப்பட்டவை தவிர இவரியற்றியதாக

* *தேரையர் ஐந்நூறு,*
* *தேரையர் வைத்திய காவியம் 1001,*
* *தேரையர் 1500*

என்றும் சில நூற்கள் வெளிவந்துள்ளன. இவரியற்றிய மகா கரிசல் என்னும் நூலில் ஐந்தாம் பாடலில்...........

**'உத்தமஞ்சி வாடுசுமி நூவென**
**வேமனர் வடுகில் உரைத்தல் போல'**

என்று வேமன்ன வென்னும் தெலுங்கு மொழிப் புலவரை சுட்டுவதால் இவரும் வேமன்ன வென்பவரும் ஒரே காலத்தவராகவோ சற்று

பிற்பட்டவராகவோ இருத்தல் வேண்டுமென்று அகச்சான்று வலியுறுத்துகின்றது.

இவர் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம், வடசொல் ஆகிய மொழிப் புலமையும், சோதிடம், ஐம்புள் சாத்திரம், கன்ம காண்டம், அளவை, சாங்கியம், வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய அறிவியல் நூல்களில் மிக்க தேர்ச்சி பெற்றவர் என்பது இவருடைய நூலைக் கற்பவர்க்குத் தெள்ளிதின் விளங்கும். மருத்துவத்தின் நால்வகை அமைப்பாகிய யோகம், ஞானம், வாதம், வைத்தியம் என்னும் நான்கிலும் உள்ள உட்பிரிவுகளில் நல்ல ஆய்வுத் திறனுடன் கூடிய புலமை பெற்றவராக இவருடைய நூல்கள் மிளிர்கின்றன.

இவருடைய ஞானாசிரியன் தரும சௌமியரென இவருடைய நூல் வாயிலாகத் தெரிகிறது. இவருடைய சீடர் யூகி முனிவர் என்பது யூகி சிந்தாமணி 800, என்னும் நூலால் அறிவிக்கப்படுகிறது. ஆயினும் தேரையர் நூலில் புலத்தியரின் சீடர் தரும சௌமியர் என்றும், தருமசௌமியரின் மாணாக்கர் தேரையர் என்றும் கூறியுள்ளமை சிந்திக்கற்பாலது.

தேரையர் தொண்டைவள நாட்டில் பாலியாற்றின் வடகரையிலுள்ள திருமலைச்சேரி என்னும் சிற்றூரில் உதித்தவர். இவருடைய தந்தையார் நம்பி பூபதி என்பவர். இவர் இதிகாசங்கள் இரண்டில் பாரதத்தில் மிக்க ஈடுபாடுடையர் என்பது இவரியற்றிய மருத்துப் பாரதம் என்ற நூலால் அறியலாம்.

இவரியற்றியதாகக் கூறப்பட்ட நூல்களில் நிகண்டு, நாண்மாலை, சிகிச்சைக் கிரமம், நோய் மருந்தளவை போன்ற முக்கியமான நூல்கள் கிடைக்கவில்லை. அவை கிடைத்து விட்டால் சித்த மருத்துவத்துக்கு யாதொரு குறைபாடுமின்றி நிறைவு பெறும். அந்நூல்கள் எவர் கையில் புகுந்து எங்குள்ளனவோ?

இவரியற்றிய நூல்களின் காப்புச் செய்யுட்களில் பதினெண் சித்தர்களுக்கு வணக்கம் செய்துள்ளமை இவர் பதினெண் சித்தரில் ஒருவரில்லை என்று நிரூபிக்கிறது.

எடுத்துக்காட்டு:

"பயப்படு பிரசமுன் பழகு மைச்சுரம்
பயப்படு மாறெனப் பதினெண் சித்தர்தாள்
செயப்படு பொருளினிற் சேர்க்கு முன்னமே
செயப்படு மிதற்கொரு திருகின் றாமரோ"

-பதினெண் சித்தர் துதி-மகாகரிசல்- தேரையர்

இவரும் ஒரு நவ சித்தர் என்றே கூறல் அமையும்.

## 26. திருநந்தி தேவர்

சைவ சமயத்தினர் யார்க்கும் திருநந்தி தேவர் புதியவர் அல்லர். இவரைப்பற்றி அறியாதார் யாரும் இருக்க முடியாது.

இவரே-சிவன் உமைக்கு உபதேசித்த யோகம், ஞானம், வாதம், மருத்துவம், மந்திரம், சாத்திரம், தோத்திரம் யாவற்றையும் பூவுலகுக்குத் தம் சீடர்கள் வாயிலாகப் பரவச் செய்த பேருபகாரியாவார். இவ்வுண்மை எந்தச் சித்தர் நூலைப் புரட்டினாலும் முதற் வரிசைப் பாக்களிலேயே தெள்ளிதின் விளங்கும். இதனை,

"சொல்லிடவே தேவிக்குச் சதாசிவன்றான்
சொல்லவே தேவியும் நந்திக்குச் சொல்ல
நல்லிடவே நந்திதன் வந்திரிக்குச் சொல்ல
நயமுடன் தன்வந்திரி யசுவனிக்குச் சொல்ல
அல்லிடவே யசுவனியாத் தேவர் தாமும்
அகத்தியர்க் குரைத்திடவே யம்மு னீந்திரன்
புல்லிடவே புலத்தியர்க் குபதே சிக்க
புலத்தியரும் தேரையற்குப் புகன்றிட் டாரே"

- யூகி வைத்திய சிந்தாமணி எண்ணூறு

என்னும் இப்பாடலால் அறியலாம்.

நந்தி தேவர் இம்முயற்சியில் ஈடுபடாமற் போனால் உலகுக்கு மேலுலக நலன்கள் பரவாது நின்றுவிடும் அல்லவா! ஆகவே அவரே எல்லாச் சித்தர்களுக்கும் முதற்குருவாக மதிக்கத்தக்கவர்.

அஃதன்றியும் அவரே பூவுலகில் அந்தணர் குலத்தில் பிறந்து தவஞ்செய்து ஈசன் உமையம்மை ஆகியவர்களின் பேரருளால் பல கலைகளையும் உபதேசம் பெற்று உலகிலுள்ள பல முனிவர்களுக்கு உபதேசித்துத் தான் ஆற்ற வேண்டிய பணி முழுமையடைந்தபின் காசி என்னும் புனித நகரில் சமாதி எய்தினார் என்பது சில நூல் வாயிலாக அறியலாம்.

இவர் இயற்றினவாகக் கூறப்பெறும் நூல்கள் நந்தீசர் 300, நந்தியெட்டு, நந்தீசர் கருக்கிடை முதலியனவாகும்.

## 27. புலத்தியர்.

புலத்தியர் அகத்தியர்க்கும் உலோபா முத்திரைக்கும் தோன்றிய பிள்ளையாவார். இவர் தம் தந்தையாரிடம் எல்லாக் கலைகளையும் முறைப்படி உபதேசமாகப் பெற்றுப் பல சீடர்களுக்கு அருளி வந்தார்.

சில நூல்களில் இவர் சிங்கள நாட்டிலே தோன்றியவராகவும் சகல சித்திகளையும் பெற்று மக்களுக்கு மிக்க உதவிபுரிந்து உரிய காலத்தில் யாழ்ப்பாணம் என்னும் தலத்தில் சமாதி கூடிவிட்டார் என்று காணப்படுகிறது.

இவரியற்றிய நூல்களில் 'புலத்தியர் வைத்தியம்' என்ற நூல் ஒன்றே இதுவரை கிடைத்துள்ளதாம்.

# 28. திருமூலர்

திருமூலர் சாலோகப் பதவிவை அடைந்த சங்குகன்னர் என்ற சித்தர் தம் உளக்கோட்பாட்டின்படி ஈசனால் பூவுலகுக்கு அனுப்பப் பெற்றார் என்றும், அவர் அகத்தியரைக் காண வரும் வழியில் சிதம்பரத்துக்கு அண்மையில் மாடு மேய்த்துக்கொண்டிருந்த ஓர் இடையன் காலன் கோட்பட அதைக்கண்ட ஆவினங்கள் வருந்தி ஓலமிட்டதைக்கண்டு பொறாமல் தம் ஆவியை அவ்விடையன் உடலில் செலுத்தித் தாமே இடையனுடலுடன் இயங்கி மாடுகளை ஓட்டிக்கொண்டு அவ்வவற்றின் இல்லங்களில் சேர்த்துவிட்டு யாண்டும் நில்லாமல் தில்லை, கூத்தப்பெருமான் ஆலயத்தில் யோக சமாதியில் ஆழ்ந்திருந்து ஆண்டுக்கொருமுறை நிட்டை நீத்து ஒரு மந்திரம் இயற்றியருளினார். இவ்வாறு 3000 திருமந்திரங்கள் எழுதியருளினார். இறுதியில் தம் குறிக்கோளுக்கிணங்க அகத்தியரைக் கண்டு சிலகாலம் அவருடைய ஆசிரமத்தில் தங்கி அளவளாவிவிட்டுத் தில்லை மீண்டு அவ்விடத்திலேயே சமாதி புகுந்தார்.

இவர் காலாங்கிநாதரைச் சீடராய் ஏற்று அவருக்கு எல்லாச் சித்திகளும் கைவர அருளிச் செய்தார். காலாங்கிநாதருடைய சீடராகிய போகர் திருமூலரைப் பாட்டன் என்று தம் நூலில் மிக்க உரிமையுடனும் அன்புடனும் உறவுகொண்டாடுவதைக் காணலாம்.

இவரியற்றிய நூல் திருமந்திரம் என்ற ஓர் ஈடிணையற்ற நூலாம். திருமூலர் வாதம் இருபத்தொன்று, திருமூலர் அறுநூற்றெட்டு, திருமூலர் வழலைச் சூத்திரம் முந்நூறு, திருமூலர் வைத்தியம், ஞானம், பலதிரட்டு என்ற நூல்களும் இவரியற்றியனவாகத் தெரிகின்றது.

# 29. சட்டநாதர்

சட்டநாதரைச் சட்டமுனி என்றும் சட்டநாதர் என்றுப கூறுவர் இவரைச் சிங்களவர் என்றும் சிலர் கூறுவர்.

இவர் பெருமையைப் புகழ்ந்து கூறும் கர்ண பரம்பரைக் கதையொன்றுண்டு.

இவர் பல திருத்தலங்களையும் தரிசித்துக்கொண்டு தென்தமிழ் நாட்டில் பாதயாத்திரை செய்து வந்தார். ஒரு நாள் இவர் திருவரங்கனைக்கண்டு தரிசிக்க விழைந்து அத்திருத்தலத்தை நண்ணினார். அந்த வேளை இரவு அர்த்த சாம பூசை எனப்படும் நள்ளிரவுப் பூசையும் முடிந்து கடைக்காப்பிட்டுவிட்டுக்கோயில் தலைமைப்பட்டர் இல்லம் சேர்ந்துவிட்டார். சட்டநாதர் முன் வாசலுக்கு வந்தார்; பூட்டப்பட்டிருப்பதைக் கண்டார் தம் மனத்தெழுந்த ஆராக் காதலுடன் 'அரங்கநாதார்' என்று மும்முறை விளித்தார். சரேலெனக் கதவுகள் தாமே திறந்துகொண்டன. மணியொலி, மேளதாளவொலி, வேத பாராயண ஒலி, கீத நிருத்திய ஒலி, திருவிழாக்காலத்தில் ஏற்படும் வெடிகளின் ஒலி, மட்டற்ற மக்கள் கூட்டத்தால் ஏற்படும் இரைச்சல் எல்லாம் ஒருமித்து எழுந்தது. வேளையில்லா வேளையில் கோயிலில் எழுந்த திருவிழாக்கோல ஒலியைக் கேட்டு ஊர்மக்களெல்லாரும் திருக்கோயிலை நோக்கி விரைந்தனர். கோயிலில் பூசையாற்றும் பட்டர்கள் எல்லாரும் மிக்க பரபரப்போடு கோயிலுக்குச் சென்றனர்.

அவ்வமயம் எல்லா ஒலிகளும் நில்லாமல் ஒலித்துக் கொண்டிருந்ததேனும் அக்கோயிலுக்குள் சட்டநாதரும் திருவரங்கரும் மட்டுமே இருக்கக் கண்டனர். ஆனால் அரங்கநாதர் பூண்டிருந்த ஆடையாபரணங்கள் சங்கு சக்கரம் உட்பட யாவும் சட்டநாதர் உடலின்மேல் கண்டனர். ஊர் மக்கள் யாவரும் இக்காட்சியைக் கண்டனர்.

எல்லோரும் இவரை ஒரு கள்வரென்று முடிவு செய்துவிட்டு அந்த அரங்கரின் அணிமணிகளையெல்லாம் அந்த மகானின்

உடலிலிருந்து களைந்து சுத்தம் செய்து புண்ணியாவாசனம் செய்து மீண்டும் அரங்கநாதருக்குப் பூட்டினார்கள். மன்னன் முன் இவரைக் கொண்டுபோய் நிறுத்தி இரவில் நடந்த விடயத்தைக் கூறினார்கள். மன்னன் உசாவியபோது அதுபற்றிய விடயம் தமக்கு ஒன்றும் தெரியாது என்றும் எல்லாம் அரங்கன் செயல் என்றும் இவர் கூறினார். இவருடைய கூற்றை மெய்ப்பிக்க வேண்டுமென்று மன்னன் கட்டளை பிறப்பித்து அவருடன் திருக்கோயிலுக்குத் தன் பரிவாரங்களுடன் சென்றடைந்தான். சட்டநாதர் அரங்கர் முன் நின்று **'அரங்க நாதா'** என்று மும்முறை விளித்தார். இரவில் எழுந்த அத்தனை ஒலிகளும் காது செவிடுபட எழுந்தன. மன்னனும் மற்றுமுள்ள பரிவாரங்களும், ஊர் மக்களும் அர்ச்சகர்களும் வியப்பில் ஆழும்படியாக அரங்கருடைய அணிமணிகள் யாவும் ஒன்றன்பின் ஒன்றாகக் காந்தத்தை நோக்கி இரும்பு ஊசிகள் பறந்துவந்து அதிலே ஒட்டிக்கொள்வதுபோலச் சட்டநாதர் உடலில் பொருத்தமாக அமர்ந்தன. மன்னனும் குடிகளும் மனித உருக்கொண்டுவந்த சட்டநாதரே அரங்கநாதர் எனக் கண்டு அவரை வணங்கித் தாம் பரிசோதித்தமைக்கும் ஐயுற்றமைக்கும் மிக வருந்தி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவருடைய நல்லாசிபெற்று அரண்மனைக்கு மீண்டான். திருவரங்கன் சந்நிதானத்திலேயே சமாதியில் ஆழ்ந்து இன்றும் அருவராய் மக்களுக்கு அருள் சுரந்து வருகிறார். இது இன்றும் மக்களிடமுள்ள நம்பிக்கையாகும்.

இவர் சீர்காழியில் சமாதி எய்தினார் என்பது சிலர் கொள்கையாகும்

இவர் இயற்றிய நூல்கள்: *சட்டமுனி நிகண்டு, சட்டமுனி இருபது, சட்டமுனி சிவ யோகத் திரயம், சட்ட முனித்தாண்டகம், சட்டமுனி மூல சூத்திரம், சட்ட முனி வாக்கியம்* என்னும் நூல்கள் இவர் இயற்றியனவாகத் தெரிகிறது.

# 30. கமல முனி.

பதினெண் சித்தரில் ஒருவராகக் கருதப்படும் இவரை (கமலமுனிவரை) உவச்சர் குடியில் பிறந்து பல சித்திகளையும் பெற்று இறுதியில் திருவாரூரில் சமாதியடைந்தார் என்பர்.

சிலர் நான்முகனே சிவன் கட்டளையால் பூமியில் தோன்றி எல்லாவகைச் சித்துகளையும் தக்கார்க்கு உபதேசித்து இறுதியில் திருவாரூரில் சமாதி நிலையை அடைந்தார் என்பர். சிலர் இவர் மதுரையில் சமாதி நிலையடைந்தார் என்பர்.

இதுவரை கமலமுனி பத்து என்னும் ஒரு சிறு நூல் இவரியற்றியதாகக் கிடைத்துள்ளது. இந்நூல் ஞான நூலாக உள்ளது.

# 31. சுந்தரானந்தர்

சுந்தரானந்தர் பதினெண் சித்தருள் ஒருவராவார். இவர் வேளாண் மரபினர் என்றும் மதுரையில் சித்தியடைந்தாரென்றுங் கூறுவர். இவரைப்பற்றிய வாழ்க்கை வரலாறு ஒன்றும் கிடைத்திலது

இவர் இயற்றியருளிய நூல்கள்:- சுந்தரானந்தார் அதிசயசூத்திரம், சுந்தரானந்தார் ஞானசூத்திரம், சுந்தரானந்தர் சூத்திரம் என்னும் நூல்கள் இவர் இயற்றியனவாகக் கிடைத்துள்ளன.

# 32. வாமதேவர்

ஓதுவார் மரபில் தோன்றிச் சித்தர் அருளால் பல சித்திகளையும் வரப்பெற்று அழகர் மலையிலே சமாதிநிலை

அடைந்தார் என்பர் சிலர். மற்றும் சிலர் மதுரையில் சித்தி பெற்றார் என்பர்.

# 33. வெகுளி நாதர்

வெகுளிநாதரே விசுவாமித்திரர் என்பர் சிலர். வேறு சிலர் இவரே துருவாசர் என்றுங் கூறுவர். இவ்விருவரில் எவரேயாயினும் ஒருவர்க்கொருவர் சினத்தில் (வெகுளி) சளைத்தவரல்லர். அவர்களின் தவ வலிமையும், சாபம் கொடுக்கும் திறமும், சோதனை செய்யும் ஆற்றலும் புராணங்கள் பலவற்றில் பரக்க விரிக்கப்பெற்றுள்ளதைக் காணலாம். இவரை நவநாத சித்தர் வரிசையில் பல சித்தர் நூல்களில் விவரித்துள்ளனர்.

இவர் காசியில் சமாதி நிலை பெற்றுள்ளார் என்றும் திருவாவடுதுறையில் சமாதி நிலை பெற்றுள்ளர் என்றும் கூறுவர்

********

